# திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்

மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.)
பட்டத்திற்காக அளிக்கப்படும் ஆய்வேடு


ஆய்வாளர்
**செ. சிலம்புமணி**
**பதிவு எண் : 0675**

மேற்பார்வையாளர்
முனைவர் ஜலஜா கோபிநாத்






திருக்குறள் ஆய்வகம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021

சனவரி - 2006

முனைவர் ஜலஜா கோபிநாத்,
இணைப்பேராசிரியர் மற்றும் தலைவர்,
திருக்குறள் ஆய்வகம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

"திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்" என்னும் தலைப்பில் செ.சிலம்புமணி அவர்கள் செய்துள்ள இவ்வாய்வு மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காகத் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இவ்வாய்விற்காக வேறு எந்தப் பட்டமும் இதற்கு முன்பு ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் சான்று அளிக்கிறேன்.

இடம் : மதுரை
நாள் : 3.2.06

(ஜலஜா கோபிநாத்)
மேற்பார்வையாளர்

செ. சிலம்புமணி,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
திருக்குறள் ஆய்வகம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

# ஆய்வாளர் உறுதிமொழி

"திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்" என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காகச் செய்யப்பட்டுள்ள இவ்வாய்வு என் சொந்த முயற்சியால் உருவாக்கப் பெற்றதாகும். இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

(செ.சிலம்புமணி)
ஆய்வாளர்

இடம் : மதுரை
நாள் : 3.2.06

உறுதிக்கையொப்பம் :

(ஜலஜா கோபிநாத்)
மேற்பார்வையாளர்

# நன்றியுரை

ஆய்வுப்பணியில் ஈடுபடுத்திய 'எனை ஈன்று புறம் தந்த தாய் தந்தைக்கு' என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்" என்னும் தலைப்பில் ஆய்வினை மேற்கொள்வதற்கு அரியதொரு ஆலோசனைகளை வழங்கி இவ்வாய்வேடு செம்மையுற அமைவதற்குக் காலத்தையும் நேரத்தையும் பொருட்படுத்தாது ஆய்வேட்டின் வடிவமைப்பிற்கு வழிகாட்டிய எனது ஆசானான திருக்குறள் ஆய்வகத் தலைவர் முனைவர் ஜலஜா கோபிநாத் அவர்களுக்கு உளங்கனிந்த என் நன்றியைத் தெரிவிப்பதில் பெரும் மகிழ்ச்சி அடைகிறேன்.

எனது ஆய்வுக்குத் தொடர்பான கருத்துக்களை அளித்து ஊக்கம் ஊட்டிய இஸ்லாமியத் தமிழியல் துறைத் தலைவர் முனைவர் பீ.மு.அஜ்மல்கான் அவர்களுக்கும் குருநானக் ஆய்வகத் தலைவர் முனைவர் ந.முத்துமோகன் அவர்களுக்கும் மனமார என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்வேடு முழுவதையும் ஆழ்ந்துநோக்கி, அறிவுரை நல்கிய முனைவர் இரா.காஞ்சனா, முனைவர் எம்.தேவகி, முனைவர் குளோரியா வி.தாஸ், திரு.ஏ.வி.சாந்திகுமார் (சுவாமிகள்) ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனது ஆய்வு முயற்சியில் கண்ணும் கருத்துமாக இருந்து ஆக்கமும் ஊக்கமும் ஊட்டிய எனது அன்புச்சகோதரன் செ.மணிமுத்துவிற்குப் பாசம் நிறைந்த நன்றியைக் கூறிக் கொள்வதில் பெருமிதம் கொள்கிறேன்.

இவ்வாய்வேடு உருவாக்கத்திற்கு அயராது உழைத்ததோடு எனது முயற்சியில் ஆர்வம் உடையவராகத் திகழ்ந்த ஆய்வாளர் திரு.மு.பெரியசாமி அவர்களுக்கு என் நன்றி என்றைக்கும் உரித்தாகும்.

என் ஆய்வுப் பணியின்பொழுது எனக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டிய சகோதரிகள் திருமதி மா.பாண்டீஸ்வரி, செல்வி து.ஜானகி, செல்வி மா.மாரியம்மாள், செல்வி ந.சத்தியப்புனிதா போன்றவர்களுக்கும் என் நன்றி உரியது.

என் சக ஆய்வாளர்களாகிய திரு.என்.கே.அழகர்சாமி, திரு.பூமிச்செல்வம், செல்வி ச.அமுதவல்லி, திரு.மு.சிங்காரவேலன், திரு.ரா.ராஜதுரை, திரு.கி.முருகன், திரு.பழனிச்சாமி, திரு.சோமசுந்தரம் ஆகியோருக்கும் என் நன்றி.

எனது ஆய்வுப் பணிக்கு அவ்வப்பொழுது உதவி செய்த அலுவலகப் பணியாளர்கள் திரு.கி.கிரிதரன், திரு.பாஸ்கரன், திரு.ரகுராமன், திரு.மணிவாசகம் ஆகியோருக்கும் என் நன்றி உரித்தாகும்.

எனது ஆய்விற்குத் தேவைப்படும் நூல்களைக் கொடுத்துதவிய திரு.முருகேசன் அவர்களுக்கும் திரு.கண்ணன் அவர்களுக்கும் எனது நன்றி.

உரியநேரத்தில் விரைவாகவும் செம்மையாகவும் கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த *பிரியா கணினி* நிறுவனத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*செ. சிலம்புமணி*

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| அதி. | - | அதிகாரம் |
| அருங். | - | அருங்கலச்செப்பு |
| அறநெறி. | - | அறநெறிச்சாரம் |
| ஆத். | - | ஆத்திசூடி |
| உ.ஆ. | | உரையாசிரியர் |
| உலக. | - | உலகநீதி |
| களவு. | - | களவியல் |
| கற்பு. | - | கற்பியல் |
| குறள். தி. | - | திருக்குறள் |
| கொ.வே. | - | கொன்றைவேந்தன் |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| தி.மா. | - | திருவள்ளுவமாலை |
| தொ. | - | தொகுதி |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| தொல். | - | தொல்காப்பியம் |
| நல். | - | நல்வழி |
| நன். | - | நன்னெறி |
| நாலடி. | - | நாலடியார் |
| நீ.நெ.வி. | - | நீதிநெறிவிளக்கம் |
| நீதி.வெ. | - | நீதிவெண்பா |
| நீதி.நூ. | - | நீதிநூல் |
| நூற். | - | நூற்பா |
| ப. | - | பக்கம் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |

| | | |
|---|---|---|
| பக். | - | பக்கங்கள் |
| பழ.நா. | - | பழமொழிநானூறு |
| பா. | - | பாடல் |
| பா.எண். | - | பாடல் எண் |
| புறம். | - | புறநானூறு |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மு.மொ.கா. | - | முதுமொழிக்காஞ்சி |
| மூது. | - | மூதுரை |
| மேலது. | - | மேலே குறிப்பிட்டது |
| வள்ளுவர். | - | திருவள்ளுவர் |
| வி.சி. | - | விவேகசிந்தாமணி |
| வெ.வே. | - | வெற்றிவேற்கை |
| லூக். | - | லூக்கா |
| p. | - | page |
| Vol. | - | Volume |

# பொருளடக்கம்

# ஆய்வு முன்னுரை

உலகியல் நீதிகளைக் கூறுவனவாக நீதி இலக்கியங்கள் அமைகின்றன. இவை உலகில் வாழ்ந்த சான்றோர்களால் வழங்கப்பட்டவையாகும். இந்நூல்கள் அறிவுறுத்தல் நோக்குடன் அமைந்து சமுதாய மக்கள் வாழ்வியலின் நன்னெறிக்கு வழிவகுக்கின்றன. இந்நிலையில் காலத்தால் முந்திய நீதிநூல் 'திருக்குறள்' எனலாம். இந்நூல் உலகிற் சிறந்த தலையான சிந்தனைகளைச் செறிவுடனும் தெளிவுடனும் விளக்குகின்றது. தமிழ் இலக்கியங்களில் திருக்குறளை எடுத்தாளாத இலக்கியங்கள் மிகக் குறைவு. திருக்குறளை முன்னோடியாகக் கொண்டு 12-ஆம் நூற்றாண்டிலிருந்து 19-ஆம் நூற்றாண்டுவரை இயற்றப்பட்ட நீதிநூல்கள் 'பிற்கால நீதிநூல்கள்' எனப்படுகின்றன. இந்நீதிநூல்கள் ஒவ்வொன்றும் தம் காலத்திற்கு ஏற்பவும் சமுதாயச் சூழலுக்கேற்பவும் நீதியை உணர்த்தும் போக்குகளில் மாறுபட்டு அமைகின்றன. மக்களின் வாழ்வியல் முறைகள், அறநெறிகள், கலாச்சாரங்கள் போன்றவற்றை ஆராய்ந்து பிற்கால நீதிநூலாசிரியர்கள் ஒவ்வொருவரும் வள்ளுவரின் திருக்குறள் கருத்துக்களை ஒட்டியும் மாறுபட்டும் கருத்துக்களை வழங்கியுள்ளனர். அந்த வகையில் திருக்குறளிலும் பிற்கால நீதிநூல்களிலும் காணப்படுகின்ற அறக்கருத்துக்களை விளக்கி அவற்றின் ஒற்றுமை வேற்றுமைகளை ஆராய்வதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வுத் தலைப்பு

'திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்' என்னும் இவ்வாய்வுத் தலைப்பு திருக்குறளிலும் பிற்கால நீதிநூல்களிலும் காணப்படும் அறக்கருத்துக்களைத் தொகுத்து அவற்றிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளை ஆய்கிறது.

## ஆய்வு நோக்கம்

'திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்' காலத்தால் வேறுபட்ட கலாச்சாரப் பின்புலத்தில் தமிழகத்தில் தோன்றியிருக்கின்றன. வெவ்வேறு காலக்கட்டங்களில் வாழ்ந்து வரும் மக்கள் அந்நூல்களில் கூறப்பட்ட பல நீதிகளைப் பின்பற்றுகின்றனர்.

இருப்பினும் இக்கருத்துக்களிடையே மிளிரும் ஒற்றுமை வேற்றுமையைப் புலப்படுத்தி அவற்றின் தனித்தன்மைகளை ஆராய்வது ஆய்வின் நோக்கமாகும்.

## ஆய்வு கருதுகோள்

அறம் என்றைக்கும் மாறாதது ; உலகம் தழுவியது ; ஆனால் அறம் என்பது காலம், சமுதாயம், சூழல், சமயம் போன்றவற்றால் சில நேரங்களில் மாறுபடுகின்றது. இதன் காரணமாகத்தான் அடுத்தடுத்து தோன்றிய நீதிநூல்கள் தங்கள் கருத்துக்களைச் சற்று மாற்றி அமைத்துக் கொள்கின்றன. அக்கருத்துக்களை ஆராய்வதே ஆய்வின் கருதுகோள் ஆகும்.

## ஆய்வின் எல்லை

'திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்' என்ற தலைப்பில் அமைந்துள்ள இந்த ஆய்வில், ஆய்வுப் பரப்பின் எல்லை கருதியும் ஆய்வேட்டின் வரையறை கருதியும் திருக்குறளிலுள்ள பாயிரம், இன்பம் பற்றிய செய்திகள் நீங்கலாக அறம், பொருள் பற்றியச் செய்திகளோடு 12-ஆம் நூற்றாண்டிலிருந்து 19-ஆம் நூற்றாண்டு வரை தோன்றிய பிற்கால நீதிநூல்கள் மட்டும் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

## ஆய்விற்குரிய சான்றாதாரங்கள்

### முதன்மைச் சான்றாதாரங்கள்

திருக்குறள், ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, அருங்கலச்செப்பு, அறநெறிச்சாரம், வெற்றிவேற்கை, நன்னெறி, நீதிநெறிவிளக்கம், விவேகசிந்தாமணி, உலகநீதி, நீதிவெண்பா, நீதிநூல் ஆகிய பதிமூன்று நூல்களும் முதன்மை சான்றாதாரங்களாகத் திகழ்கின்றன.

### துணைமைச் சான்றாதாரங்கள்

திருக்குறள் உரைக்களஞ்சியம், பதினெண்கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள், அறம் பற்றிய ஆய்வேடுகள், ஆய்வுக்கட்டுரைகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வு முன்னோடிகள்

'திருக்குறள் உரைக்களஞ்சியம்', 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்னும் இரண்டு நூல்களும் இந்த ஆய்வு மேற்கொள்வதற்குத் துணையாக அமைந்துள்ளன.

'புதிய ஏற்பாடும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் - அறக்கருத்துக்கள் ஓர் ஒப்பீடு' என்ற ஆய்வேட்டில் கிறித்தவச் சமயப் புனிதநூலான புதிய ஏற்பாட்டில் உள்ள அறக்கருத்துக்களும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலுள்ள அறக்கருத்துக்களும் திரட்டப்பட்டு அவற்றின் ஒற்றுமை வேற்றுமைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

தமிழ் நீதி இலக்கியங்களில் கல்வியியல் சிந்தனைகள் - பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை என்ற ஆய்வேட்டில் நீதி இலக்கியங்களில் உள்ள கல்வி பற்றிய கருத்துக்கள் திரட்டப்பட்டு அவற்றின் பண்பு, பயன், உளவியல் போக்கு ஆகியவை ஆராயப்பட்டு உள்ளன. மேற்கூறப்பட்ட இரண்டு ஆய்வேடுகளும் இவ்வாய்வுக்கு மேற்கொள்வதற்கு தூண்டுகோலாக அமைந்தன.

## ஆய்வு அணுகுமுறை

'திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும்' என்ற தலைப்பில் அமைந்த இந்த ஆய்விற்கு விளக்கமுறை ஆய்வும் ஒப்பிட்டுமுறை ஆய்வும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வு மேற்கொள்ள காரணம்

திருக்குறளையும் பிற்கால நீதிநூல்களையும் முழுமையாக அறிந்து அவற்றை மக்களுக்கு எடுத்துக்காட்டவேண்டும் என்ற ஆவல் காரணமாகவும் இந்நீதிநூல்களில் கூறப்பட்டுள்ள நீதிக்கருத்துக்களின் ஒற்றுமை, வேற்றுமைப் பண்புகளை அறிந்துகொள்ள வேண்டுமென்ற உந்துதல் காரணமாகவும், அறமதிப்புக்கள் குறைந்துவிட்ட இன்றைய காலக்கட்டத்தில் சமுதாயத்திற்கு நன்மை பயக்கும் என்று கருதியும் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது.

## ஆய்வுப் பகுப்பு

'திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும்' என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு முன்னுரை முடிவுரை நீங்கலாக ஏழு இயல்களைக் கொண்டுள்ளது.

## ஆய்வேட்டின் அமைப்பு முறை

'ஆய்வு முன்னுரையில்' ஆய்வாளர் ஆய்வுத் தலைப்பை எடுத்துக்கொண்டதன் நோக்கம், ஆய்வு எல்லை, ஆய்வுச் சான்றாதாரங்கள், ஆய்வு கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு அணுகுமுறை, ஆய்வு மேற்கொள்ளக் காரணம், ஆய்வுப் பகுப்பு போன்றவை கூறப்பட்டுள்ளன.

'திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் : அமைப்பும் வரலாறும்' என்னும் முதல் இயலில் வள்ளுவரின் வாழ்க்கை வரலாறு, வள்ளுவரின் காலம், திருக்குறளின் அமைப்பு, சமயம், திருக்குறளின் தனிச்சிறப்பு, பிற்கால நீதிநூலாசிரியர்களின் வாழ்க்கை வரலாறு, காலம், பிற்கால நீதிநூல்களின் அமைப்பு, நீதிநூல்கள் தோன்றியதற்கான காரணங்கள் போன்றவை எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

'அறம் ஒரு விளக்கம்' என்னும் இரண்டாவது இயலில் அறத்தின் தோற்றம், அறம் பற்றிய சொல்விளக்கம், அறத்தின் வளர்ச்சி போன்றவை கூறப்பட்டுள்ளன.

'திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் இல்லறக் கருத்துக்கள்' என்னும் மூன்றாவது இயலில் இவ்வுலக வாழ்வைப் போற்றுவதற்குக் காரணமாக அமைந்த இல்லறத்தில் வாழும் மனிதன் மேற்கொள்ள வேண்டிய கடமைகள், ஒழுக்கநெறிகள், பண்புகள் ஆகியவற்றைப் பற்றித் திருக்குறளும் பிற்கால

நீதிநூல்களும் வகுத்துள்ள கருத்துக்கள் விளக்கப்பட்டு ஒப்பிடப்பட்டுள்ளன. இல்லறக்கருத்துக்களை இருபது அதிகாரங்களில் வள்ளுவர் இல்லறவியலில் விளக்குகின்றார். ஆனால் பிற்கால நீதிநூல்கள் திருக்குறளைப் போலத் தொகுத்துச் சொல்லவில்லை. இல்லறவியலில் வள்ளுவர் கொண்டுள்ள அதிகாரத் தலைப்புகளே ஆய்வின் உட்தலைப்புகளாக இவ்வியல் கொண்டுள்ளது. இதனடிப்படையில் வள்ளுவர் வகுத்தளித்த இல்லறக் கருத்துக்களோடு பல்வேறு காலக்கட்டத்தில் தோன்றிய பிற்கால நீதிநூல்களின் அறக்கருத்துக்கள் ஒப்பிடப்பட்டு, இல்லறத்தின் சிறப்பு எடுத்துக்காட்டப்படுகிறது.

‘திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் துறவறக் கருத்துக்கள்’ என்னும் நான்காவது இயலில் ஒவ்வொரு மனிதனும் துறவறத்தை மேற்கொண்டு வாழும்பொழுது ஒழுகவேண்டிய ஒழுகலாறுகளையும் நீக்கவேண்டிய செயல்களையும் வள்ளுவர் ‘அருளுடைமை’ முதல் ‘அவாவறுத்தல்’ ஈறாகப் பதிமூன்று அதிகாரங்களில் விளக்கிக் காட்டியுள்ளார். பிற்கால நீதிநூல்களிலும் துறவறக்கருத்துக்கள் சொல்லப் பட்டுள்ளன. அக்கருத்துக்களை விளக்கி அவற்றின் ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துரைப்பதாக இவ்வியல் அமைந்துள்ளது. துறவறவியலில் வள்ளுவர் கூறியுள்ள அதிகாரத் தலைப்புகளே உட்தலைப்புக்களாகக் கொண்டு விளக்கப்பட்டுள்ளன. ஊழ் என்ற அதிகாரத் தலைப்பும் இந்த இயலில் சேர்த்து ஆராயப்பட்டுள்ளன. இந்த இயலின் இறுதியில் வீடுபேறு பற்றிய கருத்துக்களும் சொல்லப்பட்டுள்ளன.

‘திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் அரசியல் கருத்துக்கள்’ என்னும் ஐந்தாவது இயலில் பொருட்பாலின் முதல் பகுதியில் அரசனுக்குரிய தகுதிகளையும் பண்புகளையும் வள்ளுவர் சுட்டியுள்ளார். திருவள்ளுவர் அரசியல் பற்றி கூறும் கருத்துக்கள் பொன்போல் போற்றத்தக்கனவாக உள்ளன. தன் குடிகளின் குறைகளை மன்னர் தானே அறிதலும் அவர்கள் கூறும் குறைகளைக் கேட்டறிதலும் செங்கோல் முறையாகும். இத்தகைய ஆட்சி செய்யும் மன்னன் மக்களால் தெய்வம் என்று போற்றப்படுவான் என்று வள்ளுவர் கூறியுள்ளார். திருக்குறளில் காணப்படும் இத்தகைய அரசியல் குறித்த கருத்துக்கள் பிற்கால நீதிநூல்களிலும்

காணப்படுகின்றன. இந்நூல்களில் காணப்படும் அரசியல் பற்றிய கருத்துக்கள் தொகுக்கப்பட்டு வள்ளுவரின் அரசியல் கருத்துக்களுடன் ஒப்பிடப்பட்டு விளக்கப்பட்டுள்ளது.

'திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் அரச அங்கங்கள்' என்னும் ஆறாவது இயலில் அரசனுக்கு வேண்டிய அங்கங்கள் பற்றிய கருத்துக்கள் சொல்லப்பட்டுள்ளன. பிற்கால நீதிநூல்களிலும் அங்கம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இவற்றை எல்லாம் தொகுத்து ஒப்பிட்டு இவ்வியலில் கூறப்பட்டுள்ளது.

'திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் குடிமை' என்னும் ஏழாவது இயலில் பொருட்பாலின் இறுதிப்பகுதியில் வள்ளுவர், குடிமக்களை மன்னனால் ஆளப்படும் வெறும் மக்களாக மட்டும் காட்டவில்லை. அரசரோடும் நாட்டோடும் ஊரோடும் தொடர்புடையவர்களாக அவர் காட்டுகிறார். குடிகள் நாட்டுடன் இரண்டறக் கலந்து நாட்டுப்பற்று, மன உறுதி, ஒழுக்கம், அறிவு, பண்பு ஆகியவற்றை கொண்டவர்களாகவும் அரசின் பொறுப்புக்களில் பங்கேற்கும் தகுதியும் திறனும் உள்ள குடிமக்களாகவும் வள்ளுவர் படைத்துக்காட்டியுள்ளார். மானம், நாணம், குற்றத்தைத் தவிர்த்தல் ஆகிய பண்புகளுடன் கள், சூது, மாது போன்றவற்றை நாடாமல் குடிமக்கள் நற்பண்புகள் கொண்டு செயல்திறனுடன் விளங்கவேண்டும் என வள்ளுவர் கருதியுள்ளார். இத்தகைய குடிமைப்பண்புகள் பிற்கால நீதிநூல்களிலிருந்து தொகுக்கப்பட்டு வள்ளுவத்துடன் ஒப்பிடப்பட்டுள்ளது.

இறுதியாகச் சொல்லப்பட்டுள்ள முடிவுரையில் ஆய்வில் பெறப்பட்ட ஆய்வு முடிவுகள் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

பின்னிணைப்பில் திருக்குறள், பிற்கால நீதிநூல்களில் தொகுக்கப்பட்ட செய்திகளின் பாடல் எண்கள் அட்டவணைக்குள் தரப்பட்டுள்ளன.

ஆய்வேட்டின் இறுதிப்பகுதியில் ஆய்வேட்டின்போது பயன்படுத்தப்பட்ட நூல்கள், அகராதிகள், ஆய்வுக்கட்டுரைகள், இதழ்கள், ஆய்வேடுகள் போன்றவை அகர வரிசையில் முறையாக வரிசைப்படுத்தப்பட்டுத் தரப்பட்டுள்ளன.

# இயல் ஒன்று

## திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் : அமைப்பும் வரலாறும்

1.0. முன்னுரை

1.1. திருக்குறள்

1.2. ஔவையார் பிறப்பு

1.2.1. ஆத்திசூடி

1.2.2. கொன்றைவேந்தன்

1.2.3. மூதுரை அல்லது வாக்குண்டாம்

1.2.4. நல்வழி

1.3. அருங்கலச்செப்பு

1.4. அறநெறிச்சாரம்

1.5. வெற்றிவேற்கை

1.6. நன்னெறி

1.7. நீதிநெறிவிளக்கம்

1.8. விவேகசிந்தாமணி

1.9. நீதிவெண்பா

1.10. உலகநீதி

1.11. நீதிநூல்

1.12. நீதிநூல்கள் தோன்றியதற்கான காலச்சூழல்கள்

1.13. களப்பிரர் வருகை

1.14. முடிவுரை

# இயல் ஒன்று

# திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் : அமைப்பும் வரலாறும்

## 1.0. முன்னுரை

சங்க இலக்கியங்கள் தொடங்கி இக்கால இலக்கியங்கள் வரை அனைத்து இலக்கியங்களும் தமிழர்களுடைய வாழ்வியல் நெறியைச் சுட்டிக்காட்டுகின்றன. சங்க இலக்கியங்கள் மக்களுடைய காதல், வீரம், கொடை போன்ற சிறப்பியல்புகளை வலியுறுத்துகின்றன. அவற்றைத் தொடர்ந்து மனித வாழ்வினை நெறிப்படுத்தக் கூடிய நீதிநெறிகளைச் சங்கம்மருவிய காலத்தில் நீதி இலக்கியங்கள் வெளிப் படுத்தச் செய்தன. அந்த வகையில் நீதிநூல்களில் தலைமையானது திருக்குறள். 12-ஆம் நூற்றாண்டிலிருந்து 19-ஆம் நூற்றாண்டு வரை தோன்றிய நீதிநூல்களின் அமைப்பு முறையும் ஆசிரியர் வரலாறும் இவ்வியலில் விளக்கப்படுகிறது.

## 1.1. திருக்குறள்

*“சமயக் கணக்கர் மதிவழி கூறாது*
*உலகியல் கூறிப் பொருள் இது என்ற வள்ளுவன்”*
*(கல்லாடம். பா.14)*

என்றும் “எல்லாப் பொருளும் இதன்பாலுள” (தி.மா.29) என்றும் திருக்குறள் பலவாறு பாராட்டப்பட்டுள்ளது. மனித வாழ்க்கைக்குத் தேவையான அறிவுரைகளை எடுத்துரைக்கும் இலக்கியக் களஞ்சியம் ‘திருக்குறள்’ ஆகும். மனிதன் பண்பட்ட நிலையை அடைய இந்நூல் வழிவகுக்கின்றது. தனிமனிதனுக்கு ஒழுக்கத்தை உணர்த்தி அவன் தெய்வநிலையை அடைய வழிகாட்டுகின்றது. அறம், பொருள், இன்பம் என்னும் உறுதிப்பொருள்களையும் இல்லறநெறி மற்றும் துறவறநெறியை விளக்கவந்த வள்ளுவம் உலகியல் நெறி, அரசியல்நெறி, பொருளீட்டும்நெறி, நீதிநெறி ஆகியவற்றை விளக்கி அவை எல்லாவற்றிலும் அறம் அடிப்படையாக விளங்க வேண்டும் என்பதைத் தெளிவாகக் கூறுகிறது.

“குறள் கருத்துக்கள் யாவும் திருவள்ளுவரை மெய்யுணர்ந்த பேரறிஞர் எனத் தெளிவுபடக் காட்டுகிறது. ஏதோ அந்தந்தக் காலத்துக்கும், அந்தந்த ஊருக்கும் சிறப்பியல்பாக இருக்கின்றவற்றையெல்லாம் திருவள்ளுவர் வலியுறுத்திக்கொண்டு

செல்லவில்லை. எல்லா காலத்திற்கும் எல்லா இடங்களுக்கும் பொதுவான கருத்துக்கள் என்று எண்ணிப் பார்த்து அந்தப் பொதுக்கருத்துக்களை, பொது இயல்புகளை வலியுறுத்தியிருக்கின்றார் என்ற அறிஞர் பெருமக்களின் கருத்துக்களால் குறளின் பெருமையை அறியலாம்”[1] என்று குறிப்பிடுகின்றார் க.த.திருநாவுக்கரசு. ‘வள்ளுவன் தன்னை உலகினுக்குத் தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு’ என்று கூறும் பாரதியின் கூற்றுக்கிணங்கத் “திருவள்ளுவர் உலகுக் கென்றே பயின்றார். உலகுக்கென்றே வாழ்ந்தார். அதனால் அவர்தம் உள்ளத்தில் உலகம் நின்றது. அவர் உலகமாயினார் ; உலகம் அவராயிற்று”[2] என்பர் திரு.வி.க.

வள்ளுவர் பற்றிய வரலாறு தமிழர்களால் எழுதி வைக்கப்படாததால் அவரைப் பற்றிய மரபுவழிச் செய்திகளும் கட்டுக்கதைகளும் நிறையத் தோன்றின. “1831-லும் 1834-லும் வெளியான திருக்குறளில் திருவள்ளுவநாயனார் பார்ப்பானுக்குப் பிறந்தார் என்ற கட்டுக்கதைகள் ஏதுமில்லை. ஆனால் 1835-ஆம் ஆண்டு விசாகப் பெருமாளையர். ஆதியென்னும் பறைச்சிக்கும் பகவனென்னும் பார்ப்பானுக்கும் ஏழு பிள்ளைகள் பிறந்தனர். அவர்களில் ஒருவர் திருவள்ளுவர் என்ற கதையை ‘அகவற்பா’ எழுதிக் குறள் புத்தகத்தின் கடைசியில் அதனைச் சேர்த்து வைத்துவிட்டார். ஆனால் அவர் ஒரு வைசியப் பெண்ணைத் திருமணம் செய்துகொண்டார் என்றும் மயிலையில் வாழ்ந்தார் என்றும் அச்சிட்ட புத்தகத்தில் எழுதினார்”[3] என்று கூறுவர்.

“வள்ளுவர் பிறந்தது தமிழ்க்குலத்தில் என்பதும், அவர் அரசனுக்கு அணுக்கச் செயலாளராக இருந்து அரசனோடு ஒப்பமதிக்கும் தகுதியுடைய தொழில் புரிந்தவர்”[4] என்பதும் ஏற்றுக்கொள்ளப்படவேண்டிய கருத்தாகும்.

“வள்ளுவர் என்பது சாதி பற்றிய இயற்பெயர் அன்று. பதவி பற்றிய சிறப்புப் பெயர். அரசாங்கத்திலே காரியத் தலைமை வகிக்கும் அதிகாரிகளை வள்ளுவர் என்பது அக்கால மரபு. மன்னருக்கு உட்பட்டு கருமத்தலைவராய் வள்ளுவர் அதிகாரம் நடத்தியதால் அரசியலில் அகன்ற அறிவும், ஆழ்ந்த அனுபவமும் வாய்ந்திருந்தார். தமது அறிவாலும், அனுபவத்தாலும் குறள் நூலை யாத்தார். அதை மன்னரும் மக்களும் அக்காலத்தில் கொண்டாடினர். அரச காரியத்தில் வல்லவராய்த் திகழ்ந்தவர் வள்ளுவர்”.[5]

“திருவள்ளுவர் வாசுகி என்னும் பெண்ணை மணம்புரிந்து இல்லற வாழ்வை நடத்தினார் என்பர். ஒருநாள் வாசுகி தன் கணவருக்கு உணவு படைத்துக் கொண்டிருந்தாள். அப்போது வீட்டு வாசலில் பிச்சைக்காரன் ஒருவன் அம்மா: சோறிடுக! என்று கூவி நின்றான். கணவருக்குப் பணிசெய்து கொண்டிருந்த வாசுகி சிறிது காலம் தாழ்த்தி உணவை எடுத்துக்கொண்டு வாயிலுக்கு வந்தாள். அங்கு நின்ற பிச்சைக்காரன் பெருங்கோபத்துடன் வாசுகியை நிமிர்ந்து நோக்கினான். அதைக்கண்ட வாசுகி ‘கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா?’ என்று வினவினாள். வாசுகியின் சொற்களைக்கேட்ட பிச்சைக்காரன் பெரிதும் வியந்தான். என்ன வியப்பு! கொங்கணன் என்னும் நம் பெயரை எவரும் அறியாரே! காட்டின் இடையே நம் தலையில் எச்சமிட்ட கொக்கை ஏறெடுத்துப் பார்த்தோம். அது எரிந்து சாம்பல் ஆயிற்று. அச்செய்தியை நாட்டில் எவரும் அறியார். ஆனால் இப்பெண் வீட்டில் இருந்த வண்ணம் எங்ஙனம் தெரிந்து வினவினாள்? இவள் தன் கற்பின் வல்லமையால் உணர்ந்து ஓதியிருக்கவேண்டும்! இன்னும் இங்கு நின்றாள் நம்மையும் தனது கற்பால் எரித்துவிடக்கூடும் என்று அஞ்சி நெஞ்சம் பதறினான். உடனே தான் வாழ்ந்த காட்டை நோக்கி ஓட்டம் பிடித்தான்”.[6] இக்கற்பனைக் கதையானது திருவள்ளுவரின் வாழ்க்கைச் சிறப்புத் தன்மையையும் அவர் மனைவி வாசுகியின் கற்பு மாண்பையும் விளக்குகிறது.

“வள்ளுவர் என்ற சொல்/பெயர் அரசனுக்கு அணுக்கச் செயலாளராக இருப்பவர்க்கு வழங்கப்பெற்று வந்திருக்கின்றது. அமைச்சரைக் காட்டிலும் சிறந்தவர் வள்ளுவர். வயதாலும் அறிவாலும் முதிர்ந்தவர்க்கே வள்ளுவத் தொழில் பார்க்கும் உயர்ந்த வேலை கிடைக்கும். வள்ளுவர் வீதிவழி போகின்றார் என்றால் அவரைச் சூழ்ந்து சேனைகள் அணிவகுத்துச் செல்லும். மெய்காப்பாளர்கள் மிகப் பலர் உடன் செல்வர். வள்ளுவரைச் சுற்றிச் செல்லுகின்ற சேனை செல்வச்சேனை என்று சிறப்பித்துச் சொல்லப்படுகின்றது. அரசனே நேரில் சென்று அழைக்கும் முக்கிய நிகழ்ச்சிகளான அரசன் இல்லத் திருமணம், அரசு நடத்துந்திருநாள், போர் தொடங்கும் படைநாள் ஆகியவற்றை அரசன் சார்பாக, அரசனே நேரில்கூற வேண்டிய கடமையை அரசனது நிலையில் இருந்து வள்ளுவர் அறிவிப்பார். அமைச்சரினும் மேற்பட்ட வள்ளுவர் அறிவித்தால்தான் மக்களும் ஒப்புகொள்வர். அவ்வாறு அறிவிக்கச்

செல்லும்போது வள்ளுவர் வெண்பட்டு உடுத்தி, வெண்சந்தனம் பூசி, வெள்ளை மாலை அணிந்துகொண்டு, ஆனையின் மேல் வீற்றிருந்து எழுந்தருளுவார். ஆனை வீதி வழியே செல்லும்போது அவரைச் சூழ்ந்து படைகள் அணிவகுத்துச் செல்லும். அவர் அரசனுடைய வெற்றி முரசினை முழக்கிக்கொண்டு மக்களுக்குச் செய்தியை அறிவிப்பார். அரசனது அரண்மனையிலிருக்கும் தெய்வ முரசினை முழக்கி அரசனாக இருந்து அறிவிப்பவர் வள்ளுவர். அரச முரசத்திற்குப் பூசனை செய்து கொற்றவை வழிபாடு செய்து பின்னர் வந்து யானையிலேற்றி முரசு முழக்கிச் செய்தியறிவிப்பார் என்பது செய்தியாக உள்ளன”.[7]

“வள்ளுவர் எளிய தோற்றமுடையவர். கூரிய மதி படைத்தவர். உண்மை, நேர்மை, தன்னம்பிக்கை வாய்ந்தவர். பிறர் உள்ளம் புண்படாத வகையில் தான் சொல்ல எண்ணிய கருத்துக்களை நகைச்சுவையாகக் கொள்பவர். அசைக்க முடியாத கடவுள் நம்பிக்கை கொண்டவர். உழைப்பாளிகளைப் போல் எளிமையான அன்பு நிறைந்த இல்வாழ்க்கை வாழ்ந்தவர். குழந்தைகளின் மதிமயங்கும் இன்பத்தில் மூழ்கியவர். சோம்பேறிகளையும் வெளிவேடக்காரர்களையும் அவர் அறவே வெறுத்தார். கற்றவர்களிடமும் மற்றவர்களிடமும் நன்கு கலந்து பழகினார். அவர்களுடைய இன்ப துன்பங்களில் பங்குகொண்டார். மனிதப் பண்புகள் நிறைந்த மனிதனாக அவர் வாழ்ந்தார்”[8] என்று கூறப்படுகிறது.

“ஒரு காலத்தில் எழுதியது மற்றொரு காலத்துக்குப் பொருந்தாது. ஆயினும் சில விசயங்கள் எக்காலத்தும் உண்மை. அதிலும் சில மேதாவிகளின் கருத்துக்கள் பல்லாண்டுகள் கழித்தும் உண்மை நிறைந்த கருத்துக்களாகவே இருக்கும் வள்ளுவரின் வாசகம் இத்தகையது”[9] என்பர் இராஜாஜி.

இவ்வாறு வள்ளுவரின் பிறப்பு வளர்ப்புப் பற்றிப் பல்வேறு அறிஞர்கள் பல்வேறு கருத்துக்களைக் கூறுகின்றனர்.

திருவள்ளுவர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர் என்ற கருத்து மக்களிடையே நிலவி வருகிறது. ஆனால் அவருடைய காலத்தைச் சரியான முறையில் குறிப்பிடுவதற்கான சான்றுகள் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை.

"கலித்தொகை, நற்றிணை, மணிமேகலை, சிலப்பதிகாரம் போன்ற நூல்களில் திருக்குறள் பாடல்கள் எடுத்தாளப்பெற்றிருக்கின்றன. திருக்குறளுக்கு அறம் என்ற பெயர் வழங்கப்பட்டதைப் புறநானூறு குறிப்பிடுகின்றது. "அறம் பாடிற்றே ஆயிழை கணவ" என்பதில் 'அறம்' என்பது திருக்குறளைக் குறித்தது. இவ்வாறு பண்டைத் தொகை நூல்களால் எடுத்தாளப்பெறும் சிறப்பு நிரம்பிய திருக்குறள் அவற்றிற்கு முன்பு தோன்றியது என்பதே பொருத்தமுடையது ஆகும். எனவே திருவள்ளுவர் காலம் பண்டைத்தொகை நூல்களின் காலத்திற்குச் சிறிது முந்தையது என்றும் தொகை நூல்கள் யாத்த புலவரிற் சிறுபான்மையாளர் வள்ளுவர் காலத்தவர் என்றும் கொள்ளலாம்".[10]

"திருவள்ளுவர் காலத்துத் தமிழர் வாழ்வு தொல்காப்பியர் காலத்துக்கு முன்னும் பின்னுமாகிய காலத்தது என்பது தோற்றமாம்".[11]

"பத்துபாட்டும் எட்டுத் தொகையுமே சங்க இலக்கியங்கள் என்று கருதப் படுகின்றன. பதினெண்கீழ்க்கணக்கு அவைகளுக்குப் பிற்பட்ட காலத்தவையாகவே எண்ணப்படுகின்றன. திருக்குறள் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலே ஒன்று முப்பால் என்னும் பெயருடன் இவ்வரிசையில் காணப்படுகின்றன".[12]

திருக்குறள் ஐம்பெருங்காப்பியங்களுக்கு முன்னும் சங்க நூல்களுக்குப் பின்னும் தோன்றியிருக்கவேண்டும். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களில் திருக்குறளின் சொற்றொடர்கள் காணப்படுவதைப் பின்வரும் அடிகளால் உணரலாம் :

*"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுவாளைத்*
*தெய்வம் தொழு தகைமை திண்ணிதால்"*
*(சிலம்பு. மதுரை காண்டம், வெண்பா, ப.508)*

*"தெய்வம் தொழாஅள், கொழுநன் தொழுது எழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் பெருமழை" என்ற*
*அப்பொய்யில் புலவன் பொருள் உரை தேறாய் !*
*(மணி. சிறைசெய் காதை. பா.வரி.59-61)*

என்னும் பாடல் வரிகள்,

*"தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதுஎழுவாள்*
*பெய்யெனப் பெய்யும் மழை" (குறள்.55)*

என்ற திருக்குறளைப் போற்றும் பகுதிகள் ஆகும். எனவே திருக்குறளானது சிலப்பதிகாரம், மணிமேகலை காலத்திற்கு முற்பட்டது என்பது தெளிவாகிறது.

“சங்க காலத்தில் பலதாரமணம் ஆதரிக்கப்பட்டு வந்தது. திருக்குறளில் பலதாரமணம் ஆதரிக்கப்படவில்லை. வாழ்க்கைத் துணைநலம் (குறள்.அதி.5) என்னும் அதிகாரத்தைப் படிப்போர் இவ்வுண்மையைக் அறியலாம். சங்க காலத்திலே ஆடவர்கள், பரத்தையர்களுடன் கூடி வாழ்வது குற்றமாக எண்ணப்படவில்லை. காதல் பரத்தையர், சேரிப்பரத்தை என்றவர்களுடன் ஆண்கள் கூடிக் குலவி வந்தனர். இவை சங்க நூல்களில் காணப்படுகின்றன”[13] என்பர் சாமி. சிதம்பரனார்.

“திருக்குறளில் காமத்துப்பாலில்கூட ‘பரத்தையர்ப் பிரிவு’ என்று தனியதிகாரம் காணப்படவில்லை. பொருட்பாலில் வரைவில் மகளிர் என்ற அதிகாரத்தில் வேசையர் நட்பு வன்மையாகக் கண்டிக்கப்படுகின்றது. மது, மாமிசம், பலதாரமணம், வேசையர் நட்பு இவைகள் சங்க காலத்தில் கண்டிக்கப்படவில்லை. இவைகள் ஒழுக்கக் குறைவு என்று எண்ணப்படவும் இல்லை. சங்க காலத்திற்குப் பின்னர்தான் இவைகள் கண்டிக்கப்பட்டன. ஆதலால், இவைகளைப் பற்றிக் கூறும் திருக்குறள் சங்க நூல்களுக்குப் பின் தோன்றியதாகவே இருக்கவேண்டும் இதில் ஐயமேயில்லை”.[14]

மேற்கூறிய கருத்துக்கள் அனைத்தையும் ஆராய்ந்து பார்க்கையில் திருக்குறள் எழுந்த காலத்தை எந்தக்காலம் என்று வரையறுத்துக் கூற இயலவில்லை என்றாலும் சங்க நூல்களுக்குப் பிற்பட்டது திருக்குறள் என்று அறியமுடிகிறது.

“திருக்குறளுக்கு எழுதிய உரைகளில், தருமர் உரை கிடைக்கவில்லை. அது சமணம் சார்ந்ததென்றும், சக்கரவர்த்தி நாயனரால் வெளியிடப்பட்ட கவிராசபண்டிதர் உரை தருமர் உரையைத் தழுவியெழுதப் பெற்றதென்றும் அந்நூலின் முன்னுரையில் கூறப்பட்டுள்ளது. பரிதியார் உரை ஓரளவு சமணம் சார்ந்ததாகவே தெரிகிறது. பரிமேலழகர் உரை சைவம் சார்ந்தது. பரிமேலழகர், மலர்மிசை ஏகினான் என்னும் தொடருக்கு ‘அடியவரின் உள்ளக் கமலத்தே விரைந்து செல்பவன்’ என்னும் உரை எழுதியபோதும், இத்தொடரைப் பூமேல் நடந்தான் என்றும் பெயர் பற்றிப் பிறிதோர்

கடவுட்கு ஏற்றுவாரும் உளர்' என்றும் கூறுகிறார். அவ்வாறே அறவாழி அந்தணன் என்னும் தொடரிலும் அறவாழியென்பதனைத் தரும சக்கரமாக்கி அதனையுடைய அந்தணர் என்றுரைப்பாருமுளர் என்று கூறுகிறார். எனவே பரிமேலழகர் காலத்திற்கு முன்பே வள்ளுவர் சமணர் என்னும் கொள்கையினர் இருந்ததாகத் தெரிகிறது"[15] எனக் காமாட்சி ஸ்ரீனிவாசன் குறிப்பிடுகின்றார்.

"வேண்டுதல் வேண்டாமையிலான், ஐந்தவித்தான் என்னும் சொற்கள் பற்றற்றுத் துறவுபூண்ட புத்தரையும் குறிக்கலாம். தருமத்தைச் சக்கரமாக உருவகிப்பது பௌத்த சமயத்திலும் உண்டு. மலர்மிசை ஏகினான் என்னும் தொடரும், பகவான் என்பதும் புத்தரைக் குறிப்பனவே. எண்குணம் என்பது புத்தரால் கற்பிக்கப்பட்ட நற்காட்சி, நல்வாய்மை முதலிய எட்டுறுப்புக்களையுடைய அட்டாங்க மார்க்கத்தைக் குறிக்கும். புத்தர், சங்கம், தர்மம் என்னும் மும்மணிகள் கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை, அறன்வலியுறுத்தல் என்பவற்றைக் குறிக்கும். காமம், கொலை, கள், களவு, பொய் என்னும் ஐந்தினையும் துறத்தல் 'ஐவகைச்சீலம்' எனப்படும். வள்ளுவர் இவ்வைந்தையும் வெறுக்கிறார். எனவே வள்ளுவர் பௌத்தரே என வாதிடுவோர் உண்டு"[16] என்பர் காமாட்சி ஸ்ரீனிவாசன்.

"ஆதிபகவன் உலகைப் படைத்த கடவுள்; பொறிவாயிலைத் ஐந்தவித்தான் சிவபிரானின் தவக்கோலத்தை அதாவது தட்சிணாமூர்த்தி வடிவத்தைக் குறிக்கும்; எண்குணத்தான்-சைவ நூல்களில் குறிப்பிடப்பட்ட எட்டுக் குணங்களையுடைய சிவன் எனக் கூறி வள்ளுவர் சைவரே"[17] என க.வச்சிரவேல் முதலியார் குறிப்பிடுகின்றார்.

"திருவள்ளுவர் கிறித்தவரா?" "நீத்தார் யார்? வான் எது? ஐந்தவித்தான் யார்?" "திருக்குறளும் பைபிளும்" என்னும் தம் நூல்களில் வள்ளுவர் கிறித்தவர் என்பதற்குச் சான்று காட்டி வாதிடுகிறார் மு.தெய்வநாயகம். கிறிஸ்துவின் சீடருள் ஒருவரான தோமையர் இந்தியாவுக்கு வந்தார். அவர் வேறு பல இடங்களுக்கும் சென்று பின் கி.பி.52-இல் தமிழகத்தின் மேற்குப் பகுதியாகிய சேரநாட்டில் கொச்சிக்கு அருகில் இரங்கனூர் என்னுமிடத்தில் வந்து இறங்கினார். பின் தொண்டை நாடு சென்று தற்போதுள்ள சென்னைக்கு அருகிலுள்ள மயிலாப்பூரில்

தங்கி இயேசுவின் நற்செய்தியைக் கூறி வந்தார். மத விரோதத்தால் ஈட்டியால் குத்தப்பட்டு மாண்டார்"[18] "திருவள்ளுவர் வாழ்ந்த காலம் தோமையர் தமிழகத்தில் வாழ்ந்த காலமாகும். திருவள்ளுவர் தோமையரின் கருத்துக்களை முழுவதையும் ஏற்றுக் குறட்பா இயற்றியுள்ளார். தோமையரால் கிறிஸ்துவுக்குள்ளாக்கப்பட்டு ஞானமுழுக்குப் பெற்ற அரசாங்க அலுவலர்களுள் திருவள்ளுவரும் ஒருவர் என நாம் ஏன் கொள்ளகூடாது?[19] எனக் கேட்கிறார் தெய்வநாயகம். "நீத்தார் பெருமை என்னும் திருக்குறளதிகாரத்தில் வரும் குறட்பாக்கள் பத்தினையும், தம் அருவநிலையை விட்டு உருவநிலைக்கு வந்தவராகிய இயேசு கிறிஸ்துவையே சுட்டுகிறார் வள்ளுவர்"[20] என்று அவர் குறிப்பிடுகிறார்.

"நீத்தார், ஐந்தவித்தான் என்ற சொற்களுக்குத் தெய்வநாயகம் கூறும் பொருட்கள் வலிந்து கொள்வதாய் அமைகின்றன. எனவே வள்ளுவர் கிறிஸ்தவர் என்பதற்குச் சரியான சான்றில்லை. கடவுள் எல்லாவற்றிலும் கலந்திருக்கிறார்; கடவுளேயாவுமானார் என்ற அத்வைதக் கருத்தைக் குறள் கூறவில்லை. கீதை கூறும் மாயை பற்றிய கருத்தும் திருக்குறளில் இல்லை. இறைவன் அவதாரம் கொண்டு உலகில் தோன்றுவார் என்ற கருத்தும் குறளில் இல்லை. எனவே இக்கருத்துக்களைக் கூறும் வைணவம் திருக்குறளால் ஆதரிக்கப்படவில்லை"[21] என்ற கருத்தைத் தெரிவிக்கிறார் ஆய்வாளர் செல்லகனி.

"வள்ளுவர் கூறும் அறங்கள் பல பௌத்த அறங்களாகவும் சமண அறங்களாகவும் தெரிகின்றன. சமணரால் கற்பிக்கப்படும் கொல்லாமை, இன்னா செய்யாமை முதலியனவும் பௌத்தரின் ஐவகைச் சீலங்களும் எதிர்மறை அறங்களாகக் கூறப்படுகின்றன. வள்ளுவர், அவற்றோடு அன்புடைமை, செய்ந்நன்றி அறிதல், நட்பு முதலிய உடன்பாட்டு அறங்கள் பலவற்றையும் கூறினார். இத்தகைய உடன்பாட்டு அறங்கள் பகவத்கீதையிலோ, பௌத்த சமண நூல்களிலோ, வைதீக நூல்களிலோ இவ்வளவு தெளிவாகக் கூறப்படவில்லை. பொதுவாகத் தமிழர் பின்பற்றி வந்த அறங்களையே வள்ளுவர் தம் நூலில் சேர்ந்திருக்கிறார். வள்ளுவர் சமணரா அல்லரா என்பதை ஆய்ந்து திட்டமாகக் கூறுதற்கில்லை"[22] என்கிறார் தெ.பொ.மீ.

“வேள்வியில் உயிர்களைப் பலியிடுவதை வள்ளுவர் கண்டிக்கிறார். எனவே வைதீக நெறியை அவர் சாரவில்லையெனலாம். பௌத்த சமண மதங்கள் கூறும் கொல்லாமை, இன்னாசெய்யாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, பொய்யாமை போன்ற அறங்களை வள்ளுவர் கூறுவதால் இவ்விரண்டு மதங்களின் செல்வாக்கும் குறளில் பதிந்திருக்கின்றன எனலாம். கொல்லாமையென்பது எல்லா மதங்களும் கூறும் கோட்பாடேயெனினும், எவ்வுயிரையும் (நுண்ணிய உயிரையும்) கொல்லலாகாது என்பது சமணக்கோட்பாடாகவே தெரிகிறது. அதன் அடிப்படையில் ‘புலால் மறுத்தல்’ என்னும் அதிகாரம் வகுக்கிறார். பௌத்தம் எவ்வுயிரையும் கொல்லலாகாது எனக் கூறினும் புலால் உண்ணலை மறுக்கவில்லை. கொன்றதைப் புசிக்கலாம் என்கிறது. பௌத்தர் ஊன் உண்ணாமையை விரும்பினும் அதிகமாக வற்புறுத்தாதுவிட்டனர். சமணரோ கொல்லாமை, ஊன் உண்ணாமை ஆகிய இரண்டையும் வற்புறுத்தியதோடு, இவற்றைத் தமது மதத்தின் முதன்மையான கொள்கையாகவும் கொண்டனர். இக்கொள்கை சமணர்களாலேயே நம் நாட்டில் அதிகமாகப் பரவிற்று”[23] என்கிறார் மயிலை சீனி. வேங்கடசாமி. மேற்சொல்லப்பட்ட கருத்துக்களின்வழி வள்ளுவர் எந்த சமயத்தைச் சார்ந்தவர் என்பதை உறுதியாக அறுதியிட்டுக் கூறமுடியவில்லை என்பதை தெளிவாக அறியமுடிகிறது.

## 1.2. ஔவையார் பிறப்பு

12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஔவையார் பிறப்பு வளர்ப்புப் பற்றிப் பல்வேறு கதைகள் உருவாகியுள்ளன. “ஔவையார், சோழநாட்டில் உறையூர் என்ற ஊரில் பிறந்து பாணர் வீட்டிலும் திருக்கோவலூரிலும் வளர்ந்து வந்தார்”[24] என்று அபிதான சிந்தாமணி கூறுகிறது. “ஔவையார் கோவில் ஒன்று தஞ்சை ஜில்லாவில் வளவனாற்றின் கீழ்க்கரையில் திருவிரும்பாவனம் என்ற ஊருக்குக் கீழ்த்திசையில் துளசியார்பட்டி என்னும் ஊரில் உள்ளது. அது தஞ்சை மாவட்டம் திருத்துறைப்பூண்டி வட்டத்தைச் சேர்ந்தது. அதில் உள்ள சிலை மூதாட்டி வஃடிவில் உள்ளது என்றும் கன்னியாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவிலிருந்து 10கி.மீ. தொலைவில் தாடகமலை அடிவாரத்தில் தோவாளை ஆற்றங்கரையில் அவ்வையாருக்குக் கோவில் உள்ளது.

அது இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது".[25] ஒளவையார் பிறந்த வாழ்ந்த ஊர் பற்றித் தோன்றிய கதைகள் ஒன்றுக்கொன்று முரணான கருத்துக்களை உடையனவாக நிலவுகின்றன.

ஒளவையார், 'ஆத்திசூடி அமர்ந்த தேவனை ஏத்தி ஏத்தித் தொழுவோம் யாமே' என்று ஆத்திசூடியில் கடவுள் வாழ்த்தாக சிவனுக்குரிய வாழ்த்தாகவும் விநாயகருக்குரிய வாழ்த்தாகவும் பாடியுள்ளார். இதனால் அவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதை உணரமுடிகிறது. "அவ்வை என்னும் பெயர் 'அம்மை' என்பதன் திரிபு என்று சிலர் கூறுகின்றனர். ஒளவை என்பதற்குத் தாய், மூதாட்டி, பெண்துறவி, தவப்பெண்"[26] என்று தமிழ்மொழி அகராதி பொருள் கூறுகிறது.

"இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பாரதியாரும் இவருடைய முறையைப் பின்பற்றி இவர் நூலின் பெயரையே போற்றிப் புதிய ஆத்திசூடி இயற்றினார் என்றால் இவர் காட்டியவழி எவ்வளவு போற்றப்பட்டு வந்திருக்கிறது என்பதை உணரலாம்"[27] என்று மு.வரதராசனார் குறிப்பிட்டுள்ளார்.

ஒளவையார் என்னும் பெயருடன் தமிழகத்தில் பலர் இருந்துள்ளனர். அவர்களுள் சங்ககால ஒளவையாரும் பிற்கால ஒளவையாரும் குறிப்பிடத்தக்கவர்கள். ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி முதலான நூல்களை இயற்றியவர் பிற்கால ஒளவையாரேயாவார். "ஆத்திசூடி என்ற நூல் கி.பி.12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஒளவையின் கொடையாகும்"[28] என்று மு.அருணாசலம் குறிப்பிடுகின்றார். ஒளவையார், "12-ஆம் நூற்றாண்டில் கம்பர், ஒட்டக்கூத்தர் ஆகியோர் காலத்தில் இருந்தவர்"[29] என்கிறது கலைக்களஞ்சியம்.

"கம்பர் காலம் கி.பி.9-ஆம் நூற்றாண்டு என்பர். ஒளவை அவருக்குப் பிற்பட்டவராதல் வேண்டும். ஒட்டக்கூத்தர் புகழேந்தி இருவரும் பனிரெண்டாம் நூற்றாண்டினர். கம்பர் பனிரெண்டாம் நூற்றாண்டினரே என்ற கருத்தும் உண்டு. நீதிநூல் பாடிய சோழர்கால ஒளவையும், இந்நூற்றாண்டினரே என்பாரும் உளர்"[30] என்று தமிழண்ணல் குறிப்பிடுகின்றார்.

"13-ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த மூன்றாம் குலோத்துங்க சோழன்மீது பாடப் பெற்ற குலோத்துங்க சோழன் கோவை நல்வழி பாட்டொன்று குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது. இட்டார் எப்போதும் இடுவார்; இடார் என்றும் இட்டுண்கிலார் பட்டாங்கிலுள்ள படியிதன்றோ என்பது இட்டார் பெரியோர்; இடாதார் இழிகுலத்தோர் பட்டாங்கிலுள்ளபடி என்ற கருத்தில் மாறுதல்இருப்பினும் சொற்றொடர் ஒப்புமைகளால் கோவையானது நல்வழிப்பாடலைத் தழுவியது என்பது தெளிவு. இது நல்வழி செய்த ஒளவையார் 12-ஆம் நூற்றாண்டினர் என்ற கருத்துக்கு ஆதரவு தருகிறது"[31] என்கிறார் மு.அருணாசலம். இத்தகைய கருத்துக்களைக் கொண்டு ஆராயும்பொழுது நீதிநூல்களைப் பாடிய ஒளவையார் 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்திருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

### 1.2.1. ஆத்திசூடி

ஆத்திசூடி 109 செய்யுள்களைக் கொண்டுள்ளது. அறநூல்களுள் பெரிதும் போற்றப்பெற்ற நூல் ஆத்திசூடியாகும். அறம் என்று கூறினாலே தமிழ் மக்கள் ஒளவையாரை நினைக்கும் அளவிற்கு இந்நூல் பயன்பட்டு வந்துள்ளது. இந்நூல் அகரவரிசையில் பாக்களை அமைத்துள்ளார் ஒளவையார். "ஆத்திசூடி என்பது இறைவன் பெயர். அதனையே நூலுக்குப் பெயராக அமைத்துள்ளார்"[32] என்று வாழ்வியல் களஞ்சியம் பொருள் தருகிறது.

ஒளவையின் ஆத்திசூடி ஒவ்வொன்றும் நீதிக்கருத்துக்களை உணர்த்தும். இரண்டு சீர்கொண்ட குறளடியில், ஒரு செய்தியைச் சுருங்கச்சொல்லி விளங்க வைப்பது இலக்கிய உலகில் ஒளவையார் காட்டிய புதுமையாகும். ஒளவையாரின் ஆத்திசூடியை அடிப்படையாகக் கொண்டு பல்வேறு ஆசிரியர்கள் ஆத்திசூடி நூல்களைப் படைத்துள்ளமையைப் பின்வரும் பட்டியல் காட்டுகின்றது :

## ஆத்திசூடி நூல்களின் தொகுப்புப் பட்டியல்

| வ.எண். | ஆசிரியர் பெயர் | நூலின் பெயர் | எண்ணிக்கை |
|---|---|---|---|
| 1. | ஔவையார் | ஆத்திசூடி | 109 |
| 2. | பாரதியார் | புதிய ஆத்திசூடி | 110 |
| 3. | பாரதிதாசன் | பாரதிதாசன் ஆத்திசூடி | 84 |
| 4. | பாரதிதாசன் | இளையார் ஆத்திசூடி | 88 |
| 5. | சுவாமி சுத்தானந்த பாரதியார் | பொதுநெறி | 110 |
| 6. | வாணிதாசன் | புதிய ஆத்திசூடி | 95 |
| 7. | வ.சுப.மாணிக்கம் | தமிழ்சூடி | 118 |
| 8. | சஞ்சீவி | ஆத்திசூடி | 108 |
| 9. | நாரா. நாச்சியப்பன் | நெறிசூடி | 104 |
| 10. | ச.மெய்யப்பன் | அறவியல்சூடி | 108 |
| 11. | சோம.இளவரசு | நீதிசூடி | 108 |
| 12. | மு.வரதராசனார் | ஆத்திசூடி | 108 |
| 13. | முத்துக்கணேசன் | முத்துச்சூடி | 108 |
| 14. | தமிழண்ணல் | ஆய்வுசூடி | 122 |

### 1.2.2. கொன்றைவேந்தன்

ஔவையாரால் இயற்றப்பட்ட நீதிநூல்களுள் கொன்றைவேந்தனும் ஒன்றாகும். இந்நூல் கடவுள்வாழ்த்து உட்பட 92 செய்யுட்களைக் கொண்டுள்ளது. கடவுள் வாழ்த்து விநாயகருக்கு உரியதாக அமைந்துள்ளது. ஆத்திசூடியில் சொல்லப்பட்ட சில இன்றியமையாத அறநெறிகள் வலியுறுத்தி கொன்றைவேந்தனிலும் மீண்டும் சொல்லப்பட்டுள்ளன.

### 1.2.3. மூதுரை அல்லது வாக்குண்டாம்

மூதுரையின் ஆசிரியர் ஔவையாராவார். இந்நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர் மூதுரை என்பதாகும். ஒரு நூலுக்குப் பெயரிடும்பொழுது அந்நூலின் தொடக்கச் சொல்லையே அடிப்படையாகக் கொண்டு பெயரிடுவது உண்டு. மூதுரையின் கடவுள் வாழ்த்துச் செய்யுள் ‘வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள் நோக்குண்டாம்’ எனத் தொடங்குகிறது. அதனால், வாக்குண்டாம் என்றும் இந்நூல் அழைக்கப்பட்டது. முதுசொல், முதுமொழி, மூதுரை என்பன ஒரு பொருள் குறித்த பல சொற்களாகும். மூதுரையின் இலக்கணத்தைத் தொல்காப்பியர்,

*“நுண்மையுஞ் சுருக்கமும் ஒளியு டைமையும்*
*மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்*
*குறித்த பொருளை முடித்தற்கு வருஉம்*
*ஏது நுதலிய முதுமொழி என்ப”* *(தொல்.பொருள்.செய்யுளியல். 170)*

எனக் கூறுகிறார். மூதுரை கடவுள் வாழ்த்து நீங்கலாக முப்பது பாடல்கள் கொண்டது. தமிழில் உயிரும் மெய்யும் ஆகிய முதல் எழுத்துக்கள் முப்பது ஆகையால் மூதுரை முப்பது வெண்பாக்களைக் கொண்டு விளங்குகின்றது.

### 1.2.4. நல்வழி

நல்வழி, கடவுள் வாழ்த்து உட்பட 41 வெண்பாக்களை உடையதாக அமைந்துள்ளது. நல்வழியில் ஔவை ‘சங்கத்தமிழ் மூன்றும் தா’ என்று விநாயகரிடம் வேண்டுகிறார். முச்சங்கத்தார் போற்றி வளர்த்த இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழையும் தனக்குத்தந்தால் அதற்குப் பதிலாகப் பால், தேன், பாகு, பருப்பு

ஆகிய நான்கும் கலந்து உண்ணுவதற்குத் தான் பிள்ளையாருக்குத் தருவதாகக் கூறுவது வியப்பைத் தருவதாக அமைகிறது. 'சிவாய நம' எனச் சிந்தித்து இருப்போர்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை என்றும் 'நீறில்லா நெற்றி பாழ்' எனத் திருநீறு பூசாத நெற்றியானது பொலிவினை இழக்கும் என்றும் இந்நூலில் ஔவையார் பேசுகிறார். திருநீறு சைவ சமயத்தில் தனிச்சிறப்புமிக்கதாகக் கருதப்படுகின்றது. எனவே, திருநீறு இல்லாத நெற்றி இருந்தும் இல்லாததாக ஔவையார் கருதுவதை அறியமுடிகிறது. இதன்மூலம் நல்வழி சைவ சமயம் சார்ந்தது என்பது வெளிப்படை.

## 1.3. அருங்கலச்செப்பு

அருங்கலச்செப்பு ஆசிரியர் இன்னார் எனத் தெரியவில்லை. "அருங்கலச்செப்பு என்பது பொருள் வளமுள்ள அழகான பெயர். 'அருங்கலம்' என்றால் விலையுயர்ந்த இரத்தினங்களால் அமைக்கப்பட்ட அணிகலன்கள் என்பது பொருள் 'செப்பு' என்றால் அவ்வணிகலன்களைச் சேமித்து வைக்கும் பேழை என்பது பொருள். எனவே அருங்கலச்செப்பு என்றால் இல்லறத்தில் வாழும் ஆண்களும் பெண்களுமாகிய மக்கள் தமது வாழ்க்கையில் அணிகலன்கள் போலக் கொள்ளவேண்டிய நல்ல ஒழுக்கங்களைக் கூறுகிற 'நூல்' என்பது கருத்து. விலையுயர்ந்த அணிகலன்களை அணிவோர் அழகும் மதிப்பும் பெறுவதுபோல இந்நூலின் கூறப்படும் நல்லொழுக்க மாகிய அணிகலன்களைப் பூண்டு ஒழுகுகிறவர் வாழ்க்கையில் அழகும் நன்மதிப்பும் பெறுவர் என்பது இதன் திரண்ட பொருளாகும்"[33] என அருங்கலச்செப்பு மதிப்புரையில் மயிலை சீனி.வேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார்.

அருங்கலச்செப்பில் 180 குறட்பாக்கள் காணப்படுகின்றன. முதல் 56 பாடல்கள் 'நற்காட்சி' பாடலாக விளங்குகின்றன. 57 முதல் 61 வரையிலான பாடல்கள் நல்ல ஞானத்தை விளக்குகின்றன. 174 முதல் 180 வரையிலான பாடல்கள் அருங்கலச் செப்பு நூலின் சிறப்பையும் பயனையும் உணர்த்துவதாகவும் இடைப்பட்ட 111 பாடல்கள் இல்லறத்தாரும் துறவறத்தாரும் ஒழுகவேண்டிய நல்லொழுக்க நிலையையும் உணர்த்துகின்றன.

“12-ஆம் நூற்றாண்டில் தோன்றிய அருங்கலச்செப்பு என்னும் இந்நீதிநூல் சமணசமய அறிவுரைகளைக் கூறுகிறது”[34] எனக் கூறுகிறார் தமிழண்ணல். “கி.பி.13-ஆம் நூற்றாண்டில் தோன்றிய அறநெறிச்சாரத்திற்கு முன்னர் தோன்றியுள்ளது. எனவே இதன் காலம் கி.பி.12-ஆம் நூற்றாண்டின் தொடக்க காலம் என்பர். எனவே, அருங்கலச்செப்பு கி.பி.8-ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.12-ஆம் நூற்றாண்டுக்கு இடைப்பட்டது எனத் தெரிகின்றதேயொழிய அதனுடைய சரியான காலம் பற்றி அறியமுடியவில்லை. இந்நூல் தோன்றிய காலத்தைச் சரியாக அறியமுடியாவிட்டாலும் அவற்றில் உள்ள பாடல்களைப் படித்தறியும்பொழுது அவை பிற்காலத்தில் தோன்றிய நூல் எனத் தெரிகிறது”[35] என்கிறார் மு.அருணாசலம்.

சமணர்களின் ஒழுக்கநிலையின் தன்மையினை விளக்கும் பொருட்டு தோன்றிய அறநூல் அருங்கலச்செப்பு. இது நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்னும் சமண திரிரத்தினங்களை விளக்குகிறது. “முற்ற உணர்ந்தானையேத்தி மொழிகுவன் குற்றமொன்றில்லா அறம் என அருகனை வணங்கி நூலைத் தொடங்கு வதினாலும் ‘நச்சரவண் நிழல் பச்சைமா மலைதனை நிச்சலு நினைப்பவற் கச்சமில்லையே’ என்று பார்சுவநாத தீர்த்தங்கரரைப் போற்றி நூலை முடித்திருப்ப தாலும், இவர் ஒரு தமிழ்ச்சான்றோர் என்பதும், சமணர் என்பதும் விளங்கும்”.[36]

*“அருங்கலச் செப்பினை யாற்றத் தெளிந்தார்*

*ஒருங்கடையு மாண்பு திரு”  (அருங்.175)*

என்று நூலின் இறுதியிலும் இந்நூலாசிரியர் கூறுவதால், இந்நூல் சைனர்களுக்கோ, அன்றி ஒரு சாரார்க்கோ எழுந்ததல்ல வென்பதும் இதைப் பயின்று ஒழுகுவோர் சிறப்படைவர் என்பதும், இது இல்லறத்தார் யாவருக்கும் கூறப்பட்ட பொது அறநூலாகும்”.[37] எனவே அருங்கலச்செப்பு சமணசமயத்தாரின் ஒழுக்கங்களைக் கூறினாலும் இவ்வொழுக்கங்கள் பொதுவாக எல்லோருக்கும் ஏற்றவையாக அமைகின்றன.

## 1.4. அறநெறிச்சாரம்

அறநெறிச்சாரம் முனைப்பாடியார் என்ற சமணமுனிவரால் எழுதப்பெற்றது. 226 வெண்பாக்களையுடையது. ஒவ்வொரு பாடலும் அறத்தினை வலியுறுத்துகின்றது. சமணசமயம் சார்ந்த நூலாக இது இருந்தாலும் பொது அறங்களையும் மிகுதியாக கூறிச் செல்கின்றது. இந்நூல் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களையும் குறிப்பிடுகிறது. அறக்கருத்துக்களை உவமைகள் வழியாகவும் உருவகம் வழியாகவும் இந்நூல் விளக்கிச்செல்கின்றது. இதன் காலம் 13-ஆம் நூற்றாண்டு ஆகும்.

அறநெறிச்சாரம் சமணசமயச் சார்பாயிருந்த போதிலும்கூட பொதுநீதிகளும் ஆசாரங்களும் நல்லொழுக்க விதிகளும் இதில் கூறியுள்ளார் முனைப்பாடியார். எனவே இந்நூலாசிரியர் சமணராக இருப்பினும் ஒருவன் வாழ்வதற்குத் தேவையான அறக்கருத்துக்களைத் தம் நூலில் படைத்திருப்பது சிறப்பிற்குரியதாகும்.

"ஆசிரியர் வரலாறு தெரியவில்லை. இந்நூலின் இறுதிப்பாடல் முனைப்பாடி என்ற பெயரைக் குறிப்பிடுகின்றது. இதனால் முனைப்பாடி என்பது ஓர் ஊர் என்று கருத இடமாகிறது. இவ்வூர்ப் பெயர்க்காரணமாக முனைப்பாடி என்ற பெயர் அமைத்துக் கொள்ளப்பட்டதோ என்று கருதவேண்டி இருக்கிறது"[38] என்கிறார் மு.அருணாசலம்.

"முனைப்பாடியார் சைனர் என்பது வழக்கு. அதற்கேற்ப பாடல்கள் 1,225,226 ஆகியவை அருகதேவனைக் குறிப்பிடுகின்றன. இவற்றுள் 225-ஆம் பாடல் சைன மரபின்படி அருகனைச் சிவனென்றே சொல்வதும் கருதத்தக்கது. "சிவன் கண்ணே செய்மீன்கள் சிந்தை அவனைப் பிண்டிக்கீழ் வேந்து" என்று குறிப்பிடுகின்றமையால் இவர் சைனத்திற்கும் சைவத்திற்கும் ஒற்றுமையை நிலைநாட்ட முயன்றாரோ என்றும் கருத இடம் தருகிறது. அன்றியும் இவர் முந்தையோர் பாடல்களை எடுத்தாண்டிருப்பதும் இக்கருத்திற்கு ஆதரவாய் அமைகின்றன"[39] என்று குறிப்பிடுகின்றார் மு.அருணாசலம்.

## 1.5. வெற்றிவேற்கை

வெற்றிவேற்கை ஆசிரியர் அதிவீரராமபாண்டியர். இவர் எழுதிய நூலில் எண்பத்திரண்டு செய்யுள்கள் இடம்பெற்றுள்ளன. இவர் பாண்டியநாட்டு மன்னரில் ஒருவர். சிவன்மீது அதிக பக்தியுள்ளவர். இவருடைய சகோதரர் வரதுங்கபாண்டியர். அதிவீரராமபாண்டியர், தமிழ்மொழியில் அதிக ஈடுபாடு கொண்டு முதலில் நளன்கதை பாடத்தொடங்கினார்.

"நைடதம் என்னும் காப்பியம் நிஷதநாட்டை ஆண்ட நளன் என்னும் மன்னனுடைய வாழ்வை விளக்குவது. பாரதத்தில் ஒரு பகுதியாக உள்ள கதையை விருத்தம் என்னும் செய்யுள் வடிவால் கூறுவது இந்நூல். தொடக்கத்தில் இந்நூல் கதை விரிவாகக் கூறப்பட்டு வந்து பிற்பகுதியில் சுருக்கமாக அமைந்து விரைவில் முடிக்கப்படுகிறது. அதிவீரராமருடைய தேவியாகிய அரசி தம் கணவரின் நூலில் குறை இருப்பதைச் சுட்டிக்காட்டினாராம். நல்லநடையில் அமைந்திருந்தபோதிலும் ஆசிரியருக்குக் காமச்சுவையில் ஈடுபாடு மிகுந்து விளங்குவதுபோல் மற்றச் சுவைகளில் இல்லை. நூலின் சிறப்புக்கு அது குறை ஆகிறது. அவர் ஒரு நீதிநூலும் இயற்றியுள்ளார். அது 'வெற்றிவேற்கை' அல்லது 'நறுந்தொகை' எனப்படும். நீதிகளை எளியமுறையில் நேராக எடுத்துரைக்கும் போக்கை அதில் காணலாம்".[40] அதிவீரராமபாண்டியர் கொற்கை நகரிலிருந்து அரசு புரிந்தவரென்பதை இந்நூலின் பாயிரத்தில் கொற்கையாளி எனக் கூறப்படுவதனால் அறியப்படுகிறது.

"அரசர்களுக்கு வெற்றி கையிலுள்ள வேலில் உள்ளது. அதுபோன்று மக்களின் வாழ்க்கை வெற்றி மனத்திலும் செயலிலும் உள்ளது"[41] என்று இந்நூல் கூறுகிறது.

## 1.6. நன்னெறி

நன்னெறியின் ஆசிரியர் சிவப்பிரகாசர் ஆவார். இந்நூல் நாற்பது பாடல்கள் கொண்டுள்ளது; விநாயகர் வணக்கச் செய்யுள் ஒன்றை முதலில் கொண்டுள்ளது; ஒவ்வொரு பாடலிலும் முதல் இரண்டு அடிகள் ஒரு நீதிக்கருத்தையும் பின்பு உள்ள இரண்டு அடிகள் அக்கருத்தை விளக்கும் வகையில் உவமைகளும் அமைக்கப் பட்டுள்ளன; ஒருவன் அறநெறியுடன் வாழ்வதற்கு வேண்டிய நல்ல நெறிமுறைகளைச்

சிவப்பிரகாசர் நன்னெறியில் வகுத்துள்ளார்; பொது அறங்களை விளக்கிச்செல்லும் நீதிநூலாக நன்னெறி திகழ்கிறது. சிவப்பிரகாசர் நன்னெறி இறுதி வெண்பாவில் மன்னனைவிட கற்றோனே சிறப்புடையவன் என்று குறிப்பிட்டுள்ளார். ஒவ்வொருவரும் இளமையிலே கல்வி கற்க வேண்டும் என்ற உணர்வையும் சிவப்பிரகாசர் தூண்டியுள்ளார்.

தமிழ் இலக்கிய வரலாற்றில் பதினேழாம் நூற்றாண்டில் மிகப்பெரும் புலவராகத் திகழ்ந்தவர் துறைமங்கலம் 'சிவப்பிரகாச சுவாமிகள்' ஆவார். தமிழ்மொழி ஆர்வமும் கற்பனைச் சிறப்பும் பக்தியுணர்வும் மிக்க பெரும்புலவராவார். சிவப்பிரகாசர் 'கற்பனைக் களஞ்சியம்' என்று புலவர்களால் போற்றப்படுகிறார். காஞ்சி மாநகரத்தில் கி.பி.17-ஆம் நூற்றாண்டில் சைவ சமயத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கும் வகையில் சிவப்பிரகாசர் தோன்றினார். இவர் தந்தையார் குமாரசாமி என்பவர். தாயார் பெயர் அறிய இயலவில்லை. இளமையிலேயே சிவப்பிரகாசர் தம் பெற்றோரை இழந்தார். சிவப்பிரகாசர் உடன் பிறந்தவர் மூவராவார். வேலையர், கருணைப்பிரகாசர் என்னும் இருவரும் தம்பியாவர். ஞானாம்பிகை தங்கையாவாள். ஆண்கள் மூன்று பேரும் இளமைகாலத்தே கல்விகற்று இலக்கியப்புலமை பெற்றனர். சிவப்பிரகாசர் கல்விப்புலமை பெற்றதோடு சைவநெறிகளையும் நன்கு அறிந்து சமயத்தில் அதிக நாட்டம் உள்ளவராகத் திகழ்ந்தார்.

சிவப்பிரகாசரின் தம்பியர் இருவரும் தங்கையும் இல்லறவாழ்வை மேற் கொண்டனர். சிவப்பிரகாசரோ தம் பிறவிப்பிணியிலிருந்து நீங்கும் பொருட்டு ஈசனுக்குப் பணியாற்ற விரும்பினார். இதன் காரணமாக இவருடைய மனம் இல்லறவாழ்வை நாடாமல் துறவற வாழ்வையே நாடியது.

"பக்திநெறியில் சிவப்பிரகாசர் பல தலங்களுக்கு சென்று வழிபடலாயினார். வழிபாட்டின் பொழுது திருவண்ணாமலை, திருச்செந்தூர், சிதம்பரம், பழமலை (விருத்தாசலம்) திருவெங்கை, துறைமங்கலம், கூவம், நல்லாற்றூர் முதலிய ஊர்களில் தங்கினார். பிறகு துறைமங்கலத்திலும் நல்லாற்றிலும் இவர் வாழ்ந்து வந்தார். இதனால் இவருடைய இயற்பெயரோடு வாழ்ந்த ஊர்ப்பெயரைச் சேர்த்து

வழங்கும் தமிழ் மரபுக்கேற்ப 'துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்' என்றும் 'நல்லாற்றூர் சிவப்பிரகாச சுவாமிகள்' என்றும் குறிப்பிடப்பெறுகிறார்".[42]

"குருவின் வாயிலாக இறைவனை அடையவேண்டும் என்று சைவசமயம் சொல்கிறது. அதற்கேற்ப வாழ்க்கையில் சமயகுரு என்றும் ஞானகுரு என்றும் இருவேறு குருமார்களுடன் இவர் தொடர்பு கொண்டார். இவருக்குச் சமய குருவாக விளங்கியவர் திருவண்ணாமலைக் கோவில் தெற்குத் திருவீதி மடத்திலிருந்த சாளிகந்த குருதேவர் ஆவார். அவரைச் சிவப்பிரகாசரும் இளவல் கருணைப் பிரகாசரும் போற்றிப் பாடியுள்ளனர்".[43] இதன்வழி சிவப்பிரகாசர் இறைவன்மீது அதிக பக்தியுள்ளவராகவும் சைவசமயத்தில் அதிக ஈடுபாடு கொண்டவராகவும் இருந்தார் என்பதை அறியமுடிகிறது.

தெய்வீக தன்மைகொண்ட அடியார்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட பல நிகழ்ச்சிகளை அவர்களுடைய வாழ்க்கை வரலாற்றுக்குறிப்புக்கள் குறிப்பிடுகின்றன. அந்த வகையில் சிவப்பிரகாசரின் வாழ்க்கையிலும் சில நிகழ்ச்சிகள் நடந்துள்ளதை அறியமுடிகிறது. "திருவெங்கையில் அடியார்களுக்குப் பயன்பட்டு வந்தது முருங்கை மரம் ஒன்று. அது அவ்வூர்ப்பிடாரியின் திருவிழா இரதத்தால் அழிந்தது. அதனைக் கண்டு மனம் நொந்து சிவப்பிரகாசர் பாடியதால் அத்தேர் அழிந்தது. திருக்காட்டுப் பள்ளியில் உமணர் குலப்பெண் ஒருத்தி உப்பு விற்று வந்தாள். அவளுடைய அறிவையும் ஆன்ம பரிபக்குவநிலையையும் சிவப்பிரகாசர் உணர்ந்து அப்பெண்ணுக்குப் பிறப்பறுக்கும் ஞானநெறியை அறிவுறுத்தினார். மணிமுத்தாற்றில் ஒருநாள் சிவப்பிரகாசர் நீராடியபோது நீரில் ஒரு மாங்கனி மிதந்து வந்தது. சிவபூசைக்காக இவர் எடுத்துக்கொண்டார். ஆனால் சோலைக்காவலன் இவரை அதற்காக மடிபிடித்து இழுத்து வம்பு செய்தான். கன்னியா இராசியில் கதிரவன் தோற்றத்தின்போது அக்காவலன் மடியும்படி அறம்பாடினார் அவனும் அழிந்தான்".[44] இத்தகைய நிகழ்ச்சிகள் யாவும் இறைவனின்மீதுள்ள பக்தி உணர்வை அறியச் செய்கிறது எனலாம்.

சைவநெறியில் நின்றதும் நூல் இயற்றியதுமே சிவப்பிரகாசரின் வாழ்வின் இரு கூறுகள் எனலாம். இவர் சமயநெறிகளின் உண்மைகளையும் தத்துவங்களையும் நூல்களாக்கியுள்ளார். "சிவப்பிரகாசர் வீரசைவத்திலே நின்று சமயப்பணி புரிந்த காலத்தில் ஆங்கிலேயர் ஆட்சி இந்தியாவில் தமிழகத்தில் கால்கொள்ளத் தொடங்கியது. அதனால் ஆங்கிலேயர் சமயமாகிய கிறித்துவ சமயத்தைப் பரப்புதல் தமிழகத்திலும் நிகழலாயிற்று".[45] "தம் சமயத்தின் பெருமையினை நிலை நிறுத்துவது சிவப்பிரகாசரின் இன்றியமையாக் கடமையாக அமைந்தது. ஆகவே இவர் 'ஏசுமத நிராகரணம்' என்னும் கிறித்துவ சமயக் கண்டன நூலை எழுதினார். இந்நூல் முழுமையும் கிடைத்திலது".[46]

காப்பியம், தலபுராணம், சிற்றிலக்கியம், நீதி இலக்கியம், தனிப்பாடல் ஆகிய துறைகளிலும் நூல்கள் இயற்றிப் பெருமை பெற்றவர் சிவப்பிரகாசர் எனலாம். தமிழ்ப் பற்றும் சமய ஈடுபாடும் கொண்ட சிவப்பிரகாசர் சமயத்தொண்டு செய்வதையும் தம் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்.

சிவப்பிரகாசரின் காலம் கி.பி.17-ஆம் நூற்றாண்டு என்று தமிழ் இலக்கிய வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன.

"சிவப்பிரகாசர் இயற்றிய நூல்களுள் 'பிரபுலிங்கலீலை' ஒன்றே காப்பியம் என்னும் சிறப்பிற்கு உரியது. தலபுராணம் கி.பி.16-ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழில் பெரு வளர்ச்சி பெற்ற இலக்கிய வகையாகும். இந்நூற்றாண்டின்பின் வாழ்ந்தவராகிய சிவப்பிரகாசர், தலவழிபாடு செய்த பக்தராகவும் விளங்கிய பான்மையால், தொண்டை நாட்டுத் தலமாகிய 'கூவம்' என்னும் தலத்தைப் பற்றிய 'தலபுராணம்' ஒன்று இயற்றியுள்ளார். அவ்வூர் வேளாளரின் வேண்டுகோளுக்கு இணங்கிய சிவப்பிரகாசர், இத்திருக்கூவத் தலபுராணத்தை இயற்றினார் என்பர்".[47]

"நெஞ்சுவிடுதூது, திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ் கலம்பகம் ஆகிய நான்கு நூல்களைச் சிவப்பிரகாசர் இயற்றியுள்ளார். சிவப்பிரகாசர் தாம் தங்கிய இடங்கள் போற்றிப் பரப்பிய வீரசைவ நெறி ஆகியவற்றை இந்நூல்களில் குறிப்பிட்டுள்ளார். திருவெங்கைக் கோயிலில் ஈசனாகிய திருவெங்கைநாதரைப்

போற்றித் ‘திருவெங்கைக்கோவை’, ‘திருவெங்கை உலா’, ‘திருவெங்கைக் கலம்பகம்’ ஆகிய மூன்று நூல்களை பாடியுள்ளார். பழமலை என்று கூறப்படும் விருத்தாசலத்தில் சிவப்பிரகாசர் சில காலம் தங்கியிருந்தார். அப்போது, அத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைப் போற்றிப் ‘பழமலை அந்தாதி’, ‘நவமணிமாலை’, ‘பெரியநாயகியம்மை நெடுங்கழிநெடில் ஆசிரிய விருத்தம்’, ‘பெரிய நாயகியம்மை கட்டளைக் கலித்துறை’ ஆகிய நான்கு நூல்களை படைத்துள்ளார். வீரசைவர்கள் இலிங்கத்தை மார்பில் அணிந்திருப்பர். அதனைப் போற்றிய சிவப்பிரகாசர் இட்டலிங்க அபிடேகமாலை, ‘நெடுங்கழிநெடில்’, குறுங்கழிநெடில் என்னும் மூன்று பாமாலைகளைப் பாடியுள்ளார். இவை ஒவ்வொன்றும் பத்து பத்துச் செய்யுட்களைக் கொண்டதாகும். இளமைப் பருவத்தில் தாம் சென்று வழிபட்ட திருவண்ணாமலைப் பற்றிச் ‘சோணசைலமாலை’, ஆறுபடை வீடுகளுள் ஒன்றாகிய திருச்செந்தூர் பற்றித் ‘திருச்செந்தில் நீரேட்டக யமகவந்தாதி’யும் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகிய நால்வரைப் பற்றி ‘நால்வர் நான்மணிமாலை’ என்னும் அழியாப் புகழ்பெற்ற நூலைப் படைத்துள்ளார்”.[48] காப்பியமும் தலபுராணமும் சிற்றிலக்கியங்களும் இயற்றியுள்ள சிவப்பிரகாசர் அனைவரும் கற்கத் தகுந்த நீதிநூலையும் இயற்றியுள்ளார்.அதுவே நன்னெறியாகும்.

## 1.7. நீதிநெறிவிளக்கம்

நீதிநெறிவிளக்கத்தின் ஆசிரியர் குமரகுருபரர். கடவுள்வாழ்த்து முதலாக 102 பாடல்கள் இதில் அமைந்துள்ளன. இந்நூலாசிரியர் சைவ சமயத்தைச் சார்ந்தவராவார். குமரகுருபரர் தம் காலத்து வாழ்வையும் எதிர்கால வாழ்வையும் மனதில் கொண்டு மானிடருக்கு வேண்டியவற்றை விரித்தும் வேண்டாதவற்றை விலக்கியும் நீதிநூலைப் படைத்தார் எனலாம். இவர் காலம் கி.பி.17-ஆம் நூற்றாண்டாகும்.

குமரகுருபரர், தமிழை உலகம் முழுவதும் பரப்பவேண்டும் என்ற இலட்சிய உணர்வோடு வாழ்ந்தவர். பாண்டிய நாட்டிலே உள்ள ஸ்ரீவைகுண்டத்திலே சைவ வேளாளர் குலத்திலே சண்முகசிகாமணிக் கவிராயரும், சிவகாமி அம்மையாரும்

செய்த தவப்பயனாகக் குமரகுருபரர் பிறந்தார். பெற்றோர் அப்பிள்ளையைப் பேணி வளர்த்தார்கள்; அப்பிள்ளை ஐந்து ஆண்டுகள் கழித்தும் வாய்பேசாமல் இருப்பதைக் கண்டு கவலைகொண்டனர்; பின்னர் அக்குழந்தையை அழைத்துகொண்டு திருச்செந்தூருக்குச் சென்று முருகப்பெருமானை வழிபட்டனர்.

திருச்செந்தூர் செந்திலாண்டவர் அருளால் குமரகுருபரர் பேசும் ஆற்றல் பெற்றார். வாய்திறந்து பேசத்தொடங்கிய குமரகுருபரர் தன்னை அருளச்செய்த முருகனுக்குப் பாமாலை சூட்டினார். அதுவே 'கந்தர் கலிவெண்பா' என்னும் நூலாகும். முருகப்பெருமானின் வரலாற்றைக் குறிப்பிடும் கந்தபுராணம் பத்தாயிரம் பாடல்களை கொண்ட மிகப்பெரிய நூலாகும். அந்நூல் கூறும் கதையினைக் கந்தர் கலிவெண்பா மிகவும் சுருக்கமாக விளக்குகிறது.

கயிலாயபுரத்தில் உள்ள இறைவன்மீது குமரகுருபரர் 'கைலைக் கலம்பகம்' பாடியருளினார். மதுரையில் தங்கி இருந்தபோது மதுரை மீனாட்சியம்மைமீது 'மீனாட்சியம்மைப் பிள்ளைத்தமிழையும்' திருவாரூரில் வாழ்ந்தபோது 'திருவாரூர் நான்மணிமாலை' என்ற நூலையும் இவர் பாடியருளினார். மேலும், முத்துக் குமாரசாமி பிள்ளைத்தமிழ், 'சிதம்பர மும்மணிக்கோவை', 'சிதம்பரச் செய்யுட்கோவை' ஆகிய நூல்களை இயற்றும்பொழுதுதான் 'நீதிநெறிவிளக்கம்' என்ற நூலும் எழுதப்பட்டது. தனக்கு ஞான உரை வழங்கிய தேசிகர்பால் 'பண்டார மும்மணிக்கோவை' என்ற நூலை இயற்றினார். இவர் கலைமகளைக் குறித்துப் பாடியது 'சகலகலா வல்லி மாலை' என்னும் நூலாகும். கலைமகள் அவருக்கு முகமதிய மன்னனின் மொழியான இந்துஸ்தானில் புலமை வாய்க்கும்படி அருளினார். கலைமகள் திருவருளால் வடமொழிப்பயிற்சி பெற்றுப் பாதுசாவிடம் தம் கருத்தைத் தெரிவித்து மடம் அமைத்துக்கொண்டார். அவர் தங்கியிருந்த மடத்திற்குக் குமாரசாமி மடம் என்பது பெயர். குமரகுருபரர் காசி சென்று அறம் பல இயற்றினார். அங்குக் காசிக் கலம்பகத்தைப் பாடினார்.

"இலக்கியத் துறையில் அடிகளின் சிறப்பைக் காண்கையில் தமிழ்ப் புலவர்களுள் வடநாடு சென்று தங்கியிருந்து தமிழ் நூல்கள் பாடியவர் இவர்

ஒருவரே"[49] என மு.வரதராசனார் குறிப்பிடுகின்றார். இங்ஙனம் ஒரே கடவுள் ஒரு மொழி என்ற வரையறை இன்றிப் பல தலங்களுக்கும் சென்று பல செய்திகளையும் கற்றுத் தமது படைப்பின் வாயிலாகப் பலவகைச் செய்திகளையும் உலகுக்குக் கூறியுள்ளார்.

"இலக்கண இலக்கியங்களை ஞானத் தன்மையால் விரைவில் கற்றுத் தேர்ந்தார். மருவுக்கு வாசனை வாய்த்தாற்போன்று பக்தி ஞான வைராக்கியங்கள் இவரிடத்தே உண்டாகி வளரத்தொடங்கின"[50] என்பர் உ.வே.சாமிநாதஐயர். பக்திநெறியில் மிகுந்த குமரகுருபரர் தமிழின்மீது ஆர்வம் கொண்டு தமிழ் என்ற சொல்லைக் கையாளுமிடங்களில் அருந்தமிழ், சங்கத்தமிழ், இசைத்தமிழ் என்று கூறித் தமிழிற்கு அழகுசேர்கின்றார்.

"ஐந்து வயதிலேயே இறைவனைப் பாடியதால் இவரைத் திருஞான சம்பந்தரோடு ஒப்பிட்டுப் பார்த்ததனால் 'குட்டி திருஞானசம்பந்தர்"[51] எனக் குறிப்பிட்டுள்ளார் கா.சுப்பிரமணிய பிள்ளை.

குமரகுருபரர் நீதிநெறிவிளக்கம் எழுதியது பற்றி ஒரு கதையுமுண்டு. "திருமலை நாயக்கர் ஒருநாள் உணவு கொள்ளக் காலந்தாழ்த்தியதை அறிந்த அடிகள், அவரிடம் 'வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி, தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது' என்னும் திருக்குறளை எடுத்தியம்பினார். இதனைக் கேட்ட மன்னன் இது யாண்டுள்ளது என்று வினவ இது திருவள்ளுவரிலுள்ள தென்றபோது அந்நூல் விரித்ததாகலின் சுருக்கமான ஒரு அரிய நீதிநூலினை அடிகள் நீதிநெறிவிளக்கம் பாடினரென்ப"[52] என்று கூறுகிறார் கா.சுப்பிரமணிய பிள்ளை. எனவே சுருக்கமான இந்த நீதிநூலில் கல்வியின் சிறப்பு, செல்வச்சிறப்பு, அரசன் ஆட்சி புரியும் திறன், ஒவ்வொரு மனிதனுக்கும் வேண்டிய அறங்கள் போன்றவற்றை எளிமையாகவும் உவமைகளைப் பயன்படுத்தியும் கூறியுள்ளார் குமரகுருபரர்.

## 1.8. விவேகசிந்தாமணி

விவேக சிந்தாமணியின் ஆசிரியர் யார் என்பது அறியமுடியவில்லை. அவர் வாழ்ந்த காலம் இடம் பற்றித் தெளிவாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. "சிந்தாமணி என்பது தேவர்களும் அசுரர்களும் கூடிப் பாற்கடலைக் கடைந்தபோது

வெளிப்பட்ட சிறந்த பொருள்களுள் ஒன்று. சிந்தாமணி எவரிடத்தில் உள்ளதோ அவர் நினைத்ததை எல்லாம் பெறுவார். இந்திரன் அந்த மணியைப் பெற்றுப் பாதுகாத்து வைத்திருந்து எல்லா நலன்களையும் பெற்றான்”[53] என்று அபிதானசிந்தாமணி கூறுகின்றது.

விவேகசிந்தாமணி, கடவுள் வாழ்த்து உள்பட முதல்பாகம் 135 பாடல்களும் இரண்டாம் பாகம் 100 பாடல்களும் கொண்டுள்ளன. நூலின் முதற்பாடல் கணபதி துதியாக அமைந்துள்ளது. விவேகசிந்தாமணியில் நீதியை உணர்த்தும் பாடல்கள் அதிகம் காணப்படுகிறது. தீயவர்களின் குணங்களை விலக்கி மனிதனுக்கு அமைந்திருக்க வேண்டிய நற்பண்புகளையும் வலியுறுத்துகிறது. செல்வத்தின் சிறப்பை எடுத்துக்கூறி வறுமையின் கொடுமையை இந்நூல் காட்டுகிறது.

## 1.9. நீதிவெண்பா

நீதிவெண்பா ஆசிரியர் இன்னார் என்று அறியமுடியவில்லை. கடவுள்வாழ்த்துச் செய்யுளுடன் இந்நூல் 101 செய்யுட்களைக் கொண்டுள்ளது. நான்குவகைப் பாவினங்களுள் ஒன்றாகிய வெண்பா முறையில் அமைந்து நீதிகளைக் கூறிச் செல்வதால் இந்நூல் நீதிவெண்பா என்னும் பெயர் பெற்றது. நீதிகள் முறையாகவோ தொகுத்தோ, வகுத்தோ கூறப்படாமல் கலம்பகம் போல கலந்து கூறப்பட்டிருக்கிறது. செய்யுளின் நடைபோக்கு சிலவிடங்களில் செம்மையாகவும், சிலவிடங்களில் செம்மையற்றும் செல்வதாலும் இந்நூல் பிற்காலத்தில் இயற்றப்பட்டிருக்கலாமென்று எண்ணத் தோன்றுகிறது. கடவுள்வாழ்த்துச் செய்யுள் ஆனைமுகக் கடவுளின் துணைகொண்டு பாடுவதால் இந்நூலாசிரியர் சைவசமயத்தைச் சார்ந்தவர் என்பதை அறிவிப்பதாக உள்ளது.

## 1.10. உலகநீதி

உலகநீதி என்ற நூலின் ஆசிரியர் உலகநாதர் ஆவார். முருகனிடத்திலே பெரிதும் ஈடுபாடுகொண்டவர் 18-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். 13 விருத்தப் பாக்களையுடையது. “உலகநாதர் தமிழறிவோடு மருத்துவத் துறையிலேயும் ஆழ்ந்த ஆராய்ச்சி உடையவராய் விளங்கியவர். இவர் தமிழிலக்கண இலக்கிய அறிவிற்

சிறந்தவராய் ஆராய்ச்சி உரைகள் எழுதியுள்ளார். இறைவழிபாட்டில் பெரிதும் ஈடுபட்டிருந்தார். தமது இல்லத்திலே முருகப்பெருமானுடைய வெற்றிவேலினை வழிபாட்டுக் கூட்டத்தில் அமைத்துத் தினமும் வழிபட்டார். கருவூர்ச்சித்தர், வடக்குவாயில் முருகன் வடலாற்றுத் தென்கரையிலுள்ள இரட்டைப் பிள்ளையார் கோவில் ஆகிய தேவாலயங்களுக்கு அடிக்கடி சென்று வழிபடுதலை நியமமாகக் கொண்டிருந்தார். தமிழோடு சைவமும் தழைக்க தம்மாலியன்ற தொண்டுகள் செய்து வந்தார்"[54] என்று கலைக்களஞ்சியம் குறிப்பிடுகிறது. உலகநீதியில் உள்ள எல்லா பாடல்களும் முருகனையே வாழ்த்தி முடிவதால் உலகநாதர் முருகனின்மீது பக்தி உணர்வு மிக்கவர் என்பது வெளிப்படுகிறது.

## 1.11. நீதிநூல்

பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர்களில் சிறப்பிடம் பெறுபவர் வேதநாயகம்பிள்ளை ஆவார். "சோழநாட்டிலே திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கே 16கி.மீ. தொலைவில் 'வேளாண்குளத்தூர்' என்ற ஓர் ஊர் உண்டு. அது இக்காலத்தில் 'குளத்தூர்' என்று குறுகி வழங்குகிறது. அவ்வூரில் மதுரநாயகம்பிள்ளை என்பவர் பெரிய பண்ணையாராக இருந்தார். அந்த மதுரநாயகத்தின் மரபிலே உதித்த சவரிமுத்துப்பிள்ளை என்பவருக்கும் ஆரோக்கியமேரி என்பவருக்கும் மகனாக 1826-ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 11-ஆம் நாள் உதித்தவரே வேதநாயகர். பள்ளிப் பருவம் வந்தவுடன் தமது ஊரில் இருந்து திண்ணைப் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். அங்கு அருமைத் தமிழையும் நெடுங்கணக்கையும் கற்றுத்தேர்ந்தார். அவர் வீட்டிலேயே தங்கியிருந்து குருகுல முறைப்படி ஆங்கிலமும் அன்னைத் தமிழும் கற்கலானார். ஆங்கிலத்தில் அருமையாகப் பேசவும் எழுதவும் வல்லவர். இளமையிலேயே தமிழ்க்கவிகள் இயற்றும் திறமையும் பெற்றார். தியாகப் பிள்ளையிடம் வடமொழி பிரெஞ்சு மொழியும் ஓரளவு கற்றுக்கொண்டார்"[55] என அந்தோனி இராசு குறிப்பிடுகிறார்.

"வேதநாயகரின் ஆசிரியரான தியாகப்பிள்ளை அலுவல் பார்த்து வந்த தென் மாநில வழக்கு மன்றத்தில் கார்டன் என்பவர் நீதிபதியாக இருந்தார். தியாகப்

பிள்ளையின் பரிந்துரையை ஏற்று அந்நீதிபதி வேதநாயகரை அந்நீதி மன்றத்திலே ஆவணக் காப்பாளராக அமர்த்திக்கொண்டார். அறிவும் இளமையும் கொண்ட அவர் சோம்பலின்றி ஊக்கத்துடன் தன் அலுவல்களைச் செய்து, தன் மேலதிகாரிகளின் அன்புக்கும் நம்பிக்கைக்கும் உரியவர் ஆனார். தம் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்ட ஆவணங்களை முறைப்படுத்தி அடுக்கிப் பாதுகாத்து வந்ததோடு அவற்றைப் படித்துப் பார்த்து அரசாங்க நடைமுறைகளையும் நீதிமன்ற நெறிமுறைகளையும் அறிந்தார். திருச்சிராப்பிள்ளியிலிருந்த மாவட்ட நீதிமன்றத்திற்கு (District Court) 1850-ஆம் ஆண்டில் மொழிபெயர்ப்பாளர் ஒருவர் தேவைப்பட்டார். அங்கு நீதிபதியாக இருந்த 'பாய்லோ'என்பவர் விண்ணப்பித்தவர்களை அழைத்து நேர்முகத்தேர்வு ஒன்று நடத்தினார். ஆங்கிலத்தில் உள்ளதைத் தமிழிலும் தமிழிலுள்ளதை ஆங்கிலத்திலும் எழுதிக்காட்டுமாறு கட்டளையிட்டார்.வேதநாயகரின் மொழிபெயர்ப்பு சிறந்திருந்ததால் வேதநாயகர் தேர்வு செய்யப்பட்டு மொழிபெயர்ப்பாளராக அமர்த்தப்பட்டார்".[56] வேதநாயகர் அரசாங்கப்பணியிலும் சோம்பலின்றி முழுமுயற்சியுடன் தன் கடமைகளை செய்து வந்தார்.

ஒருவரின் அறிவாற்றலையும் திறமையையும் அறிந்துகொள்வதற்கு இன்றைய நிலையில் பயன்படுவது தேர்வுமுறையாகும். அலுவலகப் பணிக்கு ஆள்தேவைப் பட்டாலும் அவர்களுக்குத் தேர்வு வைத்துத் தகுதியானவர்களை மட்டும் தெரிவு செய்கின்றனர்; அரசு அலுவலகங்களில்கூட இதேமுறைதான் கையாளப்பட்டுள்ளது. பள்ளிப் படிப்பிலிருந்து பல்கலைக்கழகப் பட்டம் பெறுவதுவரை தேர்வு தான் ஒருவரின் திறமையை அறிந்துகொள்ளப் பயன்படுகின்றது. இந்தத் தேர்வு முறை வேதநாயகர் காலத்திலும் இருந்துள்ளது. அக்காலத்தில் ஆங்கில அரசினர் நாட்டை ஆட்சிபுரிந்ததால், நீதிமன்றத்து நீதிபதியாக ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டுமானால் அவர் தேர்வு எழுதி வெற்றிபெற வேண்டும் என்ற நியதியை ஏற்படுத்தி இருந்தனர். "1856-ஆம் ஆண்டு இத்தகைய தேர்வு ஒன்றை நடத்தினர் ஆங்கில அரசினர். ஏறத்தாழ எழுபது பேர்கள் இத்தேர்வில் பங்குகொண்டனர். ஆனால் தேர்வில் வெற்றி பெற்றவர்கள் மூவர்தான். அம்மூவரும் பிற்காலத்தில் பெரும்புகழ் பெற்றனர். ஒருவர் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக இருந்த முத்துசுவாமி அய்யர்.

அடுத்தவர் திவான்பகதூர் இரகுநாதராவ் அவர்கள். மற்றவர் நம்முடைய வேதநாயகர். திருச்சியில் மொழிபெயர்ப்பாளராக இருந்துகொண்டே இந்த தேர்விற்குப் படித்து வெற்றி கண்டார். தமிழ்க்கவிதை செய்துகொண்டே பிறமொழியிலும் புலமைபெற்று அவர் வெற்றி கண்டார்".[57] வேதநாயகரின் இத்தகைய வெற்றிக்குக் காரணம் அவருடைய உழைப்பும் முயற்சியும் ஆகும்.

"தேர்வில் வென்ற இம்மூவருக்கும் அரசினர் சான்றிதழ் அளித்தவர் பிச்சாம்புதுரை ஆவார்கள். இந்த தேர்வு நடந்து முடிந்த சில திங்களுக்குப் பிறகு தரங்கம்பாடியில் நீதிபதியாக இருந்த ஒருவர் இறந்துபோனார். உடனே பிச்சாம்புத் துரை அவர்கள் மூவரில் எவரேனும் அவ்வேலைக்குப் போக விரும்புகின்றனரா என்று கேட்டபொழுது மற்ற இருவரும் சம்பளம் மிகக் குறைவாக இருக்கிறது. 'அறுபது ரூபாய் தானே' என்று கூறி மறுத்துவிட்டனர். ஆனால் வேதநாயகரோ 'போதும் என்ற மனமே பொன்செய்யும் மருந்து' என்ற பொன்மொழிக்கு ஏற்றாற்போல அப்பதவியை ஏற்க ஒப்புதல் தந்தார். உடனே இதனை மேலிடத்தார்க்கு எழுதினார். அவர்கள் சாதாரண நீதிபதி பதவியை முன்சீப்பாக உயர்த்திச் சம்பளத்தொகையை ரூபாய் நூறாக ஏற்றி வேதநாயகருக்கு அப்பதவியை அளித்துப் பதில் அனுப்பினார். இதை அறிந்த மற்ற இருவரும் ஏமாற்றம் அடையநேரிட்டது. சில நாட்களுக்குப் பிறகு சீர்காழி முன்சீப்பாக வேதநாயகர் நியமிக்கப்பட்டார்".[58]

வேதநாயகர், தான் வாழ்ந்த காலத்தில் கையூட்டு இலஞ்சம் போன்ற தீய பழக்கங்களைக் கடிய ஒரு நீதிநூல் தேவை என்பதையும் எண்ணினார். அதனால் வேதநாயகர் மாயூரத்தில் நீதிபதியாக இருந்த காலத்தில் 200 செய்யுட்கள் எழுதிச் சேர்த்து, 600 பாடல்களைக் கொண்ட திருத்திய பதிப்பாக 1860இல் நீதிநூலை வெளியிட்டார்.

"வேதநாயகர், வேலையிலிருந்து ஓய்வு பெற்றபின் வேலை போயிற்றே என்று வேதனைப்படவில்லை. மாறாகத் தனக்குத் தன் வாழ்நாள் முழுவதும் கருணை புரிந்து வந்த இறை இயேசுவையும் அவரை ஈன்ற அன்னை கன்னி மரியாளையும் பெரிதும் நினைத்தார். நீதிபதியாக வேலை பார்த்தபோது இறைவனை எண்ணிப்

போற்ற நேரம் போதாதக்குறையை நினைத்து "அப்பா இதென்ன அதிகாரம், ஐயோ! எப்போதும் பக்தி செய்ய இல்லையே நேரம்" என்று நெஞ்சுருகிப் பாடியவருக்கு இப்போது நிறைய நேரம் கிடைத்தது. ஆகவே இறைவனின் திருவருளை நினைத்துத் 'திருவருள்மாலை', 'திருவருள் அந்தாதி', தேவ அன்னையின் அருளைப்போற்றித் 'தேவமாதா அந்தாதி' என்னும் செய்யுள் நூல்களை 1873ஆம் ஆண்டில் வெளியிட்டார். தேவனைத் தோத்தரிக்கும் மாலையாகத் 'தேவ தோத்திர மாலை' என்ற நூலையும் எழுதி 1889-ஆம் ஆண்டில் வெளியிட்டார். இவை இறையன்பில் ஈடுபட்ட அவரது இதயத்தின் எதிரொலியாக இலங்குகின்றன. இவற்றைப் படிப்பவர்க்கு இதே உணர்வு இன்றும் ஏற்படும்".[59] தன்னுடைய சமயத்தின் மீது அக்கரை உள்ளவராகவும் பக்தியில் அதிக நாட்டம் கொண்டரவாகவும் திகழ்ந்தவர் வேதநாயகர் என்பதை அவர் எழுதிய நூல்களின் வாயிலாக அறியமுடிகிறது.

நீதிபதிப் பொறுப்பிலிருந்து விலகிய வேதநாயகர் தன்னால் இயன்ற அளவு பொதுநலத்தொண்டும் செய்து வாழ்ந்தார். மாயூரத்தைச் சேர்ந்த பெரியோர்கள் வேதநாயகரை அந்த நகர் மன்றத்தின் தலைவராக நியமித்தனர். வேதநாயகரும் அவர்களின் அன்பான வார்த்தைகளைத் தட்டமுடியாமல் தலைவர் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். தனது பதவிக் காலத்தில் சாலைகள் அமைத்தல், கல்விச்சாலைகள் அமைத்தல், குடிநீர் வசதியளித்தல், துப்புரவு, சுகாதாரம் பெருகச் செய்தல் முதலிய துறைகளிலும் பாராட்டத் தக்க பணிகளைச் செய்வதோடு பொதுநலத்தொண்டு செய்வது எப்படி என்று பிறருக்கும் அறிவுறுத்தி வாழ்ந்தவர் என்பதை அறிய முடிகிறது.

"1876-ஆம் ஆண்டு முதல் மூன்று ஆண்டுகள் மாயூரத்திலும் அதன் சுற்றுப் புறங்களிலும் கடும்பஞ்சம் ஏற்பட்டது. முதல் ஆண்டில் வறட்சியும், இரண்டாம் ஆண்டில் வெள்ளமும், மூன்றாம் ஆண்டில் விட்டில்பூச்சிகளும் இப்பெரும் பஞ்சத்திற்குக் காரணமாயின. இப்பஞ்ச காலத்தில் மாண்டோர் எண்ணிக்கை அதிகமாகும். மனித உயிர்கள் பட்ட பாட்டைக்கண்டு மனம் பதறினார் வேதநாயகர்".[60] சோற்று வளமுடைய

சோழநாட்டில் சோறில்லாது மக்கள் வருந்தும் நிலையைக் கண்டு மிகவும் வருத்தம் கொண்டார்.

அறிஞர்கள் பலரின் நட்புக்கும் பாராட்டுக்கும் உரிய சிறந்த பண்பாளர் வேதநாயகர்; நல்ல நீதியாளர்; உரைநடை ஆசிரியர்; புதினம் எழுதுவதில் முதன்மை வாய்ந்தவர்; பெண்ணின் பெருமை பேசியவர்; இத்தகைய வல்லமை கொண்ட கிறித்துவர் ஆகிய வேதநாயகருக்கும் வாழ்வின் இறுதிக் காலம் நெருங்கியது. இத்தகைய பெருவாழ்வு பெற்ற வேதநாயகர் 1898-ஆம் ஆண்டு சூலைத் திங்கள் 21-ஆம் நாள் இரவு 11 மணிக்கு மண்ணுலக வாழ்வை விட்டு விண்ணுலக வாழ்வை எய்தினார்.

## 1.12. நீதிநூல்கள் தோன்றியதற்கான காலச்சூழல்கள்

தமிழ் இலக்கிய பரப்பில் நீதிநூல்கள் தோன்றி ஒரு கணிசமான இடத்தை வகிக்கின்றன. இந்நீதிநூல்கள் தோன்றுவதற்குப் பல்வேறு காரணங்கள் கூறப்படுகின்றன. சமுதாயத்தில் பல சீர்கேடுகள் ஏற்பட்டபோது அச்சீர்கேடுகளை அழிக்கும் பொருட்டு நீதிநூல்கள் தோன்றின.

## 1.13. களப்பிரர் வருகை

"சங்க காலத்திற்கு அடுத்து தோன்றிய காலம் சங்கம் மருவிய காலம். இக்காலத்தில் நாட்டை ஆண்டவர்கள் 'களப்பிரர்கள்' என்று இலக்கிய வரலாறுகள் கூறுகின்றன.இவர்களது ஆட்சிக்காலம் கி.பி.250 முதல் 500 வரை இருந்திருக்கலாம் என வரலாற்றுச் செய்திகள் வழியாக உணரமுடிகிறது. களப்பிரர் காலத்தில் தமிழ் இலக்கியம், பண்பாடு ஆகியவை ஒடுக்கப்பட்ட நிலையில் இருந்தன எனவும் அவர்கள் தமிழ்ச் சமுதாயத்தை அடக்கி வைத்திருந்தார்கள் எனவும் ஆய்வுகள் கூறுகின்றன. களப்பிரர்களின் ஆட்சிக்காலமே தமிழக வரலாற்றில் 'இருண்ட காலம்' என அழைக்கப்படுகிறது. களப்பிரர்கள் வேறெங்கிருந்தும் வரவில்லை. அவர்கள் தமிழ்நாட்டிலே இருந்த ஒரு பிரிவினர் தான் என்று மெய்ப்பிக்கச் சிலர் முயல்கின்றனர்"[61] என்று கூறுகின்றார் கோமதிநாயகம்.

“களவர் என்பது வடமொழியில் ‘களப்ரா’ என மாறித் தமிழில் களப்பிரர்கள் என்றாகியிருக்க வேண்டும். தமிழகத்தின் வடபகுதியில் முத்தரையர் எனும் இனத்தவர் வாழ்ந்தனர். இவர்களே களப்பிரர் என்றும் இவர்கள் வேங்கடத்தைச் சார்ந்தவர்கள் எனச் சிலர் கருதுகின்றனர்”[62] என்று வரலாற்றாசிரியர் கோபிநாதராவ் கூறுகின்றார். எனவே களப்பிரர் தமிழ்நாட்டிலே ஒரு பகுதியில் வாழ்ந்தவர் என்பதை வரலாற்று செய்திகளின்வழி அறியமுடிகிறது.

சங்க காலத்திற்கு அடுத்து வரும் காலத்தில்தான் மிகுதியான நீதிநூல்கள் தோன்றின. கி.பி.3-ஆம் நூற்றாண்டு முதல் 6-ஆம் நூற்றாண்டுவரை நீதிநூல்கள் தோன்றி இருக்கவேண்டும் எனத் தமிழ் இலக்கிய வரலாறுகள் வழி அறியமுடிகிறது.

“காதல் வீரம் கொடை முதலிய சிறந்த உணர்ச்சிகளிலும் இயற்கை இன்பத்திலும் ஈடுபட்டிருந்த புலவர்களின் உள்ளம் அடுத்த சில தலைமுறைகளில் நீதிகளைப் பாடும் நிலைக்கு மாறியது. அந்தக் காலத்தைச் சங்கம் மருவிய காலம் அல்லது நீதிநூல் காலம் என்பர். நாட்டில் சேர, சோழ, பாண்டியரின் அமைதியான ஆட்சியில் ஒரு கலக்கம் நேர்ந்தது என்றும் களப்பிரர் என்னும் சிலர் புகுந்து நாட்டு மக்களின் அமைதியைக் கெடுத்தார்கள் என்றும் கூறுவார்கள். ஆகவே, வாழ்க்கை தரும் இன்பங்களைப் பாடுவதற்கு வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. வாழ்க்கையே ஒரு சிக்கல் ஆகிவிட்டமையால், சமுதாயத்தில் எப்படி எப்படி வாழ வேண்டும் என்ன என்ன நீதிகளைப் போற்றவேண்டும் என்று எடுத்துரைக்க வேண்டிய கடமை புலவர்களுக்கு வந்து சேர்ந்தது”[63] என்கிறார் மு.வரதராசனார்.

“சங்க இலக்கியங்களில் அறக்கருத்துக்கள் உணர்த்தப்பட்ட போதிலும் சங்கம் மருவிய காலத்தில் அறநூல்கள் தோன்றியமைக்குக் காரணம் மக்கள் அறம் குலைந்த வாழ்வு வாழ்ந்து வந்ததே ஆகும். அதனைச் சீர் செய்யும் நோக்கத்துடன் அறத்தை வலியுறுத்த அறநூல்கள் எழுந்திருக்கக் கூடும். பகைவர் படையெடுப்பு முதலிய அரசியல் குழப்பங்களால் அமைதி இழந்த காலத்தில் ஒழுக்கக் குறைவும் குறையுள்ள செயலும் மிகுந்திருந்த காரணத்தால் அவற்றை ஒழிக்கவே அறநூல்கள் தோன்றியிருக்கலாம்”[64] என்று வேலுப்பிள்ளை கூறுகிறார். எனவே, மக்களின்

அமைதியற்ற நிலையினைத் தகர்த்து அவர்களுக்கு வேண்டிய ஒழுக்கநெறிகளை எடுத்துரைக்கும் பொருட்டு நீதிநூல்கள் தோன்றின.

“சங்கமருவிய காலத்தில் களப்பிரராகிய அன்னியர் தமிழ்நாட்டைக் காப்பாற்றியாண்டு கொடுங்கோன்மை செய்ய அவர்கள் காலத்திலே தமிழ்ச் சமுதாயம் சீர்கேடடைந்ததால் தமிழ் மக்கள் வாழ்க்கையை உயரச் செய்வதற்காகவே திருக்குறள் முதலிய அறநூல்கள் தோன்றின என்று ஒருசாரார் கருதுவர். இக்கருத்து ஓரளவு ஏற்கக்கூடியது. நாட்டில் வெளிநாட்டார் படையெடுப்பு நிகழ்ந்த காரணத்தால் அமைதியின்மை முதலியன நிலவும்போது மக்கள் ஒழுக்கம் குன்றுவதியல்பு. அக்குறையை நிவர்த்தி செய்யும் நோக்கமாக, ஒழுக்கத்தை வலியுறுத்தும் நூல்கள் தோன்றுவது எதிர்பார்க்கக் கூடியதே. அன்னியரான களப்பிரரின் வாழ்க்கை முறையும் தமிழர் வாழ்க்கை முறையும் கலந்தபோது சிறந்த ஒழுக்கம் எது என்பது பற்றி மக்களிடையே மயக்கம் ஏற்படுவதும் இயல்பானதே. அந்த மயக்கத்தைத் தீர்த்து வைக்கும் வகையில் அக்காலங்களில் அறநூல்கள் தோன்றின”[65] என வேலுப்பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.

சமணத்துறவிகள் தங்களது சமயத்தைத் தமிழகத்தில் பரப்ப முயன்று அறநூல்களை இயற்றினர். அவர்கள் சமண சமயத்தைப் பரப்புவதற்குப் பயன்படுத்திய முறைகள் பலவாகும். அவற்றுள் முதன்மையான பணி இலக்கியப் பணியாகும். இவர்கள் செய்த இலக்கியக் கொடையே தமிழில் அறநெறி இலக்கியங்கள் மிகுதியாகத் தோன்றியதற்குக் காரணம் என்று கூறலாம்.

“சங்கமருவிய காலப் பகுதிகள் அறநூல்கள் எழுந்ததற்கான சமுதாயச் சூழ்நிலையைப் பற்றி ஆராய அறத்தைப் பற்றியும் அதன் வளர்ச்சி பற்றியும் அறிந்திருக்க வேண்டும். சங்க காலத்தில் வீரமும் கொடையும் மிகுதியாகச் சிறப்பித்துப் பாடப்பட்டமைக்குக் காரணம் போரும் வறுமையும் சமுதாயத்தில் மலிந்து கிடந்தமையே. மேலும், மக்கள் சடங்குகளுக்கும் சம்பிரதாயங்களுக்கும் பெரிதும் அடிமையாகி மனத்தூய்மை, ஒழுக்கம் ஆகியவற்றில் கவனமிழந்தனர். எப்படித்தான் வாழ்ந்தாலும், சடங்குகள் தங்களை மோட்சத்தில் சேர்த்து விடுமென நம்பி மன

அமைதி கண்டனர்... இதுபோன்ற ஒரு நிலை சமண பௌத்தர் செல்வாக்குப் பெற்ற போது தமிழ்நாட்டில் இருந்திருக்கவேண்டும். வெறும் பூசை புனருத்தாரணங்களால் அறவாழ்வு காணமுடியாது. மனத்தூய்மையும் உயர்ந்த ஒழுக்கமும் வேண்டுமென அவை போதித்தன. மேலும், சங்கம்மருவிய காலத்தில் நாட்டில் சிலரிடம் செல்வம் குவிந்தும் பலரிடம் வறுமை மிஞ்சியும் இருந்தது"[66] என்று தில்லைநாதன் குறிப்பிடுகிறார். எனவே சமண பௌத்த சமயங்களின் சடங்கு சம்பிரதாயங்களால் மக்களுடைய வாழ்வியல் முறைகளில் மாற்றங்களை ஏற்படுத்த நீதிநூல்கள் தோன்றின.

"சங்கப் புலவர்களும் புரவலர்களும் வாழ்ந்த வாழ்க்கையானது வள்ளுவர் அப்படியே ஏற்றுக்கொள்ளவில்லை. கபிலர் போன்ற அந்தணப் புலவர்களும் ஔவை போன்ற பெண்பாற்புலவர்களும் அதிகன் போன்ற குறுநில மன்னர்களும் கள் குடிப்பதைச் சமுதாய மரபாகவும் உயர்வாகவும் கருதி வந்தனர். 'தேள் கடுப்பன்ன தேறல்' மாந்துவது மகிழ்ச்சி தரும் என எண்ணினர் சங்கப் புலவர். ஆடவரும் பெண்டிரும் இக்காலச் சமுதாய மரபில் தேநீர் அருந்துவது போல கள்ளை அருந்திக் கொண்டிருந்தனரோ என எண்ண வேண்டியுள்ளது. போற்றப்பட்ட மரபாகிய கள் குடித்தல் வள்ளுவர் வழியில் மிகக் கீழ்மையான ஒன்றாக எடுத்துக்காட்டப்பெற்று வெறுத்து ஒதுக்கப்படுகிறது".[67]

திருக்குறள் அரிய நீதிகள் அனைத்தையும் திரட்டிக் கூறும் நூலாக அமைந்து பிற்காலநீதிநூல்கள் பலவும் தோன்றுவதற்கான அடிப்படையையும் ஆற்றலையும் திறனையும் நல்கியது.

"தமிழ் நீதிநூற் புலவர்கள் என்று குறிப்பிடும்போது திருவள்ளுவரும் ஔவையாருமே நம் நினைவிற்கு வருகின்றனர். முன்னவர் அரிய கருத்துக்களைப் பிற்காலம் அனைத்திற்கும் பயன்படுமாறு அரிதின் வழங்கினார்; பின்னவர் சின்னஞ் சிறாரும் பயிலுமாறு பாடி நீதிநூல் உலகிற் புகழ்பெற்றனர். கணிமேதாவியர், காரியாசான் போன்ற சமண முனிவர்கள் பலர் தமிழில் அறநூல்கள் பல்குதற்குக்

காரணமாவர்"[68] என்கிறார் தமிழண்ணல். மக்களுக்கு ஒழுக்கத்தையும் பண்பாட்டையும் உணர்த்துவதற்கு நீதிநூல்களை இம்முனிவர்கள் எழுதினர்.

சைவநெறி தழைத்தோங்கிய காலத்தில் வாழ்ந்தவர் ஔவையார். அவர் சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடுபவர். இவர் தாம் படைத்த நீதிநூல்களில் சிவபெருமானையும் விநாயகரையும் போற்றியுள்ளதைக் கொண்டு சைவசமயத்திற்கு அவர் அளித்த பெருமையை உணரமுடிகிறது. இதே ஔவையார் 'திருமாலுக்கு அடிமை செய்' (ஆத்.57) என்றும் கூறுகிறார். சிவனைப் போற்றிய ஔவையார் 'திருமாலுக்கு அடிமைசெய்' என்று கூறுவதிலிருந்து அவருடைய சமயப் பொதுமை வெளிப்படுகிறது.

"சோழ பல்லவ மன்னர்கள் காலத்தில் சைவமும், வைணவமும் மேலோங்கிய நிலையில் ஔவையார் பாடல்கள் நீதிக்கருத்துக்கள் பல கொண்டு வெளிவந்தன. அவற்றில் கல்வியும் தனிமனித வாழ்வில் விழுமங்களும் பரவலாக வற்புறுத்தப்பட்டன. பின்னர் வந்த ஐரோப்பியர் காலத்தில் புதிய சிந்தனைகள் பலவும் இலக்கியத்தில் இடம்பெற்றன. மக்களிடையே விழிப்புணர்வைத் தூண்டக்கூடிய வகையில் படைக்கப் பட்ட இலக்கியங்கள் பலவும், புதிய பாதை நோக்கி மக்களை அழைத்துச் சென்றன எனலாம்".[69]

கொன்றைவேந்தன், சிறுவர் முதல் பெரியவர் வரை இன்றும் பலராலும் படித்துப் போற்றப்படுகின்றது. ஔவையார் அருளிய மூதுரையும் நல்வழியும் மனித வாழ்க்கைக்குத் தேவையான உண்மைகளை எடுத்துரைத்து நீதிக்கருத்துக்களை வலியுறுத்துகின்றன.

சங்கம்மருவிய காலத்தில் மட்டுமின்றிப் பிற்காலத்தும் நீதிநூல்கள் தோன்றிய வண்ணம் இருந்துள்ளது என அறியமுடிகிறது. "தென்தமிழ்நாட்டில் சமணம் புகுந்து வைதீகச் சமயத்தைத் தாழ்த்தித் தான் ஓங்கி வளர்ந்தது. ஆதலால் இதற்குப் பிற்பட்ட காலமே சமணநூல்கள் தமிழில் தோன்றிய காலம் என்று கருதவேண்டும்"[70] என மு.அருணாசலம் குறிப்பிடுகின்றார்.

மக்கள் வாழ்க்கைக்குரிய பொதுவான அறநெறிகளையும் வரையறை செய்து கூறுகிறது அறநெறிச்சாரம். நூல் கேட்பதற்கு உரியவர் யாவர் என்பதையும் கேட்பதற்குத் தகுதியற்றவர் யாவர் என்பதையும் முனைப்பாடியார் பாயிரப்பகுதியில் குறிப்பிடுகின்றார். இந்நூல், சமண சமயம் சார்ந்து இருந்தபோதிலும்கூட பொது நீதிகளையும் ஆசாரங்களையும் நல்லொழுக்கம் பற்றிய செய்திகளையும் நயம்படக் கூறியுள்ளது.

"சைன சமயத்திற்குரிய உலகமூடம், தேவமூடம், பாசாண்டிமூடம் என்ற மூன்றையும் சில பாடல்களில் (13-18) குறிப்பிடுகின்றார். இவை மட்டுமே சமணக் கோட்பாடுகள். ஏனைய யாவும் பொது நல்லொழுக்கக் கருத்துக்களே. இந்நூலுக்கும் அருங்கலச்செப்புக்கும் தொடர்பு இல்லை என்று நாம் கருதவேண்டும். ஆசிரியர், ஏழு ஒழுக்கத்தை ஏழு பாடல்களில் (89-95) விளக்கி உரைக்கிறார். இவை சிறப்பான தமிழ் மரபில் அமைந்துள்ளனவே அன்றிச் சைன மரபை ஒட்டிப் பெண்டிரைப் பழித்தல் என்ற கருத்தைத் தெரிவிக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது"[71] என்கிறார் மு.அருணாசலம்.

"பாண்டியர் மரபைச் சார்ந்த அதிவீரராமபாண்டியர் பதினாறாம் நூற்றாண்டில் தென்காசியிலிருந்து சில பகுதிகளை ஆட்சிபுரிந்தார். அவர் தமிழ்ப்புலமை நிரம்பியவர்; அவருடைய ஆட்சி அவருக்குத் தந்த புகழ் சிறிது. அவர் இயற்றிய நூல்களே இன்று அவருடைய பெயரை விளக்கி நிற்கின்றன. இவர் படைத்த நீதிநூல் வெற்றிவேற்கை அல்லது நறுந்தொகை எனப்படும். நீதிகளை எளியமுறையில் நேராக எடுத்துரைக்கும் போக்கை அதில் காணலாம்"[72] என்று மு.வரதராசனார் குறிப்பிட்டுள்ளார்.

"சேக்கிழார் கம்பர் காலத்திற்குப் பிறகு தமிழ்நாட்டில் ஆற்றல் மிகுந்த ஆட்சி இல்லாமல் குழப்பங்கள் மெல்ல மெல்லத் தலையெடுத்தன. சோழப்பேரரசு வரவரக் குன்றியது. பாண்டியரின் ஆட்சி மீண்டும் வலுப்பெறமுடியவில்லை. கொய்சாளர் தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெற்றனர். பாண்டியநாடு மாலிக்காப்பூர் ஆட்சியிலும் இருந்தது. விசயநகர ஆட்சி ஏற்படும் வரையில் தமிழ்நாட்டில் அமைதி இல்லை.

பிறகு தென் இந்தியா முழுவதும் விஜயநகர ஆட்சியின்கீழ் வந்தது. மதுரையில் விஜயநகரத்தின் செல்வாக்குப் பெற்ற நாயக்கர்கள் ஆட்சியை ஏற்படுத்தினார்கள். கலைகளும் இலக்கியமும் ஓரளவிற்கு மீண்டும் வளர்ச்சி பெறத்தொடங்கின. நாயக்க மன்னர்கள் சமயநூல்களுக்கும் சமயக் கலைகளுக்கும் இலக்கியங்களுக்கும் மதிப்புத் தந்து வளர்ந்து வந்த காரணத்தால் அவ்வப்போது சமயச் சான்றோர்கள் தோன்றிச் சிறந்த நூல்கள் எழுதினார்கள்; சமயத்தைக் காக்கும் மடங்கள் தோன்றின; அந்த மடங்களை ஒட்டிப் புலவர் சிலர் சமயத்தையும் தமிழையும் வளர்த்து வந்தார்கள். புலவர்கள் தலபுராணங்களைப் பாடி அந்தந்த ஊர் மக்களை மகிழ்வித்தார்கள். சிறுசிறு நூல்கள் இயற்றி அங்கங்கே இருந்த செல்வர்களையும் சிற்றரசர்களையும் மகிழ்வித்தார்கள். குமரகுருபரரும் சிவப்பிரகாசரும் உயர்ந்த புலமைச் செல்வம் நிரம்பியவர்கள். கலைச்சுவைக்காக இலக்கியம் படைக்கா விட்டாலும் சமய வளர்ச்சிக்காக அவர்கள் படைத்த நூல்களில் இலக்கியச் சுவையும் கலந்துள்ளது. அவர்கள் பலவகை நூல்கள் படைத்தவர்கள். அமைதியற்ற அரசியல் சூழ்நிலை இருந்தபோதிலும் இலக்கியப் படைப்பு இடையுறாமல் நடைபெற்று வந்ததாகவே தோன்றுகிறது”[73] என்று குறிப்பிடுகின்றார் மு.வரதராசனார்.

“18-ஆம் நூற்றாண்டுவரை எழுந்த பற்பல வகையான அரசியல் குழப்பங்கள் 19-ஆம் நூற்றாண்டில் அடங்கி நாட்டில் அமைதியும் ஒழுங்கும் நிலைபெறவே, மிக்க வலுவான ஆங்கில அரசாட்சி வேரூன்றியது. இந்நூற்றாண்டில் அரசியலாரும் கிறித்துவக் குருக்களும் நாடு முழுவதும் பல்கலைக்கழகங்களையும் பாடச் சாலைகளையும் நிறுவினர். ஐரோப்பிய முறைப்படி மாணவர்களுக்குப் பற்பல பாடங்களைக் கற்பித்தனர். சென்னை கல்விச் சங்கம் (**Madras College**) என்பதை நிறுவிப் பாடப்புத்தகங்களையும் எழுதி வெளியிட்டனர். சென்னை பள்ளிப் புத்தகக் கழகம் (**The Madras School Society**) என்பதை 1850-இல் நிறுவ, சிறந்த மொழி பெயர்ப்பு நூல்களுக்கு இக்கழகத்தார், தகுந்த பரிசுகளை வழங்கி உரைநடை வளர்ச்சிக்குப் பெரிதும் தொண்டாற்றினர். இந்நூற்றாண்டில் நாடு முழுவதும் அச்சுக்கூடங்களை ஆங்காங்கு நிறுவி எண்ணற்ற உரைநடை நூல்களை இயற்றி அச்சிட்டனர். கிறித்தவ சங்கங்கள், மதச்சார்பான உரைநடை நூல்களை ஏராளமாக

அச்சிட்டுக் குறைந்த விலைக்குக் கொடுத்தன. கிறித்தவர்களின் சமய ஊழியத்தைக் கண்ட இந்துக்கள் எழுச்சி பெற்று இந்துமதச் சார்பான புராண இதிகாச நூல்களை வசன நடையில் எழுதி வெளியிட்டனர். சென்ற நூற்றாண்டில் தான் முதன் முதலாகச் செய்தித்தாள்களும் திங்கள் வார வெளியீடுகளும் தமிழ் நாட்டில் தோன்றின”.[74]

19-ஆம் நூற்றாண்டில் தோன்றிய வேதநாயகம் பிள்ளை தமிழகத்தில் பிரதாப முதலியார் சரித்திரம், சுகுணசுந்தரி ஆகிய நாவல்களைப் படைத்தார். புத்தம்புதிய இலக்கிய வகைக்கு வழிகாட்டிய பெருமை வேதநாயகரைச் சாரும். சமுதாய மக்களுக்கு நீதிக்கருத்துக்களைப் போதிக்க நினைத்து ‘நீதிநூல்’ படைத்தார். வீட்டில் முடங்கிக் கிடக்கும் பெண்கள் கல்வி கற்றால்தான் முன்னேறுவர் எனக் கருதி ‘பெண்கல்வி’ என்னும் நூலை எழுதினார். வேதநாயகர் கூறும் கருத்துக்கள் இன்றைய சமுதாய மக்களுக்குத் தேவையானதாக உள்ளன.

## 1.14. முடிவுரை

உலகம் போற்றும் சிந்தனையாளராகவும் உலக பொதுமறையை ஆக்கித் தந்த மாமேதையாகவும் விளங்கியவர் திருவள்ளுவர். தம்முடைய அறக் கொள்கையால் மக்களை வழிநடத்திச் செல்ல நற்பண்புகளைப் போதித்தவர். இத்தகைய தன்மை வாய்ந்த திருவள்ளுவரின் கருத்துக்களையும் பிற்கால நீதிநூல்களின் ஆசிரியர்களின் கருத்துக்களையும் ஒப்பிட்டு நோக்குவதற்கு அவர்களுடைய வாழ்க்கைக் குறிப்புகள், காலம் பற்றிய செய்திகள் துணையாக நிற்கின்றன எனலாம். நீதிநூல்கள் காலந்தோறும் தோன்றிச் சமுதாயத்திற்குத் தேவையான அறக்கருத்துக்களை வலியுறுத்துகின்றன. அத்தகைய அறக் கருத்துக்களை மாந்தர்கள் பின்பற்றுபவர்களாக திகழவேண்டும். தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் தேவையான ஒழுக்கம், கல்வி போன்ற நெறிகளைத் தூண்டி மக்களிடையே விழிப்புணர்வைத் தூண்டும் இலக்கியங்கள் நீதி இலக்கியங்களாகும். ஆகையால், நீதிநூல்கள் போதிக்கும் கருத்துக்களை வாழ்வில் மேற்கொண்டு, மேன்மேலும் உயர்வு அடைவதே மாந்தர்களின் இலட்சியமாகும்.

## அடிக்குறிப்புக்கள்

1. க.த. திருநாவுக்கரசு, சான்றோர் கண்ட திருவள்ளுவர், பக். 1-8.
2. சிவப்பிரகாசர், அறநூல், ப.XVI.
3. க.திருநாவுக்கரசு, திருக்குறளும் திராவிடர் இயக்கமும், பக்.19-20.
4. பதினெண்கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள் (பேராசிரியர் பதினொருவர் சொற்பொழிவுகள்), ப.4.
5. அரசியலறிவு, (பேராசிரியர் ஐவர் சொற்பொழிவுகள்), பக். 4-5.
6. அ.க. நவநீதகிருட்டிணன், அறநூல் தந்த அறிவாளர், பக்.18-19.
7. பதினெண்கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள் (பேராசிரியர் பதினொருவர் சொற்பொழிவுகள்), பக்.4-5.
8. க.த.திருநாவுக்கரசு, சான்றோர் கண்ட திருவள்ளுவர், ப.6.
9. இராஜாஜி, வள்ளுவர் வாசகம், ப.5.
10. பதினெண்கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள் (பேராசிரியர் பதினொருவர் சொற் பொழிவுகள்), ப.23.
11. மேலது., ப.26.
12. மேலது., ப.37.
13. மேலது., ப.40.
14. மேலது., ப.40.
15. காமாட்சி ஸ்ரீனிவாசன், குறள் கூறும் சமயம், ப.199.
16. மேலது., ப.202.
17. க.வச்சிரவேல் முதலியார், திருக்குறளின் உட்கிடை சைவ சித்தாந்தமே, ப. 14.
18. மு.தெய்வநாயகம், திருவள்ளுவர் கிறித்தவரா? பக்.101-104.
19. மேலது., பக்.166-172.
20. மு. தெய்வநாயகம், நீத்தார் யார்? பக்.51-61.
21. க. செல்லகனி, புதிய ஏற்பாடும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் அறக் கருத்துக்கள் ஓர் ஒப்பீடு, ப.31.
22. தெ.பொ.மீனாட்சிசுந்தரனார், சமண தமிழிலக்கிய வரலாறு, பக்.40-41.
23. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.79.

24. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப.302
25. மேலது., ப.310.
26. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழி அகராதி, ப.143.
27. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.181.
28. மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு (12-ஆம் நூற்றாண்டு), ப.487.
29. கலைக்களஞ்சியம் (2-ஆம் தொகுதி), ப.754.
30. தமிழண்ணல், 'ஔவையார்', ப.97.
31. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, (12-ஆம் நூற்றாண்டு), பக்.506-507.
32. வாழ்வியல் களஞ்சியம் (2-ஆம் தொகுதி), ப.381.
33. அ.சுகுமாரன், (உ.ஆ.), அருங்கலச்செப்பு, ப.3.
34. தமிழண்ணல், தமிழ் இலக்கிய வரலாறு, ப.220.
35. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு (12-ஆம் நூற்றாண்டு), ப.790.
36. அ. சுகுமாரன், (உ.ஆ.), அருங்கலச்செப்பு, ப.7.
37. மேலது., ப.12.
38. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு (13-ஆம் நூற்றாண்டு), ப.368.
39. மேலது., ப.368.
40. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.205.
41. ச.வே. சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு, ப.111.
42. மா.சு. சாந்தா, சிவப்பிரகாசரின் இலக்கிய நூல்கள் ஒரு திறனாய்வு, ப.2.
43. மேலது., ப.2.
44. மேலது., பக்.5-6.
45. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், பக்.385-386.
46. மா.சு.சாந்தா, சிவப்பிரகாசரின் இலக்கியநூல்கள் ஒரு திறனாய்வு, ப.6.
47. மேலது., ப.13.
48. மேலது., பக்.14-15.
49. மு. வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.210.
50. சாமிநாத ஐயர், ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, ப.19.
51. கா.சுப்பிரமணியபிள்ளை, குமரகுருபர அடிகள் வரலாறும் நூலாராய்ச்சியும், ப.17.
52. மேலது., ப.21.
53. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதானசிந்தாமணி, ப.21.

54. கலைக்களஞ்சியம், பத்தாம்தொகுதி, ப.131.
55. ஆ.பி.அந்தோனி இராசு., மாயூரம் நீதிபதி வேதநாயகரின் வாழ்க்கை வரலாறு, ப.9.
56. மேலது., ப.11.
57. மா.சேசையா, நீதிபதி வேதநாயகர், ப.17.
58. மேலது., பக்.17-18.
59. ஆ.பி.அந்தோனி இராசு, மாயூரம் நீதிபதி வேதநாயகரின் வாழ்க்கை வரலாறு, ப.24.
60. மேலது., ப.25.
61. பி. கோமதிநாயகம், தமிழகச் சமுதாயப் பண்பாட்டு வரலாறு, (சங்க காலம் முதல் இன்று வரை), ப.50.
62. மேலது., ப.51.
63. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.65.
64. ஆ.வேலுப்பிள்ளை, தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும், ப.32.
65. மேலது., ப.39.
66. தில்லைநாதன், இலக்கியமும் சமுதாயமும், பக்.69-70.
67. ப.முருகன், வள்ளுவம் பன்னோக்குப் பார்வை, ப.14.
68. தமிழண்ணல், தமிழ் இலக்கிய வரலாறு, ப.27.
69. எம்.கே. சிவகாமசுந்தரி, தமிழ் நீதி இலக்கியங்களில் கல்வியியல் சிந்தனைகள் - பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை, பக்.40-41.
70. மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, ப.363.
71. மேலது., ப.369.
72. மு.வரதராசனார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.204.
73. மேலது., பக்.188-189.
74. மு.அடைக்கலசாமி, தமிழ் இலக்கிய வரலாறு, பக். 271-272.

# இயல் இரண்டு

## அறம் ஒரு விளக்கம்

2.0. முன்னுரை

2.1. அறத்தின் தோற்றம்

2.2. அறம் பற்றிய சொல் விளக்கம்

2.3. அறத்தின் வளர்ச்சி

2.4. முடிவுரை

# இயல் இரண்டு

# அறம் ஒரு விளக்கம்

## 2.0. முன்னுரை

மானுடவாழ்வினைச் செம்மைப்படுத்தக்கூடிய நிலைக்களன்களாக நீதி இலக்கியங்கள் காலந்தோறும் தோன்றுகின்றன. அந்த இலக்கியங்கள் யாவும் அறத்தைப் பற்றி அறிவுறுத்துவதே அடிப்படை நோக்கமாகக் கொண்டுள்ளன. மனிதன் தான் இயற்கையாகப் பெற்றிருக்கும் அறிவால் தன் ஆற்றலைத் தக்க முறையில் பயன்படுத்திப் பிறர்க்கு உதவிசெய்து வாழ்வதே அறம் எனப்படும். உலகில் வாழும் ஒருவன் மதம், இனம், மொழி இவற்றைச் சார்ந்திருந்தாலும் அவனது மனதில் எழுகின்ற மாசற்ற உணர்வுகளே அறவுணர்வாகும். அறம் என்பது ஒழுக்கம் சார்ந்த ஒன்றாகக் கருதப்படுகிறது. பண்டைத் தமிழ்ச்சான்றோர்கள் அறத்தினை வாழ்க்கை நெறியாகவே கருதிப் போற்றினர். ஒழுக்க நெறிக்குரிய விதிமுறைகளின் தொகுப்பாக அறம் மேற்கொள்ளப்பட்டது.

## 2.1. அறத்தின் தோற்றம்

"மனிதன் எப்பொழுது வாழ்வதற்கான வழிகளை ஆராய ஆரம்பித்தானோ அன்றே அறவியல் தோன்றியது".[1] தனிமனிதனின் நன்னடத்தையே காலப்போக்கில் அறமாக உருவாக்கம் பெற்றது.

"அறநெறிச் சட்டத்தைத் தெய்வீக ஆணையாகவும் இயற்கை நீதியாகவும் கருதும் நிலை, மனித இனத்தின் நாகரீக வளர்ச்சியின் தொடக்கக் காலத்திலேயே இருந்தது"[2] என்று அறவியல் அறிஞர்கள் கூறுகின்றனர்.

தனிமனிதன் தன்னுடைய வாழ்விற்காகப் பிறருடைய உதவியைப் பெறுகிறான். அதற்கு மாறாக அவனிடமிருந்து சில உதவிகளைச் சமுதாய மக்கள் எதிர் பார்க்கின்றனர். அதை அவன் நிறைவேற்ற வேண்டிய கடமை ஏற்படுகிறது. கடமை என்பது மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் தான் வாழும் சமுதாய மக்களுக்கு மட்டுமின்றி உலகத்தில் உள்ளவர்களுக்குச் செய்யவேண்டிய அரும்பணியாகக்

கருதப்படுகிறது. அத்தகைய பணிகளைச் செய்யும் ஒருவன் பிறரிடமிருந்து பயன் கருதாமல் செய்யும் உதவி மிகச் சிறந்தது என்ற எண்ணம் தோன்றலாயிற்று. அத்தகைய தனி மனிதனின் மன வளர்ச்சியே சமுதாய அறமாக வளர்ந்தது.

## 2.2. அறம் பற்றிய சொல் விளக்கம்

"அறம் என்ற தமிழ்ச் சொல்லிற்கு நேரான பொருள் 'அறுத்துச் சொல்வது' அல்லது 'வழியை உண்டாக்குவது' என்பதாகும். அறத்தின் பொருள் மிகவும் விரிந்தது; ஆழமானது; வாழ்க்கையின் பல்வேறு நிலைகளையும் சுட்டுவது; மனித நடத்தையையும் ஒழுகலாற்றையும் உயர்ந்த மெய்யுணர்வுத் தன்மையினையும் குறிப்பது; நற்பண்புகள் அனைத்தின் கண்ணாடியாக, மேல்வரிச் சட்டமாக மெய்யுணர்வு போற்றப்படுகிறது. இவ்வகையில் அறம் பண்பாடு என்னும் பொருள் பயப்பதாக அமைகிறது".[3] எனவே, மக்களின் பழக்கவழக்கங்களையும் பண்பாடுகளையும் நெறிப்படுத்தி மனிதனை மனிதனாக வாழவைக்கும் கருவியாக அறம் செயல்படுகிறது.

"அறவியல் (Ethics) என்பது ஒழுக்கம், பழக்கம் என்பதைக் குறிக்கும் கிரேக்கச் சொற்களிலிருந்தும் (**Ethos, Ethika**) நீதி என்பதைக் குறிக்கும் இலத்தீன் சொல்லிலிருந்தும் (**mores**) தோன்றியது".[4] இதன்வழி அறவியல் என்பது மக்களுடைய பழக்கவழக்கங்கள், நடுவுநிலை சார்ந்த நீதி போன்றவற்றைக் குறிப்பதாகும்.

"அறவியலை இருவகையாக அறிஞர்கள் பிரித்துள்ளனர். அவை தத்துவ அறவியல் (**Meta Ethics**) நடைமுறை அறவியல் (**Normative Ethics**) எனப்படும். தத்துவ அறவியல் என்பது ஒழுக்க வழியை அறியும் அல்லது நிர்ணிக்கும் துறையாகும். ஒரு செயல் நல்லதா அல்லது கெட்டதா என்பதைப் பற்றி ஆய்வது. நடைமுறை அறவியல் என்பது ஒழுக்கநெறிக்கு (**Moral Philosophy**) வழி காட்டியாகவும் அறப்பண்புகளை வளர்க்கவும் உதவுவது".[5] எனவே, நன்மை தீமைகளை ஆராய்ந்து ஒழுக்கநெறியைத் தூண்டுவதாக அறவியல் அமைகிறது.

"அறவியல் (Ethics) என்பது நன்னடத்தை; நீதி என்று பொருள்படும்".[6] ஒருவன் பண்புகளைப் பெற்று மகிழ்ச்சியுடனும் அறிவுத் திறமையுடனும் வாழ்வதற்கும் அடிப்படையான நல்வழியைக் காட்டுவது அறம் ஆகும். "அறவியலின் அடித்தளம் மனச்சாட்சிதான். அறம் ஒரு பொது சந்தி; அது மிகத் தூயதாய் நடுநிலை பிறழாது நிற்பது; முப்பட்டைக் கண்ணாடி போன்று எண்ணம், சொல், செயல் என்ற மூன்று பக்கங்களும் மாசற்ற தன்மையுடன் கூடி மனிதனை வாழத் தூண்டுவது"[7] என்று கூறுகிறார் க.த.திருநாவுக்கரசு.

"அறவியல் பொது நன்மையை (**Commen Good**) மேம்படச் செய்யும் குறிக்கோளைக் கொண்டது. உண்மையில் பொது நன்மையைக் கருதுவது ஆகும். அறவியலின் நீதி மனித சமுதாயம் முழுவதும் சரிசமமாக எல்லா நற்பண்புகளையும் அடையச்செய்யும் அடிப்படையைக் கொண்டது".[8] இதன்வழி சமுதாய மக்களுக்கு உயர்வினை அளிப்பது அறவியல் கொள்கைகளே எனலாம்.

"தக்கன, தகாதன என்பதைத் தேர்ந்து கொள்ளும் அறிவுடன், 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற அன்பு நெறியில் மனதில் மாசில்லாதவனாக வினை ஆற்றுதலே அறமாகும்"[9] என்று கூறுகிறார் எஸ்.இராமகிருஷ்ணன். எனவே, மனத்தைப் பண்படுத்தித் தூய்மையுடன் ஈடுபட்டுச் செயல்படச் செய்வதே ஒவ்வொரு மனிதனின் கடமையாகும் என்பதை அறியமுடிகிறது.

## 2.3. அறத்தின் வளர்ச்சி

அறம் என்பது ஒழுக்கம் சார்ந்த ஒன்றாகக் கருதப்படுகிறது. ஒழுக்க நெறிக்குரிய விதிமுறைகளின் தொகுப்பாக அறம் மேற்கொள்ளப்பட்டது. அறம் மனிதனைப் படிப்படியாகப் பண்பட்டு விளங்கச் செய்கிறது. 'பேரா இயற்கைப் பெருநிலையாகிய வீடுபேற்றை அடைய முயலுமாறு ஆக்கமும் ஊக்கமும் அளிக்கிறது' என்பது நம்முடைய முன்னோர்களின் நம்பிக்கையாகும். உலகில் பிறந்தவர் அனைவரும் ஒத்த வாய்ப்புடையார் அல்லர். சிலர் செல்வத்தில் செழிப்புற்று வாழ்கின்றனர். பலர் வறுமையால் வாழ்ந்து துன்புறுகின்றனர். இவ்வாறு மக்கள் ஒன்றுபட்டு வாழாமல் பலவகையாலும் வேறுபட்டு வாழ்வதால் உலகத்தில் அழுக்காறு,

அவா, பொய், கொலை, களவு முதலிய கொடுமைகள் வாட்டத்தொடங்கின. இதனை உணர்ந்த சான்றோர்கள் இத்தகைய கொடுமைகள் நிலவும் நாடு நல்வாழ்வு பெறாது என்பதற்காக அவை எங்கெல்லாம் தோன்றியதோ, அங்கெல்லாம் சென்று நல்லன உரைத்து அல்லன ஒழித்து உலகை அறநிலைக்குத் கொண்டு செல்ல விரும்பினர்.

"பண்டையத் தமிழ்ச்சான்றோர் கண்ட வாழ்க்கை நெறியாகிய அறத்தின் வித்து பழக்கவழக்கங்களேயாகும். அதிலிருந்து நீதியெனும் முளை தோன்றிக் கடமையுணர்வெனும் தளிர்விட்டு, ஒழுக்கமெனும் மரமாக வளர்ந்து ஈகை கொடை என்னும் கிளைகளுடன் தழைத்து அறமெனும் வண்ணமலர் மலர்ந்துள்ளதை அறிய முடிகிறது".[10] எனவே, மக்கள் ஒழுக்கநெறிகள் மற்றும் வாழ்வியல் நோக்கங்கள் ஆகியவற்றை அறிந்து வாழ்வதே அறவாழ்க்கை ஆகும்.

"வாழ்க்கை நெறியாகிய அறத்தினைத் தெய்வமாக உருவகப்படுத்திக் கூறுவது உலகின் பல்வேறு நாடுகளிலும் இருந்துவரும் வழக்கமாகும். பண்டைத் தமிழரும் இம்மரபினைப் போற்றியுள்ளனர். இதனை 'அறக்கடவுள்' என்னும் பொருளில் அறமென்னும் சொல்லை அவர்கள் பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பயன்படுத்தி உள்ளமையால் அறிகிறோம். அறம் செய்வோருக்குத் தெய்வம் நன்மைகளும் அறம் செய்யாதவர்களுக்குத் துன்பங்களையும் தருவதாக நம்பப்படுகிறது".[11] எனவே, அறத்தினைத் தெய்வமாக உருவகப்படுத்தி வாழும்நிலை பல்வேறு நாடுகளில் தொன்றுதொட்டு இருந்து வருகின்றன என்பதை அறியமுடிகிறது.

"பொருளின் கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்டுப் பொருளைத் தமது கட்டுப் பாட்டிற்குள் மனிதர்கள் கொண்டு வந்ததற்கான பொருள் இகந்த ஆற்றலை வழங்கியவை அறங்களே. இயற்கையின் அங்கமாக அதனைச் சார்ந்து ஆட்பட்டிருந்த மனித இனம், அறநடவடிக்கைகள் வழியாக இயற்கையை உடைமையாகக் கொண்டது. இயற்கை உடைமையாதலால், இயற்கை-செயற்கை என்கிற பாகுபாடு ஆகியவை ஒன்றோடொன்று உறவுகொண்டவை. மனித உடல் உறுப்புக்களிலும் இது செயல்படுத்தப்பட்டது. ஐம்புலன்களின் செயல்பாடுகளிலும் இது செயல்படுத்தப்பட்டது. தொடர்ந்து ஐம்புலன்களின் மையமான ஐம்பொறிகள்மீது

மதிப்பீடுகள் சுமத்தப்பட்டு வந்துள்ளன. அறங்கள் இன்றி இந்த மகத்தான மாற்றங்கள் ஏற்பட்டிருக்காது"[12] என்று ராஜ் கௌதமன் குறிப்பிடுகின்றார்.

"கால்நடை மற்றும் வேளாண்மை நாகரீக காலகட்டங்களில் நாக்கின்மீது, அது சுவைக்கும் உணவு, குடிமீது அதனால் உச்சரிக்கப்படுகின்ற பேச்சு, சொல், மொழி மீது பல்வேறு நன்மை, தீமை சார்ந்த கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. நாக்கின்மீது மட்டுமல்ல, கண், செவி, தலை, கை முதலான உடல் உறுப்புக்கள் பலவற்றின்மீதும் ஏராளமான கட்டுப்பாடுகள் ஏற்றப்பட்டன. இவை ஒழுக்க விதிகளாகவும் (**Moral Codes**) அறமாகவும் (**Ethics**) அமைந்தன".[13]

சமண சமயம் "வினைப்பயன் மனிதனை அணுகாமல் வீடுபேறு அடைவதற்கு அறநெறிகள் வகுக்கின்றன என்பது இதன் கொள்கை. இவர்களின் அறநெறி 'இரத்தினத்திரயம்' எனப்படும். இது நன்னம்பிக்கை, நல்லறிவு, நல்லொழுக்கம் ஆகிய மூன்றும் இரத்தினங்களாகக் குறிப்பிடப்படுகின்றன. இல்லறத்திற்குரிய அறவொழுக்கத்தையும் துறவுக்குரிய தனி அறவொழுக்கத்தையும் துறவிகளுக்குரிய தனி அறவொழுக்கத்தையும் இக்கொள்கை வலியுறுத்துகிறது. இது வேதங்களை மறுக்கிறது. 'எல்லா உயிர்களும் சமம்' என்ற கருத்தை இது கொண்டதால் இதை மக்கட் பண்புக் கொள்கை (**Humanist**) எனக் கூறுகின்றனர்"[14] என்று வாழ்வியல் களஞ்சியம் விளக்கம் தருகிறது.

மனிதனுடைய ஒழுக்கம் அவனுடைய குறிக்கோள் போன்றவை செம்மையுறத் திகழவேண்டுமானால் அவன் அறநெறிமுறைகளைப் பின்பற்றுவது மிகவும் அவசிய மானதாகும். மனிதன் வாழ்வின் உயர்ந்த மதிப்பினைப் பெறுவதற்கு முன்னோர்கள் அறம், பொருள், இன்பம் என்பனவற்றை வகுத்துள்ளார். அறத்தைக் குறிக்கோளாகக் கொண்டு ஒருவன் வாழவேண்டும் என்பதற்காக நீதிநூல்கள் தோன்றின. அவை தோன்றாத இடைவெளி காலம் இல்லை. ஒவ்வொரு நூற்றாண்டிலும் நீதிநூல்கள் தோன்றி மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளைக் கண்ணாடிபோல் பிரதிபலித்துக் காட்டுகின்றன.

ஒருவனுடைய மனம் மாசில்லாமல் இருத்தல் வேண்டும்; மாசுடைய மனம் தனக்கும் பயன் அளிப்பதில்லை; பிறர்க்கும் பயன்படுவதில்லை; ஆகையால், ஒருவனுடைய மனத்தூய்மையே அறத்தின் அடிப்படையாகும் என்பதை நீதிநூல்கள் விளக்குகின்றன.

நீதிநூல்கள், இல்லறம், ஒழுக்கம், இன்சொல், செய்ந்நன்றியறிதல், ஈகை, அரசியல், உழைப்பு போன்ற அறக்கருத்துக்களையும் மக்களுக்கு அறிவுறுத்து கின்றன. சமண, பௌத்த சமயம் சார்ந்த நீதிநூல்களும் அறத்தின் சிறப்பை உணர்த்துகின்றன. )

## 2.4. முடிவுரை

பல்வேறு பொருள்களைத் தரும் 'அறம்' என்பது இல்லறம், துறவறம், அரசியலறம் என்று பிரித்து மக்கள் தம் வாழ்க்கைக்கு ஏற்ப எவ்வாறு அறத்தைக் கடைப்பிடித்து வாழவேண்டும் என்று 'அரசன்' முதல் 'ஆண்டிவரை' உள்ள மக்களுக்கு வேண்டிய அறங்களை நீதிநூல்கள் விளக்குகின்றன. அந்த வகையில் திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் வேண்டிய அறநெறிகளை வறையறுத்துக் கூறும் ஒப்பற்ற நூல்கள் என்பதில் ஐயமில்லை.

## அடிக்குறிப்புக்கள்

1. "...... it is clear that ethics can have come into existence when human beings started to reflect on the best way to live" Britannica Encyclopaedia, p. 627.
2. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.31.
3. க.த. திருநாவுக்கரசு, திருக்குறளும் இந்திய அறநூல்களும், ப.14.
4. "Ethics (Gr. 'ethika' from ethos', "character" custom) Principles or Standards or human conduct, called sometimes morals (Lat, 'mores' 'costoms')". (Funk & Wagnall's New Encyclopaedia, p.369).
5. "Ethics is divided into two fields, 'normative ethics' and 'meta ethics' Normative ethics, also called normal philosophy is concerned with presenting and justifying a guide to right conduct". (Americana Encyclopaedia, p.610)
6. "Ethics – character, custom-principles or standards of human conduct, called sometimes morals and by extension, the study of such principles, called sometimes moral philosophy". (Funks Wagnall's new Encyclopaedia, p.369).
7. க.த.திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.27.
8. "Justice requires that attention be given not simply to maxi missing goodness but also to its distrbution, fair or unfair" (Chamber's Encyclopaedia, p.386)
9. எஸ். இராமகிருஷ்ணன், கம்பன் கண்ட அரசியல், ப.68.
10. க.த.திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.49.
11. மேலது. ப. 39.
12. ராஜ்கௌதமன், அறம் / அதிகாரம், ப.13.
13. மேலது., ப.14.
14. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி இரண்டு, ப.36.

# இயல் மூன்று

## திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் இல்லறக் கருத்துக்கள்

3.0. முன்னுரை

3.1. இல்வாழ்க்கை

3.2. வாழ்க்கைத் துணைநலம்

3.3. மக்கட்பேறு

3.4. அன்புடைமை

3.5. விருந்தோம்பல்

3.6. இனியவை கூறல்

3.7. செய்ந்நன்றி அறிதல்

3.8. நடுவுநிலைமை

3.9. அடக்கமுடைமை

3.10. ஒழுக்கமுடைமை

3.11. பிறனில் விழையாமை

3.12. பொறையுடைமை

3.13. அழுக்காறாமை

3.14. வெஃகாமையும் கள்ளாமையும்

3.15. புறங்கூறாமை

3.16. பயனில சொல்லாமை

3.17. தீவினையச்சம்

3.18. ஈகை

3.19. புகழ்

3.20. முடிவுரை

# இயல் மூன்று

# திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் இல்லறக் கருத்துக்கள்

## 3.0. முன்னுரை

மனிதன் வாழப்பிறந்தவன். அவன் தான் வாழ்வது மட்டுமல்லாது பிறர்க்குக் கொடுத்து வாழ்வதே இல்லறவாழ்வாகும். இல்வாழ்வோன் தனித்து வாழ்வதற்கு உரியவனல்லன்; சமூகத்துடன் இணைந்து வாழ்வதற்குரியவன்; இல்லங்கள் இணைந்ததே சமுதாயமாகும்; தனிமனித ஒழுக்கம் சிறந்து விளங்குதற்குரிய இல்லறம் நல்லறமாக விளங்கினால்தான் சமுதாய ஒழுக்கம் வளர்ச்சி பெறும் என்று வள்ளுவர் நவில்கிறார்.

அறத்திற்கு அடிப்படையாக அமைவது இல்லற வாழ்வாகும். அவ்வாழ்வு மக்களிடையே நல்லுறவை வளர்க்கச் செய்யும்; ஆகையால், மானுட வாழ்வினை நிலைபெறச் செய்யும் நெறிகளை இல்வாழ்வான் மேற்கொள்ள வேண்டியது அவனுடைய கடமையாகிறது. ‘அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை’ என்று இவ்வுலக வாழ்வைப் போற்றுவதற்குக் காரணமான இல்லறநெறியை முதன்மைப்படுத்தி சிறப்பிக்கிறார் வள்ளுவர்.

இல்லற வாழ்வில் ஒழுகவேண்டிய ஒழுக்கநெறிகளையும் சமுதாயத்தோடு இயைந்து வாழும் நிலையில் விலக்கவேண்டிய நெறிகளையும் தொகுத்து ‘இல்வாழ்க்கை’ முதலாக ‘ஈகை’ ஈறாக இருபது அதிகாரங்களில் வகுத்து அளித்துள்ளார் வள்ளுவர். திருக்குறளுக்குப் பின்னால் தோன்றிய பிற்கால நீதிநூல்களிலும் இல்லறக் கருத்துக்கள் காணப்படுகின்றன. அக்கருத்துக்களை விளக்கித் திருக்குறளுக்கும் பிற்கால நீதிநூல்களுக்கும் இடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துக் கூறுவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 3.1. இல்வாழ்க்கை

திருக்குறளில் உள்ள இல்லறவியலின் முதல் அதிகாரம் 'இல்வாழ்க்கை' ஆகும். இல்வாழ்க்கை என்பதற்கு "இல்லாளோடு கூடிவாழ்தல்"[1] என்று பரிமேலழகர் விளக்கம் தருகிறார். "சமூகவியலறிஞர்கள் உலகில் நிலவிவரும் பலவகைக் குடும்பங்களையும் ஆராய்கின்றனர். ரால்ப் லிண்டன் (Ralph Lindon) என்னும் ஓர் அறிஞர் குடும்பங்களைப் பிறப்புத் தொடர்பைக் கொண்ட குடும்பங்கள், திருமணத் தொடர்பை முக்கியமாகக் கொண்ட குடும்பங்கள் என இருவகையாகப் பிரித்தார். வள்ளுவர், பின்னதையே விரும்பினார். அதன்கண் கணவன், மனைவி, பிள்ளைகள் அடங்குவர். கணவன் அல்லது மனைவியின் பெற்றோர், சகோதரர் பிற உறவினர் வெளிநின்று உதவுவர்"[2] என்பர் காமாட்சி ஸ்ரீனிவாசன். பிறப்புத் தொடர்பு கொண்ட சுற்றத்தார் அனைவரையும் வெளிநின்று உதவி செய்பவர்களாக வள்ளுவர் கொண்டுள்ளார் எனக் கருதமுடிகிறது.

வள்ளுவர், இல்வாழ்க்கையைப் பற்றிக் குறிப்பிடும்பொழுது இல்வாழ்வானின் இயல்பு, கடமை, பயன், சிறப்பு போன்றவற்றைப் பின்வருமாறு எடுத்துரைக்கின்றார் : அதாவது, இல்லறத்தான் பெற்றோர், மனைவி, மக்கள் என்ற முத்திறத்தாருக்கும் துணையாவன் (கு.41); மேலும், துறந்தவர், வறுமையுற்றவர், யாரும் துணையின்றி இறந்தோர் போன்றோர்க்கும் அவன் துணையாவான் (கு.42); இல்லறத்தான் ஈட்டிய பொருளைத் தென்புலத்தார், தெய்வம், விருந்தினர், சுற்றத்தார், தான் என்ற ஐவருக்கும் பகுத்துண்டு வாழ்வான் (கு.43); அவன் அன்பு என்ற பண்பும் அறம் என்ற பயனும் உடைய வாழ்க்கை வாழ்பவனாவான் (கு.45); அத்தகையோன் தவம் செய்யும் துறவிகளைவிட மேலானவன் (கு.48); அவன் இவ்வுலகில் பெறத்தக்கது எதுவும் இல்லை (கு.46); இல்லறத்தான் பிறர்பழிக்கு ஆளாகமாட்டான் (கு.49); இத்தகைய அறநெறியில் வாழ்பவன் வானுலகில் தெய்வத்திற்குச் சமமாகக் கருதப்படுவான் (கு.50) என்கிறார்.

"மற்றவர்களையும் நல்வழியில் வாழச்செய்து தானும் அறநெறியிலிருந்து தவறாமல் வாழவல்லது இல்வாழ்க்கை. ஆகையால், தான் மட்டும் நன்மை

அடைவதற்காகத் தவம் செய்வோரின் வாழ்க்கையைவிட, பிறர் நலம் கருதிய இல்லற வாழ்க்கையே சிறப்பு உடையது ஆகும்”[3] என்பர் மு.வரதராசனார்.

“துறவறத்தைவிட இல்லறமே சிறந்தது என்ற கருத்துள்ளவர் வள்ளுவர். ஆதலால்தான் முதலில் இல்லறத்தைப் பற்றிக் கூறினார். இல்லறத்தை ஒழுங்காக நடத்தினால் போதும்; துறவறத்தால் அடையும் பயனையும் இல்லறத்திலே பெற்று விடலாம் என்று வள்ளுவர் கூறியிருக்கிறார்”[4] என்கிறார் சாமி. சிதம்பரனார்.

கொன்றைவேந்தன், ஒருவனுக்கு இல்லறமே நல்ல அறமாகும் (கொ.வே.3) என்று கூறி வள்ளுவர் கருத்தை வழிமொழிகிறது. அருங்கலச்செப்பு, இல்லறத்தாருக்கு உரியது அனுவிரதம் என்றும் துறவறத்தார்க்கு உரியது மகாவிரதம் என்றும் ஒழுக்கநெறியைப் பிரித்துள்ளது. அது, கொலை செய்யாமை, பொய்ப் பேசாமை, களவு செய்யாமை, பிற பெண்டிரின் மேலெழும் காமத்தைக் கடிதல், பொருளை அளவாகக் கொள்ளல் ஆகிய ஐந்தும் அனுவிரதமாகும் (அருங்.66) என்கிறது.

“அனுவிரதங்களோடு கள் உண்ணாமை, ஊன் உண்ணாமை, தேன் உண்ணாமை என்னும் இம்மூன்றையும் இல்லறத்தார் தவறாமல் கடைபிடிக்க வேண்டும்”.[5]

அறநெறிச்சாரம், இல்லறத்தான் ஐயம் இட்டு வாழ்தல், பிறனில் நோக்காமை, பொய் சொல்லாமை, பிற உயிர்களைக் கொல்லாமை போன்ற நெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும் (அறநெறி.165) என்றும் இல்லறத்தான் துறவறத்தானுக்குத் துணையாகவும் துறவறத்தான் இல்லறத்தானுக்குத் துணையாகவும் வாழவேண்டும் (பா.15) என்றும் அறிவுறுத்துகிறது.மேலும், கூழ் உண்டு வாழும் வாழ்க்கை பன்றிக்கும் உண்டு என்பதைப் பின்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*“நொறுங்கு பெய்(து) ஆக்கிய கூழ்ஆர உண்டு*
*பிறங்கு இரு கோட்டொடு பன்றியும் வாழும்”* *(அறநெறி.168 : 1-2)*

மேலும், அறம் செய்து ஒருவன் வாழவேண்டும் என்றும் துறவறத்தாரைப் புகழாமல் இகழ்பவர் விலங்கினும் இழிந்தவர் (பா.122) என்றும் அறநெறிச்சாரம் கூறுகிறது.

“இல்லறத்தார் பொருள்களைத் துறவிகளுக்குக் கொடுக்கும்பொழுது பணிவிடையாளர்களைக் கொண்டு கொடுப்பிக்காமல், தாமே தமது கைகளால் மனமுவந்து கொடுத்தல் வேண்டும். இவற்றைப் பெற்றுக்கொள்ளும் துறவியானவர், தம் வருகையை முன்னரே தெரிவிக்கக்கூடாது; தமக்கு இன்னபொருள் வேண்டும் என்பதைத் தெரிவிக்கவும் கூடாது. இவ்வாறு சமண சமயத்து இல்லறத்தார், தாமும் அறவழியில் ஒழுகித் துறவறத்தாரையும் நன்கு போற்றவேண்டும் என்ற முறை ஏற்படுத்தப்பட்டுள்ளது”.[6] இதன்வழிச் சமண சமயத்தார் துறவிகளுக்குத் தரும் பெருமையை அறியமுடிகிறது.

மனைவியுடன் சேர்ந்து வாழாமல் அவளைத் தாய் வீட்டிற்கு அனுப்பும் இல்லறத்தானைப் ‘பதர்’ (வெ.வே.69) என்று சாடுகிறது வெற்றிவேற்கை. ஒன்றுபட்டு வாழும் கணவனையும் மனைவியும் கண்களுக்கு நிகராகக் கருதுகிறது (நன்.6) நன்னெறி. நீதிநெறிவிளக்கம், இல்லறத்தான் செய்யும் செயலில் குறைவு இருத்தல் கூடாது; கல்வி கற்றல் வேண்டும்; அறச்செயலில் தாழ்வு இருத்தல் கூடாது; அப்போதுதான் இல்லறம் நன்மை பயக்கும் (நீதி.நெ..வி.38) என்று கூறுகிறது. இல்லறத்தான் மனைவிமீது அன்பு செலுத்தி வாழவேண்டும்; ஏனெனில், அதுவே சொர்க்க வாழ்விற்கு வழிவகுப்பதாகும் (வி.சி.தொ.I பா.75) என்கிறது விவேக சிந்தாமணி.

உலகநீதி, மனைவியை ஒருவன் குற்றம் சொல்லக்கூடாது என்றும் கணவனுடன் வாழாத பெண்ணை வீட்டில் வைத்திருக்கக் கூடாது என்றும் அறிவுறுத்துகிறது. மேலும், ஒருவன் இருதாரம் ஒருநாளும் தேடக்கூடாது (உலக.18) என்றும் கூறுகிறது.

“கௌடலியர், பிள்ளைப்பேறு இல்லாத குறையுடைய மனைவியையுடைய கணவன் காலவரையறைக் கடந்த பின்னர் மறுமணம் செய்து கொள்ளலாம் என்றும் பிரிந்து சென்ற கணவன் நீண்ட காலம் திரும்பி வரவில்லையென்றால் அவன் மனைவி உரிய காலம்வரை பொறுத்திருந்து அதற்குப் பின்னர் மறுமணம் செய்து கொள்ளலாம் என்றும் கூறுகிறார்”.[7] இதன்வழி கௌடலியர் காலத்தில் பெண்ணுக்கும் மறுமண

வாழ்க்கை இருந்துள்ளது என்பதை அறியமுடிகிறது. பிற்காலநீதிநூலான உலகநீதி, மனைவி இருக்கும்பொழுது மற்றொரு மனைவியை ஏற்கக்கூடாது என்று வற்புறுத்துகிறது. இல்லறவாழ்க்கை செம்மையுடன் விளங்கக் கணவன் மனைவியுடன் சேர்ந்து வாழ்வதே சிறப்பு என்று உலகநாதர் விரும்புகிறார்.

வேதநாயகர், கணவன், மனைவி இருவரும் சண்டையிடக்கூடாது; ஏனெனில், இருவரும் உயிரும் உடம்பும் போன்றவர். இவர்கள் ஒன்றுபட்டு வாழ்ந்தால் வறியவர்களானாலும் செல்வமுடையவர் ஆவார் (நீ.நூ.அதி.11;பா.54) என்று குறிப்பிடு கின்றார்.

கணவன் மனைவியையும் மனைவி கணவனையும் பேணி ஒற்றுமையுடன் வாழவேண்டும் என்ற அடிப்படையிலும் குடும்ப வாழ்க்கை குலைந்து போகக்கூடாது என்ற அவாவிலும் பிற்காலநீதிநூல்கள் இல்லறத்தைப் பற்றிய செய்திகளை வகுத்தளித்துள்ளன. இவ்வுலகில் ஒருவன் இல்லாளோடு கூடி வாழ்ந்து, இல்லறத்திற்குரிய இயல்புகளை உடையவனாகித் தமக்குரிய கடமைகளை ஆற்றி, இல்லறவாழ்வு சிறக்கப் பாடுபட்டால் அவன் ‘வானுலகில் தெய்வத்துள் வைக்கப்படுவான்’ என்று வள்ளுவர் கூறுவதிலிருந்து இல்லறத்திற்கு அவர் தரும் முக்கியத்துவத்தை உணரமுடிகிறது. அறம் செய்து வாழாதவனின் வாழ்க்கையைப் பன்றி வாழ்க்கையோடு ஒப்பிடுகிறது அறநெறிச்சாரம். உண்டு உயிர் வாழ்தல் என்பது இவ்வுலகில் உள்ள பல்லுயிர்க்கும் பொதுவானது. ஆனால் அதைச் சிறப்புறச் செய்து பெருமைப்பட வாழ்தலே அறவாழ்வாகும் என்று அறநெறிச்சாரம் உணர்த்துகிறது.

### 3.2. வாழ்க்கைத் துணைநலம்

அறங்களின் வளர்ச்சிக்கு உரிய களமாக விளங்குவது இல்லறமாகும். அத்தகைய இல்லறத்தை நல்வழியில் நடத்துபவள் மனைவியாவாள். இல்வாழ் வானுக்குத் துணையாக இருப்பவள் மனைவி என்பதால் வள்ளுவர் ‘வாழ்க்கைத்துணை’ என்ற அதிகாரத்தை அமைத்துள்ளார். மனைவி என்பதற்கு இல்லாள், மனை, மனையாள், துணை, வாழ்க்கைத்துணை என்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளார் வள்ளுவர். இல்லாள் மாண்புடையவளாய் இல்லை என்றால்

இல்வாழ்வு சிறக்காது (கு.52); இவ்வுலகத்தில் நற்பண்புடைய பெண்ணைவிட உயர்ந்த பொருள் ஒன்றும் இல்லை (கு.53); பெண், கற்பு என்னும் திண்மை உடையவளாக இருத்தல் வேண்டும் (கு.54) என்கிறது வள்ளுவம்.

தொல்காப்பியர் "உயிரினும் சிறந்தன்று நாணே; நாணினும் செயிர் தீர்காட்சிக் கற்புச் சிறந்தன்று"[8] என்று விளக்குகிறார். உயிரைவிட கற்பே சிறந்தது என்பதைப் பழந்தமிழ் நூல்களும் விளக்கிச் சொல்கின்றன.

தன்னையும் தன்னுடைய குடும்பத்தையும் கற்பையும் காத்து வாழ்வதே பெண்ணின் கடமையாகும் (கு.56); அவ்வாறு கற்பையும் கணவனையும் காத்துவாழும் பெண் மேலுலக வாழ்வைப் பெறுவாள் (கு.58); மனைவியின் நற்பண்பே இல்வாழ்க்கைக்கு மங்கலம் (கு.60) ஆகும். ஒருவன் தன்னுடைய மனைவியினால் தான் பெருமை அடைகிறான் என்பதன்வழி ஒரு ஆடவனின் வெற்றிக்குப் பெண் உறுதுணையாக இருக்கிறாள் என்று வள்ளுவர் கருதுவதை அறியமுடிகிறது.

ஆத்திசூடி, கணவன் தன் மனைவியுடன் சேர்ந்து வாழவேண்டும் (ஆத்.94) என்று வற்புறுத்துகிறது. கற்பு எனப்படுவது, 'சொல்திறம்பாமை' (கொ.வே.14) 'காவல் தானே பாவையர்க்கு அழகு' (பா.15) என்று கொன்றைவேந்தன் கூறுகிறது. இதற்கு ந.மு.வேங்கடசாமிநாட்டார், அ.மாணிக்கனார் இருவரும் "கற்பு என்று சொல்லப்படுவது கணவன் சொல்லுக்கு மீறி நடவாதிருத்தலாகும்"[9] என்று விளக்கம் தருகின்றனர். ஆனால், வ.சுப.மாணிக்கம் "பெண்களுக்குக் கற்பாவது உறுதியாக இருப்பது"[10] என்று கூறுகிறார். இவர் கருத்தானது,

*"பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்*
*திண்மைஉண் டாகப் பெறின்"      (குறள்.54)*

என்ற குறளைப் பின்பற்றியதாகும்.

அன்பு இல்லாத மனைவியை மடியில் உள்ள நெருப்பு போன்றவள் (கொ.வே.41) என்றும் கணவனின் குற்றத்தைக் கூறுபவளை எமன் (பா.42) என்றும் கொன்றை வேந்தன் சாடுகிறது. கணவனுக்குத் துன்பம் வருவதைக்கண்டு கலக்கம்

கொள்ளாத மனைவியை, அழிக்கக்கூடிய நெருப்பிற்கும் உயிரைப்பிடித்துச் செல்லும் எமனுக்கும் ஒப்புமைப்படுத்திச் சொல்லுகிறார் ஔவையார்.

மூதுரை, நற்குணம் இல்லாத மனைவி வீட்டில் இருந்தால் அது புலி வாழும் புதர் ஆகிவிடும் என்பதை,

*"இல்லாள் வலிகிடந்த மாற்றம் உரைக்குமேல் அவ்வில்*
*புலிகிடந்த தூறாய் விடும்"* *(மூது.21 : 1-2)*

என்ற வரிகளால் விளக்குகிறது. புலி வாழும் புதருக்குள் யாரேனும் சென்றால் புலி அவரைக் கொன்றுவிடும். அதைப்போல, பண்பில்லாத மனைவி வீட்டில் இருந்தால் அந்த வீடானது அனைவருக்கும் பயத்தைக் கொடுக்கும் என்கிறது மூதுரை.

'மனைவி இல்லாத வீடு பாழ்' (நான்.22) என்கிறது நான்மணிக்கடிகை. இக்கருத்தையே நல்வழி, இல்லறத்திற்குத் தக்க மனைவி இல்லையென்றால் அவ்வீடு பாழடைந்த வீடாகும் (நல்.24) என்று கூறுகிறது. இல்லறத்தை மாண்பு பெறச்செய்து விளக்கு ஏற்றுபவள் மனைவி. அத்தகையவள் வீட்டில் இல்லையென்றால் இல்லற வாழ்வு இருள் அடையும் என்று நல்வழி சுட்டிக்காட்டுகிறது.

மனைவி, கணவனின் குறிப்பறிபவளாகவும் நாணம், ஈகை, கற்புநெறி கொண்டவளாகவும் எப்பொருளையும் பார்த்தவுடன் விரும்பாதவளாகவும் கணவன் வெறுக்கத்தக்க செயல்களைச் செய்யாதவளாகவும் பிறர் பொருளைத் திருடாதவளாகவும் இருத்தல் வேண்டும் (அறநெறி.159); கணவன் இல்லாத பொழுது அயலார் வீட்டிற்குச் செல்லுதல், தனியே சென்று திருவிழா பார்த்தல், கணவன் கட்டளையின்றி விரதமிருத்தல் போன்றவை பெண்ணுடைய கற்பினைக் கெடுக்கும் வழிகளாகும் (பா.162); கணவன் இல்லாத நேரத்தில் அழகிற்காக மஞ்சளைப் பூசிக்கொண்டும் கண்ணிற்கு மைதீட்டிக்கொண்டும் திரியும் பெண்கள் கணவனைத் தொடர்ந்து செல்லும் எமனாவார்கள் (பா.163) என்கிறது அறநெறிச்சாரம்.

"சமணசமயம் பெண்களைக் கண்ணால் பார்ப்பதையே பெரும் குற்றமாகக் கருதியது. ஏனெனில், சமணத் துறவியர் மேற்கொள்ளும் விரதங்களுக்குப் பெண்கள்

தடையாக இருப்பார்கள் என்று பெண்களை வெறுத்து ஒதுக்கினர். பெண்ணினுடைய அழகு சமணத்துறவியரின் கட்டுப்பாட்டைத் தளர்த்துகின்ற வலிமையுடையது என்பதால் பெண்கள் ஒதுக்கப்பட்டிருந்தனர்".[11] முனைப்பாடியாரும் தம் நூலில் பெண் ஆணுக்கு அடங்கி நடப்பவளாகவே விளங்கவேண்டும் என்று கட்டளையிடுவதை அறியலாம். கணவன் இல்லாத பொழுது மனைவி தன்னை அலங்கரித்துக் கொள்ளல் தவறு என்று கூறப்படுவதிலிருந்து அக்காலச் சமுதாயத்தில் பெண்களைப் பற்றிய கருத்தாக்கத்தை உணரமுடிகிறது.

கணவனை எதிர்த்துப் பேசாதிருத்தலே பெண்ணிற்கு அழகு (வெ.வே.**11**) என்றும் கணவனைப் பேணி வாழ்வதே மனைவிக்குச் சிறப்பு (பா.12) என்றும் வெற்றிவேற்கை கூறுகிறது.

குலமகளுக்குத் தெய்வம் கொழுநனே ஆவான்; கற்புடைய பெண்ணை மனைவியாகப் பெற்றவன் செய்யவேண்டிய தவம் ஒன்றும் இல்லை (நீதி.நெ.வி.81) என்று கூறுகிறது நீதிநெறிவிளக்கம்.

கற்பு இல்லாத பெண்ணைக் கடுமையாகச் சாடுகிறது நீதிநெறிவிளக்கம். அதாவது, கணவன் அழகில் சிறந்தவனாகவும் இளமை உடையவனாகவும் கலையில் வல்லவனாகவும், இன்சொல் பேசுபவனாகவும் இருந்தாலும்கூட, கற்பு என்னும் திண்மை இல்லாத மகளிர் மனம் பிற ஆடவர்மேல் விரும்பிச் செல்லும் (நீதி.நெ.வி.82); இத்தகு கற்பிழந்த குலமகளிரைவிட பொதுமகளிரே சிறப்புடையவராவார் (பா.83) என்கிறது.

"பொதுமகளிர் கற்பில்லாத பெண்களினும் மிகவும் சிறந்தவர்களாவர். ஏனெனில் தம்மேல் அன்புடைய கணவருக்கும் பிறர்க்கும் தங்களுக்கும் தம் சுற்றத்தார் அனைவருக்கும் அவ்விலைமகளிர் கேடுசெய்ய நினையார்".[12]

விவேகசிந்தாமணி, பெண் அண்டை வீடுகளுக்குச் செல்லல் கூடாது; கணவன் உணவு உண்ட பின்பு தான் மனைவி உணவு உண்ணவேண்டும்; குடும்பத்தில் குடித்தனம் கெடாமல் அவள் வாழவேண்டும்; நற்பண்புகளைப் பெற்றுக் கற்புடன்

வாழும் பெண் இருந்தால் மாதந்தோறும் மழைபெய்யும் (வி.சி.தொ.I; பா.27) என்கிறது. நற்பண்பு இல்லாத மனைவியோடு வாழ்வது ஒரு பிடாரியோடு கூடிவாழ்வதற்குச் சமமாகும் (வி.சி.63) என்கிறது இந்நூல். கற்புடைய பெண்களைக் கேவலமாக எண்ணக்கூடாது என்றும் கொண்டைமேற் பூத்தேடி முடிக்க வேண்டாம் (உலக.12) என்றும் கூறுகிறது உலகநீதி. மஞ்சளும் மலரும் மங்கலப் பொருளாக இன்றும் கருதப்படுகிறது.

“மைதீட்டிய கண்கள் குடும்பப் பெண்களுக்கு இருந்தமையை இலக்கியங்கள் வருணிக்காமல் இல்லை. ஆனால், பரத்தையரை ‘மைவிழியார்’ எனச் சிறப்பாக அழைக்கும் நீதிநூலார் கவர்ச்சி தரும் மையணிந்த கண்ணையுடைய பெண்ணைக் குடும்பப் பெண்ணாகக் கருதவில்லையோ எனத் தோன்றுகிறது”.[13] மங்கலப் பொருளாகக் கருதப்படும் மை, மலர், மஞ்சள் போன்றவை கவர்ச்சிப் பொருள்களாகவும் கருதப்பட்டுள்ளன.

வேதநாயகர், முழுமுதலே முதல் தெய்வம்; கணவனே இரண்டாம் தெய்வம்; கற்புடைய பெண்கள் பிற பெண்களுக்கு எல்லாம் தெய்வமாவர் (நீ.நூ.அதி:11 பா.3) என்று கற்பு நெறியைப் பாராட்டுகிறார். மேலும், கணவன் வாழும் சிறுவீடே பேரின்பப் பெருவீடு என்றும் கை, கால் இல்லாத நொண்டியாகக் கணவன் இருந்தாலும், அவன் காமனுக்கு ஒப்பானவன் என்றும் கருதுபவளாகப் பெண் இருக்கவேண்டும் (பா.11) என அறிவுரை வழங்குகிறார். கணவன் உண்டு உறங்கிய பின்பு, தான் உண்டு உறங்குதலும் கணவன் எழுமுன் தான் எழுந்து வேண்டுவன செய்பவளும் தான் கற்புடைய மனைவியாவாள் (பா.10) என்று வேதநாயகர் குறிப்பிடுகின்றார்.

“கற்புநிலை என்பது இருவருக்கும் பொதுவாயினும் பெண்ணடிமைச் சமுதாயத்தில் அது பெண்களுக்கு மட்டுமே வற்புறுத்தப்பட்டது. கற்பெனப்படுவது பிறர் நெஞ்சு புகாமை என்று நூலொன்று கற்புக்குக் கடுமையான இலக்கணம் வகுக்கிறது. ஆண் பெண் இருவருமே பார்த்தனர் என்றாலும் பெண்ணை மட்டுமே நீ ஏன் பார்த்தாய் என்று பெண்களே கேட்டனர். பெண்கள் கண்ணாடியைப் போன்றவர்கள்; ஆண்கள் கல்லைப் போன்றவர்கள்; கண்ணாடி கல்லுடன் மோதினாலும் கல்

கண்ணாடியுடன் மோதினாலும் ஆபத்து கண்ணாடிக்குத்தான் என்று நினைத்தனர். அதனால் கண்ணாடியைக் கவனமாகப் பாதுகாத்தனர்".[14] பெண்கள் வீட்டுக்குள் இருத்தலே சிறப்பு என்ற கருத்து அன்றைய சமுதாயத்தில் மட்டுமல்ல இன்றும் நிலவி வருகிறது.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் மனைவியின் மாண்பு. கற்பு நலன், கற்பில்லாப் பெண்டிரின் இழிவு போன்ற கருத்துக்களை விளக்கியுள்ளன. கணவனுக்கு வேண்டிய கடமைகளைச் செய்யும் மனைவி மேலுலக வாழ்வைப் பெறுவாள் என்கிறது வள்ளுவம். ஆனால், பிற்கால நீதிநூல்களில் இத்தகைய கருத்துக்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

பிற்கால நீதிநூல்கள், கற்பில்லாத பெண்டிரை எமன், நெருப்பு, புலி, பிடாரி என்று அழிக்கக்கூடியவையாகக் கூறிக் கடுமையாகச் சாடுகின்றன.அறநெறிச்சாரம், பெண்ணை ஆணுக்கு அடங்கி நடப்பவளாகவே கருதுகிறது. திருக்குறளும் விவேகசிந்தாமணியும் கற்புடைய பெண் 'பெய்' என்றால் மழையும் பெய்யும் என்று கூறிப் பெண்ணைத் தெய்வநிலைக்கு உயர்த்துகின்றன. திருக்குறள் காலந்தொட்டு இன்றுவரை பெண்கள் கணவனைப் பேணிக் கற்புடையவளாக வாழவேண்டும் என்று கருதப்படுவதை நீதிநூல்கள் உணர்த்துகின்றன. இதன்மூலம் சமுதாயத்தில் பெண்ணின் கற்பிற்கு முக்கியத்துவம் தரப்படுவதை அறியமுடிகிறது. பிறனில் விழைதல், பொருட்பெண்டிரை நாடுதல் போன்றவற்றால் ஆடவருக்கு அழிவு என்று கூறினாலும் ஆடவரின் அப்பழக்கங்கள் கற்புநெறி தவறியவை என்று கூறப்படவில்லை. சிவப்பிரகாசர், பெண்கள் பற்றியோ கற்பு பற்றியோ அதிகம் பேசவில்லை; ஏனெனில், அவர் பக்திநெறியில் அதிக நாட்டம் கொண்டு இருக்கும் பொழுது நன்னெறியைப் படைத்துள்ளார்.

### 3.3. மக்கட்பேறு

இல்லற வாழ்க்கை தழைத்து வளர குழந்தைகளே முக்கிய கருவிகளாவர் என்பதை வள்ளுவர் 'மக்கட்பேறு' என்னும் அதிகாரத்தின்வழி விளக்குகிறார். ஒருவன் பெறத்தக்க பேறுகளில் சிறந்தது மக்களைப் பெறுவதாகும் (கு.61); பண்புடைய

மக்களைப் பெற்ற ஒருவனுக்கு ஏழு பிறப்பிலும் தீவினை தீண்டாது (கு.62); நன்மக்களைப் பெறுவதற்கு முற்பிறவியில் நல்வினை செய்திருக்க வேண்டும் (கு.63) என்று வள்ளுவம் குறிப்பிடுகிறது. "ஆர்கலி யுலகத்து மக்கட்கெல்லாம் மக்கட்பேற்றிற் பெரும் பேறில்லை"[15] என்கிறது முதுமொழிக்காஞ்சி.

மக்களின் சிறுகையால் அளாவிய உணவு அமிழ்தத்தை விட இனிமையானது (கு.64); அவர்களின் மெய்தீண்டுவதால் ஒருவன் உடம்புக்கு இன்பம் ஏற்படும் (கு.65); மழலைச் சொல் கேட்பவனின் செவிக்கு இன்பம்; குழலின் இசையைவிடவும் யாழின் இசையைவிடவும் மழலையின் சொல் இனிமையானது (கு.66) என்கிறது வள்ளுவம். தன் மகனைக் கற்றோர் அவையில் சான்றோனாக முந்தியிருக்கச் செய்யவேண்டியது தந்தையின் கடமையாகும் என்பதை,

*"தந்தை மகற்குஆற்றும் நன்றி அவையத்து*
*முந்தி யிருப்பச் செயல்"* *(குறள். 67)*

என்ற குறட்பாவழி அறியமுடிகிறது. தந்தை மகனுக்குச் செய்யவேண்டிய கடமையையும் மகன் தந்தைக்கு ஆற்றவேண்டிய நன்றியையும் வலியுறுத்தும் வள்ளுவர் தந்தை அல்லது தாய் மகளுக்குச் செய்ய வேண்டிய கடமை பற்றியோ மகள் தன் பெற்றோர்க்குச் செலுத்த வேண்டிய நன்றி பற்றியோ கூறவில்லை. எனவே அவையில் முந்தியிருத்தல், சான்றோன் எனப் பெயர் பெறுதல் போன்றவை ஆண்களுக்கு உரியவை என்று கருதி மகனுக்குச் சிறப்பிடம் தருகிறார் வள்ளுவர். தன் மகனைச் சான்றோன் எனக் கேட்டத் தாய் அவனைப் பெற்ற பொழுதில் அடைந்த மகிழ்ச்சியைவிட பெருமகிழ்ச்சி அடைவாள் (கு.69) என்கிறது வள்ளுவம். மேலும், மகன் தந்தைக்குப் புகழ்பெற்றுத் தர வேண்டும் என்பதை,

*"மகன்தந்தைக்கு ஆற்றும் உதவி இவன்தந்தை*
*என்நோற்றான் கொல்எனும் சொல்"* *(குறள். 70)*

என்ற குறட்பாவழி புலப்படுத்துகிறது.

ஆத்திசூடி, தாய், தந்தை இருவரையும் ஒருவன் பேணி வாழவேண்டும் (ஆத்.20) என அறிவுறுத்துகிறது. தாயைவிட சிறந்த கோவில் இல்லை (கொ.வே.38);

தந்தை சொல்லைவிட மந்திரம் இல்லை (கொ.வே.31); தாயும் தந்தையும் குழந்தைகளுக்குத் தெய்வமாவார்கள் (கொ.வே.1) என்றெல்லாம் கூறுகிறது கொன்றைவேந்தன். மேலும், 'சான்றோரென்கை யீன்றோர்க் கழகு' (கொ.வே.27) என்று கூறி வள்ளுவர் கருத்தை ஔவையார் வழிமொழிகிறார்.

நற்குணம் உடைய பெண்ணிற்கு மக்கட்செல்வம் உண்டானால், கணவன் செய்யவேண்டிய தவம் ஒன்றும் இல்லை (நீதி.நெ.வி.81) எனக் கூறிப் பெண்ணை உயர்த்திக் காட்டுகிறது நீதிநெறிவிளக்கம்.

பிள்ளைகள் இல்லாத வாழ்வு பயனற்றதாகும்; மனைவிக்குச் சிறப்பைப் பெற்றுத் தருபவர்கள் பிள்ளைகள் (வி.சி.தொ.II; பா.3-4) என்று கூறி வள்ளுவர் கூறும் கருத்தில் உடன்படுகிறது விவேகசிந்தாமணி. மேலும், பெற்றோர் பிள்ளைகளுக்குக் கல்வியைக் கற்பிக்கவேண்டும்; இல்லையெனில், அப்பிள்ளையை வளர்த்தல் எமனை வளர்ப்பதற்குச் சமமாகும் (வி.சி.5) என்கிறது இந்நூல். பெற்றோர் பிள்ளைகளைப் பெறுவது அவர்களுக்கு வேண்டிய ஈமக்கடன்களைச் செய்வதற்காகும் என்று கூறுவதிலிருந்து, பெற்றோரை இறுதி வரை காப்பவர் பிள்ளைகளே என்பதை உணரமுடிகிறது.

பெற்றத் தாயை எப்பொழுதும் ஒருவர் மறக்கக்கூடாது (உலக.1:3) என அறிவுறுத்துகிறது உலகநீதி. பிள்ளைகளை வளர்த்துச் சான்றோனாக்குவது தந்தை என்றாலும் குழந்தையைக் கருவிலிருந்து பாதுகாத்துப் பல இன்னல்களுக்கு இடையே வளர்த்து நல்லறிவு புகட்டிய பெருமை தாய்க்கே உரியதாகும். அத்தகைய பெருமை கொண்ட தாயினை மறக்கக்கூடாது என்று உலகநாதர் கருதுகிறார்.

பன்றி பல குட்டிகளைப் பெற்றாலும் அதனால் பயன் ஒன்றும் இல்லை; அதுபோல, அறிவில்லாத பல மக்களைப் பெறுவதைவிட அறிவுடைய ஒருவனை மகனாகப் பெறுவதே சிறப்பு (நீதி.வெ.54) என்று அறிவுறுத்துகிறது நீதிவெண்பா.

வேதநாயகர், பிள்ளைகளைப் படிக்க வைத்துக் கல்வி உடையவர்களாக வளர்த்தல் வேண்டும் (நீதி.நூ.அதி-8:பா.3); அதுவே, அவர்களுக்கு இம்மை, மறுமை

இரண்டிற்கும் இன்பத்தினைக் கொடுக்கும் (பா.5); பிள்ளைகள் ஏழைகளாய் வருந்துவதும் மகிழ்ச்சியுற்று வாழ்வதும் பெற்றோர் வளர்ப்பு முறையினால் ஆகும்; பிள்ளைகளைக் கல்வியின்றிச் செல்லமாக வளர்த்தல் எமனை வளர்ப்பதற்குச் சமமாகும் (பா.10) என்றெல்லாம் கூறுகிறார். கல்வியும் ஒழுக்கமும் பெற்றோர்கள் பிள்ளைகளுக்குக் கற்றுத்தரல் வேண்டும் என்று கூறி ஒவ்வொருவரும் கட்டாயம் கல்வி கற்றல் வேண்டும் என்று வற்புறுத்துகிறார். வேதநாயகர் கல்விநிலை வளர்ச்சியுற்ற காலக்கட்டத்தில் வாழ்ந்தவர். அதனால் கல்வி அறிவில்லாமல் வளரும் பிள்ளைகள் வாழ்ந்தும் பயனில்லை என்பதை உணர்ந்து அவர்களை எமனுக்கு நிகராகக் கூறுகிறார்.

நீதிநூல்கள் அறிவுடைய மக்கட்பேற்றின் சிறப்பு, பயன், மக்களுக்குப் பெற்றோர் செய்யும் கடமை, மக்கள் பெற்றோர்க்கு ஆற்றும் கடமை போன்றவற்றைத் தெளிவுபட விளக்கியுள்ளன.

அறநெறிச்சாரமும் அருங்கலச்செப்பும் மக்கட்பேறு பற்றி அதிகமாகப் பேசவில்லை. இருநூல்களும் சமணசமயம் சார்ந்தவை. ஆதலால் குழந்தைச் செல்வங்களுக்கு முன்னுரிமை அளிக்கவில்லையோ எனக் கருதநேரிடுகிறது.

## 3.4. அன்புடைமை

உலகில் பிறந்த ஒவ்வொருவருக்கும் இயற்கையாக அமைந்திருக்கும் சிறந்த பண்பு அன்புடைமையாகும். மனித வாழ்க்கை உயர்வடைவதற்கு அன்பு மிகவும் தேவையான ஒன்றாகும். ஒருவனின் இல்லற வாழ்விற்கு உயிர்நாடியாகத் திகழ்வது அன்பு என்று வள்ளுவர் கருதுகின்றார். சமுதாயத்தில் வாழும் ஒருவன் மற்றொருவன் மீது அன்பு பாராட்டாமல் வாழ்வது என்பது இயலாதது. எனவேதான் வள்ளுவர் இல்லறவியலில் இல்வாழ்க்கையின் முதல் ஒழுக்கநெறியாக ‘அன்புடைமையை’ அமைத்துள்ளார் எனலாம்.

அன்புள்ளம் படைத்தோர் தன்னுடைய உடம்பையும் பிறருக்கு வழங்கத் துணிவர் (கு.72); அன்பு ஆருயிருக்கும் பயன்தரும் (கு.73); அனைவரிடத்திலும்

விருப்பம் உடையவராக வாழச்செய்யும் (கு.74); அறத்திற்கும் மறத்திற்கும் அன்பு துணையாகும் (கு.71) என்றெல்லாம் அன்பின் உயர்ந்த தன்மையை விளக்குகிறார் வள்ளுவர். அன்பின் சிறப்பை விளக்கிய வள்ளுவர் அன்பின்மையின் கொடுமையையும் விளக்குகிறார். அதாவது, அன்பில்லாத உயிரை அறம் வருத்தும் (கு.77); அன்பில்லாத உயிர்கள் உலகில் வாழ்வது பட்டமரம் தளிர்ப்பது போன்றதாகும் (கு.78); அன்பில்லாதவனுடைய புறத்துறுப்பினால் எந்தப் பயனும் இல்லை (கு.79); அத்தகையவன் எலும்பு போர்த்தப்பட்ட வெற்றுடம்பு உடையவனாவான் (கு.80) என்கிறது வள்ளுவம். “அன்பு இலார் சுயநல வெறியர்”[16] என்று கூறுவார் எஸ்.இராமகிருஷ்ணன். ஒருவனை உலகத்தோடு சேர்ந்து வாழவைப்பது அன்பாகும் என்று வள்ளுவர் உணர்த்துகிறார். சமுதாயத்தில் ஒருவன் சிறக்கவேண்டுமெனில் அவன் அன்புடன் வாழவேண்டும். ஏனெனில், அன்பே ஒருவனை நல்வழிப்படுத்தும் என்பது வள்ளுவரின் வாய்மொழிவழி அறியமுடிகிறது.

இளமையிலேயே அன்போடு ஒருவன் வாழவேண்டும் (அறநெறி.16) என்கிறது அறநெறிச்சாரம். இளமையில் அன்புடன் வாழ்ந்தால்தான் முதுமையிலும் பிறரிடம் அன்பு கொண்டு வாழமுடியும் என்று இந்நூல் கருதியிருக்கலாம்.

நன்னெறி, அன்பு இல்லாதவனுக்கு இடம், பொருள், ஏவல் எல்லாம் இருந்தும் பயன் இல்லை; என்னதான் செல்வம் உடையவனாக இருந்தாலும் அன்பில்லை என்றால் அச்செல்வத்தால் பயன் ஒன்றும் இல்லை (நன்.15) என்று கூறுகிறது. செல்வத்தால் எல்லாவற்றையும் விலைக்கு வாங்கமுடியும்; ஆனால், அன்பை எப்பொழுதும் விலைக்கு வாங்கமுடியாது என்பதை நன்னெறிவழி அறியமுடிகிறது.

அன்புள்ளம் கொண்டவன் தம் உடம்பினையும் பிறர்க்குக் கொடுத்து உதவி செய்வான் (நீதி.நெ.வி.40) என்று வள்ளுவர் கருத்தை வழிமொழிகிறது நீதிநெறி விளக்கம்.

விவேகசிந்தாமணி, பிறரிடம் அன்பு செலுத்தாதவனிடம் நோய், பகை, சோம்பல் உண்டாகும்; அவன் பேரின்ப வாழ்வு பெறமுடியாது. அத்தகையவன் நரகத்தையே அடைவான் என்று கூறுகிறது. மேலும், இறைவனிடத்திலும் ஒருவன் அன்புகாட்ட

வேண்டும் (வி.சி.தொ.II பா.57) என்று இந்நூல் குறிப்பிடுகிறது. நீதிவெண்பா, பகைவர்களிடத்திலும் அன்பு செலுத்துதல் வேண்டும் (நீதி.வெ.5) என அறிவுறுத்துகிறது.

பிறரிடம் அன்பு செலுத்துபவர்கள் பட்டினிகிடப்பவர்க்குச் சோறு கொடுத்தும் வீடு இல்லாதவர்க்கு வீடு கொடுத்தும் நோய் உள்ளவர்களுக்கு மருந்து வழங்கியும் வாழ்வர். மேலும், தாய், தந்தை இல்லாதவர்களுக்குப் பெற்றோர்களாக இருப்பதோடு (நீதி.நூ.அதி-38,பா.1); பிறர்படும் துன்பத்தினைத் தம் துன்பமாக நினைத்து வருந்துவர் (பா.8) என்றெல்லாம் விளக்குகிறார் வேதநாயகர்.

ஒருவன் பிறரிடத்தில் அன்பு செலுத்தி வாழவேண்டும் என்று அனைத்து நீதி நூல்களும் கூறுகின்றன. விவேகசிந்தாமணி, இறைவனிடம் அன்பு செலுத்துவதே முதற்படி. அதன்வழி பிறரிடம் அன்பு பாராட்ட முடியும் என்கிறது. வள்ளுவர், இல்லறவியலில் இவ்வதிகாரத்தை வைத்துள்ளமையால் மனைவி, மக்கள், சுற்றத்தார், நண்பர்மீது ஒருவன் அன்பு பாராட்டினால்தான் இல்லறம் நல்லறமாகும் எனக் கருதுகிறார். அன்பை இறைவன்மீதும் பகைவர்மீதும் செலுத்தவேண்டும் என்றெல்லாம் பிறநூல்களில் கூறப்பட்டுள்ளன. இல்லறத்தான் மனைவி மக்கள்மீது செலுத்தும் அன்பே பிறர்மீது செலுத்தவும் வழிகாட்டும் என்பதில் ஐயமில்லை. ஔவையார், அன்பு பற்றிய கருத்தாக்கத்தைப் பொதுவாகவே கூறிச் செல்கிறார். அதாவது, 'பகைவரிடம் சேராதே உத்தமனாயிரு' என்பதன்வழி ஒருவன் மற்றவரின் மீது பகைமை கொள்ளாமல் அன்புநெறியை மேற்கொள்ள இவர் கூறிய நீதிக்கருத்துக்கள் வழிவகுக்கின்றன என்பதில் ஐயமில்லை.

### 3.5. விருந்தோம்பல்

பிறர்மீது அன்புகாட்டி வாழும் மக்கள் பிறர் துன்பப்படுவதைக் கண்டு மனம் பொறுக்கமாட்டார்கள். அவர்களுக்குத் தம்மால் இயன்ற உணவு கொடுத்து உபசரிப்பார்கள். அதுவே விருந்தோம்பல் எனப்பட்டது. புதியவராய் வருபவரே விருந்தினராவர். "விருந்தே புதுமை"[17] என்கிறது தொல்காப்பியம். விருந்தோம்பல் மிகப்பழங்காலந்தொட்டே நம் முன்னோர்களிடம் இருந்து வந்துள்ளது.

“திருவள்ளுவரின் காலம் உணவுக் கடைகள் இல்லாத காலம். பணமாற்று இல்லாத காலம். வெளியூர்களுக்குச் செல்வோர் பல நாளுக்கு வேண்டிய கட்டுச் சோற்றைக் கையில் கொண்டு செல்லவும் முடியாது. குறுநில மன்னர் முதலியோரும் வாணிகக் கூட்டத்தாரும் தேர்களிலும் ஊர்திகளிலும் செல்லும்போது மட்டுமே அவ்வாறு உணவுப் பொருளை உடன்கொண்டு செல்ல முடிந்தது. மற்றவர்கள் சில நாட்களுக்கு மேல் தேவையான உணவையோ உணவுப் பொருளையோ கொண்டு செல்ல முடியவில்லை. ஆகையால் இந்த விருந்தோம்பல் ஊர்தோறும் இன்றியமையாத அறமாகப் போற்றப்பட்டு வந்தது”[18] என்பர் மு. வரதராசனார்.

தொல்காப்பியர், “விருந்துபுறந்தருதலும் சுற்றம் ஓம்பலும் கிழவோளுக்குரிய பண்பு”[19] என்று குறிப்பிடுகின்றார். எனவே இல்லற வாழ்வின் தனிச்சிறப்பாகிய விருந்தோம்பல் பெண்ணிற்கு உரியதாகக் கருதப்பட்டது. வள்ளுவர், விருந்தோம்பல் என்ற அதிகாரத்தில் இல்லறத்தானைப் பற்றியே குறிப்பிடுகின்றார். இல்லறத்தில் பெரும் பங்கு வகிப்பவன் ஆடவனே ஆவான்; விருந்தோம்புதல் மனைவிக்கு உரிய சிறந்த பண்பு என்றாலும் இல்லறத்திற்கு வேண்டிய பொருளைத் தேடிச் செம்மைபெறச் செய்பவன் ஆடவனே என்பதால் வள்ளுவர் ஆண்களை முன்நிறுத்திக் கூறுகிறார் எனலாம்.

விருந்தினரைப் போற்றி ஒருவன் வாழவேண்டும்; சாவாமருந்தெனினும் விருந்தினரைத் தனியேவிட்டு உண்ணக்கூடாது (கு.82);முகமலர்ச்சியுடன் அவர்களை உபசரிக்கவேண்டும் (கு.84); விருந்தினருக்குக் கொடுத்து எஞ்சிய உணவை உண்டு வாழ்பவனின் நிலத்தில் விதையும் விதைக்க வேண்டாம் (கு.85) என்கிறது வள்ளுவம். “ஒருவன் உள்ளத்தில் பிறருக்கு விருந்தளிக்க நினைக்கின்றவன் தன் வயலில் முளைத்த நெல்லையும் அரித்து வந்து விதையையும் குற்றி விருந்தளிப்பான்”[20] என்று குறிப்பிடுகின்றார் சி.இலக்குவனார்.

விருந்தினரை எதிர்பார்த்து இருப்பவன் தேவர்களுக்கும் நல்ல விருந்தினனாவான் (கு.86); விருந்தோம்பாமல் வாழ்பவனிடம் செல்வம் இருந்தாலும்

வறுமையாளனாகக் கருதப்படுவான் (கு.89); அனிச்சமலரினும் மெல்லியர் விருந்தினர்; ஆகையால் முகம் மாறுபட்டு விருந்தினரை உபசரித்தல் கூடாது என்பதை வள்ளுவம்,

*"மோப்பக் குழையும் அனிச்சம் முகம்திரிந்து*
*நோக்கக் குழையும் விருந்து"* *(குறள். 90)*

என்ற குறட்பாவழி விளக்குகிறது.

'மருந்தேயாயினும் விருந்தோடுண்' (கொ.வே..70) என்கிறது கொன்றை வேந்தன். "கிடைப்பதற்கரிய தேவாமிர்தமே ஆனாலும் அதனை விருந்தினருடன் சேர்ந்து உண்ணவேண்டும்".[21] விருந்தினரை உபசரித்தலே இல்லறத்திற்குரிய ஒழுக்கமாகும் (கொ.வே.83) என்று குறிப்பிடுகிறது இந்நூல்.

அறநெறிச்சாரம், வந்த விருந்தினருக்கு உணவு கொடுத்து வர இருக்கும் விருந்தினருக்காகக் காத்து இருக்கும் இல்லறத்தானின் வாழ்வு தவத்தினும் சிறந்ததாகும் (அறநெறி.158) என்று விரும்தோம்பும் நெறிமிக்க இல்வாழ்வைச் சிறப்பிக்கிறது. ஆயின் விருந்தினரைப் பேணாதவனின் இல்லற வாழ்வு இருள் அடையும் (பா.166) என்று விருந்தோம்பாமையின் தீமையை உணர்த்துகிறது. விருந்தினருடன் உணவு உண்பதே இல்லறத்தானுக்கு அழகு (வெ.வே.10) என்று வெற்றிவேற்கை கூறுகிறது.

விவேகசிந்தாமணி, விருந்தினர் வீட்டிற்கு வரும் பொழுது அவர்களைக் கண்டு வியந்துகொள்ளல்; இன்சொற்களை அளவளாவல் ; முகமலர்ச்சியுடன் வரவேற்றல் அவர்கள் விடை பெறும்பொழுது வழி அனுப்புதல் போன்ற செயல்களைச் செய்யத் தக்கவனே விருந்து உபசரிக்கத் தக்கவன்; விருந்தினர்க்குக் கூழ் கொடுத்தாலும் முகமலர்ச்சியுடன் கொடுத்தால் அதுவே உண்பதற்கு அமிழ்தமாகும் ; முகம்சுளித்துக் கொண்டு கொடுக்கக்கூடாது; அவ்வாறு கொடுத்தால் அது முன்பு இருந்த பசியைவிட மிகுந்த பசியை விளைவிக்கும் (வி.சி.தொ.II பா.55); விருந்தில்லான் வீடும் விழல் (பா.10) என்று கூறி விருந்தோம்பலின் தேவையை வற்புறுத்துகிறது இந்நூல். விருந்தினருடன் சேர்ந்து உண்ணுதலே இனிமை பயக்கும் (நீ.வெ.49) என்று நீதிவெண்பா குறிப்பிடுகிறது.

வேதநாயகர், உண்பதற்குத் தேவையான உணவு இல்லாதவர்களுக்கு ஒருவன் விருந்தளிக்க வேண்டும்; இல்லையெனில், அவன் மக்களுள் பதர் என்றும் கொடிய விலங்கிற்குச் சமமாவான் (நீதி.நூ.அதி.38 பா.2) என்றும் குறிப்பிடுகிறார்.

விருந்தோம்புதல் பண்டைய காலந்தொட்டு இன்றுவரை தமிழ் மக்களின் சிறந்த பண்பாகக் கருதப்படுகிறது. திருக்குறளும் கொன்றைவேந்தனும் சாவா மருந்தாக இருப்பினும் அவற்றை விருந்தினருக்குக் கொடுத்து உண்ணவேண்டும் என அறிவுறுத்துகின்றன. நீதிநூல்கள், ஒருவன் முகமலர்ச்சியுடன் இன்சொற்களைப் பேசி விருந்தினரை உபசரிக்க வேண்டும் என்பதை வலியுறுத்துகின்றன.

### 3.6. இனியவை கூறல்

ஒருவன் மனதில் வஞ்சனை இல்லாமல் நன்மைதரும் சொற்களைப் பேசுவது இன்சொற்களாகும். பேச்சு மற்ற உயிரினங்களில் இருந்து மனித இனத்தைப் பிரித்துக் காட்டுகிறது. வள்ளுவர், ஒருவன் பேசுகின்ற சொற்களை இன்சொல், உண்மையான சொல், பயனுடைய சொல், சினம் நீங்கிய சொல், நடுநிலைமிலிருந்து பிறழாத சொல், சோர்வற்ற சொல் என்று பலவாறாக வகைப்படுத்துகிறார்.

வள்ளுவம், ஒருவன் இன்சொல் பேசினால் அது ஈகையைவிடச் சிறந்ததாகும் (கு.92); இன்சொல் பேசுபவனிடம் வறுமை இல்லாது போய்விடும் (கு.94); அவனுக்கு பாவங்கள் நீங்கி அறம் வளரும் (கு.96); இன்பத்தினைத் தருவதோடு அவனுக்கு நன்மை பயக்கும் (கு.92); அவனுக்கு இம்மைக்கும் மறுமைக்கும் இன்பம் கிட்டும் (கு.98) என்று கூறி இத்தகைய தன்மைமிக்க இனியசொல் இருக்கும்பொழுது கடுமையான சொற்களைப் பேசுதல் கனிகள் இருக்கக் காய்களைத் தின்பதற்குச் சமமாகும் (கு.100) என்கிறது.

“தனக்கே உரிமையானவையும் உண்டாரை நெடிது நாள் வாழவைக்கும் கருநெல்லிக்கனி போன்றவைகளுமாகிய இனியசொற்கள், தன்னால் பேசமுடியும் என்ற நிலை ஏற்பட்டிருக்கவும் தனக்கு உரிமை இல்லாதவையும் உண்டால் கசக்கும் பச்சைக் காய்களைப் போன்றவையுமாகிய கொடிய சொற்களைப் பேசுவது எவ்வளவு

பேதமை என்று திருவள்ளுவர் கூறும்முறை வியந்து போற்றத் தக்கதாகும்”.[22] எனவே, ஒருவன் எப்பொழுதும் வன்சொற்களைவிட்டு இன்சொற்களையே பேசவேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துவது வெள்ளிடை மலை.

ஆத்திசூடி, இனிய சொற்களையே ஒருவன் பேசவேண்டும் (ஆத்.17); கேட்பவருக்கு மகிழ்ச்சி தரும் வகையில் அப்பேச்சு அமையவேண்டும் என்று கூறுகிறது. நல்வழி, பிறரை வெல்லவேண்டும் என்றால் இன்சொல் பேசவேண்டும் (நல்.33) என்று அறிவுறுத்துகிறது. ஒருவன் இன்சொல்லே பேசவேண்டும் (அருங்.16) என்கிறது அருங்கலச்செப்பு.

இளமையிலேயே ஒருவன் இன்சொல் பேசவேண்டும்; இன்சொல்லை விளைநிலமாகக் கொண்டு ஈகையை விதையாக விதைத்துக் கடுஞ்சொற்களாகிய களையினை நீக்கவேண்டும் (அறநெறி.16) என்று கட்டளையிடுகிறது அறநெறிச் சாரம். அதாவது, ஒருவன் பயிரிட்டு அறுவடை செய்வதற்கு அடிப்படையாக நிலம் இருப்பது போன்று இவ்வுலகில் செய்யும் எல்லாச் செயல்களுக்கும் இன்சொல்லே அடிப்படையாகும் என்கிறது.

நல்ல எண்ணம் கொண்டவரின் கடுஞ்சொல்லும் நன்மை பயக்கும்; தீய எண்ணம் கொண்டவரின் இன்சொல்லும் துன்பத்தை விளைவிக்கும் (நன்.18) என்று நன்னெறியும் ஒருவன் ஈகை செய்யாவிட்டாலும் இன்சொற்களைப் பேசவேண்டும் (நீதி.நெ.வி.68) என்று நீதிநெறிவிளக்கமும் கூறுகின்றன. இன்சொற்களைக் கேட்காதவனைச் சுடுகாட்டில் எரித்தாலும் பயனில்லை (வி.சி.தொ.I பா.29) என்கிறது விவேகசிந்தாமணி. பிறர் புண்படும்படி வார்த்தைகளைப் பேசக்கூடாது என்கிறது உலகநீதி. இன்சொல் பேசுவதால் ஒருவனுக்குச் செல்வமும் நல்லோர் தொடர்பும் உண்டாகும்; ஆமின் ஒருவனுடைய கடுமையான சொல்லானது மரணத்திற்கு வழிவகுக்கும் என்று நீதிவெண்பா கூறுவதை,

*“. . . . . . . . . . . . . . . . . . . . நாவினுனி*
*ஆங்க டினமாகில் அத்திருவும் சேராள்முன்*
*ஆங்கே வரும் மரணம் ஆம்”* (*நீதி.வெ.17*)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

வேதநாயகர், இன்சொல் பேசுபவனுக்குப் புகழ் உண்டாகும்; பகைவர்களும் நண்பராவார் (நீதி.நூ.அதி.32-பா.1); கடுஞ்சொல் பேசுபவனுக்கு இழிவு உண்டாகும்; நண்பர்களும் பகைவராவர்; சாவைத்தரும் நோய் உண்டாகும்; ஆதலால், ஒருவன் பிறர்க்கு நன்மை செய்யாவிட்டாலும் இன்சொற்களைப் பேசவேண்டும் (பா.5) என்கிறார்.

இன்சொல் பேசுவது ஈகையைவிட மேலானதாகும் என்று நீதிநூல்கள் கூறுகின்றன. மனதில் மாசு இல்லாதவனின் கடுஞ்சொல்லும் இன்சொல்லாகும் என்கிறது நன்னெறி. ஒருவன் பேசும் கடுஞ்சொல் அவனை மரணத்திற்கே கொண்டு செல்லும் தன்மையது என நீதிவெண்பா எடுத்துரைக்கிறது.

### 3.7. செய்ந்நன்றி அறிதல்

சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவரும் பிறர் உதவியின்றித் தனித்து வாழமுடியாது. ஒவ்வொருவரும் மற்றொருவருக்கு உதவிசெய்து வாழவேண்டியதன் அவசியத்தை உணர்த்தவே வள்ளுவர் 'செய்ந்நன்றியறிதல்' என்ற அதிகாரத்தை அமைத்துள்ளார். செய்ந்நன்றி எப்படிப்பட்டது; அதை ஏன் மறக்கக் கூடாது என்றெல்லாம் வள்ளுவர் கீழ்வருமாறு விளக்குகிறார் :

ஒருவன் செய்யாமல் செய்த உதவிக்கு மண்ணுலகமும் விண்ணுலகமும் ஈடாகாது (கு.101); காலத்தினால் செய்த நன்றி உலகத்தைவிட மிகப்பெரிது (கு.102); பயனை எதிர்பார்க்காமல் ஒருவன் செய்யும் உதவி கடலைவிட பெரிது (கு.103); ஒருவன் தினையளவு உதவி செய்தாலும் அதைப் பனையளவாகக் கொள்வர் சான்றோர் (கு.104) என்கிறார் வள்ளுவர். இக்கருத்தை நாலடியார்,

*"தினையனைத்தே யாயினும் செய்ந்நன் றுண்டால்*
*பனையனைத்தா உள்ளுவர் சான்றோர்"* *(நாலடி : 344)*

என்று கூறுகிறது. ஒருவன் பிறர் செய்த நன்றியை எப்பொழுதும் மறக்கக் கூடாது; ஆயின், அவர் தனக்குச் செய்த தீமையை அப்பொழுதே மறக்கவேண்டும் (கு.108)

என்று வள்ளுவம் நவில்கிறது. மேலும், ஒருவன் செய்த உதவியை மறந்தவனுக்கு இந்த உலகத்தில் உய்வே இல்லை என்பதை வள்ளுவர்,

*"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு"     (குறள்.110)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார்.

ஒருவன் செய்த நன்றியை மறத்தல் கூடாது (ஆத்.21)என்று அறிவுறுத்துகிறது ஆத்திசூடி. தம்மிடத்தில் உள்ளவற்றைப் பிறருக்குக் கொடுத்து உதவி செய்பவருக்குப் பலரும் உறவினராவர் (நல்.29) என்கிறது நல்வழி. உதவி செய்தவரை மறக்காமல் இருப்பவரை வேரால் உண்ட நீரை இளநீராக்கித்தரும் தென்னை மரத்திற்கு (மூது.1) ஒப்பிடுகிறது மூதுரை. மேலும், நல்லோருக்குச் செய்த உதவியை அவர்கள் என்றும் மறக்கமாட்டார்கள் என்கிறது. தம்முடைய உதவியைப் பிறர் எதிர்பார்த்து வாழுமாறு ஒருவன் வாழ்வதே உயர்ந்த வாழ்வாகும் (அறநெறி.108) என்று அறநெறிச்சாரம் கூறுகிறது. நல்லவனுக்குச் செய்யும் உதவி நன்மை பயக்கும்; அற்பருக்குச் செய்த உதவி தீமையை விளைவிக்கும் (வி.சி.தொ.I பா.96) என்று விவேகசிந்தாமணியும் குற்றமில்லாத மேலோர் பயனை எதிர்பார்க்காமல் பிறருக்கு உதவி செய்வர் (நன்.1) என்று நன்னெறியும் கூறுகின்றன. நீதிநெறிவிளக்கம், செல்வமுடைய மேலோர் பிறர்க்கு உதவி செய்து அவர்களை இன்புறச் செய்வர் என்கிறது. நீதிவெண்பா, நீர் ஊற்றாமலே வளர்ந்து பயன்தரும் பனையைப் போல ஒருவன் செய்யாமல் செய்யும் உதவியே சிறந்தது என்பதை,

*"உத்தமர்தாம் ஈயுமிடத்(து) ஓங்குபனை போல்வரே"     (நீதி.வெ.91)*

என்ற பாடல்வரியின் மூலம் விளக்குகிறது.

வேதநாயகர், எந்தப் பயனும் எதிர்பார்க்காமல் உரிய காலத்தில் செய்த நன்றி உலகத்தைவிட பெரிது (நீதி.நூ.அதி.30-பா.27) என்று கூறி வள்ளுவர் கருத்திற்கு உடன்படுகிறார். மேலும், ஏழைகளுக்கு உதவி செய்ய வேண்டும்; இல்லையெனில்,

ஒருவன் மாளிகையில் வாழ்ந்தாலும் அவன் கொடிய விலங்கு என்றும் மக்களுள் பதர் (பா.50) என்றும் அவர் சாடுகிறார்.

ஒவ்வொருவரும் பிறர்க்கு உதவிசெய்து வாழவேண்டும் என்ற அறநெறியை அனைத்து நூல்களும் வற்புறுத்துவதுடன் பிறர் தனக்குச் செய்த உதவியை மறந்தவனுக்கு உலகத்தில் உய்வே இல்லை என்றும் கூறுகின்றன. ஏழைகளுக்கு உதவிசெய்து வாழ்பவனே மனிதன் என்றும் உதவாதவன் பதர் என்றும் வேதநாயகர் குறிப்பிடுகின்றார்.

## 3.8. நடுவுநிலைமை

அறநெறியில் நின்று வாழ்க்கை நடத்தும் ஒருவன் நடுவுநிலையுடன் செயல்பட வேண்டும். அதாவது, தனக்கு வேண்டியவர், வேண்டாதவர், நண்பர், பகைவர், அறிந்தவர், அறியாதவர் என்ற பாகுபாடு இல்லாமல் அனைவரிடத்திலும் அறத்தின்வழி வழுவாது நிற்பது நடுவுநிலைமை எனப்படும்.

வள்ளுவர், ஒருவன் எவ்வாறு நடுவுநிலைமையுடன் செயல்படவேண்டும் என்பதைப் பின்வருமாறு விளக்கியுள்ளார்: ஒருவன் செல்வநிலையிலும் வறுமை நிலையிலும் நடுவுநிலை தவறக்கூடாது (கு.117); நடுவுநிலைமை உடையவன் என்பதை ஒருவனுடைய இறப்புக்குப் பின்னால் நிலைத்து நிற்கும் புகழால் அறியலாம் (கு.114); நடுவுநிலை தவறாமல் வாழ்வதே சான்றோர்க்கு அணி எனப்படும் (கு.118); மேலும், நடுவுநிலைமையுடன் வாழ்பவனுக்கு வறுமை இல்லை என்று வள்ளுவம் நவில்கிறது. மேலும், பிறர்பொருளையும் தம்பொருள் போல் பாதுகாப்பதே வாணிகம் செய்வோருக்கு உரிய முறையாகும் என்பதை வள்ளுவர்,

*"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்*
*பிறவும் தமபோல செயின்" (குறள்.120)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார்.

"உலகில் அரசர்க்கு அடுத்த நிலையில் வாணிகர்கள் சிறப்புடையவர் களாதலால் இந்நடுவுநிலைமைப் பண்பு அவர்களுக்கு இருக்கவேண்டுவது மிக

முக்கியம் எனக் கருதியே திருவள்ளுவர் அறங்கூறும் அவையத்தாரை நோக்கிக் கூறியபின் இறுதியில் வணிகரையும் வேறுபிரித்துச் சிறப்பித்துள்ளார். நேர்மையுள்ள வியாபாரம் எப்பொழுதும் படுக்காது. மேலும் மேலும் வளர்ந்து பெருகும்”[23] என்று குறிப்பிடுகின்றார் மாணிக்கவாசகம். ஒருவன் செய்யும் தொழிலும் நேர்மையான முறையில் சமநிலையில் இருத்தல் வேண்டும் என்பதே வள்ளுவரின் அவா.

‘ஓரஞ்சொல்லேல்’ என்கிறது ஆத்திசூடி. இதற்கு “எந்த வழக்கிலும் ஒருபுடைச் சார்பாகப் பேசாமல் நடுவுநிலையுடன் சொல்”[24] என்று விளக்கம் தருகிறார் வேங்கடசாமி நாட்டார்.

நீதிமன்றத்தில் வழக்கினை ஒருபக்கச் சார்பாகச் சொன்னவனின் குடி அழியும் என்பதை நல்வழி,

*“வேதாளம் சேருமே வெள்ளெருக்குப் பூக்குமே*
*பாதாள மூலி படருமே - மூதேவி*
*சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே*
*மன்றோரம் சொன்னார் மனை”* (*நல்.23*)

என்ற பாடல்வழி விளக்குகிறது. ஒருவன் பொருளை விருப்பு வெறுப்பின்றி ஆராய வேண்டும். ஏனெனில் வெறுப்பினால் ஒருவனின் குணமும் விருப்பினால் குற்றமும் மறைந்துவிடும் (அறநெறி.42) என்று கூறுகிறது அறநெறிச்சாரம். எனவே பொருளின் உண்மைத் தன்மையை ஆராய்ந்து உள்ளதை உள்ளவாறே எடுத்துரைக்க வேண்டும் என்று அறநெறிச்சாரம் வலியுறுத்துவதை அறியமுடிகிறது.

விவேகசிந்தாமணி, நடுவுநிலைமையுடன் வாழ்பவன் கண்களில் ஒளிவிளங்கப் பெறுவான்; ஆயின், ஒருபக்கமாகத் தீர்ப்பு கூறுபவன் குருடனாய் ஒளியிழந்து சாவதோடு அவன் குடியும் அழியும் என்கிறது. மேலும், பெண்கள் வழக்காக இருந்தாலும் ஒருவன் உண்மைப் பொருளைக் கண்டபின்பு அவர்களுக்குத் தீர்ப்பு வழங்கவேண்டும் (வி.சி.தொ.I பா.70) என்று கட்டளையிடுகிறது.

வள்ளுவம், ஒவ்வொரு மனிதனும் தானும் தான் வாழும் சமுதாயமும் சிறந்து விளங்குவதற்கு நடுவுநிலைமையோடு திகழவேண்டும். அப்பொழுதுதான்

சமுதாயத்தில் உள்ள ஏற்றத்தாழ்வுகளை ஆராயமுடியும் என்று கருதி இல்லறவியலில் நடுவுநிலைமை அதிகாரத்தை வைத்திருக்கலாம். பிற்காலநீதிநூல்கள் நடுவுநிலைமை இல்லறத்தானுக்குத் தேவை என்று வரையறை செய்யாமல் பொதுவாகவே எல்லாருக்கும் வேண்டிய பண்பாக எடுத்துச் சொல்கின்றன. திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் ஒவ்வொருவரும் தம்முடைய நெஞ்சத்தைச் சான்றாக வைத்து நடுவுநிலை பிறழாமல் வாழவேண்டும் என்று கூறுகின்றன.

### 3.9. அடக்கமுடைமை

ஒருவன் எண்ணத்தாலும் சொல்லாலும் செயலாலும் அறத்தைச் செய்து வாழ்வாங்கு வாழவேண்டுமெனில், அவன் மனம், மொழி, மெய் என்ற மூன்றும் தீயநெறியில் செல்லவிடாமல், தன்னை தானே காத்துக் கொள்ளவேண்டும். அதாவது, அடக்கம் என்பது ஒவ்வொரு மனிதனுக்கும் மிகவும் தேவையான ஒன்றாகும். வள்ளுவர், அடக்கத்தைப் பற்றிக் கூறுகையில் அடக்கம் ஒருவனுக்குச் சிறப்பினைத் தந்து அவனைத் தேவருள் சேர்க்கும் (கு.121); அடக்கமுடையவனின் உயர்வு மலையின் உயர்வைவிடப் பெரிதாகும் (கு.124); அதனால் அடக்கத்தை உறுதிப் பொருளாகக் கொண்டு ஒவ்வொருவரும் காத்தல் வேண்டும் (கு.122) என்கிறார்.

ஒருவனுக்கு அடக்கத்தோடு பணிவுடைமையும் வேண்டும்; ஏனெனில் பணிவுடையவராக ஒழுகுதலே செல்வருக்கு மற்றொரு செல்வம் போன்றதாகும் (கு.125); ஆமைபோல் ஒருவன் ஐம்புலன்களையும் அடக்கி வாழ்தல் வேண்டும்; அவ்வாறு வாழ்பவனுக்கு ஏழுபிறவியிலும் நன்மை உண்டாகும் (கு.126); மேலும், ஒருவன் எதனைக் காக்காவிட்டாலும் நாவைக் காக்கவேண்டும்; காக்கத் தவறினால் சொற்குற்றம் ஏற்பட்டுத் துன்புறுவான் (கு.127); ஒருவனுக்குத் தீயினால் சுட்டபுண் ஆறும்; ஆனால், நாவினால் சுட்டபுண் என்றைக்கும் ஆறாது (கு.129); சினம் தோன்றாமல் ஒருவன் மனதை அடக்கி வாழவேண்டும் (கு.130) என்கிறது வள்ளுவம்.

கொன்றைவேந்தன், தன்னைவிட கீழ்பட்டவனாக இருந்தாலும் அவனிடம் பணிவுடன் ஒருவன் நடந்து கொள்ளவேண்டும் (கொ.வே.17) என்று அறிவுறுத்துகிறது. மூதுரை, அடக்கம் உடையவனைக் கொக்கிற்கு ஒப்புமைப்படுத்துகிறது. அதாவது,

கொக்கு பெரியமீன் வரும்வரை அடங்கி இருக்கும். அதுபோல, அடக்கமுடையவரை ஆராய்ந்து வலிமையை உணராமல் வெல்ல நினைப்பவனுக்குக் கேடுவரும் (மூது.16) என்கிறது. எனவே ஒருவன் அடக்கத்துடனும் பொறுமையுடனும் வாழவேண்டும் என ஔவையார் கூறுகின்றார். ஐம்புலன்களையும் அடக்கி ஆசைகளை ஒழித்து வாழ்பவன் தேவர் உலகத்தை அடைவான் (அறநெறி.147) என்கிறது அறநெறிச்சாரம். ஒருவன் மேலுலக வாழ்வு பெறுவதற்கு அடக்கமுடைமையை ஒரு வழியாகக் காட்டுகிறது அறநெறிச்சாரம்.

நீதிநெறிவிளக்கம், கல்விச்செல்வம் உடையவர்க்கும் பொருட்செல்வம் உடையவருக்கும் பணிவு தேவை (நீதி.நெ.வி.16) என்று வலியுறுத்துகிறது. அடக்கமாக வாழ்வதே அறிஞர்களுக்குச் சிறப்பாகும்; ஒருவன் கல்வி கற்பதன் நோக்கம் அடக்கம், ஒழுக்கம் இவற்றைப் பற்றித் தெரிந்துகொண்டு அதன்வழி நடப்பதற்கேயாகும்; அடக்கம் இல்லாமல் ஒருவன் அறிவுடையவனாக வாழமுடியாது என்றும் அடக்கம் இல்லாமல் வாழ்வது அறிஞர்களுக்கு அழகில்லை (வெ.வே.14) என்றும் வெற்றிவேற்கை கூறுகிறது.

ஒருவனுக்கு உயர்ந்த பண்பை உருவாக்கித் தருவது அடக்கமாகும். அத்தகைய அடக்கத்தை ஒருவன் மேற்கொண்டு வாழ்ந்தால்தான், அவனுடைய வாழ்வானது செம்மைபெறும் என்பதைத் திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் விளக்கிச்சொல்கின்றன. அடக்கத்தினால் ஏற்படும் நன்மை, அடங்காமையினால் ஏற்படும் தீமை போன்றவற்றையும் அவை கூறுகின்றன.

### 3.10. ஒழுக்கமுடைமை

ஒழுக்கத்தால் உயர்ந்தவர்களைக் கொண்டிருப்பதாலே உலகம் பெருமை அடைகிறது. அதாவது, உலகத்தில் உள்ள ஒருவனை மாண்புடையவனாகவும் மாமனிதனாகவும் வாழவைப்பது ஒழுக்கமாகும். வள்ளுவர், ஒருவனுக்கு உயிரைவிட சிறந்தது எதுவும் இல்லை; ஆனால், அவ்வுயிரைவிட சிறந்தது ஒழுக்கம் (கு.131); ஒழுக்கம் உடையவனாக வாழ்வதே உயர்ந்த குடிப்பிறப்பின் தன்மையாகும் (கு.133); பார்ப்பான் வேதத்தை மறந்தாலும் ஓதிக்கொள்வான்; ஆனால், ஒழுக்கம் குன்றினால்

அவனுடைய குடி கெட்டுவிடும் (கு.134) என்கிறார். இதன்வழி பிறப்பினால் உயர்வு, தாழ்வு இல்லை; ஒருவன் ஒழுக்கத்தினாலே உயர்வு, தாழ்வு கருதப்படும் என்பது வள்ளுவர் கருத்து.

ஒருவனுடைய வாழ்விற்குத் துணையாக நிற்பது, ஒழுக்கமாகும் (கு.132); நல்லொழுக்கம் உடையவனுக்கு நன்மையும் மேன்மையும் (கு.137) என்று ஒழுக்கத்தால் ஏற்படும் உயர்வினைக் குறிப்பிடுகின்றார் வள்ளுவர். ஒழுக்கத்தின் சிறப்பை முதுமொழிக்காஞ்சி கூறுகையில்,

*"ஆர்கலி உலகத்து மக்கட்கெல்லாம்*

*ஓதலிற் சிறந்தன்று ஒழுக்கமுடைமை" (முது.மொ.கா.1)*

என்று கூறுகிறது.

ஒழுக்கம் உடையவன் உலகத்தோடு பொருந்தி வாழவேண்டும்; அவ்வாறு வாழாவிட்டால் அவன் கற்ற கல்வியால் பயனில்லை (கு.140) என்று கூறுகிறது வள்ளுவம்.

"உலகத்தோடு ஒப்ப நடப்பதுதான் ஒழுக்கம் என்பது. ஒருவனுடைய கல்வியும் அறிவும் உலகத்தோடு ஒத்து வாழ்வதாகிய ஒழுக்கத்தைத்தான் உண்டு பண்ணுகின்றன. உயர்ந்த கல்வியும் பட்டமும் மேதை என்ற சிறப்பும் ஒருவன் பெற்றிருந்தாலும் ஒழுக்கம் தெரியாதவனாய் இருந்தால் அவனை முட்டாள் என்றே உலகம் பழிக்கும்"[25] என்று விளக்குகிறார் மாணிக்கவாசகம். ஒழுக்கம் இல்லாதவனை இவ்வுலகம் மதிக்காது என்பதை வள்ளுவத்தால் அறியமுடிகிறது.

ஆத்திசூடி,'உத்தமனாயிரு','நேர்பட ஒழுகு'(ஆத்.73) என்று அறிவுறுத்துகிறது. வேதம் ஓதுவதைக் காட்டிலும் ஒழுக்கத்துடன் வாழ்வதே வேதியர்க்கு நன்மை (கொ.வே.11) என்று கொன்றைவேந்தனும் ஒழுக்கமுடையோர் வறுமையுற்றாலும் உயர்குணத்தில் இருந்து மாறமாட்டார்கள் (மூது.18) என்று மூதுரையும் கூறுகின்றன.

ஒருவனின் உயர்ந்த குடியைவிட ஒழுக்கமே சிறந்ததாகும் (நல்.31) என்ற கருத்தை முன்வைக்கிறது நல்வழி. அறநெறிச்சாரம், ஒழுக்கம் உடையவனாக வாழ

முடியாதவன் உயிர்விடுதலே நன்று (அறநெறி.33) என்று கூறி திருக்குறள் கருத்தை வழிமொழிகிறது. மேலும், ஒழுக்கம் இல்லாமல் ஒருவன் உடம்பை வளர்த்தல் கூடாது என்று அறிவுறுத்துகிறது. எனவே உடம்புக்கும் உயிர்க்கும் சிறப்புத் தரும் ஒழுக்கத்தைமேற்கொண்டு ஒருவன் வாழவேண்டும் என்று அறநெறிச்சாரம் வற்புறுத்துகிறது.

வேதத்தை மறவாமல் ஓதலும், ஒழுக்கம் குன்றாமல் இருப்பதும் அந்தணர்களுக்கு அழகு (வெ.வே.4) என்று சிறப்பிக்கிறது வெற்றிவேற்கை. புலி பசித்தாலும் பயிரை உண்ணாதது போல ஒழுக்கமுடையவர் வறுமையுற்றாலும் தன்நிலையிலிருந்து மாறமாட்டார்கள் (நீதி.நெ.வி.61) என்று நீதிநெறிவிளக்கம் கூறுகிறது.

ஒருவன் ஒழுக்கத்துடன் வாழ்ந்தால் அவனுக்குப் புகழ் உண்டாகும்; அவன் தேவர்களுள் ஒருவனாக மதிக்கப்படுவான் (வி.சி.தொ.I பா.51) என்று ஒழுக்கத்தின் மேன்மையைச் சிறப்பிக்கின்றது விவேகசிந்தாமணி. ஒழுக்கமில்லாதவன் நரகத்திற்குச் செல்வான் என்றும் கூறுகிறது அந்நூல். நீதிவெண்பா, ஒழுக்க முடையவர் ஒழுக்கமில்லாதவரைக் கண்டவுடன் விலகிக்கொள்வர் (நீதி.வெ.34) என்று கூறுகிறது.

ஒழுக்கம் உயிரைவிடச் சிறந்ததாகும் என்று திருக்குறளும் அறநெறிச்சாரமும் குறிப்பிடுகின்றன. ஒழுக்கமுடையவன் வறுமையுற்றாலும் தீய செயல்களைச் செய்யமாட்டான் என்று பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன.

### 3.11. பிறனில் விழையாமை

கணவன் மனைவி இருவரும் ஒருவர் மற்றொருவர்க்கென்று வாழ்தல் வேண்டும். பெண்ணின் கற்பைப் பேசிய வள்ளுவர் ஆடவனும் ஒழுக்கமுடையவனாகவும் கற்பைக் காப்பவனாகவும் இருத்தல் வேண்டும் என்பதை உணர்த்துவதற்குப் ‘பிறனில் விழையாமை’ என்ற அதிகாரத்தை அமைத்துள்ளார். பிறனுக்குரிய மனைவியை ஒருவன் காமக்கண்ணோட்டத்தோடு நோக்குவது பிறனில் விழைதலாகும்.

அறம், பொருள் கண்ட ஒருவன் பிறனுடைய மனைவியை விரும்பமாட்டான் (கு.141); ஏனெனில், பிறன்மனை வாயிலில் நின்றவன் பேதையாவான் (கு.142); அவன் பெரும் பழியை அடைவான் (கு.145) என்று நவில்கிறது வள்ளுவம். “இந்தியப் பண்பாட்டு மரபில் அடுத்தவன் மனைவியைக் கூடுபவனுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது. அன்று கொலைக்குற்றத்திற்கு மரணதண்டனை இல்லை. மாறாகக் கொலை செய்தவனின் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்படும். கோவிலில் நந்தா விளக்கு எரிக்கும் தண்டம் விதிக்கப்படும். இந்த தீர்ப்புக்கள் எல்லோரும் பார்க்குமாறு கோவில் சுவர்களில் பொறிக்கப்பட்டன. கொலைக் குற்றத்தைத் தலைமுறைகள் தோறும் இப்படி பொறிப்பதால் சமூக ஞாபகத்தில் நிரந்தரமாக்கப்பட்டது. ஆனால் பிறன் மனைவியைக் கூடியவனுக்குக் கொலைதண்டனை வழங்கப்பட்டிருப்ப திலிருந்து இந்த குற்றத்தின் கனபரிமாணத்தை உணர்ந்து கொள்ளலாம்”[26] என ராஜ்கௌதமன் விளக்குகிறார். இதனால் சமூகத்தில் கொலை செய்தவனைவிட அடுத்தவன் மனைவியை விரும்புகின்றவனுக்குத் தண்டனை மிகுதியாக வழங்கப்பட்டதன் மூலம் அக்காலச் சமுதாயத்தில் பிறன்மனை விரும்புதல் பெரிய குற்றமாகக் கருதப்பட்டதை அறியமுடிகிறது.

வள்ளுவர், பிறன்மனைவியை விரும்புகின்றவனிடத்தில் பகை, பாவம், அச்சம், பழி நான்கும் வந்து சேரும் (கு.146); அவன் இறந்தவனைவிட வேறுபட்டவர் அல்லர். (கு.143); பிறன்மனைவியை நோக்காத பேராண்மையுடையவரே சான்றோர் ஆவார் (கு.148); மேலும், அறமல்லாதவற்றை ஒருவன் செய்தாலும், பிறன் மனைவியை விரும்பாமல் இருத்தலே நன்று (கு.150) என அறிவுறுத்துகின்றார்.

“ஒருவன் மனைவியை மற்றொருவன் விரும்புவது சமூகத் துரோகமாகும். கள்ள நட்புக்கொண்டிருப்பது சமுதாயக் கட்டுப்பாட்டுக்கு உலை வைப்பதாகும். இதனால் ஒரு குடும்பத்துக்கும் மற்றொரு குடும்பத்துக்கும் பகைமை உண்டாகும். இந்த தனிப்பகைமையே சமுதாயக் கலகமாகவும் மாறிவிடும். ஆகையால்தான் பெண்களுக்குக் கற்பைக் கடமையாக்கியதுபோல் ஆண் மக்களுக்குப் பிறனில் விழையாமையைக் கடமையாக்கினார் வள்ளுவர்”[27] என்று சாமி. சிதம்பரனார்

குறிப்பிடுகின்றார். பிறனுடைய மனைவியை ஒருவன் விரும்பினால் அவன் சமூகத்தில் ஒழுக்கக்கேடு உடையவனாகவும் அறநெறி தவறி வாழ்பவனாகவும் கருதப்பட்டான்.

கொன்றைவேந்தன், பிறனுடைய மனைவியை விரும்பாமல் வாழ்வதே ஒருவனுக்குச் சிறந்த அறம் (கொ.வே.61) என்கிறது. பிறனுடைய மனைவியை விரும்பும் ஒருவனின் கல்வியும் செல்வமும் அழிந்துவிடும் (நல்.36) என்று கூறுகிறது நல்வழி. பிறனுடைய மனைவியை ஒருபொழுதும் விரும்பக்கூடாது என்று வலியுறுத்துகிறது அருங்கலச்செப்பு. அதாவது, தனக்கு உரியவள் இல்லாத ஒருத்தியை அடைதல், காமவிளையாட்டு, காமமிகுதி, மனங்கொள்ளுதலில்லா வேசியர் உறவு போன்றவற்றால் ஒருவனுடைய ஒழுக்கம் கெடும் (அருங்.76) என்று கூறுகிறது அருங்கலச்செப்பு.

பிறனுடைய மனைவியை விரும்புகின்றவன் இகழ்ச்சிக்கு உரியவனாகக் கருதப்படுவான் (அறநெறி.89) என்று அறநெறிச்சாரமும் பிறனுடைய மனைவியை நாடிச்செல்பவன் அறிவில்லாத பதர் (வெ.வே.70) என்று வெற்றிவேற்கையும் கூறுகின்றன. நீதிநெறிவிளக்கம், பிறன்மனைவியை நாடிச்செல்பவன் சிறிது நேரமே இன்பம் அடைவான்; பிறகு பெருமை கெட்டு நிற்பான் (நீதி.நெ.வி.77) என்று குறிப்பிடுகிறது.

விவேகசிந்தாமணி, பிறன்மனைவியை விரும்பியதால் ஏற்பட்ட அழிவினைப் புராணக்கதைகள் வழியாகச் சுட்டிக்காட்டுகிறது. இந்திரன் கௌதமருடைய மனைவி அகலிகைமீது விருப்பம் கொண்டதால் கௌதமனுடைய சாபத்தைப் பெற்று வருந்தினான்; இராவணன் சீதையை விரும்பியதால் இராமனால் கொல்லப்பட்டான்; கீசகன் பாண்டவர் மனைவியாகிய துரோபதையை விரும்பியதால் பீமனால் கொல்லப்பட்டான் என்றும் அவர்களிடத்தில் உள்ள செல்வம் அழிந்து முக்தி அடையாமல் நரகத்தை அடைந்தார்கள் என்றும் கூறுகிறது. எனவே பிறனுடைய மனைவியை விரும்பிச் செல்பவனுக்கு அடி, உதை, மரணம் போன்ற துன்பங்கள் ஏற்படும் (வி.சி.தொ.**II** பா.47) என்கிறது விவேகசிந்தாமணி.

நீதிவெண்பா, மணமாகாத மகளிர், தாலியை நீக்கிய பெண்டிர், அயலார் மனைவி, பொதுமகளிர், பணிப்பெண்கள் போன்றவர்களை நற்குணமுடைய பெரியோர்கள் ஒருபொழுதும் தழுவநினைக்கமாட்டார்கள் என்றும் பிறன்மனைவியை விரும்புபவனுக்கு நரகத் துன்பம் கிட்டும் (நீதி.வெ.41) என்றும் வலியுறுத்துகிறது.

வேதநாயகர், அயலாரின் மனைவியின் தோளைச் சேரும் ஒருவனுக்கு அறிவு கெடும்; பொருள் நீங்கும்; நோய்வந்து அவன் துன்பத்தை அடைவான் என்கிறது. மேலும், பெண்களின் அழகிற்கு ஆசைப்பட்டுக் காமக் கடலினுள் வீழ்பவனை விளக்கு ஒளியை விரும்பி அதில் விழுந்து மாளும் விட்டில் பூச்சிக்கு (நீதி.நூ.அதி.12, பா.9) ஒப்பாகக் கருதுகிறார் அவர்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் ஒருவன் பிறனுடைய மனைவியை விரும்புதலையும் பொதுமகளிரை நாடுதலையும் வன்மையாகக் கண்டிக்கின்றன. ஒருவனிடத்தில் கல்வியும் செல்வமும் நிறைந்து இருந்தாலும் பிறன்மனைவியை விரும்புபவன் ஒழுக்கமில்லாதவனாகவே கருதப்படுகிறான் என்று நல்வழி கூறுகின்றது.

## 3.12. பொறையுடைமை

சமூகத்தில் வாழ்பவர்கள் பொறுமையுடையவராய் இருத்தலே ‘பொறை யுடைமை’ எனப்படும். “தமக்குத் துன்பம் செய்தாரைத் தாமும் துன்பம் செய்யாது அவர்மாட்டுச் சென்ற வெகுளியை மீட்டல்”[28] என்று விளக்கம் தருகிறார் மணக்குடவர். தங்கள் உயிரைக் கொல்ல வந்தவர்களிடத்தும் பொறுமை காட்டியுள்ளவர்களை வரலாற்று ஏடுகளில் காணமுடிகிறது. இதற்கு ஒரு எடுத்துக்காட்டாக அமைபவர் ஏசு பெருமான் ஆவார். தம்மைச் சிலுவையில் அறையச் செய்தவர்களை பார்த்து இயேசு சபிக்கவில்லை. அவர் “ஆண்டவனே இவர்கள் அறியாமையால் செய்துவிட்ட பிழையை மன்னிப்பீராக”[29] என்று கூறினார். வள்ளுவர், பொறுமையினால் ஏற்படும் நன்மையைப் ‘பொறையுடைமை’ என்னும் அதிகாரத்தில் விளக்கியுள்ளார்.

தன்னை வெட்டியவரைத் தாங்கும் நிலம்போல ஒருவன் தன்னை இகழ்பவரைப் பொறுத்தல் வேண்டும் (கு.151); அறிவிலார் தனக்குச் செய்த தீங்கை ஒருவன் பொறுத்தலே தலையானதாகும் (கு.152); ஒருவன் செய்த தீங்கினைப் பொறுக்காதவர்க்கு ஒருநாள் மட்டும் இன்பம்; பொறுத்தவர்க்கு உலகம் அழியும்வரை இன்பம் (கு.156) என்கிறது வள்ளுவம். பொறுத்தாரைப் பொன்போல் மதிப்பர் (கு.155); பொறுமை உடையவனைத் துறவிகளைவிட மேலானவன் என்று வள்ளுவர் கருதுவதை,

*"துறந்தாரின் தூய்மை உடையர் இறந்தார்வாய்*
*இன்னாச்சொல் நோற்கிற் பவர்" (குறள்.159)*

என்ற குறட்பாவழி அறியமுடிகிறது.

கொன்றைவேந்தன், எந்தக் காரியத்தையும் பொறுமையுடன் செய்யவேண்டும் (கொ.வே.67) என்கிறது. அறநெறிச்சாரம், தன்னை இகழ்பவனையும் பொறுத்தல் வேண்டும். ஏனெனில், தான் இகழப்படுவதற்குக் காரணம் முன்வினைப் பயனே (அறநெறி. 80) என்றும் கூறுகிறது.

வெற்றிவேற்கை, சிறியோர் செய்யும் குற்றங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டும் (வெ.வே.31); ஆனால், சிறியோர்கள் செய்யும் பெரும் குற்றங்களைப் பொறுத்துக்கொள்ளக் கூடாது (பா.32) என்று அறிவுறுத்துகிறது.

ஆசையும் அறியாமையும் விட்டவருக்கு அழகு பொறுமையாகும்; பெண் பொறுமை உடையவளாக இருக்கவேண்டும் (நீதி.வெ.31) என்று நீதிவெண்பா கூறுகின்றது. இல்லற வாழ்வில் ஈடுபடும் பெண்கள் பொறுமையுடன் செயல்பட்டால் இல்லறம் சிறப்படையும் என்பதை நீதிவெண்பாவழி அறியமுடிகிறது.

கடவுள் ஒருவரே உலகத்தில் குற்றமில்லாதவர்; மக்களில் குற்றம் இல்லாதவர் யாரும் இல்லை; மலருக்கு முள் இருக்கிறது; கரும்புக்குச் சக்கை இருக்கிறது; அதுபோல் தீங்கு செய்தல் மனித இயல்பு. பல் நாக்கைக் கடித்துவிட்டது என்று அதனைப் பிடுங்கி எறிபவர் இல்லை; பூப்போன்ற கழலணிந்த அடி நடக்கும்போது நழுவிவிட்டதென்று அதனை வெட்டி எறிவார் இல்லை; ஆகையால், தீயோர் செய்த வெறுக்கத்தக்க செயலைப் பொறுத்தலே அறிவுடையோர் கடமை (நீதி.நூ.அதி.31

பா.5,6,7) என்கிறார் வேதநாயகர். மேலும், தனக்குவமை இல்லாத கடவுள் தீயோர்பாலும் அருள் கொள்வதுபோல் ஒருவன் சினம்கொள்ளாமல் பொறுப்பதே பெருமையாகும் என்கிறார் அவர்.

'பொறுத்தார் பூமியாள்வார்' என்ற வாய்மொழிக்கு ஏற்ப நீதிநூல்கள் அனைத்தும் மக்கள் பொறுமையுடையவர்களாக இருக்கவேண்டும் என வலியுறுத்து கின்றன. தன்னை இகழ்பவனையும் பொறுத்தல் வேண்டும் என்று திருக்குறளும் அறநெறிச்சாரமும் கூறுகின்றன. பிற நீதிநூல்கள் சிறியோர்கள், பெண் எனப் பிரித்துக்காட்டி அவர்களுக்குப் பொறுமை தேவை என்பதை உணர்த்துகின்றன.

### 3.13. அழுக்காறாமை

ஒருவன் பிறர்மீது பொறாமை கொள்ளாதிருத்தலே அழுக்காறாமை எனப்படும். பொறாமை கொள்வதால் ஒருவனுக்குப் பல அழிவுகள் நேரிடும் என்ற அடிப்படையில் 'அழுக்காறாமை' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார் வள்ளுவர். பொறாமை இல்லாமல் ஒருவன் வாழ வேண்டும் (கு.161); ஏனெனில், பொறாமையைத் தவிர வேறுபகை தேவையில்லை (கு.165); அறமும் ஆக்கமும் இல்லாத ஒருவன் பொறாமை கொண்டவனாவான் (கு.163); பொறாமையால் அவனுடைய சுற்றம், உணவு, உடை அனைத்தும் கெடும் (கு.166); திருமகள் அவனைக் கண்டு நீங்கி விடுவாள் (கு.167); பொறாமையினால் பெருமை பெற்றவர் இந்த உலகத்தில் யாரும் இல்லை (கு.170) என்கிறது வள்ளுவம்.

ஆத்திசூடி, 'ஔவியம் பேசேல்'(ஆத்.12) என்கிறது. இதற்கு "நீ ஒருவரிடத்தும் பொறாமை கொண்டு பேசாதே"[30] என்று விளக்கம் தருகிறார் வேங்கடசாமி நாட்டார். கொன்றைவேந்தன், பொறாமை கொண்டு பேசுதல் ஒருவனுடைய ஆக்கத்திற்கு அழிவு (கொ.வே.12) என்று கூறுகிறது. நீதிநெறிவிளக்கம், அகத்தில் பொறாமை கொண்டு ஒருவன் வாழக்கூடாது; அவ்வாறு வாழும் கொடியவனைவிட்டு நீங்கிவிட வேண்டும் (நீதி.நெ.வி.56) என்று அறிவுறுத்துகிறது.

வேதநாயகர், ஒருவன் பிறருடைய வாழ்வைக்கண்டு பொறாமை கொள்ளக் கூடாது (நீதி.நூ.அதி.143. பா.12); உலகத்தில் வாழும் மக்கள் ஒவ்வொருவரும் நலம்

பெற்று வாழும்பொழுது அவற்றைக் கண்டு பொறாமை கொள்பவன் துன்பத்தைப் பெறுவான் (பா.6); உள்ளத்தைத் தீப்போல கவரும் பொறாமைக் குணத்துக்கு இடம், காலம் எதுவும் கிடையாது; அதனால் கடுகளவும் பயன் இல்லை; அறிவினால் குறை உடையவரே பொறாமை கொள்வார் என்கிறார்.

திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் பொறாமை கொள்ளாமல் மக்கள் வாழவேண்டும். அப்போதுதான் துன்பமின்றி நலமுடனும் ஆக்கம் பெற்றும் வாழ வழி கிடைக்கும் என உணர்த்துவதை மேற்சொன்ன கருத்துக்களின்வழி அறியமுடிகிறது.

## 3.14. வெஃகாமையும் கள்ளாமையும்

பிறர் பொருளின்மீது ஆசை கொள்ளும் மனிதன் பல துன்பங்களை அடைகிறான். ஆகையால், ஒருவன் பிறர்பொருளை மனதாலும் நினைத்தல் கூடாது என்பதை உணர்த்தவே 'வெஃகாமை' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார் வள்ளுவர். வெஃகாமை என்பதற்குப் "பிறர்க்குரிய பொருளை வெளவக் கருதாமை"[31] என்று பரிமேலழகர் விளக்கம் தருகிறார். வள்ளுவர், இல்லறவியலில் வெஃகாமை என்னும் அதிகாரத்தில் கூறப்படும் கருத்துக்கள் துறவறவியலில் கூறும் கள்ளாமை என்னும் அதிகாரக் கருத்துக்களுடன் ஒப்பவைத்து எண்ணத்தக்கவை. வெஃகுதல் என்பது பொறாமையின் காரணமாகப் பிறர்பொருளைக் கவர நினைத்தலும் களவு என்பது பிறருடைய பொருளை வறுமை, ஆசை காரணமாகத் திருடுதலும் ஆகும். இவ்விரு அதிகாரங்களும் ஒன்றுக்கொன்று சற்று தொடர்பு உடையதாக இருப்பதால் இரண்டுமே இணைத்து விளக்கப்படுகின்றன.

பிறருடைய பொருளைக் கவர நினைக்கும் ஒருவனின் குடி கெட்டுவிடும்; அவனுக்குக் குற்றம் வந்து சேரும் (கு.171); மேலும், அவனுக்கு அழிவு உண்டாகும் (கு.180) என்கிறது வள்ளுவம். 'மனத்துக்கண் மாசு இலன் ஆதல்' என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கு ஏற்ப மனத்தூய்மையுடன் ஒவ்வொருவரும் இருத்தல் வேண்டும். ஏனெனில், பிறர்பொருளைக் கவர நினைத்தலையும் களவு செய்வதற்குச் சமமாக வள்ளுவர் கருதுகிறார். களவு செய்து வாழ்பவனிடத்தில் அளவு அறிந்து வாழும் ஆற்றல் இல்லை (கு.283); அவனுடைய நெஞ்சில் வஞ்சம் நிலைத்து நிற்கும்

(கு.288); அவன் அப்பொழுதே கெட்டு ஒழிவான் (கு.289); களவு செய்யாமல் வாழ்பவனுக்குத் தேவருலகம் கிட்டும் (கு.290) என்று தம் கருத்தை முன்வைக்கிறார் வள்ளுவர்.

பிறருடைய பொருளைக் கொள்ளையிட நினைத்தல் கூடாது (ஆத்.41) என்று ஆத்திசூடியும் களவு செய்வதை ஒருவன் நீக்கி வாழவேண்டும் (கொ.வே.63) என்று கொன்றைவேந்தனும் அறிவுறுத்துகின்றன.

களவு செய்வதை முற்றும் துறத்தலே துறவிகளுக்குரிய மகாவிரதமாகும் (அருங்.66) என்கிறது அருங்கலச்செப்பு. அதாவது, "நாட்டிலாயினும் காட்டிலாயினும் கிராமத்திலாயினும் நகரத்திலாயினும் விலை மதிக்கத்தக்கதாய் இருந்தாலும் உயிருள்ளதாயிருந்தாலும் அதற்குரியவர் கொடுத்தாலன்றி அதனை எடுத்துக் கொள்ளமாட்டேன்; பிறர் எடுத்துக்கொள்ளவும் உடன்படமாட்டேன்; மனம் மொழி மெய்களால் கள்ளாமையை மேற்கொள்கிறேன் என்று உறுதிமொழி கூறிச் சமண முனிவர் இந்த விரதத்தை மேற்கொள்கின்றார்".[32] இச்சமயம் சார்ந்த அருங்கலச்செப்பும் சமணத்தின் ஐந்து மகாவிரதங்களில் மூன்றாவது விரதமாக களவு செய்யாதிருத்தலைக் கடைப்பிடிக்க வற்புறுத்துகிறது.

காமவெறிக்கு உட்பட்டவர்கள் களவு செய்யத் தயங்கமாட்டார்கள் (நீதி.நெ.வி.79) என்று நீதிநெறிவிளக்கமும் களவு செய்வாரோடு சேரக்கூடாது (உலக.4) என்று உலகநீதியும் கூறுகின்றன.

வேதநாயகர், களவின் வகைகளையும் களவு செய்வதால் ஏற்படும் தீங்குகளையும் கீழ்வருமாறு எடுத்துரைக்கிறார் : அதாவது, ஒருவன் களவு செய்தல் (நீதி.நூ.அதி.16 பா.1); செய்ய நினைத்தல் (பா.2); களவு செய் என்று பிறருக்குச் சொல்லிக் கொடுத்தல் (பா.3); களவு செய்பவனுக்குத் துணைபோதல் (பா.4); பழுதான பொருளை விற்றல்; அளத்தல் (பா.6); நிறுத்தல் முதலியவற்றில் ஏமாற்றிக் கொள்ளையிடுதல் (பா.7); ஆசையால் கூலியைக் குறைத்தல் (பா.8); வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்காமல் இருத்தல் போன்ற அனைத்தையும் களவு என்றே அவர் குறிப்பிடுகிறார். களவு செய்வோன் வேந்தனால் தண்டிக்கப்படுவான்; அவன் நரகம் எய்துவான்; மனைவி மக்களை அவன் நீங்கி விடுவான்; மேலும், களவு

செய்பவன் அயலார் வீட்டிற்குள் நுழையும் பொழுது அச்சம் கொள்ளவேண்டும்; களவுப் பொருளை நுகரும்போது அவன் நாணம் கொள்ளவேண்டும்; அளவுக்கு மீறி வட்டி வாங்குதல், சூதாடிப் பொருள் சேர்த்தல், கள்ளச்சீட்டு வழங்கல், கைக்கூலி வாங்குதல் போன்ற தீய பண்புகள் ஒருவனுக்கு இருத்தல் கூடாது என வாழ்வியலில் பின்பற்றுதற்குரிய கள்ளாமை கோட்பாட்டைப் பற்றி வேதநாயகர் கூறுகிறார்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் களவைப் பெரும் ஒழுக்கக்கேடு என்று கருதி அதனைக் கண்டிக்கின்றன. வட்டி வாங்குதல், கையூட்டுப்பெறுதல் போன்றவற்றையும் களவாகவே கருதுகின்றார் வேதநாயகர்.

3.15. புறங்கூறாமை

புறங்கூறாமை என்பது ஒருவன் இல்லாதபொழுது அவனைப் பற்றி இகழ்ந்து பேசாதிருத்தல் ஆகும். மக்கள் கூடிவாழும் சமுதாயத்தில் ஒருவனிடம் இருக்கும் செல்வம், வலிமை, செழுமை, பதவி, அதிகாரம் போன்றவை மற்றொருவனை அவன்மீது பொறாமை கொள்ளச்செய்யும். இதனால் அவன்மீது அவதூறு கூறவும் பழிக்கவும் கருதி நேர்மை தவறி வேண்டாதவற்றைக் கூற நேரிடும். இதனால் சமுதாயத்தில் ஒற்றுமை நீங்கி அமைதி கெடும். ஒருவரைப் பற்றி ஒருவர் புறங்கூறாமல் அறத்தின்வழி மக்கள் ஒழுகவேண்டும் என்பதற்காக வள்ளுவர் 'புறங்கூறாமை' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார்.

ஒருவன் புறங்கூறுவதைவிடச் சாவது நன்று (கு.181); புறங்கூறுபவன் பிறரால் பழிக்கப்படுவான் (கு.186); அவனுக்குப் பகைமையே ஏற்படும் (கு.187); புறங் கூறுபவனின் நெஞ்சம் அறவழிப்பட்டதாகாது (கு.185) என்கிறது வள்ளுவம். மேலும், புறங்கூறி வாழ்பவன் இந்த உலகத்திற்கே சுமையானவன் என்பதை,

*"அறன்நோக்கி ஆற்றுங்கொல் வையம் புறன்நோக்கிப்*
*புன்சொல் உரைப்பான் பொறை"* *(குறள். 189)*

என்ற குறட்பா விளக்குகிறது. பிறருடைய குற்றத்தையும் தன்னுடைய குற்றமாகக் கருதும் ஒருவனின் நிலைபெற்ற உயிர்வாழ்க்கைக்குத் துன்பம் வராது (கு.190) என்று நவில்கிறார் வள்ளுவர்.

ஆத்திசூடி, 'வஞ்சகம் பேசேல்' (ஆத்.13) என்கிறது. இதற்குக் "கபட வார்த்தைகளைப் பேசாதே"[33] என்று விளக்கம் தருகிறார் வேங்கடசாமி நாட்டார். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாமல் உண்மையைப் பேசவேண்டும் என்பதை இவ்வரி வலியுறுத்துகிறது. கொன்றைவேந்தன், பிறரைப்பற்றிப் புறங்கூறுபவன் எல்லோருக்கும் பகைவனாவான் (கொ.வே.25) என்று கூறுகிறது. மனதில் வஞ்சனை உள்ளவன் பிறருடன் சேராமல் மறைந்து வாழ்வான்; வஞ்சனை இல்லாதவன் எல்லோரிடமும் சேர்ந்து வாழ்வான் (மூது.25) என்கிறது மூதுரை. நேர்மையுடன் வாழும் ஒருவன், பிறருக்குப் பயப்படாமல் சமுதாயத்துடன் ஒன்றுபட்டு வாழ்வான். ஆனால் வஞ்சனை உள்ளவன் எந்த நேரத்தில் தனக்கு அழிவு வரும் எனப் பயந்து மறைந்து வாழ்வான் என்று மூதுரை உணர்த்துகிறது.

வஞ்சனை இல்லாமல் வாழ்பவன் எல்லா வளமும் பெற்று நீண்டநாள் வாழ்வான் (நல்.21) என்கிறது நல்வழி. ஒருவன் புறங்கூறும்போது கேட்போன் நம்புதல் கூடாது (அறநெறி.62); நம்புவானாயின் பலகலைகளைக் கற்ற பண்டிதனாக இருந்தாலும் அவன் அறிவற்றவன் ஆவான் (பா.85) என்கிறது அறநெறிச்சாரம். புறங்கூறாத வனுக்குப் பிறவிப்பிணி ஒழியும் என்று கூறுகிறது இந்நூல். வஞ்சனை கொண்டு சிரித்துப்பேசும் ஒருவனுடைய நட்பு நஞ்சினும் கொடியதாகும் (நீதி.நெ.வி.56) என்று நீதிநெறிவிளக்கமும் மனதில் வஞ்சனை கொண்டு பிறரிடம் பேசும் ஒருவன் நீண்ட ஆயுளைப் பெற்றுத் தொழுநோயால் அல்லலுறுவான் (வி.சி.தொ.Iபா.114) என்று விவேகசிந்தாமணியும் கூறுகின்றன. வஞ்சனை கொண்டவனின் முகமலர்ச்சியும் இன்சொல்லும் கண்டு ஏமாறுதல் கூடாது (நீதி.வெ.23) என்று நீதிவெண்பா வற்புறுத்துகிறது.

வேதநாயகர், பிறர்மீது பழிச்சொற்களை ஒருவன் சொல்லக்கூடாது (நீதி.நூ. அதி.21-பா.1); அவ்வாறு சொன்னால் அவன் ஒழுக்கம் கெட்டவன் ஆவான் (பா.2); புறஞ்சொல்பவன் தொத்துப் பிணியாகிய அம்மைநோய்க்கு ஆளாவான் (பா.4) என்கிறார். மேலும், புறங்கூறுதலைக் கேட்பவன் இல்லையென்றால் சொல்பவனும்

இல்லை (பா.7) என்றும் புறஞ்சொல்பவனைச் சினம்கொண்டு அகற்றுதல் வேண்டும் (பா.8) என்றும் அவர் நவில்கிறார்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் புறங்கூறுதலை ஒரு பெருங்குற்றமாகக் கருதி அதனைக் கண்டிக்கின்றன. விவேகசிந்தாமணியும் வேதநாயகரின் நீதிநூலும் புறங்கூறுபவன் தொழுநோய், அம்மைநோய் இவற்றால் அவதிப்பட்டு அல்லற்படும் போதுதான் அவன் செய்த செயலை உணர்வான் என்று கூறுகின்றன. பிற்கால நீதிநூல்கள் நோய்களையே ஒழுக்கக்கேட்டிற்குத் தண்டனையாகக் கருதுகின்றன என்பது வெளிப்படை.

### 3.16. பயனில சொல்லாமை

பயனில சொல்லாமையாவது கேட்பார்க்கும் தனக்கும் பயன்தராதச்சொற்களை ஒருவன் சொல்லாமை ஆகும். பரிமேலழகர், "அஃதாவது தனக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பம் ஆகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல்லாமை"[34] என்று விளக்கம் தருகிறார். வள்ளுவர், பயனில்லாத சொற்களைப் பேசுபவன் பிறரால் இகழப்படுவான் (கு.191); அவனுக்குத் தீமை உண்டாகும் (கு.192); அவன் மக்களுள் பதர் என்று சொல்லப்படுவான் (கு.196) என்கிறார்.

சான்றோர்கள் பயனில்லாத சொற்களைப் பேசாமல் இருப்பதே நன்று (கு.197); என்றும் மாசற்ற அறிவுடையோர் பயன் நீங்கிய சொற்களை மறந்தும் பேசக்கூடாது (கு.200) என்றும் வலியுறுத்துகிறார் வள்ளுவர்.

ஆத்திசூடி, 'நொய்யவுரையேல்' (ஆத்.75) என்கிறது. "வீண் வார்த்தைகளைப் பேசிக்கொண்டு திரியாதே"[35] என்று இதற்கு விளக்கம் தருகிறார் துரை-தண்டபாணி. பயனில்லாத வார்த்தைகளைப் பேசக்கூடாது (கொ.வே.56) என்று கொன்றை வேந்தனும் திருவற்ற தீயவர்களுடைய பயனில்லாத சொற்களைக் கேட்கக்கூடாது (மூது.9) என்று மூதுரையும் அறிவுறுத்துகின்றன.

தனக்கும் பிறர்க்கும் உறுதி பயக்கும் இனியசொற்களை ஒருவன் பேசவேண்டும் (அருங்.116) என்கிறது அருங்கலச்செப்பு. செவி பெற்றதன் பயன் இன்பம் பயக்கும்படி

உறுதிச்சொற்களைக் கேட்பதற்காகும்; மேலுலக வாழ்வில் ஒருவன் இன்பம் பெற வேண்டுமெனில் வீணான சொற்களை அகற்றி உறுதிச்சொற்களைப் பேசவேண்டும் (அறநெறி.197) என்று அறிநெறிச்சாரம் அறிவுறுத்துகிறது.

பழியைத் தரும் சொற்களை ஒருவன் பேசக்கூடாது (வெ.வே.76) என்று வெற்றிவேற்கையும் பயனற்ற சொற்களைப் பேசாமல் இருப்பதே நல்லநெறிக்கு வழி வகுப்பதாகும் (நீதி.நெ.வி.60) என்று நீதிநெறிவிளக்கமும் வலியுறுத்துகின்றன. மறம்பேசி திரிவாரோடு இணங்கவேண்டாம் (உலக.10:1) என்று உலகநீதி குறிப்பிடுகிறது.

பயனில்லாத சொற்களை ஒருவன் ஒருபொழுதும் பேசக்கூடாது என்று நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன. ஒருவன் பயனுள்ள சொற்களைப் பேசுவதால் வீடுபேற்றை அடையமுடியும் என்று பிற்காலநீதிநூலான அறநெறிச்சாரம் அறிவுறுத்துகின்றது.

### 3.17. தீவினையச்சம்

தீவினை என்பது தீமை விளைவிக்கும் செயலாகும். அதாவது, ஒருவனுடைய சொல்லும் செயலும் பிறருக்கு நன்மை தருவதாக அமையவேண்டும். மாறாகத் தீமைகளைத் தந்தால் அது தீவினையாகும். வள்ளுவர், தீவினைகளைச் செய்வது மட்டும் தீமையாகாது; அத்தீவினைகளைச் செய்ய நினைத்தலும் தீமையாகும் (கு.204) என்று நவில்கிறார். மேலும், தீவினை என்பது தீயினும் கொடியதாகும்; தீயவற்றைக் கண்டு ஒருவன் அஞ்சுதல் வேண்டும் (கு.202); வறியவனாக இருந்தாலும் ஒருவன் தீய செயலைச் செய்யக்கூடாது (கு.205); பிறர்க்குத் துன்பம் தரும் செயல்களையும் செய்பவனாக இருத்தல் கூடாது (கு.206); அவ்வாறு செய்பவன் பெருங்கேட்டினை அடைவான் (கு.210) என்று கூறுகிறார்.

மக்கள் பிறருக்குத் தீமை செய்யும் பழக்கத்தை ஒழித்து வாழவேண்டும் (ஆத்.38) என்கிறது ஆத்திசூடி. மூதுரை, தீயகுணம் உடையவர்களைப் பார்ப்பதும் அவர்களோடு பேசிக்கொண்டு இருப்பதும் தீயசெயலாகும் (மூது.9) என்று

மொழிகின்றது. அறநெறிச்சாரம், தீயசெயல்களைச் செய்யத்தூண்டுபவனுடைய மனம் கல்பட்டு சிதையும் தாமரை போல் சிதைந்துவிடும் (அறநெறி.27:2); அத்தகையவனிடம் பழியும் பாவமும் பெருகும் என்று தீங்கு செய்பவனுக்கு ஏற்படும் தண்டனையைக் குறிப்பிடுகிறது. கல்வியறிவுடைய அறிஞர்கள் தீயோரைக் கண்டு வருத்தம் கொள்வார்கள் (நன்.19) என்கிறது நன்னெறி.

நீதிநெறிவிளக்கம், காட்டுப் பசுவானது ஓர் உயிரை அன்பாக நக்கி மயங்கச் செய்து பின்பு கொன்றுவிடும்; அதுபோல, தீவினைசெய்பவனுக்கு முதலில் இன்பம் தந்தாலும் பின்பு அவனைத் துன்பத்தில் ஆழ்த்திவிடும் (நீதி.நெ.வி.75) என்கிறது. அறிவற்ற புல்லோர் நண்பர்க்கும் தீங்குசெய்வர்; பிறருக்கும் கேடு செய்து துன்புறுத்துவர் (வி.சி.தொ.II பா.99) என்று கூறுகிறது விவேகசிந்தாமணி.

வேதநாயகர், தீயசெயல்களைச் செய்யும் கொடியவர்களை மக்கள் என்று சொல்லக்கூடாது; அவ்வாறு சொல்வது தீய வெடியுப்புப் பொடியினை உயிரை நிலைக்கச் செய்யும் மருந்து என்று கூறுவதற்குச் சமமாகும் (நீதி.நூ.அதி.33-பா.2) என்கிறார். மேலும், பிறர்க்குத் தீங்கு செய்யும் கீழ்மக்களைத் திட்டி அடித்துக் காட்டுக்கு விரட்ட வேண்டும் (பா.5) என்கிறார். நல்லது எது தீயது எது என்று உணராத இவர்களை கொடிய விலங்குகள் வாழும் இடத்திற்கு அனுப்பினால் விலங்குகளோடு விலங்குகளாக வாழ்வார்கள் என இந்நூலாசிரியர் கருதுகிறார் எனலாம்.

### 3.18. ஈகை

சமுதாயத்தில் ஏழை-பணக்காரன், சான்றோன்-பேதை, கல்வியாளன்-முட்டாள் போன்ற ஏற்றத்தாழ்வுகள் காணப்படுகின்றன. இது உலக நியதியும்கூட; இதன் காரணமாகத்தான் சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும் தன்னாலான உதவியைப் பிறருக்குச் செய்து அவர்களுடைய துன்பத்தைப் போக்கவேண்டும் என்ற கருத்து பழங்காலந்தொட்டே இருந்து வருகின்றது. அந்த வகையில் ஈகையின் தன்மையை விளக்கவந்த வள்ளுவர் “ஈகை” என்ற அதிகாரத்தை அமைத்து அதன் சிறப்பை மிகத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார்.

வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை எனத் தெளிவான இலக்கணம் வகுத்து இருக்கின்றார். “செல்வத்துப் பயனே ஈதல்”[36] என்கிறது புறநானூற்றுச் செய்யுள். மணிமேகலை “இவ்வுலகத்தில் வாழ்வோர்க்கு உண்டி கொடுப்பவரே உயிர் கொடுப்பவர்”[37] என உணவு கொடுத்து உதவுபவரின் தன்மையை விளக்குகிறது. வள்ளுவம், ‘ஒருவனுக்கு மேலுலகம் இல்லையென்றாலும் ஈதலே நன்று’ (கு.222) என்றும் ‘வறியாரின் குறிப்பறிந்து கொடுப்பதே உயர்ந்த குடிப்பிறப்பாகும்’ (கு.223) என்றும் கூறுகிறது. மேலும், வறியவரின் கடும்பசியைத் தீர்த்தலே ஒருவன் தனக்கெனப் பிற்காலத்திற்குரிய பொருள் சேர்த்து வைக்கும் இடமாகும் (கு.236) என்று நவில்கிறது.

“சமுதாயக் கட்டுப்பாடு ஒழுங்காக நடைபெறவேண்டுமானால் யாரும் பட்டினியால் பரிதவிக்கக்கூடாது. பட்டினிப் பட்டாளம் நாட்டிலே பெருகுமாயின் பல நல்ல செயல்கள் எல்லாம் நாசமாகிவிடும். பட்டினியால் வாடும் மக்கள் தமது உயிரைக் காத்துக் கொள்ள எதையும் செய்யத் துணிவார்கள். நீதி, நல்லொழுக்கம், அன்பு, பொறுமை முதலிய பண்புகளுக்கெல்லாம் ஆபத்து வந்துவிடும். சமுதாய ஒற்றுமைக்கு இடமே இராது. ஆதலால் பட்டினி இல்லாமல் பாதுகாப்பது இல்லறத்தான் கடமை என்று வள்ளுவர் கூறினர்”[38] என்பர் சாமி. சிதம்பரனார்.

தவம் செய்பவரின் வலிமையும் பசிதீர்ப்பவனின் ஆற்றலுக்குப் பிற்பட்டதாகும்; வறியவர்க்குப் பொருள் கொடுக்க முடியாதநிலையில் சாதலும் மேல் (கு.230) என்று கூறிய வள்ளுவர் அதே அதிகாரத்தில் பிறரிடம் பெற்றுக் கொள்ளுவது நல்லநெறி என்றாலும் அவற்றைக் கொள்ளல் தீமையானது (கு.222) என்றும் கூறுகிறார். பிறர் கொடுப்பதை வாங்கி, உண்டு சோம்பேறியாக வாழாமல் ஒவ்வொருவரும் உழைத்து வாழவேண்டும் என்பது அவரது விருப்பம்.

வள்ளுவர், ஈகையையும் ஒப்புரவறிதலையும் அடுத்தடுத்து வைத்துள்ளார். இவை இரண்டும் உதவி செய்யும் நெறி என்றாலும் வறியவர்க்கு ஈவது ‘ஈகை’ என்றும் தேவைக்கு ஏற்ற அளவு செய்யும் உதவி ‘ஒப்புரவறிதல்’ என்றும் கூறலாம். வள்ளுவர், ‘ஊருணி நீர்நிறைந்தற்றே’ (கு.215) ‘பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால்’ (கு.216)

'மருந்தாகித் தப்பா மரம்' (கு.217) போன்றவற்றைப் பொருட்செல்வத்தை அளிக்கும் கொடையாளனுக்கு உவமையாகக் கூறுகிறார். இந்த உவமைகளால் ஒவ்வொரு தனிமனிதனும் தன்னுடைய உழைப்பால் கிடைத்த ஊதியத்தைச் சமுதாயத்திற்குப் பயன்படச்செய்தல் வேண்டும்; பிறனுடைய வறுமையைப் போக்கி இன்பம் பெறச் செய்யவேண்டும் என்பது வள்ளுவர் அவா எனக் கருதலாம்.

ஆத்திசூடியில், 'இயல்வது கரவேல்' (ஆத்.பா.3) 'ஈவது விலக்கேல்' (பா.4) 'ஐயமிட்டுண்' (பா.9) 'தானமது விரும்பு' (பா.56) என ஈதல் பற்றிப் போற்றி உரைக்கிறார் ஔவையார். ஆனால் அவரே 'ஏற்பது இகழ்ச்சி' (பா.8) என்று குறிப்பிடுகின்றார். ஈதல் என்பது சிறந்த அறம்தான். உலகில் வாழும் எல்லோரும் ஈதல் அறத்தை மேற்கொள்ள விரும்பும்போது ஒருசாரார் மட்டும் உழைக்காமல் பிறரிடம் ஏற்று வாழ்வதை மேற்கொள்ளக்கூடாது என்பதற்காக 'ஏற்பது இகழ்ச்சி' என்று ஔவையார் கூறியிருக்கின்றார் எனலாம்.

கொன்றைவேந்தன், உன்னிடத்தில் பொருள் இருக்குமானால் பிறருக்குக் கொடுத்து 'உண்' (கொ.வே.34) என்கிறது. தனக்கே உண்ண வழியில்லாத பொழுது ஒருவன் பிறர்க்கு ஈவது முடியாத செயலாகும். அதனால் 'தனக்கு மிஞ்சித்தான் தானமும் தருமமும்' என்னும் ஆன்றோர் வாக்கிற்கு ஏற்ப ஔவையார் அறிவுறுத்துவதை அறியமுடிகிறது. மேலும், வறியவர்களுக்கு ஈயாத பொருளைத் தீயோர் அபகரித்துச் செல்வர் (கொ.வே.4) என்று கூறுகிறார் ஔவையார்.

மூதுரை, நற்குணமுடையவருக்குச் செய்த உதவியானது எப்பொழுதும் அழியாது. நற்குணம் இல்லாதவனுக்குச் செய்த உதவியானது செய்தவனுக்கே துன்பத்தைக் கொடுக்கும் (மூது.2) என்று ஈவதால் ஏற்படும் தீங்கினைக் கூறுகிறது. நல்வழி, ஈவதால் ஒருவன் நோயின்றி வாழ்வதோடு அவனுக்கு வீடுபேறு உண்டாகும். இந்த உலகத்தில் சாதி என்று சொல்லப்படுவது இரண்டாகும். அதாவது, பிறர்க்குக் கொடுத்து வாழ்பவர் உயர்ந்த சாதியாவார்; கொடுக்காமல் வாழ்பவர் தாழ்ந்த சாதியாவார் (நல்.2) என்று ஈபவரின் தன்மையைக் கூறுகிறது. அருங்கலச்செப்பு, உணவு, மருந்து, இருப்பிடம் போன்றவற்றைப் பிறர்க்குக் கொடுத்து உதவியும்

(அருங்.134)துறந்தார்க்கு ஈந்தும் வாழும் இல்லறத்தானின் நற்செயல் தீவினையைத் துடைக்கும் (பா.139); மேலும், பிறருக்கு அன்பின்றித் தருதலும் காலம் தாழ்த்தித் தருதலும் கூடாது (பா.142); காலந்தாழ்த்தாமல் விரைவாக ஈதலே சிறந்த அறம் (பா.22) என வலியுறுத்துகிறது.

அறநெறிச்சாரம், பிறருக்கு ஈவதால் பிறவிப்பிணி ஒழியும்; ஆயின், தீயோர்க்கு ஈவதால் நரகம் கிட்டும்; இரப்பவர்களுக்கு ஈதல் வேண்டும் (அறநெறி.175) என்கிறது. மேலும், உணவுக்கொடையே உயர்ந்த கொடையாகும் (பா.177); பிறருக்கு ஈவதால் புகழும் மறுமைப்பயனும் எய்தமுடியும் என்றும் ஈவதற்குக் காரணமாயிருந்த இரப்பார் போன்ற கொடையாளர் உலகில் இல்லை (பா.178) என்றும் கூறுகிறது. சுற்றத்தார் வறுமையுற்றபொழுது அவர்களுக்குக் கொடுத்து வாழவேண்டும் என்று அறிவுறுத்துகிறது வெற்றிவேற்கை. மேலும், இரப்பவர்க்கு ஈவது பொருளுடையவரின் கடமையாகும் (வெ.வே.8) என்றும் இந்நூல் கருதுகிறது.

நன்னெறி, ஒருவன் ஈகை செய்யும்பொழுது வறுமையுற்றாலும் அவனுடைய பிள்ளைகள் பிறருக்குக் கொடுத்துண்டு வாழ்வார்கள் (நன்.17)என்கிறது. ஈயாதவனின் செல்வத்தைவிட ஈபவனின் வறுமையே மேல் என்றும் ஈகை குணமுடையவனை எவரும் பழிக்கமாட்டார்கள் (நீதி.நெ.வி.67)என்றும் சிறப்பிக்கிறது நீதிநெறிவிளக்கம்.

பிறருக்குக் கொடுத்து உண்ணாதவன் பாவி (வி.சி.பா.21) என்றும் அத்தகையவன் கையைச் சுடுகாட்டில் எரிக்கவேண்டும் (பா.29) என்கிறது விவேகசிந்தாமணி. இரப்பவர்க்குக் கொடுத்து வாழவேண்டும். அதுவே பிற்காலத்துக்குச் சேர்த்து வைக்கும் பொருளாகும்; அதனால் பேரின்ப வாழ்வு உண்டாகும் என்றும் விளக்குகிறது இந்நூல். ஒருவன் ஈயாவிட்டாலும் ஈவோரைத் தடுத்து நிறுத்தக்கூடாது (நீதி.வெ.59) எனக் கூறுகிறது நீதிவெண்பா.

ஒருவன் வறுமையினால் வாடும் எளியவர்களுக்கு ஈதல் வேண்டும்; அறிவுடைய ஏழை மக்கள் தங்கும் இடத்தைத் தேடிச்சென்று ஈயவேண்டும்; உணவு, உடை, இருப்பிடம் இல்லாமல் வருந்துகின்றவர்களுக்குக் குறிப்பறிந்து கொடுக்கவேண்டும்;

இல்லையெனில், அவன் மக்களுள் பதர் ஆவான் (நீதி.நூ.அதி.38 பா.2) என்று கருதுகிறார் வேதநாயகர்.

திருக்குறளும் ஆத்திசூடியும் செல்வர்கள் 'பிறருக்குக் கொடுத்து வாழவேண்டும்' என்றும், வறியவர்கள் பிறரிடம் சென்று 'இரந்து பிழைக்கக் கூடாது' என்றும் அறிவுறுத்துகின்றன. இதிலிருந்து வறியவர்கள் உழைத்து வாழவேண்டும் என்றும் செல்வர்கள் ஈகை செய்து வாழவேண்டும் என்றும் நீதிநூலாசிரியர்கள் உணர்த்துகின்றனர். பிற்கால நீதிநூல்கள் ஈவதால் வீடுபேறு உண்டாகும் என்கின்றன. அருங்கலச்செப்பில் சமண சமயக் கருத்துக்களின் அடிப்படையில் ஈகை பற்றிய கொள்கைகள் காணப்படுகின்றன. வறியார்க்கு ஈதல் வேண்டும் என்று வள்ளுவர் கூற வேதநாயகர், ஒவ்வொருவருக்கும் என்னென்ன தேவை எனக் குறிப்பறிந்து கொடுக்கவேண்டும் என்கிறார்.

## 3.19. புகழ்

ஒருவனுடைய நல்ல பண்புகளையும் செயல்களையும் அறிந்தவர்கள் பாராட்டுவதே புகழாகும். இப்புகழ் என்றைக்கும் நிலைத்து நிற்கும். பரிமேலழகர், "இல்வாழ்க்கை முதல் ஈகை யீறாகச் சொல்லப்பட்ட இல்லறத்தின் வழுவாதவர்க்கு இம்மை பயனாகி இவ்வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்கும் கீர்த்தி"[39] என்று விளக்கம் தருகிறார். ஒருவன் அறநெறியில் வாழ்ந்து புகழைப் பெறவேண்டும் என்பதைக் கீழ்வருமாறு எடுத்துரைக்கின்றார் வள்ளுவர். ஒருவன் புகழ் அடைய வேண்டுமெனில் வறியவர்க்கு ஈதல் வேண்டும்; ஏனெனில், அப்புகழே உயிர்க்கு ஊதியம் அளிப்பதாகும் (கு.231); இரப்பார்க்கு ஈவதே நிலைத்து நிற்கக்கூடிய புகழாகும் (கு.232) இக்கருத்தை ஒட்டியே முதுமொழிக்காஞ்சி "இரப்போர்க் கீதலின் எய்துஞ் சிறப்பில்லை"[40] என்று கூறுகிறது. புகழ்பெற்றவரை வானுலகமும் போற்றும் (கு.234); ஒருவன் தோன்றினால் புகழோடு தோன்றவேண்டும் (கு.236); ஏனெனில், வாழ்வின் இறுதியில் நிலைத்துநிற்பது புகழாகும்; அத்தகைய புகழைப் பழி உண்டாகாமல்

பார்த்துக்கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர். புகழோடு வாழ்கின்றவரே உயிர் வாழ்கின்றவர் என்பதை,

*"வசைஒழிய வாழ்வாரே வாழ்வார் இசைஒழிய*
*வாழ்வாரே வாழா தவர்"* (*குறள்.240*)

மேற்சொல்லப்பட்ட கருத்துக்களின்வழி ஒருவனுக்கு இயல்பாகப் புகழ் அமைய வேண்டும் என்றும் அறச்செயல்களைச் செய்து அப்புகழைத் தேடி வாழவேண்டும் என்றும் வள்ளுவர் வலியுறுத்துவதை அறியமுடிகிறது.

ஆத்திசூடி, புகழ் உண்டாகக்கூடிய நற்காரியங்களைச் செய்ய மறக்கக் கூடாது (ஆத்.47); புகழ்ந்தாரைப் போற்றி வாழவேண்டும் (பா.81) என்று அறிவுறுத்துகிறது. அறநெறிச்சாரம், ஈவோர்க்கு இம்மையில் புகழும் மறுமையில் வீடுபேறும் உண்டாகும் (அறநெறி.178) என்று சிறப்பிக்கிறது. புகழாகிய உடம்பை வளர்க்க விரும்புவோர் தன்னிடம் அடைக்கலமாக வந்தவர்க்குத் துன்பம் ஏற்பட்டால் அத்துன்பத்தை உடனே நீக்குவர் (நீதி.நெ.வி.40); ஒருவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளக்கூடாது; ஏனெனில், தற்புகழ்ச்சி ஒருவனை இழிநிலைக்குக் கொண்டு செல்லும் (பா.19) என்று நீதிநெறிவிளக்கம் கூறுகிறது.

விவேகசிந்தாமணி, மனிதனுக்கு இரண்டு உடம்புகள் உள்ளன; உலக இன்பத்தைத் தரும் பூத உடம்பு; மற்றொன்று என்றும் அழியாத புகழுடம்பு. பூத உடம்பு அழிவதற்கு முன்பு நிலைத்து நிற்கக்கூடிய புகழுடம்பைத் தேடிக்கொள்ள இந்நூலாசிரியர் வழிவகுக்கிறார் (வி.சி.தொ.I பா.120) என்பதை உணரமுடிகிறது. நீதிவெண்பா, தன்னுடைய நிலையில் இருந்து ஒருவன் தவறுதல் கூடாது; தவறினால் புகழ் கிடைக்காது (நீதி.வெ.28) என்று கூறுகிறது.

ஒருவனுடைய புகழைப் பிறர் வாயாரப் புகழவேண்டும்; தன்னைத் தானே புகழும் தற்புகழ்ச்சி கூடாது என்கிறார் வேதநாயகர். தற்புகழ்ச்சி கொள்ளும் ஒருவனின் செயலை நகைப்புக்கு இடமாகக் கருதுகிறார் அவர். அதாவது, பல்லக்கின்மேல் செல்வோன் ஆட்கள் இல்லாமல் தன்தோளினால் தன்னையே சுமத்தல் (நீதி.நூ.அதி.36,பா.3) குளிக்க நினைத்துச் சேற்றில் மூழ்குதல்,

விளக்கைத் தூண்ட விரும்பி, அதை ஊதி அணைத்தல் (பா.7) போன்ற செயல்களுக்குச் சமமாகக் கருதுகிறார். தற்புகழ்ச்சி கொள்பவனின் பழியை உலகத்தார் அனைவரும் எடுத்துரைப்பர். ஒருவன் இல்லாத இடத்தில் புகழ்ந்து பேசவேண்டும்; அவனை நேரில் புகழ்வது திட்டுவதற்குச் சமமாகும் (பா.2) என்கிறார் வேதநாயகர்.

இந்த உலகத்தில் தோன்றும் ஒருவன் புகழோடு வாழவேண்டும்; தற்புகழ்ச்சி உடையவனாக இல்லாமல் பிறர் புகழுமாறு இருத்தல் வேண்டும் என்று நீதிநூல்கள் விளக்குகின்றன.

## 3.20. முடிவுரை

மனிதனின் ஒழுக்கம், நேர்மை, வாழ்வின் நோக்கம் போன்றவை செம்மையுற திகழவேண்டுமெனில் நீதிமுறைகளைப் பின்பற்றுவது அவசியமானதாகும். வள்ளுவர் காலந்தொட்டு இன்றுவரை தமிழ்நாட்டில் நீதிநூல்கள் தோன்றாத இடைவெளிக் காலமே இல்லை. ஒவ்வொரு நூற்றாண்டிலும் நீதிநூல்கள் தோன்றி மக்களுக்கு வேண்டிய அறக்கருத்துக்களை எடுத்துரைக்கின்றன. அந்த வகையில் சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவரும் அறநெறியை மேற்கொண்டு உயரவேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன் திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் தோன்றியிருக்கின்றன.

வள்ளுவரும் பிற்கால நீதிநூலாசிரியர்களும் மனிதநேயம், கொடைத்தன்மை, ஈகை பற்றிய சிந்தனைகளை மனிதனுக்குத் தூண்டியுள்ளனர். அறம் செய்வதனையே மனித குலம் முழுமூச்சாகக் கொள்ளவேண்டும் என்பதையே நீதிநூல்கள் வற்புறுத்திக் காட்டியுள்ளன.

நீதிநூல்கள் காலத்தால் அழியாத நீதிகளை எடுத்துக்காட்டி இனிவரும் சந்ததியினருக்கும் அடையாளம் காட்டி நல்வழிப்படுத்தச் செய்கின்றன. மனிதன் ஏதோ பிறந்தோம், வளர்ந்தோம் என்று இல்லாமல் தாம் வாழும் குறைந்த வாழ்நாளில் அறத்தை மேற்கொள்ள அவை வற்புறுத்துகின்றன. 'மனிதமனம் மாசு இல்லாமல்

இருத்தலே அறம்' என்று நீதிநூல்கள் கருதுகின்றன. எனவே ஒருவனுடைய எண்ணம், சொல், செயல் என்ற மூன்றிலும் தூய்மை வேண்டும் என்பதைச் சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவரும் உணரும்படி வலியுறுத்துகின்றன. நீதி நூலாசிரியர்கள் தம் காலத்து வாழ்க்கையையும் எதிர்கால வாழ்க்கையையும் மனதில் கொண்டு வேண்டியவற்றை விரித்தும் வேண்டாதவற்றை விலக்கியும் நீதிநூல்களைப் படைத்துள்ளார்கள். பிற்காலத்தில் தோன்றிய நீதிநூலாசிரியர்கள் தங்கள் சமயம் சார்ந்த அறங்கள் சிலவற்றை வலியுறுத்தினாலும் அது சமுதாயத்தில் உள்ள அனைவருக்கும் பயன்படத்தக்க வகையில் குறிப்பிட்டிருப்பது அவர்கள் சமுதாய மக்களுக்குச் செய்த அறக்கொடையாகும் என்பதை அறியமுடிகிறது.

வள்ளுவர், அறக்கொள்கையைத் தனிமனிதனுக்கே உரியதாக வலியுறுத்து கிறார். அதாவது, தனிமனித நலமே சமுதாய நலம் என்பதை உணர்ந்து இல்லற வாழ்வில் ஒருவன் அன்பு, விருந்தோம்பல், செய்ந்நன்றியறிதல், ஈகை போன்ற பண்புகளை அடிப்படையாகக் கொண்டு பல்லுயிர்களுக்கும் பகுத்துண்டு வாழும் வாழ்க்கையை விரும்புகின்றார். பிற்கால நீதிநூலாசிரியர்களும் இதனை ஒட்டியே தம் கருத்துக்களைக் கூறியுள்ளனர்.

இந்த உலகத்தில் பிறந்த ஒவ்வொருவரும் திருமணம் புரிந்து குடும்பமாக வாழ்வதே இல்லறமாகும். வள்ளுவர், இல்லறத்தின் அங்கமாகத் திகழும் கணவன், மனைவி பண்புகளையும் இயல்புகளையும் கூற மறக்கவில்லை; இல்லற வாழ்வில் கணவன் மனைவி ஒற்றுமையுடன் வாழ வள்ளுவம் வழி வகுக்கிறது. இல்லறவாழ்வின் சிறப்பிற்குக் 'கணவனே அடிப்படை' என்றும், அவனுடைய பெருமைக்கு 'மனைவியின் மாண்பே' காரணம் என்றும் வள்ளுவர் விளக்கியுள்ளார்.

ஒருவன் ஈட்டிய பொருளை அவன் மட்டும் உண்டு வாழாமல் பிறருக்கும் பகுத்துண்டு வாழவேண்டும் என்கிறார் வள்ளுவர். தனித்து உண்பவனின் சுயநலத்தைக் கண்டிக்கிறது நீதிவெண்பா.

திருக்குறள், சமுதாயத்திற்குக் கேடுவிளைவிக்கும் கற்பில்லாதப் பெண்ணை வரைவில் மகளிராகக் கருதுகிறது. நீதிநெறிவிளக்கம், கற்பற்ற குலமகளிரைவிட பொதுமகளிரே சிறந்தவர் என்கிறது.

கணவன் இல்லாமல் பெண் அலங்கரித்துக் கொள்வதிலும் வெளியில் செல்வதிலும் எந்த நீதிநூலுக்கும் உடன்பாடில்லை.

திருக்குறள், 'மனைவிக்குக் கணவனே தெய்வம்' என்று கூற, பெண்ணின் பெருமை பேசிய வேதநாயகர், கற்புடைய பெண்கள் பிற பெண்களுக்கு எல்லாம் தெய்வமாவார் என்று குறிப்பிடுகின்றார்.

வள்ளுவர், 'பெண்ணின் பெருந்தக்க யாவுள' 'பெய்யென பெய்யும் மழை' எனக் கூறுவதன்வழிப் பெண்ணை உயர்த்திக் காட்டியுள்ளார்.

திருக்குறள், நல்ல மக்களைப் பெறுவதற்கு முன்வினையே காரணம் என்கிறது. இதன்வழி வள்ளுவருக்கு மறுபிறவியின்மீது நம்பிக்கை உண்டு என அறியமுடிகிறது. பெற்றோர்க்குப் பெருமை சேர்ப்பதே பிள்ளைகளின் கடமை எனக் குறிப்பிடுகிறது வள்ளுவம். விவேகசிந்தாமணி, பெற்றோர் இறந்தவுடன் பிள்ளைகள் அவர்களுக்கு வேண்டிய ஈமக்கடன்களைச் செய்யவேண்டும் என்ற கருத்தை முன்வைக்கிறது.

ஒருவன் அன்புடன் வாழவேண்டும் என்று வள்ளுவம் பொதுவாக கூற, பிற்கால நீதிநூல்கள் இறைவன், பகைவன், வறியோர், வழிப்போக்கர் மற்றும் நண்பர்கள் அனைவரிடத்தும் அன்பு செலுத்தவேண்டும் என்று பட்டியலிடுகின்றன.

திருக்குறள், வீட்டிற்கு வரும் விருந்தினர்களை முகமலர்ச்சியுடன் உபசரிக்க வேண்டும் என்று கூறுகிறது. பிற்கால நீதிநூல்கள் விருந்து அளிக்காதவனை விலங்கு, பதர் என்று சாடுகின்றன.

இன்சொல் பேசுவது ஈகையைவிடச் சிறந்ததாகும் என்று திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் விளக்குகின்றன. ஒருவன் பேசும் கடுஞ்சொல்லானது அவனை மரணத்திற்கே அழைத்துச் செல்லும் என்று கூறுகிறது நீதிவெண்பா.

வள்ளுவம், ஒருவர் பிறருக்குச் செய்யும் உதவிக்கு இந்த மண்ணுலகமும் விண்ணுலகமும் ஒப்பில்லை என்று கூறுகிறது. பிற்கால நீதிநூல்கள் யார் யாருக்கு உதவி செய்யக்கூடாது; யார் யாருக்கு உதவி செய்யவேண்டும் என்று சுட்டிக் காட்டுகின்றன. மேலும், உதவி செய்யாதவர்களை விலங்கு, பதர் என்று அவை சாடுகின்றன.

சமூகத்தில் வாழும் ஒவ்வொருவரும் இருப்பவர், இல்லாதவர் என்ற பாரபட்சமின்றி நடுவுநிலையோடு வாழ்வதே சிறந்த மானிடப்பண்பு என்பதை நீதிநூல்கள் கூறிச்செல்கின்றன. நடுவுநிலை இல்லாத ஒருவனின் குடி அழிந்து விடும் என்று பிற்கால நீதிநூல்கள் குறிப்பிடுகின்றன.

ஐம்புலன்களையும் ஒருவர் அடக்கி வாழவேண்டும் என்று நீதிநூல்கள் வற்புறுத்துகின்றன. அவ்வாறு வாழ்பவர் மேலுலக வாழ்வைப் பெறுவான் என்று சிறப்பிக்கிறது பிற்கால நீதிநூலான அறநெறிச்சாரம்.

உயிரைவிடச் சிறந்த பண்பான ஒழுக்கம் ஒவ்வொரு மனிதனிடத்தும் இருத்தல் வேண்டும் என்று வள்ளுவம் வலியுறுத்துகிறது. ஒழுக்கம் இல்லாதவன் உயிர்விடுதலே நன்று என்றும் அவன் நரகத்திற்குச் செல்வான் என்றும் பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன.

வள்ளுவம், ஒழுக்கம் உடைய ஒருவன் பிறனுடைய மனைவியைப் பார்க்க மாட்டான் என்கிறது. பிற்கால நீதிநூல்கள், பிறனுடைய மனைவியை விரும்புபவன் கல்வி, செல்வம் இவற்றை இழப்பதோடு நோய்களைப் பெற்றுத் தன்னையே அழித்துக்கொள்வான் என்கின்றன.

இல்லறத்தில் வாழும் ஒவ்வொருவரும் பொறுமையைக் கடைபிடித்து பொறாமையை அகற்றி வாழவேண்டும் என்று நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன. புறம்பேசுதலைப் பெரும் குற்றமாகக் கருதித் திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் வன்மையாகக் கண்டிக்கின்றன. ஒருவன் தீயபண்புகளைக் களைந்து நற்பண்புகளைப் பெற்று வாழவேண்டும் என்று திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும்

வற்புறுத்துகின்றன. பிறர் பொருளைக் கவர மனதாலும் ஒருவன் நினைக்கக்கூடாது என்று நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன.

வள்ளுவம், வறியவரின் கடும்பசியைத் தீர்த்தலே ஈகையாகும் என்று குறிப்பிட்டுள்ளது. பிற்கால நீதிநூல்கள் யார், யாருக்கு எப்பொருளைக் கொடுக்க வேண்டும் என்பதையும் அவர்களின் தேவைக்கு ஏற்றாற்போல் குறிப்பறிந்து கொடுக்க வேண்டும் என்பதையும் காலம் கடக்காமல் கொடுக்கவேண்டும் என்பதையும் சுட்டிக்காட்டியுள்ளன.

உலகத்தில் ஒப்பற்ற பொருளாக அழியாமல் நிலைத்து நிற்பது புகழாகும். ஆகையால், அப்புகழ் நிலைக்கச் செய்யவேண்டுமெனில் அறத்தை மேற்கொண்டு இவ்வுலகத்தில் வாழ்வாங்கு வாழ்பவன் இவ்வுலகில் புகழினைப் பெறுவதோடு 'வானுறையும் தெய்வத்துள் ஒருவனாக வைக்கப்படுவான்' என்று வள்ளுவம் கூறுகிறது. பிற்கால நீதிநூல்களும் அறநெறிகளுடன் இல்வாழ்க்கை நடத்து பவருக்கு மேலுலகத்தில் இடம் உண்டு என்ற கருத்தின் அடிப்படையிலே தங்கள் கருத்துக்களை அமைத்துள்ளன.

இல்லாளோடு கூடி வாழ்ந்து, அவனால் போற்றி நன்மக்களைப் பெறுதல் மட்டுமின்றி, இனியவைக் கூறி, அன்புடன் விருந்தோம்புதலைச் செய்து, வறியவர்களுக்குக் கொடுத்துப் புகழ்பெறவேண்டும் என்று இல்லற வாழ்வை மேம் படுத்துவதற்கான காரணங்களை நீதிநூல்கள் எடுத்துக்காட்டுகின்றன. மேலும், அவ்வாறு வாழும் வாழ்க்கையில் ஒழுக்கத்துடன், பிறனுடைய இல்லாளை விரும்பாமல், பயனற்றச் சொற்களைத் தவிர்த்து, இனிய சொற்களைக் கூறி, பிறர்மீது பொறாமையால் புறங்கூறுதலைத் தவிர்த்து, தீவினைகளைச் செய்வதற்கு அஞ்சி, பொறுமையைக் கடைப்பிடித்து வாழவேண்டும் என்று அறங்களைக் கூறி, அவற்றை கடைப்பிடித்தலின் முறையையும் விளக்கிச் சொல்கின்றன.

## அடிக்குறிப்புக்கள்

1. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.28.
2. காமாட்சி ஸ்ரீனிவாசன், குறள் கூறும் சமுதாயம், பக்.92-93.
3. மு.வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.327.
4. சாமி. சிதம்பரனார், வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், ப.94.
5. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.68.
6. மேலது., ப.71.
7. இரா.வேலு, திருக்குறள் கௌடலீயம் ஒப்பாய்வு, ப.223.
8. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை (களவு : நூற்-22)
9. ந.மு. வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), நீதிநூற்கொத்து மூலமும் உரையும், ப.10.
10. வ.சுப.மாணிக்கம், (உ.ஆ.), நீதிநூல்கள், ப.12.
11. பா.சண்முகப்பிரியா, 'சமண சமயக் கோட்பாடுகளும் சிலப்பதிகாரமும்', தமிழியல் 2001, ஞாலத்தமிழ் பண்பாட்டு ஆய்வு மன்றம், ப.46.
12. தி.சு.பாலசுந்தரம் பிள்ளையவர்கள், (உ.ஆ.), நீதிநெறிவிளக்கம் மூலமும் உரையும், ப.77.
13. சரோஜினி, 'நீதி இலக்கியங்களில் பெண்நீதி', ஆய்வுக்கோவை, தொகுதி-1, 21வது கருத்தரங்கு, ப.358.
14. சரளா இராசகோபாலன், வேதநாயகர் போற்றிய பெண்மை, ப.46.
15. தி.சு. பாலசுந்தரம்பிள்ளை, (உ.ஆ.), முதுமொழிக்காஞ்சி மூலமும் விருத்தியுரையும், ப.40.
16. எஸ்.இராமகிருஷ்ணன், திருக்குறள் - ஒரு சமுதாயப்பார்வை, ப.86.
17. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, (பொருள்-செய்யுளியல்.நூற்.237)
18. மு.வரதராசனார், திருக்குறள் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.338.
19. ச.வே.சுப்பிரமணியன், தொல்காப்பியம் தெளிவுரை, (பொருள்.கற்பு.நூற்.1:3).
20. தண்டபாணி தேசிகர், திருக்குறள் உரைக்களஞ்சியம், (இல்லறவியல்), ப.203.
21. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), கொன்றைவேந்தன் மூலமும் உரையும், ப.20.
22. மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர், இல்லறவியல், ப.115.
23. மேலது., ப.136.

24. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), நீதிநூற்கொத்து மூலமும் உரையும், ப.28.
25. மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர், இல்லறவியல், ப.156.
26. ராஜ்கௌதமன், அறம்/அதிகாரம், ப.169.
27. சாமி. சிதம்பரனார், வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், ப.91.
28. திருக்குறள் உரைக்கொத்து (இல்லறவியல்) காசிமடம், ப.140.
29. விவிலியம், புதிய ஏற்பாடு, லூக்கா. 23:34.
30. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), நீதிநூற்கொத்து மூலமும் உரையும், ப.11.
31. தண்டபாணி தேசிகர், திருக்குறள் உரைக்களஞ்சியம், (இல்லறவியல்), ப.384.
32. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 60.
33. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), ஆத்திசூடி மூலமும் உரையும், ப.13.
34. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.106.
35. துரை-தண்டபாணி, (உ.ஆ.), நீதிநூல்கள், ப.18.
36. புறநானூறு, கழக வெளியீடு, (பா.எ.189. வரி.7).
37. மணிமேகலை, (பாத்திரம் பெற்றக் கதை, பா.எண்.96).
38. சாமி. சிதம்பரனார், வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், ப. 91.
39. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.120.
40. தி.சு.பாலசுந்தரம்பிள்ளை, (உ.ஆ.), முதுமொழிக்காஞ்சி மூலமும் விருத்தியுரையும், ப.66.

# இயல் நான்கு

## திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் துறவறக் கருத்துக்கள்

4.0. முன்னுரை

4.1. துறவு - விளக்கம்

4.1.1. அருளுடைமை

4.1.2. புலால் மறுத்தல்

4.1.3. தவம்

4.1.4. கூடாவொழுக்கம்

4.1.5. வாய்மை

4.1.6. வெகுளாமை

4.1.7. இன்னாசெய்யாமை

4.1.8. கொல்லாமை

4.1.9. நிலையாமை

4.1.10. துறவு

4.1.11. மெய்யுணர்தல்

4.1.12. அவாவறுத்தல்

4.2. ஊழ்

4.3. வீடுபேறு

4.4. முடிவுரை

# இயல் நான்கு

# திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் துறவறக் கருத்துக்கள்

## 4.0. முன்னுரை

உலகத்தில் வாழும் மக்கள் அனைவரும் ஏதாவது ஓர் அறத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்கின்றனர். அந்த அறவாழ்க்கை இல்லறம், துறவறம் எனப் பகுக்கப்படுகின்றது. இல்லறம் என்பது ஓர் ஆண் ஒரு பெண்ணைத் துணையாகக் கொண்டு தான் ஈட்டிய பொருளைப் பிறருடன் பகுத்துண்டு நன்மக்களைப் பெற்று நல்லொழுக்க நெறியில் நின்று வாழ்வதாகும். துறவறம் என்பது இவ்வுலக வாழ்வை ஒருவன் முற்றிலும் துறந்து இறை அருளினை எண்ணி மேற்கொள்ளும் நெறி ஆகும். உலகியல் வாழ்வை ஒதுக்கித் தனித்துத் தன்னுடைய ஆன்ம விடுதலைக்காகப் பாடுபடுபவர்களே துறவிகள் ஆவர். இவர்கள் சமுதாயத்தோடு ஒட்டி வாழாவிட்டாலும் இவர்களும் சமுதாயத்தில் ஓர் அங்கமாகவே இடம்பெறுகின்றனர். இவர்கள் செயல் தனிமனிதப் பயன் கருதும் செயலாக இருந்தாலும் சில சமயங்களில் அது சமுதாயத்திற்கும் பயன் நல்கும் நிலைக்கு இட்டுச்செல்வதும் உண்டு. துறவறத்தை மேற்கொள்ளும் ஒருவனுக்கு வேண்டிய ஒழுகலாறுகளைத் திருவள்ளுவர் 'அருளுடைமை' முதல் 'அவா அறுத்தல்' ஈறாகப் பதிமூன்று அதிகாரங்களில் வகுத்துள்ளார். பிற்கால நீதிநூல்கள் இத்தகைய ஒழுகலாறுகளைத் தொகுத்துக் கூறாமல் ஆங்காங்கே கூறிச் செல்கின்றன. திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் துறவறக் கருத்துக்களை விளக்கி அவற்றின் ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துரைப்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 4.1. துறவு - விளக்கம்

துறவு என்பதற்குத் தமிழ்மொழியகராதி "இல்லறம் நீங்கி நிற்றல், விடுதல்"[1] என விளக்கம் தருகிறது.

*"காமஞ்சான்ற கடைக் கோட்காலை*
*ஏமஞ்சான்ற மக்களொடு துவன்றி*
*அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்*
*சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"*

*(தொல்.பொருள்.கற்பு நூற்.51)*

என்று தொல்காப்பியம் கூறுகிறது. இங்குச் "சிறந்தது பயிற்றல் என்பதைத் 'துறவறம் புரிதல்' எனப் பொருள் கொள்வாரும் வாழ்வின் அரிய செயல்களைச் செய்தல் எனப் பொருள் கொள்வாரும் உண்டு. மணமின்றி வாழும் மாணவநிலையும் மனைவியைத் துறந்து வாழும் துறவுநிலையும் தமிழர் வாழ்வியல் நெறிக்குப் புறம்பானவை"[2] என்று இலக்குவனார் குறிப்பிடுகின்றார். "மாணவநிலை, மனைத்தவநிலை, துறவுநிலை என மூன்று நிலைகள் மட்டுமின்றிக் காடுறை வாழ்க்கை நிலை என (வானப்பிரத்தம்) ஒன்று சேர்ந்து வாழ்க்கையில் நான்கு நிலைகள் ஏற்படுவதாகக் கூறப்படும் கருத்து இந்திய நாட்டில் சிறப்பாக வடமொழி நூல்களில் பயிலப்பட்டு வந்ததேயாகும். வள்ளுவர் இந்நான்கு நிலைகளையும் ஏற்றுக்கொண்டதற்குக் குறிப்பில்லை. வள்ளுவர் மாணவநிலை, காடுறை வாழ்க்கை நிலை ஆகிய இரண்டையும் கூறவில்லை. இல்லறம், துறவறம் என இரண்டே கூறுகிறார்"[3] என்பர் காமாட்சி ஸ்ரீனிவாசன். இல்லற வாழ்வுக்குப் பின்பு மேற்கொள்ளும் துறவினை மட்டும் வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார்.

### 4.1.1. அருளுடைமை

உலகத்தில் உள்ள எல்லா உயிர்களிடத்திலும் காட்டப்படும் கருணை 'அருள்' எனப்படும். பரிமேலழகர் "தொடர்பு பற்றாது இயல்பாக எல்லா உயிர்கள் மேலும் செய்வதாகிய கருணை"[4] என்று விளக்கம் தருகிறார். இல்லறத்திற்கு அடிப்படையாக 'அன்புடைமை' விளங்குவதுபோல, துறவறத்திற்கு 'அருளுடைமை' சிறப்புத் தரும். இதனை உணர்த்துவதற்காகத் துறவறவியலில் முதல் அதிகாரமாக அருளுடைமையை வைத்துள்ளார் வள்ளுவர் எனலாம்.

இவ்வதிகாரத்தில், ஒருவனுக்கு அருட்செல்வமே சிறந்த செல்வமாகும் (கு.241); அருளே ஒருவனுக்குப் பல வழிகளில் துணைபுரியும் (கு.242); இந்த அருளை உடையவர்கள் இருள் நிறைந்த துன்ப உலகத்தில் புகமாட்டார்கள் (கு.243); எனவே, தம்முடைய உயிருக்காக அவர்கள் அஞ்சவேண்டிய தேவையில்லை (கு.244)

என்கிறார் வள்ளுவர். இவ்வுலகில் வாழ்வதற்குப் பொருள் எவ்வளவு இன்றியமையாததோ அதுபோல அருள் அவ்வுலக வாழ்விற்கு மிகவும் அவசியமானது (கு.247); ஒருவன் பொருள் செல்வத்தினை இழந்தால் அதனை மீண்டும் பெற்றுக் கொள்ளலாம்; ஆனால், அருளாகிய செல்வத்தை இழந்தால் மீண்டும் பெறுதல் அரிது என்று வள்ளுவம் கூறுகிறது (கு.248). அருளில்லாதவன் அறத்தை மேற்கொண்டாலும் அது சிறந்த அறமாகாது என்பதை,

*"தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின்*
*அருளாதான் செய்யும் அறம்" (குறள்.249)*

என்ற குறட்பா விளக்குகிறது. அருளில்லாதவன் தன்னைவிட வலியாரிடம் அஞ்சி நிற்கவேண்டியிருக்கும் என்பதை உணர்த்துகிறார் வள்ளுவர்.

ஒருவன் மனத்தை அடக்கி அருளுடன் வாழ்வதே அறிவுடைமை (அறநெறி.145) என மொழிகிறது அறநெறிச்சாரம். நீதிவெண்பா, பெரியோரின் அன்பு, அறிவு, அருள், பொறுமை போன்றவை மிகுந்த இன்பத்தை அளிக்கும் என்றும் இறைவன் எல்லா உயிர்களிடத்தும் அருள்மிக்கவனாக விளங்குவான் (நீதி.வெ.14) என்றும் நவில்கிறது.

இறைவனுடைய அருளைப்பெற்று ஒருவன் வாழவேண்டும்; இல்லையெனில் அவனுடைய வாழ்வு வேரில்லா பயிருக்குச் சமமாகும் என்கிறார் வேதநாயகர். அதாவது, ஐந்தறிவு கொண்ட விலங்கும், மரம், செடி, கொடி போன்றவையும் பிறருக்கு உதவி செய்து வாழும்; எனவே, ஆறறிவு படைத்த மனிதன் தன்னைப் படைத்துத் தனக்கு எல்லா நலங்களையும் செய்யும் இறைவனைப் போற்றி வாழவேண்டும் (நீதி.நூ.அதி.2, பா.35) என்கிறார் வேதநாயகர்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் அருள் உடைய நெஞ்சத்தாருக்குத் துன்பம் எப்போதும் இல்லை என்று கூறுகின்றன. அறநெறிச்சாரமும் நீதிவெண்பாவும் அருள் உடையவனாக ஒருவன் வாழ்வதே சிறந்த அறிவுடைமை என்கின்றன. இறைவனின் அருள்பெற வேண்டும் என்பதே ஒருவனின் நோக்கமாக இருக்கவேண்டும் என்று 'நீதிநூல்' கூறுகின்றது. இறையருள் என்பது உலகத்தில் படைக்கப்பட்ட அனைத்து உயிர்களிடத்தும் இறைவன் காட்டும் கருணையாகும். அதேபோன்று

மனிதன் தன்னைவிட கீழான சிற்றுயிர்களிடத்தில் காட்டும் கருணை 'மனித அருள்' எனப்படும். இத்தகைய அருளுடையவனாக மனிதன் வாழவேண்டும் என்று நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன.

### 4.1.2. புலால் மறுத்தல்

துறவற வாழ்வை மேற்கொள்ளும் ஒருவன் அருளைப் பெற்று அனைத்து உயிர்களிடத்தும் அன்பு கொண்டு வாழும் இயல்புடையவன். ஆகையால், அவன் ஓர் உயிரைக் கொல்வதால் கிடைக்கும் புலாலை உண்டு வாழக்கூடாது என்பதை உணர்த்தவே 'புலால் மறுத்தல்' என்னும் அதிகாரத்தை வள்ளுவர் அமைத்துள்ளார். கொல்லாமையைச் சிறந்த அறமாக வள்ளுவம் போற்றுவதால் புலால் உண்ணுதலைப் பெரும் குற்றமாகக் கருதுகின்றது.

பிற உயிர்களின் ஊனைத் தின்பவன் அருளுடையவனாக இருக்கமுடியாது (கு.251);ஏனெனில், ஊன் உண்ணுதல் கொலைச்செயலைச் செய்யத் தூண்டுவதாகும் (கு.254); ஆகையால், ஊன் உண்பவன் நரகத்திலிருந்து மீளமுடியாது (கு.255) என்பதைக் குறட்பாக்கள் வழி அறியமுடிகிறது. ஊன் உண்பவர் இல்லையெனில் அவ்வூனை விற்பவரும் இவ்வுலகத்தில் இருக்க முடியாது என்பதை,

*"தினற்பொருட்டால் கொல்லாது உலகுஎனின் யாரும்*
*விலைப்பொருட்டால் ஊன்தருவார் இல்"* *(குறள்.256)*

என்ற குறட்பாவழி வள்ளுவர் விளக்குகிறார். ஊன் என்பது பிற உயிர்களின் புண் என அறியாதவர்கள்தான் அதை உண்பார்கள் (கு.257); ஆனால், அறிவுடைய மக்கள் பிற உயிரின் ஊனை உண்ணமாட்டார்கள் (கு.258) என்கிறார் வள்ளுவர். மேலும், ஆயிரம் வேள்விகளைச் செய்வதைவிட ஓர் உயிரைக் கொன்று தின்னாமல் இருப்பதே சிறப்பு (கு.259) என்று வள்ளுவம் புலால் உண்ணாமையைச் சிறப்பிக்கின்றது.

"வடமொழித் தருமசாத்திர சூத்திரங்கள் விளக்கும் வேள்வி உயிர்பலியிடலை முதன்மையாகக் கொண்டது. அதில் விலங்குகளுடன் நரபலியிடுகின்ற வழக்கமும் இருந்துள்ளது"[5] என்று சோ.ந.கந்தசாமி குறிப்பிட்டுள்ளார். வள்ளுவர் வாழ்ந்த காலத்திலும் இத்தகைய வேள்வி செய்யும் முறை பழக்கத்தில் இருந்திருக்க

வேண்டும். அதனால்தான் இவ்வேள்வியைக் கண்டிப்பதற்குக் கொல்லாமை அறத்தை அவர் வலியுறுத்தியுள்ளார் எனலாம்.

"வள்ளுவர் கூறும் வேள்விப்பயனும் வடமொழிப் பிராமணர்கள் விளக்கும் வேள்விப்பயனும் முரண்பாடு கொள்கின்றன. உயிர்க்கொலை செய்தல் வடமொழி வேள்வி. உயிர்க்குண்டாம் துன்பந்துடைத்தல் வள்ளுவர் வேள்வி"[6] என்று நடேச முதலியார் கூறுகின்றார். வள்ளுவர், உயிர்களைக் கொன்று வேள்வி செய்வதை வன்மையாகக் கண்டிக்கிறார். பிற உயிர்களைக் கொல்லாமலும் அதன் ஊனை உண்ணாமலும் இருப்பவனை எல்லா உயிரும் கைகூப்பித்தொழும் (கு.260) என்பதன் வழி வள்ளுவரது உயிர்களின் உயர்ந்த உள்ளம் பற்றிப் பாராட்டும் திறத்தை அறிய முடிகிறது.

பிற உயிர்களின் உடலைக் கொன்று உண்ணாமல் இருப்பதே நோன்பு (கொ.வே.58) என்று கொன்றைவேந்தன் சிறப்பிக்கிறது. பிற உயிர்களைக் கொன்று உண்ணாதவனுக்குத் துன்பம் எப்பொழுதும் வராது (அறநெறி.101) என்று கூறுகிறது அறநெறிச்சாரம். தனக்குப் புண் ஏற்பட்டால் அவற்றைக் கழுவி மருந்தினைப் போட்டு ஆற்றிக்கொள்ளும் மனிதன், பிறிதொரு உயிரின் சிவந்த புண்ணாகிய இறைச்சியை வறுத்து உண்கிறான். அது பெரும் குற்றத்திற்கு உரியதாகும் என்பதை அறநெறிச்சாரம் :

*"தம்புண் கழுவி மருந்திடுவர் தாம்பிறிதின்*
*செம்புண் வறுத்த வறைதின்பர் அந்தோ*
*நடுநின்(று) உலக நயன்இலா மாந்தர்*
*வடுவன்றோ செய்யும் வழக்கு"* *(அறநெறி.102)*

என்ற பாடல்வழி உணர்த்தி ஊன் உண்ணலைக் கண்டிக்கிறது. பழமொழி நானூறு "துறவறநெறி நின்றார் எக்காலத்தும் புலால் உண்ணல் ஆகாது"[7] என்று துறவி புலால் உண்பதைக் கண்டிக்கிறது.

நீதிநெறிவிளக்கம், தன்னுடைய உடம்பை வளர்ப்பதற்கு ஒருவன் பிற உயிர்களின் ஊனை உண்ணக்கூடாது என்று கூறி வள்ளுவர் கருத்தை வழிமொழிகிறது.

விலங்குகள் மற்றும் சிற்றுயிர்களுக்கும் ஒருவன் துன்பம் செய்யக்கூடாது. ஏனெனில், மக்களைப்போல் பகுத்துணரும் ஆற்றல் அவற்றிற்கு இல்லாவிட்டாலும் இன்ப துன்பத்தை உணரும் தன்மை உண்டு என்கிறார் வேதநாயகர்.பிற உயிர்களைத் துன்புறுத்தி வாழும் ஒருவன் நரகத்தை அடைவான் (நீதி.நூ.அதி.44;பா.1); மேலும், விலங்கினங்களையும் பறவைகளையும் மனிதன் கொன்று உண்பதற்காக ஆண்டவன் படைக்கவில்லை. புலி, சிங்கம், காட்டுப்பன்றிப் போன்றவைகள் மனிதனை உண்ணும்படி தங்களைப் படைத்தான் பரமன் என்று மனிதனைக் கொன்று உண்ணுமானால், மனிதன் என்ன செய்வான்? (பா.7) என்ற கேள்வியை முன்வைத்து, ஊன் உண்பவனைக் கடுமையாகக் கண்டிக்கிறார் வேதநாயகர்.

வள்ளுவர், புலால் உண்ணல் பெரும் பாவத்திற்குரிய செயல்; புலால் உண்ணாமை என்பது துறவு வாழ்க்கை மேற்கொள்ளும் ஒவ்வொருவரும் முக்கியமாகக் கடைபிடிக்க வேண்டிய அறம் என உணர்த்துகிறார். பிற்கால நீதிநூல்கள் புலால் உண்ணாமையைத் துறவறத்தானுக்கு மட்டும் என வரையறுக்காது அனைவருக்கும் பொதுவாகவே கூறிச் செல்கின்றன. பிற உயிர்களின் ஊனை உண்பவன் நரகத்தை அடைவான் என்று அனைத்து நூல்களும் பேசுகின்றன. உயர்ந்த அறிவுபடைத்தவன் மனிதன்; அவன் எதையும் சிந்திக்கத் தக்கவன். இத்தகையவன் தன் உயிர் போல பிற உயிர்களையும் பாதுகாத்து வாழவேண்டும் என நீதிநூல்கள் வற்புறுத்துகின்றன.

### 4.1.3. தவம்

ஒருவன் தனக்கு வரும் துன்பத்தைப் பொறுத்துக்கொண்டும் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமல் இருப்பதும் தவத்தின் அடையாளமாகும் (கு.261) என்கிறார் வள்ளுவர். அதாவது, “மனம் பொறிவழிப் போகாது நிற்றல் பொருட்டு விரதங்களான உண்டி சுருக்கலும் கோடைக்கண் வெயினிலை நிற்றலும் மாரியினும் பனியினும் நீர்நிலை நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு அவற்றான் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்து, பிற உயிர்களை ஓம்புதல்”[8] என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர்.

நண்பரை ஆக்கலும் பகைவரை அழித்தலும் தவத்தால் இயலும் (கு.264) என்கிறது குறட்பா. தவம் செய்பவனே தன்னுடைய கடமையைச் செய்பவனாவான்

(கு.266) என்றும் தவ ஆற்றல் பெற்றவன் எமனையும் வெல்லுதலும் கைகூடும் (கு.269) என்றும் வள்ளுவம் கூறுகிறது. உலகில் செல்வம் இல்லாதவர் பலராக இருப்பதற்குக் காரணம் நோற்பார் சிலராகவும் நோலாதவர் பலராகவும் இருப்பதே என்பதை,

*"இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்*
*சிலர்பலர் நோலா தவர்" (குறள்.270)*

என்ற குறட்பாவழி அறியலாம். எனவே, ஒருவன் ஐம்புலன்களை அடக்கி மனத்தை ஒருநிலைப்படுத்தித் தவம் செய்யவேண்டும் என்று வள்ளுவர் வற்புறுத்துகின்றார்.

சிவத்தைப் பேணின் தவத்திற்கழகு (கொ.வே.28) என்கிறது கொன்றை வேந்தன். மேலும், ஒருவன் செய்யவேண்டிய தவத்தை மறந்தால் அவனைத் துன்பம் பற்றிக்கொள்ளும் (பா.32) என்று அது குறிப்பிடுகிறது.

ஒருவன் பெற்ற செல்வமானது அவன் முற்பிறவியில் செய்த தவத்தின் அளவாக இருக்கும் (மூது.7) என்று மூதுரையும் சிவபெருமானை வழிபட்டுத் தவம் செய்பவனுக்கு எப்பொழுதும் துன்பம் இல்லை (நல்.14) என்று நல்வழியும் கூறுகின்றன. இடுக்கண், ஒழியாத நோய், முதுமை போன்றவை ஒருவனுக்கு வருமாயின், அவன் எல்லாவற்றையும் துறந்து வடதிசை நோக்கி இருத்தலைச் 'சல்லேகனை' (அருங்.145) என்கிறது அருங்கலச்செப்பு.

அறநெறிச்சாரம், தவம் செய்பவரை ஒருவன் மறக்காமல் போற்றிப் புகழ வேண்டும்; புகழாமல் தூற்றுபவன் விலங்கினங்களை விட இழிந்தவன் ஆவான் (அறநெறி.122) என்று கூறுகிறது. மேலும், ஒருவன் ஐம்புலன்களை அடக்கித் தவம் மேற்கொள்ள வேண்டும்; ஈகையும் செய்யவேண்டும்; அவ்வாறு செய்யாதவனின் வாழ்நாள் வீணானதாகும் (பா.129) என்று உணர்த்துகிறது இந்நூல்.

"சமண சமயத்தில் இல்லறத்தான் தானும் அறவழியில் ஒழுகித் துறவறத் தாரையும் நன்கு போற்றவேண்டும் என்னும் முறை ஏற்படுத்தப்பட்டுள்ளது. சமணத் துறவிகளைச் சமண இல்லறத்தாராகிய சாவக நோன்பிகள் மிக்க ஆர்வத்தோடு போற்றி வந்தார்கள். இவ்வாறு போற்றுவதைப் பெரும் புண்ணியமாகக் கருதுவர்"[9] என மயிலை சீனி.வேங்கடசாமி குறிப்பிட்டுள்ளார். சமணசமயக் கொள்கைக்கு ஏற்பவே அறநெறிச்சாரமும் கூறுவதை அறியமுடிகிறது.

ஒருவன், முதுமையில் தவம் செய்வோம் என்று நினைத்துக் கொண்டு உறங்குதல் விதிப்பயனாகும். துறவியர் காலம் கடத்தாமல் தவம் செய்ய வேண்டும் (நீதி.நெ.வி.91) என்று நீதிநெறிவிளக்கம் வற்புறுத்துகிறது. நீதிவெண்பா, தவம் செய்பவர் பொறுமையுடன் இருத்தல் வேண்டும் (நீதி.வெ.6) என்றும் ஈகை செய்பவரைவிட தவம் செய்பவரே உயர்ந்தவராவார் (பா.10) என்றும் கூறுகிறது.

தவம் என்பது உற்றநோய் நோன்றலும் உயிர்க்கு உறுகண் செய்யாமையும் என்று கூறிய வள்ளுவர், தவம் செய்வதால் சில ஆற்றல்களை எய்தமுடியும் என்றும் குறிப்பிடுகின்றார். பிற்கால நீதிநூல்கள் இறைவனை வழிபடுதலைத் தவம் என்கின்றன. வீடுபேறு அடைதல் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு தவம் செய்யப்படுகின்றது எனவும் அவை கூறுகின்றன. மேலும், தவம் செய்வது இந்த உலகத்தில் மீண்டும் பிறக்காமல் இருக்க வழிவகுக்கிறது எனப் பிற்கால நீதிநூல்கள் அனைத்தும் கோடிட்டுக் காட்டுகின்றன. வள்ளுவர், தவம் செய்தால் அடுத்த பிறவியில் செல்வந்தராகப் பிறக்கலாம் என்றும் எமனையே வெல்லமுடியும் என்றும் கூறுகின்றார். வள்ளுவரைப் பொறுத்தவரை இறைவனை அடைவதற்காகத் தவம் செய்வதைவிட எடுக்கும் பிறவியில் துன்பத்தை வெல்வதற்காகத் தவம் செய்ய வேண்டும் என்கிற கருத்து நிலையையே முன்மொழிகிறார் என அறியமுடிகிறது.

### 4.1.4. கூடாவொழுக்கம்

தவம் மேற்கொண்டவன் உலக ஆசைகளைத் துறவாமல், துறந்தவர் போல் வஞ்சித்து வாழ்வது கூடாவொழுக்கம் எனப்படும். கூடாவொழுக்கத்தைக் கடைப்பிடிக்கும் ஒருவனுக்கு ஏற்படும் தீமைகளை வள்ளுவர் கீழ்வருமாறு விளக்குகிறார் :

வஞ்சனை கொண்டவனது பொய் ஒழுக்கத்தைக் கண்டு ஐம்பூதங்களும் சிரிக்கும் (கு.271); உயர்ந்த தவஒழுக்கம் உடையவன் மனத்தில் குற்றம் படியுமானால் அவனுடைய தவக்கோலம் பயனற்றுப்போகும் (கு.272). “தவத்தினர் கூடா வொழுக்கத்தைக் கனவிலும் கருதலாகாது. கருதினால் அவரது வான்போன்ற தோற்றம் பயனற்றுப்போகும். கூடாவொழுக்கம் என்ன கொடிது செய்தோ மென்று தாமே இரங்கும்படி பல துன்பங்களை விளைவிக்கும்”.[10] ஒருவன் தன் மனம் அறிந்து கூடாவொழுக்க நெறியில் ஈடுபடாமல் நீக்குதல் வேண்டும். தவநெறியாளன் தீய

செயல்கள் செய்தலைப் புதரில் மறைந்து, வேடன் பறவைகளை வலைவீசிப் பிடித்தலைப் போன்றது (கு.274) என்று நவில்கிறது வள்ளுவம்.

பசு, புலியின் தோலைப் போர்த்திக்கொண்டு பயிரை மேய்ந்தாற் போன்றது மனத்தைத் தன்வழிப்படுத்தும் வலிமை இல்லாதவனின் தவக்கோலம் (கு.273) என்கிறார் வள்ளுவர். மேலும், பற்றுக்களைத் துறந்தோம் என்று சொல்லிக்கொண்டு, துறவி பொய் நெறியில் ஒழுகினால் துன்பங்கள் பல உண்டாகும் (கு.275); புறத்திலே குன்றி முத்தின் அழகும் அகத்திலே அதன் மூக்கை போல இருளும் கொண்டு வாழ்பவர் இவ்வுலகில் பலர் உள்ளனர் (கு.277) என்கிறார் வள்ளுவர். அதனால் இந்த உலகத்தில் பழிக்கப்படும் ஒழுக்கங்களைத் துறத்தலே சிறந்தது; மழித்தல், நீட்டல் போன்ற புற ஆசாரங்கள் துறவுக்குத் தேவையில்லை(கு.280) என்று கூறுகிறார் வள்ளுவர்.

புறவேடம் கொண்டு ஒருவன் செய்யும் செயல் நகைப்புக்கு உட்பட்டதாகும் என்பதைக் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது அறநெறிச்சாரம் :

*“ஆவரண மின்றி அடுவாளும் ஆனைதேர்*
*மாவரண மின்றி மலைவானும் - தாவில்*
*கழுதை யிலண்டஞ் சுமந்தானும் போலப்*
*பழுதாகும் பாசாண்டி யார்க்கு”        (அறநெறி.63)*

அதாவது, “கேடகமின்றிப் போரில் பகைவரைக் கொல்லும் வாளும், யானை, தேர், குதிரை முதலிய படைகளும் அரணுமின்றிப் போர் செய்யும் வீரன் செயலும், குற்றமற்ற கழுதையில் ஏறிச்சென்றும் சுமையைத் தன் தலையில் தாங்கிச் செல்பவன் செயலும் போல் போலித்துறவிகளுக்கு அவர்கள் மேற்கொண்டுள்ள வேடமும் பயனற்றதாகும்”[11] என்கிறது அறநெறிச்சாரம். தோலாடையும், காவி உடையும், மரவுரி, நூலாடை போன்ற வற்றையும் அணிந்துகொண்டு, தண்டும் காவடியும் கமண்டலமும் குடை, செருப்பு போன்றவற்றைத் தாங்கிக்கொண்டும் பாசாங்கு செய்பவர்களைப் புறவேடம் கொண்டவர்கள் (அறநெறி.63) என்று கூறுகிறது அறநெறிச்சாரம்.

புறத்தில் மட்டும் துறவு வேடம் பூண்டு நடக்கும் துறவிகளின் தவத்தால் எந்தப் பயனும் இல்லை (நீதி.நெ.வி.93) என்கிறது நீதிநெறிவிளக்கம். “தமது

மனமானது தமக்குக் கட்டுப்படாமல் புறத்தே செல்லவிட்டுத் துறந்தவர்போல் காணப்படுவோரின் பொய்த்தவமாகிய போர்வை சட்டையைப் போன்றதும் ஆகாது; ஏனென்றால், அச்சட்டையானது எல்லாப் புலன்களையும் காவாமற்போனாலும் உடம்பாகிய புலனை மட்டுமாவது காக்கும்; ஆனால், இத்தவமாகிய போர்வையோ இவ்வுடம்பாகிய புலனையும் காவாது"[12] எனப்படுகிறது.

இவ்வுலகத்தில் உள்ள பொருள்களின்மீதான ஆசைகளைத் துறப்பதே துறவிகளின் அடிப்படை நோக்கமாகும். அவ்வாறு இருக்கப் பண ஆசை கொண்டு பிறருக்கு ஞானம் போதிப்பது மனத்தூய்மையற்ற ஞானமாகும் (நீதி.நூ.அதி..9: பா.5) என்று நவில்கிறார் வேதநாயகர்.

மனத்தை ஒருமையுடனும் தூய்மையுடனும் வைத்துக்கொள்பவர்களே துறவிகள் என்றும் போலி வேடங்களைக் கொண்டு ஒழுகுபவர் தவம் மேற்கொள்ளும் துறவியர் அல்லர் என்றும் நீதிநூல்கள் கூறுகின்றன.

### 4.1.5. வாய்மை

வாய்மை என்பது உண்மையாகும். பரிமேலழகர் "மெய்யினது தன்மை"[13] என்று வாய்மைக்கு விளக்கம் தருகிறார். ஒருவன் பேசும் சொற்கள் பிறர்க்குத் தீங்கு விளைவனவாக இருத்தல் கூடாது. ஆகையால், வள்ளுவர் ஒருவன் உண்மைபேசி வாழவேண்டும் என்கிறார். உண்மையே அறத்திற்கு அடிப்படையாகும். வள்ளுவர், வாய்மை என்பதற்குப் பிறர்க்குத் தீமை இல்லாத சொற்களைச் சொல்லுதலாகும் என்று இலக்கணம் வகுக்கிறார். ஒருவன் பேசும் பொய்யான சொற்கள் குற்றம் இல்லாத நன்மையைத் தருமானால் வாய்மையாகும் (கு.292) என்கிறது வள்ளுவம். மேலும், உண்மை பேசி வாழ்பவனே உலகத்தாரின் உள்ளங்களில் இருப்பவனாவான் என்றும் அவன் தானம், தவம் செய்வாரைவிட உயர்ந்தவன் என்றும் குறள் கூறுகிறது. (கு.295) பொய்யாமையாகிய அறத்தினை மேற்கொண்டு ஒழுகுபவனே எல்லா அறங்களையும் மேற்கொள்பவனாவான் (கு.297); அகத்து இருளைப் போக்கும் பொய்யாமை விளக்கே சான்றோர்க்கு விளக்காகும் (கு.298) என்கிறது வள்ளுவம்.

மேலும், ஒருவனின் உள்ளத்தூய்மையை அவன் பேசும் உண்மைச் சொற்களால் அறியலாம் என்பதை,

*“புறம்தூய்மை நீரான் அமையும் அகம்தூய்மை*
*வாய்மையால் காணப் படும்”* *(குறள்.298)*

என்ற குறட்பாவழி உணரமுடிகிறது.

அருங்கலச்செப்பு, இல்லறத்தாரும் துறவறத்தாரும் பொய்யாமை என்னும் விரதத்தை மேற்கொள்ளவேண்டும் என்கிறது. அதாவது, பிறர்க்குத் தீமை பயக்கும் இன்னாச்சொற்களைச் பேசாதிருத்தலும் பேசும்படி பிறரைத் தூண்டாதிருத்தலுமே பொய்யாமை என்னும் விரதமாகும் (அருங்.69) என விளக்கம் தருகிறது.

*“குறளை மறைவிரி யில்லிடை வெளவல்*
*புறவுரை பொய்யோலை கேடு”* *(அருங்.70)*

இவற்றால் பொய்யாமை ஒழுக்கம் கெடும் என்று அருங்கலச்செப்பு கூறுகிறது.

“ஒருவர் ஓர் உயிரைக் கொல்லத் துணிவானாயின், அவ்வமயம் பொய் சொல்லியாகிலுங் கொலையினின்றும் அவ்வுயிரைக் காப்பாற்ற வேண்டியது சமணத் துறவியின் கடமையாகும். ஓர் உயிரைக் காப்பாற்றப் பொய்சொல்லுவது வாய்மையினுள் அடங்கும் என்பது சமணரின் கூற்று. இக்காரியத்துக்காக மட்டும் பொய் சொல்லலாமே தவிர மற்றப்படி சமணத் துறவிகள் சிறிதும் பொய்பேசக்கூடாது என்பது சமண சமயக் கொள்கையாகும்”[14] என்கிறார் மயிலை சீனி.வேங்கடசாமி. இக்கூற்றுக்கு ஏற்றாற்போல் அருங்கலச்செப்பு பொய்யாமை என்னும் விரதத்தைத் துறவிகள் கட்டாயம் மேற்கொள்ள வேண்டும் என்று வற்புறுத்துவதை அறியமுடிகிறது.

பொய்யானது என்றைக்கும் மெய்யாகாது (அறநெறி.56); உண்மையை உரைக்கும் மெய்யறிவாளனை ஒவ்வொருவரும் போற்றிப் புகழவேண்டும்; ஆயின் பொய் பேசும் ஒருவனைப் போற்றிப் புகழ்தலால் கேடு உண்டாகும் (அறநெறி.57) என்று கூறிப் பொய்பேசுதலைக் கண்டிக்கிறது அறநெறிச்சாரம்.

நீதிநெறிவிளக்கம், ஒருவன் பேசும் சொற்களில் பொய் என்னும் குற்றம் நிகழாதவாறு காத்து வாழும் நல்வாழ்வே நல்லநெறிக்கு ஏதுவாகும் (நீதி.நெ.வி.60) என்று உரைக்கிறது.

உண்மையைப் பேசுபவன் உயர்வும் புகழும் அடைதலோடு மனிதருள் தேவர்களைப் போன்று விளங்குவான்; பொய் பேசுபவனுக்கு உணவு கிடைக்காது; அறிவுடையோர் அவனைக் கண்ணாலும் பார்க்கமாட்டார்கள் (வி.சி.68) என்கிறது விவேகசிந்தாமணி. இதன்வழி, உண்மையே ஒருவனுக்கு உயர்வு தரக்கூடியது என்று இந்நூல் வற்புறுத்துகிறது.

ஒருவன் தன் நெஞ்சம் அறிய, பொய் வார்த்தைகளைச் சொல்லுதல் கூடாது (உலக.2) என்றும், அவன் இறக்க நேரிடும் சூழலிலும் பொய் சொல்லக்கூடாது (உலக.10) என்றும் உலகநீதி அறிவுறுத்துகிறது. எனவே, உயிரைக் கொடுத்தாயினும் ஒருவன் உண்மையை நிலைநாட்டுதல் வேண்டும் என்று உலகநீதி உணர்த்துவதை அறியமுடிகிறது. பொய்யானது ஒருபொழுதும் உண்மையை வெல்லமுடியாது என்கிறது நீதிவெண்பா (நீதி.வெ.53).

வேதநாயகர், பொய் சொல்வதின் வகைகளை விளக்கி அதனால் ஏற்படும் தீமைகளையும் குறிப்பிட்டுள்ளார். பொய் சொல்லல், பொய் சொல்ல நினைத்தல், பிறரைப் பொய் சொல்லப் பழக்குதல், செய்யமுடியாத செயலைச் செய்து முடிப்பேன் என்று கூறுதல், பொய்மைப் பாராட்டல், தன்னையே புகழ்ந்து கொள்ளல், புறஞ்சொல்லுதல், அளவுக்கு அதிகமாகக் கடன்வாங்குதல், பொய்ச்சான்று கூறுதல் போன்றவை பெரும் பழிதரும் பொய்க் குற்றங்களாகும் என்கிறார் வேதநாயகர் (நீதி.நூ.அதி.15:பா.10). குற்றங்களுக்கு எல்லாம் பிறப்பிடம் பொய் ஆகும்; ஆகையால், பொய் ஒன்றை மட்டும் நீக்கிவிட்டால் தீமைகள் அனைத்தும் நீங்கிவிடும்; பொய் சொல்லி மறைக்கலாமென்று நினைக்கும் தீயவர்கள் பாவங்களைத் தேடிக் கொள்கின்றனர் (பா.2). பொய் பேசுபவதையே தொழிலாகக் கொண்டவன் உண்மையே சொன்னாலும் பிறர் நம்பமாட்டார்கள். மனைவி, மக்கள், உறவினர் யாவரும் பொய் பேசுபவனை இகழ்வர்; எல்லோரும் அவனுடன் பகைகொள்வர் (பா.3); அவனுடைய

பொருள்கள் அழியும்; அவனுக்குத் துன்பம் மிகுதியாக உண்டாகும். ஒருவன் பொய் பேசுதலானது சாவாமையை விரும்பி நஞ்சு உண்பதற்குச் சமமாகும் (பா.4); பொய் பேசுபவன் விலங்கினத்திலும் இழிந்தவனாவான்; பொய், களவு முதலிய தீய செயல்களைச் செய்பவன் பகலைக்கண்டு அஞ்சும் வௌவாலைப் போன்று இடுக்குவழியிற் செல்வான் (பா.7) என்றெல்லாம் அவர் குறிப்பிடுகிறார்.

எல்லாம் உணர்ந்த சான்றோர்க்கு நண்பனாக இருப்பது வாய்மை ஒன்றே; உண்மை பேசுபவருக்கு எந்தக் கேடும் வராது; அவர்கள் ஏழைகளாயிருந்தாலும் தம்மிடம் உள்ளதைப் பிறர்க்குக் கொடுக்க அஞ்சமாட்டார்கள் ; பிறருடைய நன்மைக்காகக் குற்றத்தைக் கூறாமல் இருத்தலே ஒருவனுக்கு நன்மை தரும். பிறர் துன்புறாதபடி நன்மை தருமானால் ஒருவன் பேசும் பொய்யான சொற்களும் குற்றம் ஆகாது (நீதி.நூ.பா.8) என்று கூறுகிறார்.

வள்ளுவரும் வேதநாயகரும் பிறர்க்கு நன்மை தருமானால் பொய் கூறலாம் என்கின்றனர். உலகநீதி எவ்விதச் சூழலிலும் பொய் பேசக்கூடாது என்கிறது.

### 4.1.6. வெகுளாமை

வெகுளாமை என்பது ஒருவன் கோபம் கொள்ளாதிருத்தலாகும். ஒருவனது தீமையான செயல்களுக்கும், அவற்றைச் செய்யத்தூண்டுவதற்கும் காரணமாவது கோபமாகும். அத்தகைய கோபத்தைத் துறவு மேற்கொண்டவன் அகற்றி வாழ வேண்டியதன் அவசியத்தை உணர்த்தவே வள்ளுவர் 'வெகுளாமை' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். சினம் ஒருவனின் அகமலர்ச்சியையும் முகமலர்ச்சியையும் அழித்துவிடும் (கு.304); சினத்தைவிட ஒருவனுக்கு வலிமையான பகை வேறில்லை என்கிறது வள்ளுவம். சினம் தன்னை மட்டுமல்லாது தன்னைச் சேர்ந்தாரையும் கொல்லும் நெருப்புத் தன்மை கொண்டதாகும் என்பதை,

*"சினம்என்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனம்என்னும்*
*ஏமப் புணையைச் சுடும்" (குறள்.306)*

என்ற குறட்பாவழி அறியலாம். சினங்கொள்பவன் இறந்தவனைப் போன்றவனாவான் என வள்ளுவர் எடுத்துரைக்கின்றார். ஒருவன் தனக்குப் பிறர் துன்பம் செய்தாலும்

அவர்மீது சினங்கொள்ளக்கூடாது (கு.308) என்றும் ஒருவன் மனதாலும் சினங்கொள்ள நினைக்கக்கூடாது (கு.309) என்றும் வள்ளுவம் கூறுகிறது. சினத்தை அடியோடு துறந்தவனைத் துறவிக்குச் சமமாகக் கருதும் வள்ளுவர் (கு.310) வெகுளாமையைத் துறவற வாழ்வில் கட்டாயம் கடைப்பிடிக்கவேண்டும் என்று வற்புறுத்துகிறார்.

சினத்தை அடக்கவேண்டும் (ஆத்.2) என்கிறது ஆத்திசூடி. தீராத கோபம் சண்டையாக முடியும் (கொ.வே.40) என்று கோபத்தால் ஏற்படும் தீங்கினைக் கொன்றைவேந்தன் உணர்த்துகிறது.

கயவர்களின் சினமானது கல்லின் பிளவுபோல என்றும் கூடாது; ஆனால், அறிவுடைய சான்றோர்களின் சினம் வில்லைப் பிடித்து அம்பினாலே நீர் பிளக்க எய்த பிளவுபோல தோன்றியபோதே மறைந்துவிடும். கடுஞ்சினத்துக்குரியவர்கள் கயவர்களே. அவர்கள் எதையும் ஆராயாமல் கோபப்படுவர் (மூது.23) என்று மூதுரை மொழிகிறது. சினங்கொள்ளாமல் இருப்பவனுடைய வாழ்வில் எந்தவிதத் துன்பமும் இல்லை (அருங்.178) என்று அருங்கலச்செப்பு கூறுகிறது. அறநெறிச்சாரம், பிறர்மீது சினங்கொள்வதால் ஒருவனுக்கு எந்தப்பயனும் இல்லை என்றும் இந்த உலகத்தில் ஒருவருக்கு உறவினர் அல்லாதவர் என்று எவரும் இல்லை; அதனால் யார்மீதும் ஒருவன் சினங்கொள்ளுதல் கூடாது (அறநெறி.66) என்றும் அறிவுறுத்துகிறது.

பெருகிவரும் வெள்ளத்தை அணைகட்டித் தடுத்தல் அரிதாகும்; ஆனால், கரையை உடைத்து அவ்வெள்ளத்தை வெளியில் விடுதல் எளிது. அதுபோல, சினத்தை அடக்குதல் அரிது; சினங்கொள்ளுதல் எளிது; இத்தகைய அரியதைச் செய்தால் ஒருவனுக்குப் பெருமை (நன்.8) என்று நன்னெறி விளக்கிக் காட்டுகிறது.

சினத்தால் ஏற்படும் தீமையைக் கீழ்வரும் விவேகசிந்தாமணி பாடல் எடுத்துரைக்கிறது :

*"வெகுளியே உயிர்க்கெலாம் விளைக்கும் தீவினை*
*வெகுளியே குணம், தவம், விரதம் மாய்க்குமால்*
*வெகுளியே அறிவினைச் சிதைக்கும் வெம்மைசால்*
*வெகுளியில் கொடும்பகை வேறுஒன்று இல்லையால் !*

*(வி.சி.தொ.II. பா.52)*

சினம், கொள்பவனை அழிப்பதோடு அவனுடைய உறவினர்களையும் அழித்துவிடும் (வி.சி.தொ.II பா.53); அதனால், சினத்தைவிடக் கொடிய பகை ஒருவனுக்கு வேறெதுவும் இல்லை என்கிறது. மேலும், சினத்தால் அழிந்தவர்களை ஒவ்வொருவராகப் பின்வருமாறு பட்டியலிடுகிறது விவேகசிந்தாமணி. விசுவாமித்திர முனிவன் வசிட்டர்மீது சினம் கொண்டதால் தவத்தை இழந்தான்; சந்திரகுலத்து மன்னனான நகுலன் சினம் கொண்டதால் தன்னுடைய வடிவம் இழந்தான்; இந்திரன் தன் சினத்தால் வச்சிராயுதத்தை இழந்து அவமானம் அடைந்தான். இதுபோன்று உலகத்தில் சினங்கொண்டு இறந்தவர் பலகோடியாவர் (பா.54) என்று சினம் கொண்ட அரசர்க்கும் முனிவர்க்கும் ஏற்பட்ட நிலையைச் சுட்டிக்காட்டி, ஒவ்வொருவரும் சினங்கொள்ளாமல் வாழவேண்டியதன் அவசியத்தை இந்நூல் வலியுறுத்துகிறது.

உலகநீதி, சினத்தைத் தேடிக்கொண்டு ஒருவன் துன்பத்தினை அடைய வேண்டாம் (உலக.பா.2); சினங்கொண்டவனின் வாசல்வழியாகப் போகவேண்டாம்(பா.2); முன்கோபக்காரர்களுடன் சேரவேண்டாம் (பா.5) என்றெல்லாம் எச்சரிக்கை செய்கிறது.

வேதநாயகர், சினம் என்ற அதிகாரத்தை அமைத்துச் சினத்தால் ஒருவனுக்கு ஏற்படும் தீங்கினை விளக்கியுள்ளார். சினங்கொள்வதால் ஒருவனின் கண்கள் சிவந்த நிறம் அடையும்; அவன் உடம்பு நடுங்கும்; அவன் நாக்கைப் பல்லால் கடித்துக் கொள்வான்; அவன் உதட்டை மடக்கிக்கொள்வான்; அவனுடைய நெஞ்சும் துடிக்கும்; அவன் உடம்பு முழுவதும் கொப்பளிக்கும் என்றெல்லாம் (நீதி.நூ.அதி.25: பா.3) விளக்கி, இத்தகைய தன்மைகொண்ட சினத்தை ஒருவன் வராமல் காத்துக்கொள்ள வேண்டும் என வேதநாயகர் வற்புறுத்துகிறார்.

மேலும், சினம்கொண்டவன் தன்னுடைய முகத்தைப் பார்த்துத் தானே திகைத்துக் கொள்வான்; இவன் வீட்டைவிட்டு வெளியில் சென்றால் மனைவியும் மக்களும் திருவிழாக்கொண்டாடுவர்; அவன் வீட்டில் இருந்தால் அவன் மக்கள் இழவு கொண்டாடுவர்; அவன் இறந்தால் வீட்டில் மக்கள் திருமணவிழா போன்று மகிழ்ச்சியாக இருப்பர் (நீதி.நூ.அதி.25 பா.5) என்கிறார் வேதநாயகர். சினத்தை அடக்கி வாழத் தெரியாதவன் குடும்பத்தினரின் அன்பையும் உறவையும் இழப்பான்

என்று எடுத்துரைத்து, ஒருவனுடைய அழிவிற்குச் சினமே காரணம் என்பதை உணரச்செய்கிறார் அவர்.

சினம், கொண்டவனை முழுமையாக அழித்துவிடக்கூடியது. ஆகையால், சினம் வராமல் ஒவ்வொருவரும் தன்னைக் காத்துக் கொள்ளவேண்டும் என்று திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் வலியுறுத்துகின்றன. சினத்தைப் போன்ற கொடுமையான பகை வேறொன்றும் இல்லை எனத் திருக்குறளும் விவேகசிந்தாமணியும் வலியுறுத்துகின்றன. மேலும், சினம் தன்னை அழிப்பதோடு, தன்னைச் சார்ந்தவர்களையும் அழித்துச் சுற்றம், நட்பு அனைத்தையும் கெடுத்துவிடும் என்று நீதிநூல்கள் எடுத்துரைக்கின்றன.

பிற்காலத்தில் தோன்றிய நீதிநூல்கள், சினங்கொள்பவன் இறந்தால் அவனுடைய மக்களே மகிழ்ச்சி பெறுவர் என்றும் சினம் ஒருவனுடைய மரணத்திற்கு வழிவகுக்கும் என்றும் கூறுகின்றன. வள்ளுவர், துறவிகள் சினங்கொள்ளக்கூடாது என்று கூறுகிறார். ஆயின், சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும் மற்றொருவர்மீது சினம் கொள்ளாமல் வாழ்ந்தால்தான் ஒற்றுமையும் அமைதியும் அச்சமுதாயத்தில் நிலவமுடியும். எல்லாவற்றையும் துறந்த துறவியர் ஐம்புலன்களின் வழித் தோன்றும் ஆசைகளை வென்றவராகவும் அமைதி தவழும் முகம் உடையவராகவும் இருக்கவேண்டியது அவசியம். மேலும், தவம் செய்பவர்க்குப் பகைவரை அழிக்கவும் நண்பரை ஆக்கவும் முடியும். ஆதலால், அத்தகையோர் பிற மக்கள்மீது சினம்கொண்டால் அழிவு நேரிடும். எனவேதான், வள்ளுவர் துறவியர் சினம்கொள்ளக் கூடாது என்கிறார் எனலாம்.

### 4.1.7. இன்னா செய்யாமை

உலகில் வாழப்பிறந்த உயிர்கள் அனைத்தும் பிறர்க்குத் துன்பம் செய்யாமல் வாழும் வாழ்வே ஒப்பற்ற வாழ்வாகும். பிறரைத் துன்பம் அடையச் செய்துவிட்டு அதனால் ஒருவன் பயன் பெற்று வாழ்வது அறநூல்களில் விலக்கப்பட்ட ஒன்றாகும். வள்ளுவர், ஒருவன் பெருஞ்செல்வத்தைப் பெற்றாலும் பிறர்க்குத் துன்பம் செய்யக்கூடாது; அதுவே, மாசற்றவனின் கொள்கை ஆகும் (கு.311) என்கிறார். மேலும், தனக்குத் துன்பம் செய்தவனுக்கு அவன் நாணும்படியாக ஒருவன் நன்மை

செய்யவேண்டும் (கு.312) என்று கூறிப் பழிக்குப் பழி என்பதை அவர் கண்டிக்கிறார். ஒருவன் பிறருடைய நோயையும் தன்நோய்போல் கருதவேண்டும் என்பதை,

*"அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின்நோய்*
*தம்நோய்போல் போற்றாக் கடை" (குறள்.315)*

என்ற குறள்வழி அறியலாம். தனக்குத் துன்பமாகக் கருதும் செயலை ஒருவன் பிறர்க்குச் செய்யக்கூடாது (கு.318); மனதாலும் நினைக்கக்கூடாது (கு.317); ஏனெனில், ஒருவன் பிறர்க்கு முற்பகலிலே துன்பம் செய்தால் அத்துன்பமானது செய்தவனுக்குப் பிற்பகலிலே வந்து சேரும் (கு.319); ஆகையால், துன்பம் இல்லாமல் வாழ நினைப்பவன் பிறர்க்குத் துன்பம் செய்யக்கூடாது என்று கூறுகிறார் வள்ளுவர்.

ஆத்திசூடி 'கெடுப்பதொழி' (ஆத்.38) என்கிறது. இதற்குப் "பிறர்க்குத் தீமை செய்யும் வழக்கத்தை விட்டுவிட வேண்டும்"[15] என்று துரை-தண்டபாணி விளக்கம் தருகிறார். ஒருவன் முற்பகலிலே பிறர்க்குத் துன்பம் செய்தால் அது பிற்பகலிலே அவனை வந்தடையும் (கொ.வே.71) என்று வள்ளுவர் கருத்தை வழிமொழிகிறது கொன்றைவேந்தன்.பிறர் தனக்குத் துன்பம் செய்தாலும் அறிவுடையோர் அவர்களுக்கு நன்மையே செய்வார்கள் (மூது.30) என்று மூதுரையும் பிறர்க்குத் துன்பம் செய்வதைப் போன்ற அறியாமை வேறொன்றும் இல்லை (அறநெறி.83) என்று அறநெறிச்சாரமும் கூறுகின்றன.மேலும், அறநெறிச்சாரம்,பிறர்க்குத் துன்பம் செய்வதாக எண்ணி ஒருவன் தனக்குத் துன்பத்தைத் தேடிக்கொள்ளக் கூடாது என்றும் அறிவுறுத்துகிறது.

நன்னெறி, அறிவில் சிறந்தோர் தம்மைச் சார்ந்தவர்கள் தாழ்ந்தவராக இருந்தாலும் அவர்களைத் தேடிச்சென்று அவர்தம் துன்பத்தை நீக்குவர் (நன்.16) என்றும் பிறர்க்கு வரும் துன்பத்தைத் தம்முடைய துன்பமாக எண்ணி வருந்துவர் என்றும் கூறிப் பண்புள்ள உள்ளத்தைப் பாராட்டுகிறது. தம்மிடம் அடைக்கலமாக வந்தோரின் துன்பத்தை நீக்க நினைப்பவரே நிலைதளராத புகழ் உடம்பினை வளர்ப்பவராவார் (நீதி.நெ.வி.40) என்று சிறப்பிக்கிறது நீதிநெறிவிளக்கம்.

ஒருவன் தன் உள்ளத்தில் இரக்கம் இல்லாமல் சகுனியைப் போன்று இருந்தால் இம்மையிலும் மறுமையிலும் அவனுக்குத் துன்பச்செயல்களே உண்டாகும்

(வி.சி.தொ.I. பா.119) என்கிறது விவேகசிந்தாமணி. பெரியோர்களுக்கு ஒருவன் எவ்வளவு துன்பம் செய்தாலும் அப்பெரியோரிடமிருந்து நற்பண்புகளே வெளிப்படும் (நீதி.வெ.64) என்று கூறுகிறது நீதிவெண்பா.

"எல்லோராலும் சிறந்தவை எனப் புகழப்படும் பொன், கரும்பு, பால், சந்தனம் என்பவை சிதையுமாறு ஒருவர் வருத்தினாலும் அவை தம் ஒளி, இனிமை, சுவை, மணம் என்பவை மிக்குத் தோன்றும். அவை போன்று, சான்றோரிடத்துத் துன்பம் உண்டாயின் அதனால் நல்ல இயல்பே மிக்குத் தோன்றும்"[16] என்று நீதிவெண்பா கூறுகின்றது.

வேதநாயகர், பிறருக்குத் துன்பம் செய்யும் கீழ்மக்களை அத்துன்பம் கொன்று விடும்; துன்பம் செய்பவனை எல்லோரும் பகைப்பர்; பிறர்க்குத் துன்பம் செய்ய நினைத்தால் அவனிடத்தே அத்துன்பம் வந்து சேரும்; துன்பம் செய்யும் கொடியவர்களை மக்கள் என்று சொல்லக்கூடாது என்கிறார். 'கெடுவான் கேடு நினைப்பான்' என்ற கருத்திற்கு ஏற்ப வேதநாயகர் தம் கருத்தை உணர்த்திச் செல்கிறார்.

கொடிய பூச்சிகள் மற்றும் விலங்குகளான பாம்பு, தேள், புலி, சிங்கம் போன்றவற்றை அடித்துவிரட்டுதல் அவற்றின்மீது உள்ள கொடுந்தன்மையால் ஆகும். அதுபோன்று, பிறர்க்குத் துன்பம் செய்யும் கொடியவர்களை விலங்குகளோடு சேர்த்துக் காட்டுக்கு அனுப்புதல் வேண்டும் (நீதி.நூ.அதி.33 பா.5) என்கிறார் வேதநாயகர்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் ஒருவன் எப்பொழுதும் பிறர்க்குத் துன்பம் செய்ய நினைக்கக்கூடாது என்று வற்புறுத்துகின்றன. மேலும், அறிவுடையோர் எப்பொழுதும் பிறர்க்குத் துன்பம் செய்யமாட்டார்கள் என்றும் அவை கூறிச் செல்கின்றன. வேதநாயகர், துன்பம் செய்வோரை விலங்குக்குச் சமமாகக் கருதி அவர்களைக் காட்டுக்கு அனுப்பவேண்டும் என்ற புதுமையான கருத்தினை முன்வைக்கிறார்.

### 4.1.8. கொல்லாமை

பிற உயிர்களைக் கொலை செய்யாமல் இருத்தலே 'கொல்லாமை' ஆகும். "கொலை செய்வது பாவம். இது மனிதப் பண்பாட்டிற்கு, பகுத்தறிவிற்கு ஒவ்வாத செயல்"[17] என்று அறநூல்கள் உணர்த்துகின்றன. மனிதப்பிறவி மாபெரும் பிறவியாகும். இத்தகைய பிறவியினைக் கொண்ட மனிதன் பிற உயிர்களைக் கொன்றுதான் வாழ வேண்டும் என்றால் அது அறமாகாது (கு.321) என்கிறார் வள்ளுவர். ஒவ்வொருவரும் கொல்லாமை அறத்தை மேற்கொள்ளவேண்டும்; பல்லுயிர்களுக்கும் பகுத்துண்டு வாழ்வதே அறநூலார் தொகுத்த அறங்கள் எல்லாவற்றிலும் தலையாய அறமாகும்; (கு.322); பொய்யாமையைவிட கொல்லாமை நன்று (கு.323); இத்தகையக் கொல்லாமை அறத்தை மேற்கொள்பவனிடத்தில் கூற்றுவனும் நெருங்கமாட்டான் (கு.326); மேலும், உயிர்களிடத்தில் அன்புகாட்டி வாழ்ந்தால் அந்த உயிர்களும் அவனுக்கு உதவியாக வாழும் (கு.260) என்று கூறுகிறார் வள்ளுவர்.

'காப்பது விரதம்' (ஆத்.33) என்று ஆத்திசூடியும் 'நோன்பு என்பது கொன்று தின்னாமை' (கொ.வே.58)என்று கொன்றைவேந்தனும் கூறுகின்றன. இங்குப் பிற உயிர்களைக் கொன்று, அதன் ஊனைத் தின்னாமல் இருப்பதே சிறந்த விரதம் என்று ஔவையார் சுட்டுவதை அறியமுடிகிறது.

பிற உயிர்களைக் கொல்லாதிருத்தலோடு கொலைத் தொழிலுக்குப் பிறரை ஏவாமலும் ஒருவன் வாழவேண்டும் (அருங்.67) என்றும் உயிர்க்கொலை செய்வது மட்டும் கொலை இல்லை; பிற உயிர்களை அறுத்தல், பிற உயிர்களுக்குத் துன்பம் செய்து வருத்துதல்; அவற்றைக் கட்டிப்போட்டு அடைத்து வைத்தல்; அவற்றின்மீது பெருஞ்சுமை ஏற்றுதல் போன்றவையும் கொலை செய்வதற்குச் சமமாகும் (பா.68). எனவே, இத்தகையச் செயல்பாடுகளை மேற்கொள்பவனின் கொல்லாமையாகிய விரதம் அழியும் என்கிறது இந்நூல்.

"சமணத்துறவி கொல்லா நோன்பை அடிப்படையாகக் கொண்டவர். ஆதலால், எறும்பு, புழு, பூச்சி முதலிய சிற்றுயிர்களும் நடக்கும்போது காலினால் மிதிபடாதபடி விழிப்பாகத் தரையைப் பார்த்துச் சமணத்துறவி நடக்கவேண்டும். இது பற்றியே அவர்

இராக்காலங்களில் பிரயாணம் செய்யார். வழியில் உள்ள சிற்றுயிர்கள் காலில் மிதிபடாதபடி ஒதுக்குவதற்காக மயிற்பீலிக் குஞ்சத்தை அவர் கையில் வைத்திருப்பார். இதுவே ‘இரியா சமிதி’ எனப்படும்”.[18] சமண சமயத்தின் இத்தகைய கருத்துக்களை அருங்கலச்செப்பு ஏற்றுக்கொண்டு கொல்லுதலை வன்மையாகக் கண்டிக்கின்றது.

கொல்லுவது தீமையானது என்பதை உணர்ந்து கொல்லாமை அறத்தை மேற்கொள்ள வேண்டும். அவ்வாறு, கொல்லாமை அறத்தை மேற்கொள்பவனுக்குத் துன்பம் இல்லை; அவன் தவம் செய்பவனாகக் கருதப்படுவான்; அத்தகையவன் இன்ப வாழ்வைப் பெறுவான் (அறநெறி.101) என்று கூறுகிறது அறநெறிச்சாரம்.

“எவ்வுயிரையும் கொல்லாமை என்பதைச் சமணமும் பௌத்தமும் கூறினாலும் சமணம் மட்டுமே முழுமையாகக் கூறுகிறது. ஏனெனில், வைதீக மதம் கூறிய வேள்வியில் உயிர்க்கொலையைப் பௌத்தம், சமணம் இருமதங்களுமே மறுக்கின்றன. வைதீகப் பிராமணர் உயிரைக்கொன்று புலால் உண்டு வந்த பழக்கத்தைச் சமணமும் பௌத்தமும் நீக்கிச் சைவ உணவை உண்ண வைத்தன. பௌத்தர்களும் ஊனுண்ணாக் கொள்கையுடையவர். ஆனால், அவர்கள் கொல்லாமையை மட்டும் வற்புறுத்தி ஊன் உண்ணாமையை வற்புறுத்தாது விட்டனர். நாளடைவில் பௌத்தர்கள் ஊன் உண்ண அனுமதிக்கப்பட்டனர். தாங்கள் உயிர்களைக் கொல்லக் கூடாதென்பதேயொழியப் புலாலை விலைக்கு வாங்கி உண்ணலாம் என்பது அவர்கள் கொள்கை. ஆனால், சமணரோ விலை கொடுத்து ஊன் வாங்கித் தின்பதையும் வன்மையாகக் கண்டித்தனர்”.[19] சமண சமயம் சார்ந்த நூலான அறநெறிச்சாரமும் புலால் உண்ணலைக் கண்டித்துள்ளது.

நீதிநெறிவிளக்கம், உலக நன்மையைக் கருதி மழைபெறச் செய்யும் வேள்வியில் உயிர்களைப் பலியிடுதல் மேலானது; ஆனால், சுயநலத்திற்காகப் பிற உயிர்களின் இறைச்சியை உண்பது இழிவானதாகும் (நீதி.நெ.வி.62) என்று கூறுகிறது.

பிற உயிர்களைக் கொல்லுதல் பாவமானது; அதிலும், பசு, அந்தணர், பெண், குழந்தைகள் ஆகியோரைக் கொல்லுதல் பல மடங்கு தீமைதரும் பாவச் செயலாகும் (நீதி.வெ.13) என்று நீதிவெண்பா சொல்கிறது. கொலை செய்பவருடன் ஒருநாளும் சேரக்கூடாது (உலக.3) என்று அறிவுறுத்துகிறது உலகநீதி.

வேதநாயகர், விலங்கினங்களுக்கு இன்பதுன்பத்தை உணரும் தன்மை உண்டு. ஆகையால், இவ்விலங்கினங்களை வருத்துவோர் மீளாநரகத்தை அடைவர் (நீதி.நூ.அதி.17 பா.10). விலங்கினங்களால் வாய்பேசமுடியாது. ஆனால், அவற்றிற்குத் துன்பத்தைத் தாங்கிக் கொள்ளும் தன்மை உண்டு. ஆகையால், இவ்விலங்குகளைக் கொன்றவன் வலிமைமிக்கப் பேயாவான் (அதி.44 பா.5) என்கிறார்.

மேற்கண்ட கருத்துக்களின் வாயிலாகப் பிற உயிர்களைக் கொன்று வாழ்பவர்களைத் திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் வன்மையாகக் கண்டிப்பதை அறியமுடிகிறது. வள்ளுவர், எக்காரணத்திற்காகவும் உயிர்க்கொலையை ஏற்க வில்லை. குமரகுருபரர் சைவ சமயவாதி ஆகையால், வேள்வியில் உயிர்ப்பலியிடலை ஏற்றுக்கொள்கிறார். நீதிவெண்பா, குழந்தை, பெண், அந்தணர், பசு போன்ற தெய்வத் தன்மை வாய்ந்தோரைக் கொல்லக்கூடாது என்று கூறுகிறது. இதன்மூலம், அக்காலச் சமுதாய நிலையை அறிந்துகொள்ள ஏதுவாகிறது. குழந்தை, பெண், அந்தணர் ஆகியோர் அக்காலச் சமுதாயத்தில் காப்பாற்றப்பட வேண்டியவர்களாகக் கருதப்பட்டனர். சங்க இலக்கியமான புறநானூற்றிலும், பின்வந்த சிலப்பதிகாரத்திலும் இவை போன்ற குறிப்புக்கள் காணப்படுகின்றன.

### 4.1.9. நிலையாமை

உலகத்தில் உள்ள அனைத்தும் நிலையற்றவை ஆகும். அவை அழியும் தன்மை கொண்டவை. பிறந்தன யாவும் இறந்தே தீரும். இதனையே 'தோற்றம் உண்டெனில் அழிவும் உண்டு' என்று பலரும் கூறுகின்றனர்.

நிலையாமை என்ற சொல்லுக்கு "நிலைத்த தன்மையற்றது"[20] என்று விளக்கம் தருகிறது க்ரியாவின் தற்காலிகத் தமிழ் அகராதி.

“உலகம் நிலைபெற்று நிற்கும் ஒன்று எனப் பல காலம் மக்கள் நினைத்த துண்டு. ஆனால், உலகம் எப்போதும் மாறும் இயல்பினது அதில் வாழும் மக்களினமும் அவர்கள் தேடும் செல்வங்களும் நிலையற்றவனாகவே இருக்கும் என்பதில் ஐயமேயில்லை. ஆகையால், எது நிலையானது, எது நிலையற்றது என்பதை அறிந்துகொள்ள வேண்டும். முதன் முதலில் மக்கள், இயற்கைப் பொருள்களையே நிலையானவை எனக் கருதிச் சூரியன், சந்திரன் முதலியவைகளைக் கடவுளெனவே கருதினர். பின்னர், இவைகளும் அழியும் தன்மையுடையன எனக் கண்டனர்”[21] என்று குறிப்பிடுகின்றார் மாணிக்கவாசகம்.

வள்ளுவர், ‘நிலையாமை’ என்னும் அதிகாரத்தின்வழி இளமை, யாக்கை, செல்வம் ஆகியவற்றின் நிலையற்ற தன்மையைக் குறிப்பிடுகின்றார். நிலையில்லாத இந்த உலகத்தில் உள்ள செல்வமும் நிலையற்றது (கு.333); ஆகையால், செல்வம் கிடைத்தபோது ஒருவன் காலநேரம் பார்க்காமல் அறச்செயல்களை மேற்கொள்ள வேண்டும் என்று வள்ளுவர் அறிவுறுத்துகிறார். மேலும், செல்வத்தின் சேர்க்கையும் இழப்பும் கூத்தாடும் இடத்தில் கூடும் கூட்டத்தையும், கூத்து முடிந்தபின் கலைந்து போவதையும் ஒத்தது (கு.332) என்று கூறுகிறது. உயிரை உடம்பிலிருந்து பிரிப்பது நாள் என்னும் வாள் (கு.334) ஆகும். எனவே, நாச்செற்று விக்கல் வருவதற்குள் நல்வினைகள் ஆற்ற வேண்டும் (கு.335) என்றும் இவ்வுலகமானது நேற்று இருந்தவன் இன்று இல்லை என்ற பெருமையுடையது (கு.336); எனவே, முதுமை அடையும்வரை காத்திருக்காமல் இளமையிலேயே அறம் செய்யவேண்டும் என்றும் குறட்பாக்கள் தெரிவிக்கின்றன.

தான் தங்கியுள்ள உடம்பை விட்டுப் போகும் உயிர் கூட்டைத் தனியே விட்டுப் பறந்து செல்லும் பறவை போன்றதாகும் (கு.338) என்பதோடு, இறப்பினைத் தூக்கத்திற்கும் பிறப்பினைத் தூங்கிவிழிப்பதற்கும் ஒப்புமையாக்குகிறது (கு.339) குறள். இவற்றுடன் ஒருவன் இவ்வுலகில் நிலையற்ற பொருள்களை நிலையானவை என்று எண்ணாமல், தான் வாழும் நாளில் அறம் செய்து வாழவேண்டும் என்றும் வள்ளுவர் குறட்பாவின்வழி வற்புறுத்துகின்றார்.

சுற்றம், உறவு, பொருள், அழகு, குலம் ஆகிய அனைத்தும் சீதேவி வந்து கூடும்பொழுது அவளுடன் வந்துசேரும்; அவள் நீங்கினால் அவைகளும் நீங்கிப்போகும் (மூது.29) என்று மூதுரையும், உடம்பு நிலையற்றது; செல்வத்தின் வளர்ச்சியும் தேய்வும் ஆற்று வெள்ளத்தினால் ஏற்படும் மேடும் பள்ளமும் போன்றவை (நல்.3) என்று நல்வழியும் விளக்கியுள்ளன.

ஒருவன் வாழ்ந்த நாட்களைக் கணக்கிட முடியும்; ஆனால், அவன் வாழப்போகும் நாட்களைக் கணக்கிட முடியாது; யாருடைய இறப்பு எப்போது நிகழும் என்று சொல்வதற்கில்லை; ஒருவன் இறந்தவுடன் அவனுடைய செல்வம் வேறொருவனின் செல்வமாகிவிடும்; ஆகையால், எமனின் ஆணையின்கீழ் உள்ள அனைவரும் வாழ்நாளில் அறம் செய்தல் வேண்டும் என வற்புறுத்துகிறது அறநெறிச்சாரம் (அறநெறி.18). மேலும், ஒருவன் தேடிய செல்வம் அவன் இறந்தபின்பு வீட்டோடு நின்றுவிடும்; உறவுக்காரர்கள் சுடுகாடுவரை நின்று விடுவர்; உடம்பு சுடுகாட்டில் எரிந்து சாம்பலாகும்; இரவில் படுத்தவன் காலையில் உயிருடன் இருப்பதில்லை; இவ்வுடல் என்னும் ஊர்தி அழியும் காலத்தில் அச்சுமுறியும்; மேலும், எமன் ஒருவனுடைய உயிரை இளம் பருவத்திலேயே கவர்ந்து செல்ல வருதலும் உண்டு. அதனால், மின்னலைப் போல் விரைவில் மறையக்கூடிய இளமைப்பருவம் நிலையுடையது என்று மகிழ்ச்சி கொண்டு முதுமைப் பருவத்தில் நல்வினைகளைச் செய்யலாம் என்று கருதியிருத்தல் அறியாமையாகும்; அதனால், இளமையிலேயே அறம் செய்யவேண்டும்; இந்த உடம்பு ஒரு பக்கம் தைக்கவும் கிழியவுமாக இருக்கும். எமன் குறித்த நாளை ஒழித்து உயிரைக் கொண்டு செல்ல வருவதும் இல்லை; குறித்த நாளுக்கு மேல் உயிர் உடலில் தங்க ஒருநாளும் அனுமதிப்பதும் இல்லை. ஆகையால், உயிரை உடம்பிலிருந்து நீக்குவதற்காக எமன் வருவதற்குமுன் அறங்களைச் செய்து, இறப்பிற்குச் சிறிதும் அஞ்சாமல் இருத்தல் வேண்டும் (பா.19); பயனில்லாத இவ்வுடம்பைக் கொண்டு சோம்பித் திரியாமல் அறம் செய்யவேண்டும் (பா.14). செல்வம், உடம்பு, இளமை போன்ற நிலையற்றவற்றில் பற்று வைக்காமல் தம்

வாழ்நாளில் அறம் செய்து வீடுபேற்றை அடையவேண்டும் என்று முனைப்பாடியார் வற்புறுத்துகிறார்.

நீதிநெறிவிளக்கத்தில், இளமைப்பருவம் நீரில் தோன்றி அழிகின்ற நீர்க்குமிழி போன்றது; செல்வம் நீரில் தோன்றி மறையும் அலைகள் அழிவதைப்போன்றது; உடல் நீரில் எழுதப்பட்ட எழுத்தைப் போன்றது; இளமை, செல்வம், உடல் ஆகிய யாவும் அழியும் பொருள்களாக இருப்பதால் மக்கள் எம்பெருமானை வணங்கி வாழாமல் காலம் கழிப்பது ஏனோ (நீதி.நெ.வி.1) என்று குமரகுருபரர் வருத்தப்படுகிறார்.

தீயநாற்றம் கொண்ட உடம்பானது நல்ல செயலுக்குப் பயன்படாது. உடலை உயிருடன் நிலைபெறுமாறு வைத்துப் பார்த்தால் அவ்வுடலால் எந்தப் பயனும் இல்லை. எனவே, நிலையில்லாதவைகளை நிலையானவை என்று கருதிக்கொண்டு இருப்பதைவிட இறந்துவிடுவதே மேல் (வி.சி.தொ.II:பா.120) என்கிறது விவேக சிந்தாமணி.

நீதிவெண்பா, நீர்த்துளியை நிலையாமைக்கு ஒப்பிடுகிறது. அரச இலையின் நுனியிலிருந்து விழுகின்ற நீர்த்துளியைப்போல், இந்த உயிரானது உடலைவிட்டு நீங்குவதற்கு முன்பு சிவபெருமானுடைய திருவடிகளை வணங்குதல் வேண்டும் (நீதி.வெ.52) என்று அது வற்புறுத்துகின்றது.

வேதநாயகர், நிலையில்லாதப் பொருள்களை நிலையுடையது என்று எண்ணுதல் கூடாது; நாளும், மாதமும், ஆண்டும் நொடிப்பொழுதில் கழிந்துவிடும் ; பொன்போல் பொலியும் இந்த உடம்பானது மலம், சிறுநீர், குருதி, தோல், எலும்பு, சதை, நரம்பு, குடல் போன்றவையால் நிரம்பிக் கிடக்கிறது. ஆடு, மாடு போன்றவை இறந்தால் அவற்றின் தசையும், தோலும், கொம்பும் மக்களுக்குப் பயன்படும்; ஆனால், மனிதன் இறந்த பின் அவன் உடம்பால் எந்தப்பயனும் இல்லை; இந்த நிலையில்லாத உயிரைப் பிடிப்பதற்குக் கால அளவு இல்லாமல், கூற்றுவன் நினைத்தபொழுதெல்லாம் வருவான் ; இறக்கும்நாள் இன்னநாள் என்று கடல் சூழ்ந்த இந்த உலகினர்க்குத் தெரியாது. ஆயுள் நூறாண்டு என்ற உறுதியற்ற சொல் உண்டு என்றாலும் இப்பொழுதோ, மாலையோ, இரவோ என எண்ணும்படியாக மனிதவாழ்வு நிலையற்றது.

யான் என்ற செருக்குக் கொள்ளும் இந்த உடம்பானது, இதற்கு முன்னே எங்கே இருந்தது? இனி எங்கே செல்லும்? என்று வினவுகிறார்.

மேலும், ஒருவனின் உயிர் அகன்றபின்பு மனைவியும் மக்களும் நொடிப்பொழுதில் அவனருகில் நிற்கமாட்டார்கள்; சுற்றத்தார்கள் பிணம் என்று சொல்லிக்கொண்டு அவனைப் புறங்காட்டில் எடுத்தெறிவார்கள்; பறவை மற்றும் விலங்குகளாகிய காக்கை, கழுகு, நாய், நரி போன்ற இனங்கள் கூடி, அவன் உடம்பின்மேல் ஏறிக் குத்திக் கிழித்துச் சண்டையிட்டுத் தின்னும்; அதைத் தடுத்து நிறுத்துவார் யாரும் இல்லை. எனவே, ஒருவனின் உடல் பிணமாயின் அதனை நெருங்குவார் யாரும் இல்லை என்று உடம்பின் நிலையாமைக் குறிப்பிட்டு, செல்வம் நிலைத்து நிற்கும் என்று எண்ணும் கீழோர், பொருளால் பெருங்கேட்டினை அடைந்து துன்பம் பொறுக்காமல் மாண்டொழிவர் என்கிறார் வேதநாயகர். “மண்ணுலகில் செல்வம் சேர்க்க வேண்டாம். இங்கே பூச்சியும் துருவும் அழிவை உண்டாக்கும். திருடர்களும் கண்ணமிடுவார்கள். விண்ணும் மண்ணும் ஒழிந்துபோகும்; என் வார்த்தைகள் ஒருபோதும் ஒழிவதில்லை”[22] என்று யாக்கை செல்வம், உலகம் இவற்றின் நிலையில்லாத் தன்மையை விவிலியம் உணர்த்துகிறது.

இந்த உலகத்தில் வாழும் ஒவ்வொருவரும் நிலையில்லாதவைகளை நிலையானவை என்று எண்ணுதல் கூடாது என்று நீதிநூல்கள் வற்புறுத்துகின்றன. சைவசமயம் சார்ந்த நூல்களான நீதிநெறிவிளக்கமும், நீதிவெண்பாவும் யாக்கை, இளமை, செல்வம் போன்ற நிலையில்லாதவற்றை நீர்க்குமிழிக்கும், தோன்றி மறையும் அலைகளுக்கும் உவமையாகக் கூறி இறைவனை வணங்குதல் வேண்டும் என்கின்றன.

### 4.1.10. துறவு

துறவு என்பது, ஒருவன் ஐந்து புலன்களையும் அடக்கி ஆசைகளை ஒழித்து வாழ்வதாகும். அதாவது, பொருட்கள்மேல் உள்ள ஆசையையும், யான் என்னும் அகப் பற்றினையும் ஒழித்தலே துறவு ஆகும். “அருளுணர்வு மிகுந்து, தன்னலம் தேய்ந்து அழிந்த பின், வாழ்க்கையில் பற்று எல்லாம் அற்றுபோகும். எப்போதும் இல்லறத்தில்

இருந்து, பற்றற்ற வாழ்க்கை வாழ்ந்து கடமையைச் செய்வோர் உண்டு. அவர்களுடைய நிலை அகத்துறவு என்று கூறப்படும். இல்லறத்தை விட்டுத் தன்வீடு, தன்பொருள் என்பவை இல்லாமல் வாழ்வார்கள். அது புறத்துறவு என்று கூறப்படும்".[23] இத்தகைய துறவு வாழ்வை ஒருவன் மேற்கொண்டு பொருள்களின்மேல் உள்ள பற்றுக்களை ஒழித்தல் வேண்டும். ஒருவன் எந்தப் பொருளின்மீதும் பற்றுக்கொள்ளக் கூடாது. ஏனெனில், அப்பொருளால் அவனுக்குத் துன்பம் வராது (கு.341); ஒருவனுக்கு இன்பவாழ்வு வேண்டுமெனில் பற்றுக்களைத் துறக்கவேண்டும் (கு.342) ; யான், எனது என்ற செருக்கில்லாதவன் வானோர்க்கும் உயர்ந்த நிலையை அடைவான் (கு.346) என்று கூறுகிறார் வள்ளுவர்.

"உலகியற்பொருளாகிய துன்பப் பொருள்களை விரும்பாது, பிறவாமையாகிய மெய்ப்பொருளையே விரும்பின் பேரின்பநிலை தானே கிட்டும்"[24] என்று வள்ளுவர் குறிப்பிடுவதாகச் செந்துறைமுத்து விளக்குகிறார். பிறப்புக்குப் பற்றே காரணம்; பற்றறுத்தலே பிறவாப் பேரின்ப உலகத்திற்கு வழி என்பதை மணிமேகலை,

*"பிறந்தோர் உறுவது பெருகிய துன்பம்*
*பிறவார் உறுவது பெரும் பேரின்பம்"*

*(மணி. ஊரலருரைத்தகாதை, 64-65)*

எனும் வரிகளில் விளக்குகிறது.

முற்றும் துறந்தவரே உயர்ந்தவராவார் என்றும், துறக்காதவர் அறியாமையாகிய வலையில் சிக்கித் தவிப்பர் (கு.349) என்றும், பற்றினை முழுமையாக விடுவதற்குப் பற்றற்ற இறைவனைப் பற்றிக்கொள்ளவேண்டும் (கு.350) என்றும் வள்ளுவர் அறிவுறுத்துகின்றார்.

வீடுபெற நில் (ஆத்.101) என்று ஆத்திசூடியும், இந்த உடம்பானது புழுக்கள் நிறைந்த பிணிகளுக்கு இடம் கொடுப்பதாகையால் ஞானிகள் உடம்பின்மீது பற்றுக் கொள்ளமாட்டார்கள் (நல்.7) என்று நல்வழியும் கூறுகின்றன. அருங்கலச்செப்பு, ஐம்புலன்களின்மீது உள்ள ஆசையை ஒழித்துச் சுற்றத்தையும் பொருளையும் முற்றுமாகத் துறந்தவனே முனிவன் (அருங்.11) என்று கூறுகிறது.

அறநெறிச்சாரம், உலகவாழ்வானது துன்பத்திற்குக் காரணமாக அமைவது; இத்தகைய பிறவிப் பிணியை நீக்கி வீடுபேற்றை அடையத் துறவு மேற்கொள்ள வேண்டும்; மேலும், யான், எனது என்னும் பற்றினை ஒழித்து இளமையில் அறம் செய்து வாழவேண்டும் (பா.17); தீவினைகளை அழித்துத் தவம் மேற்கொண்டு வீடுபேற்றை அடைய முயல்பவனே சிறந்த துறவியாவான் என்கிறது (அறநெறி.45). பற்றுக்களைத் துறக்காதவர் பிணி, முதுமை, வறுமை போன்றவற்றைப் பெறுவர்; மனம் துறந்தநிலை அடைந்தவன் காட்டில் வாழும் துறவியாகக் கருதப்படுவான்; இல்லையெனில், நடுவூரில் வாழும் இல்லறத்தாராகக் கருதப்படுவான் (பா.142); துறவிகள் ஐம்புலன்களுக்கு அடிமையாகமாட்டார்கள் (பா.148) ; துறவுநெறியில் நின்று பிறவியை ஒழிப்பர் (பா.174); இம்மையில் புகழையும் மறுமையில் வீடுபேற்றினையும் அடைய நினைப்பர் (பா.190); மறுபிறப்பை விரும்பமாட்டார் (பா.192); எனவே, மறுமைக்குக் காரணமாகிய அறவினைகளைச் செய்வதே வீடுபேற்றை அடையும் வழியாகும் என்று அறநெறிச்சாரம் அறிவுறுத்துகிறது.

“உயிருள்ள பொருளாயிருந்தாலும் சிறியதாயினும் பெரியதாயினும் எல்லாப் பொருள்களையும் துறந்து அவற்றின் தொடர்பை நீக்கிக்கொள்கிறேன். இதனை மனம் மொழி மெய்களால் முக்காலத்திலும் செய்ய உறுதி கூறுகின்றேன்”[25] என்று கூறி, ஐந்தாவது மகாவிரதமான அவாவறுத்தலைச் சமண முனிவர் மேற்கொள்வர். இதன்மூலம், துறவு ஒருவனுக்குச் சிறப்பைத் தந்து வீடுபேற்றை அடைய வழிவகுக்கும் என்பதை அறியமுடிகிறது.

நீதிநெறிவிளக்கம், துறவு மேற்கொள்ளும் ஒருவன் பெண்டிரைப் புகழமாட்டான்; இசையோடு கூடிய பாடலைக் கேட்கமாட்டான்; ஐம்புலன்களையும் அடக்கிவாழ்வான் (நீதி.நெ.வி.85); அதிகமாக உணவு உண்ணமாட்டான்; பிற உயிர்மீது அன்பு கொண்டவனாகவும் அருள்கொண்டவனாகவும் இருப்பான்; பொய்யாமையாகிய தன்னுடைய வெற்றுடம்பினைப் பாதுகாக்கமாட்டான் (பா.87) என்கிறது. இதன்மூலம், பேரின்பத்தை நாடிச் சிற்றின்பத்திற்கு இடமாகிய உடம்பைப்பேணி வளர்த்துக்கொள்ள

துறவிகள் விரும்பமாட்டார்கள் என்ற கருத்தினை நீதிநெறிவிளக்கம் வலியுறுத்துவதை அறியமுடிகிறது.

விவேகசிந்தாமணி, பற்றினை ஒழித்து உள்ளத்தில் துறவு கொண்ட சான்றோர், இறைவனின் திருவடியைத் துதிப்பது முதல் மோட்சம் அடையும்வரை இன்பத்தை அடைவர் என்று (வி.சி.தொ.I பா.76) கூறுகிறது. நெற்றியில் திருநீற்றினை அணிந்து இருப்பவரே முக்திபெற விரும்புவர் (நீதி.வெ.95) என்கிறது நீதிவெண்பா.

"இல்லறம் தோன்றி நிலைத்த நெடுங்காலத்திற்குப் பின்புதான் துறவறம் தோன்றிற்று. இவ்வுலகிலே இன்பம் இல்லை; இறந்த பின்பு நாம் அடையும் உலகம் வேறு. அவ்வுலகிலே இன்பம் நுகரவேண்டுமானால் இவ்வுலக இன்பத்தைத் துறக்க வேண்டும். இவ்வுலக இன்பத்தை வெறுத்து இறைவனை நோக்கித் தவம்புரிய வேண்டும். இதுவே துறவறத்தைப் பற்றிப் பிற்காலத்தினர் கொண்ட கருத்தாகும்"[26] என்பர் சாமி. சிதம்பரனார்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும், ஒருவன் துறவு வாழ்க்கையை மேற்கொண்டு, அவாவறுத்துப் பிறவியை ஒழித்து வாழவேண்டும் என்பதையே விரும்புகின்றன. இருப்பினும், துறவுமேற்கொண்டு வீடுபேறு அடைவதே சிறப்பு என்று பிற்கால நீதிநூல்கள் சொல்வதும் இங்கு எண்ணத்தக்கதாகும்.

### 4.1.11. மெய்யுணர்தல்

மெய்யுணர்தல் என்பது இவ்வுலகத்தில் வாழும் ஒருவன் பிறவிகளையறுத்து வீடுபேறு அடைவதற்குரிய வழியாகும். மெய்ப்பொருள் அல்லாதவைகளை மெய்ப் பொருள் என்று ஒருவன் தவறாக எண்ணுதல் கூடாது (கு.351); ஒருவன் தன் மயக்க உணர்வை நீக்கினால் மெய்யுணர்வு அடைந்து இன்பம் பெறலாம் என்பதை வள்ளுவர்,

*"இருள்நீங்கி இன்பம் பயக்கும் மருள்நீங்கி*
*மாசுஅறு காட்சி யவர்க்கு" (குறள்.352)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார். மெய்யுணர்வு இல்லாதவன் ஐம்புலன்களின் உணர்வு பெற்றிருந்தாலும் அதனால் அவனுக்குப் பயனில்லை (கு.354); கற்கவேண்டியவற்றைக்

கற்று மெய்ப்பொருள் உணர்ந்தவர் மீண்டும் பிறவியை அடையமாட்டார் (கு.356); ஒவ்வொருவரும் அறியாமையை நீக்கி முத்தி அடையச் செம்பொருளைக் காணுதல் வேண்டும் (கு.358); மெய்ப்பொருளை உணர்ந்தால் துன்பங்கள் வராது (கு.359); காமம், வெகுளி, மயக்கம் இவற்றை ஒழித்தால்தான் மெய்யுணர்வு பெறமுடியும் (கு.360) என்று மெய் உணர்தல் அதிகாரத்தில் உண்மைப் பொருளை உள்ளபடி உணர்வதை எடுத்து உரைக்கிறார் வள்ளுவர்.

முப்பது வயதில் விருப்பு, வெறுப்பு, அறியாமை ஆகிய முக்குற்றங்கள் நீங்கப் பெற்று மெய்ப்பொருளாகிய இறையுணர்வை அடைந்து இன்புறவேண்டும் (நல்.39) என்கிறது நல்வழி. இந்த உலகத்தில் உள்ள எல்லாப் பொருள்களையும் கண்டு, அதன் உண்மையை ஆராய்ந்து தெளிவு அடைவதே (அருங்.3) நற்காட்சியாகும்; மேலும், காமம், சினம், அறியாமை இவை மூன்றும் ஒருவனிடத்தில் இல்லையென்றால் அவனுக்கு எப்பொழுதும் துன்பம் இல்லை (அருங்.பா.178) என்கிறது அருங்கலச் செப்பு. அறநெறிச்சாரம், பிறவியாகிய பிணியை நீக்கிப் பிறப்பறுத்து, ஐம்புலன்களை அடக்கி, மெய்யுணர்வு பெறுவதே வீடுபேறு அடைவதற்கான வழியெனக் கூறுகிறது (அறநெறி.191).

மெய்யறிவாளர்கள், ஐம்புலன்களைக் காத்தலையே நிலையானதாகக் கொள்வார்கள். பழிபாவங்களுக்கு நாணம் கொண்டு மனதைக் கட்டுப்படுத்துவர் (நீதி.நெ.வி.99) ; முற்றும் துறந்த துறவிகளுக்கு மெய்யுணர்வில் கிடைக்கும் இன்பமே பேரின்பமாகும் (பா.100) ; மெய்யடக்கி ஒப்பற்ற பொருளாகிய இறைவனை உணர்ந்து நடப்பவரே வீட்டுலகை அடைவர்; ஐயமும் மாறுபாடும் இல்லாமல் மெய்யுணர்வு கொண்டவரே முடிந்த நிலையினை எய்தமுடியும்; மெய்யறிவாகிய கண்ணை விழித்து உறங்குபவர்கள் தம் மனதில் காணும் காட்சியே உண்மைக்காட்சியாகும் (பா.102); மெய்யுணர்வினரே முற்றும் முடிந்த நிலையினை எய்துவர் என மெய்யுணர்வையும், மெய்யுணர்வு பெற்றவர்களின் நிலையையும் விளக்கிச் செல்கிறது நீதிநெறிவிளக்கம்.

பேரின்பத்தைப் பெறக் கருதுவோர் கையில் செல்வத்தைப் பெற்ற பொழுதே கடவுளின் ஆலயத்துக்குக் கொடுக்கவேண்டும் ; இத்தகைய இயல்பினைக் கொண்டு

வாழ்பவர் கூற்றுவன் பிடியிலிருந்து விடுபடுவர் (வி.சி.தொ.II பா.39) என்று விவேக சிந்தாமணி அறிவுறுத்துகிறது.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் மெய்யுணர்தல் என்பது இந்த உலகத்தில் உண்மைப்பொருளை உணர்ந்து, பிறவியின் நோக்கத்தைத் தெரிந்து கொண்டு, மீண்டும் பிறவாமல் இருப்பதற்கு வழிமுறைகளை அறிந்துகொண்டு, வீடுபேறடையச் செய்யும் வழி என்று கூறுகின்றன.

4.1.12. அவா அறுத்தல்

அவா என்பது ஆசையாகும். ஆசை என்பது உலகத்தில் உள்ள பொருள்களின் மீது கொள்ளும் பற்று. இவ்வாசையே ஒருவனுடைய துன்பத்திற்குக் காரணமாகும். ஒருவன் தன் துன்பத்தை ஒழிக்கவேண்டுமானால் ஆசையை அறுத்தல் வேண்டும். "அவா அறுத்தலாவது பொய்ப்பொருள்கள் மேற்செல்லும் ஆசையைத் தவிர்த்தலாகும்"[27] என்று விளக்கம் தருகிறார் மணக்குடவர்.

அவா என்பது பிறவித்துன்பத்தை உண்டாக்கும் வித்து என்கிறார் வள்ளுவர் (கு.361). அவாவில்லாதிருக்கும் துறவியே முழுத்தூய்மையானவர்; ஒருவனுக்கு அவா அற்ற தன்மையானது மெய்ப்பொருளை விரும்புவதால் உண்டாகும் (கு.364); பொருள்களின்மீது பற்று இல்லாதவனே அவா அற்றவன் ஆவான் (கு.365); ஒருவன் ஆசையை முழுவதும் ஒழிக்கவேண்டும் (கு.367); ஆசையினை ஒருவன் ஒழிக்கவில்லை எனில் அவனைத் துன்பங்கள் தொடர்ந்து கொண்டே இருக்கும். அவாவினை அறுத்துக் கொண்டவனே இந்த உலகத்தில் மீண்டும் பிறவாமையாகிய இன்பவாழ்வைப் பெறமுடியும் (கு.370) என ஆசையை நீக்குதலின் இன்றியமையாமையை வள்ளுவர் விளக்குகிறார்.

ஆத்திசூடி, 'மோகத்தை முனி' (ஆத்.98) என்பதன்வழி, ஆசையை வெறுத்து விலக்கவேண்டும் என்கிறது. அறநெறிச்சாரம், ஆசை, மயக்கம் போன்றவை ஒருவனுக்கு இருத்தல் கூடாது (அறநெறி.196); அவாவினை ஒழித்தவனே வீடு பேற்றினை அடைவான் (பா.51); ஆசை கொண்ட ஒருவன் ஒழுக்கத்திற்கு மாறானவன்

(பா.60); பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு போன்றவற்றை மறப்பதற்குக் காரணமாக இருக்கும் பற்றினை ஒழித்து வாழ்பவனே துறவியாவான் (பா.210) என்று அவாவறுத்தலைப் பற்றிச் சொல்கிறது.

ஒருவன், மற்றவர்களை மனம் மாறுபடச்செய்தல், தன் தாய் தந்தையர்க்குத் தீங்கு செய்தல், மங்கையரின் கற்பறத்தை நீக்குதல் போன்ற இழிசெயல்கள் செய்வதற்கு பின்புலமாக அமைவது அவனுக்கு பொருள்களின்மீது உண்டாகும் ஆசையேயாகும் (நீதி.நெ.வி.98). எனவே, இத்தகைய ஆசைகளை ஒழித்தல் வேண்டும் என்கிறது நீதிநெறிவிளக்கம். மேலும், அகப்பற்றினையும் புறப்பற்றினையும் முற்றும் துறந்தவனே பேரின்பநிலையை அடைவான் என்று அது கூறுகிறது (பா.100). நீதிவெண்பா, ஆசைக்கு அடிமைப்பட்ட ஒருவன் உலகத்தில் உள்ள அனைவருக்கும் அடிமையாகக் கருதப்படுவான் (நீதி.வெ.12) என்று கூறுகிறது.

ஒருவன் பொருளின்மீதுள்ள ஆசையை விடுதல் வேண்டும்; ஏனெனில், அப்பொருள் பிறக்கும்பொழுது அவனுடன் கூடவே பிறக்கவில்லை; இறக்கும் பொழுதும் அது கூட வரப்போவதில்லை; அதனால் வெள்ளி, பொன் உள்ளிட்ட பல பொருட்களின்மீது ஆசைகொண்டு வாழ்பவரைப் போன்று அறிவில் குறைந்தவர் இந்த உலகத்தில் யாரும் இல்லை என்கிறார் வேதநாயகர். மேலும், தேவைக்குமேல் செல்வம் சேர்த்தல் கூடாது; இந்த உலகம் நம்முடையது என்றாலும் நாம் இருப்பது ஒரு முழம் இடமாகும்; மலைபோல உணவு குவிந்து கிடந்தாலும் உண்ணுவது அரைப்படி உணவாகும்; அதனால் அளவில்லாத பொருள், நிலம் போன்றவற்றைத் தேவையில்லாமல் விரும்புவதால் எந்தப்பயனும் இல்லை; பெற்றவை கொண்டு மனநிறைவு கொள்வதே பேரின்பமாகும்; புள்ளும், மாவும் பசித்த பின்புதான் இரை தேடும்; நாளைக்கு வேண்டும் என்ற கவலை இல்லை; அவை தீனியின்றி மாண்டுபோவதும் இல்லை என்று ‘பொருளாசையொழித்தல்’ என்ற அதிகாரத்தில் பொருளாசையால் ஏற்படும் விளைவுகளைக் கூறி, பொருள்களின் மீது ஏற்படும் ஆசைகளை ஒழித்துக் கிடைத்த பொருளைக் கொண்டு, மனநிறைவுடன் இன்பமாக வாழவேண்டும் (அதி.39 பா.7,8,9) என்று அறிவுறுத்துகிறார் வேதநாயகர்.

## 4.2. ஊழ்

ஊழ் என்பதற்குத் தமிழ்மொழியகராதி "உலகமுடிவு, குணம், ஊழ்த்தலைச் செய்யென்னேவல், நியமம், பகை, பழவினை, பூர்வகன்மம், முடிவு, முறை, விதி"[28] என்று விளக்கம் தருகிறது. பரிமேலழகர் "ஊழாவது இருவினைப்பயன், செய்தவனையே சென்றடைவதற்கு ஏதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி, விதி யென்பன ஒருபொருட்கிளவி"[29] என்று விளக்கம் தருகிறார்.

ஊழின் வழியிலேதான் இந்த உலகம் செல்லுகிறது என்பதற்கு வள்ளுவர், கைப்பொருள் வருவதற்குக் காரணமான ஊழால் ஒருவனுக்கு முயற்சி உண்டாகும்; கைப்பொருள் இழப்பதற்குக் காரணமான ஊழால் சோம்பல் உண்டாகும் (371) என்கிறார். ஊழால், நல்லவையும் தீயவையாகும் (கு.375); ஒருவன் முயன்று கோடிக்கணக்கான பொருளைச் சேர்த்தாலும் அவற்றை ஊழினால் துய்த்தல் அரிது (கு.377); ஊழைவிட வலிமையுடையது இந்த உலகத்தில் வேறு எதுவும் இல்லை என்கிறார் வள்ளுவர் (கு.380). எனவே, உழைப்பு, சோம்பல், முயற்சி போன்றவை ஊழின் காரணமாகத்தான் தோன்றுகின்றன. ஒருவனுடைய வாழ்வின் நன்மையையும், தீமையையும் ஊழ்வினையே தீர்மானிக்கிறது. ஆனால், ஆள்வினையுடைமை என்னும் அதிகாரத்தில் "தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன் மெய்வருத்தக் கூலி தரும்" (கு.619) என்றும், "ஊழையும் உட்பக்கம் காண்பர் உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவர்" (கு.620) என்றும் கூறுகிறார். எனவே, சோர்வு இல்லாத முயற்சியால் ஒருவன் ஊழையும் தோல்வியுறச் செய்வான் என்று அவர் குறிப்பிடுகின்றார்.

மூதுரை, ஒருவனுக்குச் செல்வமும் ஒருத்திக்குக் கணவனும் அமைந்திருந்தாலும், அவரவர் முற்பிறவியில் செய்த விதியின் பயனுக்கு ஏற்ற அளவே அவற்றால் பயன்பெறமுடியும் என்கிறது (மூது.19). கற்பக மரத்தை அடைந்தவர்களுக்கும் காஞ்சிரங்காயை அம்மரம் கொடுத்தால், அது அவர் முற்பிறவியில் செய்த வினையின் பயனாகும் (பா.22) என்று அந்நூல் கூறுகிறது. எனவே, ஒவ்வொரு செயலும் அவரவர் செய்த ஊழ்வினையின்படியே நடக்கும் என்று உணர்த்துகிறது மூதுரை.

பிறர்கேட்கும்பொழுது ஈவதால் பிணி நீங்கி, ஊழின் வல்லமையால் முக்தி பெறமுடியும் என்றும் (நல்.3), விதியை வெல்லமுடியாது என்பதையும் நல்வழி, கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*"தாந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பார்*
*பூந்தா மரையோன் பொறிவழியே - வேந்தே !*
*ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்றா*
*வெறுத்தாலும் போமோ விதி" (நல்.30)*

என்கின்ற விதமாக, விதியின் வல்லமையை உணர்த்திய நல்வழி, கடவுள் துணையால் விதியையும் வெல்லலாம் என்ற கருத்தையும் முன்வைத்துள்ளது. அதாவது, சிவனுக்கு வணக்கம் என மனத்தினால் துதித்து இருப்பவர்க்குத் துன்பம் இல்லை (நல்.15) என்கிறது. 'விதியே மதியாய் விடும்' (நல்.15); 'தம் விதியின் பயனே' (மூது.19); 'முற்பருவத்திற் செய்த வினை' (மூது.22); 'ஊழிற் பெருவலிநோய். . . வீடு' (நல்.3) என்று ஔவையார் ஊழ்வினை பற்றிக் கூறுகிறார். இங்கு விதி, வினை, ஊழ் போன்ற சொற்களை ஔவையார் பயன்படுத்தியுள்ளார். அறநெறிச்சாரம், ஒருவன் செய்த வினையே அவனுக்குத் துணையாகும் (அறநெறி.152) என்கிறது. மேலும், ஒருவன் முற்பிறப்பில் செய்த வினைப்பயனை இப்பிறப்பிலும், இந்த பிறப்பின் வினைப்பயனை மறுபிறப்பிலும் அறிந்துகொள்ளலாம் என்பதை அறநெறிச்சாரம் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*"இறந்த பிறப்பில்தாம் செய்த வினையைப்*
*பிறந்த பிறப்பால் அறிக - பிறந்திருந்து*
*செய்யும் வினையால் அறிக இனிப்பிறந்து*
*எய்தும் வினையின் பயன்" (அறநெறி.156)*

நற்குடியில் பிறந்த பெரியோரும் இழிந்த செல்வரிடத்தில் நிற்பதற்குக் காரணம் அவர்கள் முன்னே செய்த வினைப்பயனே (அறநெறி.110) என்று கூறுகிறது. சமணத்தின் முக்கியக் கொள்கையாக இருப்பது 'ஊழ்வினை' என்பதாகும். ஒருவன் தான் செய்கின்ற பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப அவன் அடுத்த பிறவியை

அடைகிறான் என்ற நம்பிக்கை கொண்டவர்கள் சமணர்கள். கோவலன் புகாரைவிட்டு கண்ணகியோடு வெளியேறுவதுகூட அவனுடைய ஊழ்வினை காரணமாகவே என்பதை இளங்கோவடிகள்,

*"காரிருள் நின்ற கடைநாள் கங்குல்*

*ஊழ்வினை கடைஇ உள்ளம் துரப்ப" (சிலம்பு. நாடுகாண்: 3-4)*

என்கிறார். அறநெறிச்சாரமும் ஒருவன் நன்மை, தீமை அடைவதற்குக் காரணம் அவன் முற்பிறவியில் செய்த வினைப்பயனே என்கிறது.

நீதிநெறிவிளக்கம், ஒருவன் நல்வினை செய்தால் நன்மையும், தீவினை செய்தால் தீமையும் கிட்டும் (நீதி.நெ.வி.92) என்று கூறுகிறது. அறிவில் சிறந்த பெரியோர்கள் முயற்சி செய்யாமல் விதிப்பயனால் நன்மைகள் வரும் என்று நினைத்துக்கொண்டு இருக்கமாட்டார்கள்; எப்பொழுதும் முயற்சியை மேற்கொள்வர்; ஒருவன் இடைவிடாமல் செய்யும் முயற்சியால் விதியின் வலிமையை இழக்கச் செய்யமுடியும்; இதற்கு, விதியினை வென்று எமனுடைய உயிரைப்போக்கிய மார்க்கண்டேயன் என்னும் சிறுவனே சான்றாவான் (நீதி.நெ.வி.51). ஊழ்வினைப்படியே ஒருவனுக்கு நன்மை, தீமை கிட்டும் என்று கூறிவிட்டு, ஊழையும் முயற்சியால் வெல்லலாம் என்று கூறுவது முன்னுக்குப் பின் முரணாகத் தோன்றுகிறது. ஒருவன், தனக்கு உயர்ந்த வாழ்வு வந்தபொழுது மனதில் மகிழ்ச்சி கொள்ளலும் தாழ்வு வந்தபொழுது மனத்தளர்வு கொள்ளலும் கூடாது. பரம ஏழையாய் இருந்தவன் பெருஞ்செல்வத்தை அடைந்து, பல்லக்கில் ஏறிச் செல்வதும் நடக்கும். எனவே, வல்லமைமிக்க ஊழ்வினை ஒருவனுக்கு வந்தால் அதை அவனால் வெல்லமுடியாது; (வி.சி.தொ.**I**; பா.42) என்று கூறுகிறது விவேகசிந்தாமணி.

நீதிவெண்பா, நல்வினை தீவினையின் பயன் என்பது நூறுகோடி ஆண்டுகள் கழித்தாலும் செய்தவனைத் தேடிவந்து சேரும் (நீதி.வெ.47) என்கிறது. வினையின் பயனை ஒருவன் வேண்டாம் என்று நிறுத்தி வைத்தாலும் அது விடாமல் வந்துசேரும் என்றும் நீதிவெண்பா மொழிகிறது.

'மற்றொன்று சூழினும் தான்முந்துறும்' (கு.380) என்னும் குறட்பா வரியால் ஊழ்வினையை விலக்க நினைத்தாலும் அது தான் நடத்த வேண்டியதை நடத்தியே

தீரும் என்று கூறிய வள்ளுவரும் குமரகுருபரரும், ஒருவன் இடைவிடாது செய்யும் முயற்சியால் ஊழையும் தோல்வியுறச் செய்யலாம் என்று முயற்சி செய்வோருக்கு ஊக்கத்தையும் கூறியுள்ளனர். ஒருவன் செய்த நல்வினைக்கு நன்மையும், தீவினைக்குத் தீமையும் விளைவிப்பது ஊழ் எனப் பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன.

## 4.3. வீடுபேறு

ஒருவன் செய்த வினையின் காரணமாக அவனுக்கு மீண்டும் மீண்டும் பிறப்பு ஏற்படும். அவனுக்குப் பிறவிகள் ஏற்படாமலிருப்பதே வீடுபேறு எனப்படும். வீடுபேற்றைப் பற்றிப் பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன. திருக்குறள் வீடுபேறு பற்றித் தனியாக இயல் அமைத்து எதுவும் கூறவில்லை. திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் அறம் செய்யாதவர், அடக்கம் இல்லாதவர், உயிர்களைக் கொன்றவர், பிறருக்குத் தீங்கு செய்பவர், புலால் உண்பவர், மெய்ப்பொருளின் தன்மையை உணராதவர் போன்றோர் நரகத்திற்குச்சென்று துன்புறுவர் என்று கூறுகின்றன.ஐம்புலன்களையும் அடக்கியோர், ஆசையை அறவே ஒழித்தவர், மெய்யுணர்ந்தோர், பிறருக்குத் துன்பம் செய்யாதவர், பிற உயிர்களைக் கொலை செய்து உண்ணாதவர் போன்றோர் சொர்க்கம் புகுவர் என்றும் கூறுகின்றன.

வள்ளுவர், ஒருவர் இல்லறவாழ்வு வாழ்ந்த பிறகு துறவறம் மேற்கொள்ளலாம் என்று குறிப்பிடுகின்றார். இத்துடன் ஐம்புலன்களை அடக்கி ஆசைகளை ஒழித்துத் துறவு மேற்கொள்வதே வீடுபேறு அடைவதற்கான வழியாகும் என்றும் குறிப்பிடுகின்றார். துறவு மேற்கொள்வதற்கான ஒழுக்கநெறிகளை வள்ளுவர் துறவறத்தில் கூறிச்சென்றுள்ளார். அறம், பொருள், இன்பம், வீடுபேறு என்ற நான்கும் உறுதிப்பொருள்கள். அறம், பொருள், இன்பம் ஆகியவற்றிற்குப் பால்களை வகுத்த வள்ளுவர் வீடுபேறு என்னும் பேரின்ப வாழ்வைப் பற்றி நேரடியாகக் கூறாமல் அதனை உய்த்து உணரவைக்கிறார். 'ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே பேரா இயற்கை தரும்' என்று கூறுகின்றார். அதாவது, துறவு வாழ்க்கையை மேற்கொண்டு வாழும் ஒருவன், ஆசையை ஒழித்தால் அவன் பேரின்ப வாழ்வை அடைவான் என்கிறார்.

தீரும் என்று கூறிய வள்ளுவரும் குமரகுருபரரும், ஒருவன் இடைவிடாது செய்யும் முயற்சியால் ஊழையும் தோல்வியுறச் செய்யலாம் என்று முயற்சி செய்வோருக்கு ஊக்கத்தையும் கூறியுள்ளனர். ஒருவன் செய்த நல்வினைக்கு நன்மையும், தீவினைக்குத் தீமையும் விளைவிப்பது ஊழ் எனப் பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன.

## 4.3. வீடுபேறு

ஒருவன் செய்த வினையின் காரணமாக அவனுக்கு மீண்டும் மீண்டும் பிறப்பு ஏற்படும். அவனுக்குப் பிறவிகள் ஏற்படாமலிருப்பதே வீடுபேறு எனப்படும். வீடுபேற்றைப் பற்றிப் பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன. திருக்குறள் வீடுபேறு பற்றித் தனியாக இயல் அமைத்து எதுவும் கூறவில்லை. திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் அறம் செய்யாதவர், அடக்கம் இல்லாதவர், உயிர்களைக் கொன்றவர், பிறருக்குத் தீங்கு செய்பவர், புலால் உண்பவர், மெய்ப்பொருளின் தன்மையை உணராதவர் போன்றோர் நரகத்திற்குச்சென்று துன்புறுவர் என்று கூறுகின்றன.ஐம்புலன்களையும் அடக்கியோர், ஆசையை அறவே ஒழித்தவர், மெய்யுணர்ந்தோர், பிறருக்குத் துன்பம் செய்யாதவர், பிற உயிர்களைக் கொலை செய்து உண்ணாதவர் போன்றோர் சொர்க்கம் புகுவர் என்றும் கூறுகின்றன.

வள்ளுவர், ஒருவர் இல்லறவாழ்வு வாழ்ந்த பிறகு துறவறம் மேற்கொள்ளலாம் என்று குறிப்பிடுகின்றார். இத்துடன் ஐம்புலன்களை அடக்கி ஆசைகளை ஒழித்துத் துறவு மேற்கொள்வதே வீடுபேறு அடைவதற்கான வழியாகும் என்றும் குறிப்பிடுகின்றார். துறவு மேற்கொள்வதற்கான ஒழுக்கநெறிகளை வள்ளுவர் துறவறத்தில் கூறிச்சென்றுள்ளார். அறம், பொருள், இன்பம், வீடுபேறு என்ற நான்கும் உறுதிப்பொருள்கள். அறம், பொருள், இன்பம் ஆகியவற்றிற்குப் பால்களை வகுத்த வள்ளுவர் வீடுபேறு என்னும் பேரின்ப வாழ்வைப் பற்றி நேரடியாகக் கூறாமல் அதனை உய்த்து உணரவைக்கிறார். 'ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே பேரா இயற்கை தரும்' என்று கூறுகின்றார். அதாவது, துறவு வாழ்க்கையை மேற்கொண்டு வாழும் ஒருவன், ஆசையை ஒழித்தால் அவன் பேரின்ப வாழ்வை அடைவான் என்கிறார்.

வீட்டின்பத்தைப் பற்றிய கருத்துக்கள் திருக்குறளில் தனித்தலைப்புகளில் இடம்பெறவில்லை; இதிலிருந்து வள்ளுவருக்கு வீடுபேறு பற்றி நம்பிக்கை இல்லையா? என்ற கேள்வி ஏற்படலாம். இதற்கு, ஒருவன் அறவழியில் நின்று உலக வாழ்க்கையை மேற்கொள்ளும் பொழுது 'வீடு' என்று ஒன்று இருந்தால் அது தானாகக் கிடைக்கும் என்பதே வள்ளுவரின் கருத்தாக இருந்திருக்கும். வீடுபேற்றினைப் பற்றித் தனியாகக் கூறாத வள்ளுவர்,

*"வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்*
*தெய்வத்துள் வைக்கப் படும்"* *(குறள்.50)*

என்னும் இக்குறளில் உலகத்தில் வாழ்கின்ற ஒருவன், அறநெறியைப் பின்பற்றி வாழும் பொழுது, அவன் வானுலகத்தில் உள்ள தெய்வநிலையில் வைத்து மதிக்கப்படுவான் என்று கூறி, இச்சிக்கலுக்கு முடிவு தருகிறார். எல்லோரும் இந்த உலகத்தில் தான் வாழ்கின்றார்கள்; இவ்வுலகத்தில் வாழ்பவர்கள் எவ்வாறு அறச்செயல் புரிந்து வாழவேண்டும் என்பது அவர்களிடத்தில்தான் இருக்கிறது. எனவே, அதை முறையானதாக அமைத்துக்கொள்ள வேண்டும். "ஐயத்தின் நீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின், வானம் நணியது உடைத்து" என்கிறார் வள்ளுவர். இம்மை வாழ்வின் நற்செயல்களின் வழியாக அமைக்கப்படுவதுதான் வீடேயின்றி, அது இம்மையினின்றும் தொடர்பின்றித் தானாக வருவதன்று என்று கூறுகிறார் வள்ளுவர்.

"வீடு என்பது மனிதன் பிறப்பிலிருந்து 'விடுபடுவது'. அதாவது, பிறந்துவிட்ட மனிதன் இந்தப் பிறப்புக்கான வாழ்க்கையை முடித்துக்கொண்டு இறந்துவிட்டபின், மறுபடியும் பிறந்து உலக துன்பங்களில் சிக்கிக்கொள்ளாமல் இறைவனோடு சேர்ந்து விடுவது என்ற விருப்பத்தை ஒட்டிய நம்பிக்கை. அது 'முத்தி' என்றும் மோக்ஷம் என்றும் பகவானோடு இரண்டறக் கலத்தல் என்றும் பலவிதமாகச் சொல்லப்படும். இந்த 'வீடு' என்பது வெறும் நம்பிக்கை தான். அந்த நம்பிக்கை ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய மனதுக்குத் தக்கபடி வெவ்வேறு விதமாக இருக்கும். ஆதலால், அதைப் பொதுமுறையில் வரையறுத்துச் சொல்லவே முடியாது.

திருவள்ளுவர் அந்த நம்பிக்கைக்கு மட்டும் மதிப்புக் கொடுத்து அதைத் துறவறத்தில் விட்டுவிட்டு, அறம், பொருள், இன்பம் என்ற மூன்றை மட்டும் சொல்லுகின்றார்”[30] என்று நாமக்கல் கவிஞர் குறிப்பிடுகின்றார்.

பிற்காலநீதிநூல்கள், ஐம்புலன்களையும் அடக்கிப் பிறருக்கு நன்மை செய்து வாழ்வோர் வீடுபேறு அடைவர் என்றும், தீமை செய்து வாழ்வோர் இவ்வுலகில் மீண்டும் மீண்டும் பிறந்து துன்புற்று நரகத்திற்குச் செல்வர் என்றும் கூறுகின்றன. அறநெறிச்சாரம், நற்குணமுடையோர், தமக்குக் கொடுத்து உதவினவரையும் பிறவிப் பிணியை ஒழிப்பதற்குத் தம்முடன் அழைத்துச் செல்வார். ஆனால், நற்குணமில்லாக் கீழோர் பிறர் கொடுத்த உணவை உண்டு அவரையும் தாம் செல்லும் நரகத்திற்கு அழைத்து செல்வார் என்று கூறுகிறது.

சிற்றின்பத்தால் வரும் ஆசைகளை ஒழித்தால் வீடுபேறு கிட்டும் என்று பிற்காலநீதிநூல்கள் கூறுகின்றன. இத்துடன் பிறருக்கு ஈதல், இன்சொல் கூறல், ஊன் உண்ணா திருத்தல் போன்றவை மீண்டும் பிறவாதிருத்தலுக்கு வழியாகும் என்றும் கூறுகின்றன. புலால் உண்ணாதிருத்தல், பிற உயிர்களைக் கொல்லாதிருத்தல், துறவு, தவம், மெய்யுணர்தல், அவாவறுத்தல் போன்ற அறங்களை ஒருவன் கடைபிடித்து வாழ்ந்தால் அவன் வீடுபேற்றை அடைவான் என்பன போன்ற கருத்துக்கள் இந்நீதிநூல்கள் உணர்த்தவரும் அடிப்படைக் கருத்தியல்களாக அமைகின்றன.

திருக்குறள், துறவு, தவம், மெய்யுணர்தல், கொல்லாமை, அவாவறுத்தல் போன்ற அறங்களை மேற்கொண்டால் ஒருவன் வீடுபேற்றை அடைவதற்கான வழியை தேடிக்கொள்ளலாம் என துறவறவியலில் குறிப்பிட்டுள்ளது.

பெண்களுக்கு வீடுபேறுண்டா என்னும் வினாவிற்குப் பிற்காலநீதிநூல்களில் விடை இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், வள்ளுவர் நல்ல கணவனைப் பெற்ற பெண்கள் மேலுலக வாழ்வைப் பெறுவர் என்பதை,

*“பெற்றால் பெறின்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்*
*புத்தேளிர் வாழும் உலகு”   (குறள்.58)*

என்று கூறுவதிலிருந்து பெண்களுக்கு வீடுபேறு உண்டு என விளக்கி உரைக்கிறார்.

## 4.4. முடிவுரை

துறவு தவம், அவாவறுத்தல், மெய்யுணர்தல் ஆகியவற்றை ஒருவர் மேற் கொள்வது வீடுபேறு அடைவதற்கு உரிய வழிகளாக வள்ளுவம் குறிப்பிடுகிறது. மேலும், யான், எனது என்ற செருக்கிலிருந்து ஒருவர் விடுபடவேண்டும்; ஆசைகளை ஒழித்து வாழவேண்டும் என்பதே வள்ளுவரின் சிந்தனையாகும். பிற்காலநீதிநூல்கள், ஒருவர் துறவறம் மேற்கொள்வது வீடுபேற்றை அடையும் பொருட்டாகவே என்று உறுதியளிக்கின்றன. இவற்றின்வழி ஒருவர் இல்லற வாழ்விற்குரிய கடமைகளை முழுதும் முடித்த பின்பு, துறவற வாழ்க்கையை மேற்கொள்ளலாம் என்ற கருத்தினை வள்ளுவரின் வழி நின்று உணரமுடிகிறது.

அறநூல்கள் அனைத்தும் ‘கொல்லாமை’அறத்தைத் தலைசிறந்த அறமாகக் கருதுகின்றன. பிற உயிரைக் கொன்று அதன் ஊனை உண்ணக்கூடாது என்று அனைத்து நூல்களும் வற்புறுத்துகின்றன. நீதிநெறிவிளக்கம், வேள்வி நாட்டு நன்மைக்காகச் செய்யப்படுவது என்று விளக்கி, அதில் பலியிடப்படுவதைச் சிறப்பிக்கிறது. ஆனால், உயிர்க்கொலையை மறுப்பதால் புலால் உண்பதையும் வேள்வியில் பழியிடுவதையும் வள்ளுவம் முற்றிலுமாகக் கண்டிக்கிறது. சைவ சமயத்தார் வேள்வி செய்வதையே முழுநோக்கமாகக் கொண்டவர்கள். அதனால், அச்சமயம் சார்ந்த குமரகுருபரரும் வேள்வியைச் சிறப்பித்து இருக்கிறார் எனலாம். திருவள்ளுவர் அறத்தின் முன்னர் அனைத்து உயிர்களும் சமம் என்ற கொள்கையுடையவராகையால் வேள்வியின் பெயரால் நிகழும் கொலையை அவர் ஏற்கவில்லை.

நீதிநூல்கள், தவம் செய்பவர்கள் ஐம்புலன்களை அடக்கிக் காலம் கடத்தாமல் தவம் செய்யவேண்டும் என்று அறிவுறுத்துகின்றன. சைவசமயத்தில் அதிக ஈடுபாடு கொண்ட ஔவையார் சிவபெருமானை வழிபட்டுத் தவம் செய்ய வேண்டும் என்று குறிப்பிடுகின்றார். வள்ளுவம், தவத்தால் துறவியர் சில ஆற்றல்களை எய்தமுடியும் என்கிறது.

ஒருவர் துறவி போன்று பொய்வேடம் புனைந்து, தன் உடலை வருத்திக் கொண்டு, தலைமுடியை வளர்ப்பதும் நீக்குவதும் அத்துடன் பிச்சையெடுத்து

வாழ்வதையும் நீதிநூல்கள் கண்டிக்கின்றன. உலகம் பழிக்கும் தீய ஒழுக்கங்களை விட்டுவிடுதலே துறவோரின் கடமையாகக் குறிப்பிடுகிறது வள்ளுவம்.

பிறருக்குத் தீமையில்லாத நன்மையைத் தருமானால் பொய்யான சொற்களும் வாய்மையாகும் என்கிறது வள்ளுவம்; ஒருவன் தான் இறக்க நேரிட்டாலும் அவர் பொய்யான சொற்களைப் பேசக்கூடாது என்கின்றன பிற்கால நீதிநூல்கள். சினம் ஒருவரை முழுமையாக அழிக்கக்கூடியது. அதனால், ஒவ்வொருவரும் சினம் வராமல் காத்துக்கொள்ள வேண்டும் என்று திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் அறிவுறுத்துகின்றன. சினம் கொள்பவர் குடும்பத்தார், சுற்றத்தார் என்ற அனைவரின் நட்பையும் இழப்பர் என்று கூறுகிறது பிற்காலநீதிநூல்.

வள்ளுவர், துறவறவியலில் தாம் ஒழுகத்தகுந்த நெறிமுறைக்குப் பொருந்தாத ஒழுக்கம் உடைய அனைவரையும் கூடாவொழுக்கம் உடையவர் என்று சாடுகிறார். கூடாவொழுக்கம் துறவியர்க்கும், பிறனில் விழையாமை இல்லறத்தாருக்கும், வரைவில் மகளிரைச் சேறல் யாவர்க்கும் பெருங்குற்றமாகும் என்பதை வள்ளுவர் தனித்தனி அதிகாரமாக அமைத்து விளக்கியுள்ளார். வள்ளுவம், ஐம்புலத்தின் ஆசைகளுக்குரிய பொருள்களின் நிலையாமையைச் சுட்டிக்காட்டுகிறது.

மொத்தத்தில் செல்வம், இளமை, யாக்கை ஆகியவற்றின் நிலையாமையை எடுத்துக்காட்டி ஒருவரின் அறவுணர்வைத் தூண்டுவதாக நீதிநூல்களின் கருத்துக்கள் அமைந்துள்ளன.

## அடிக்குறிப்புக்கள்

1. நா.கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.82.
2. சி.இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, பக்.197-198.
3. காமாட்சி ஸ்ரீனிவாசன், குறள் கூறும் சமுதாயம், ப.271.
4. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.125.
5. சோ.ந.கந்தசாமி, பௌத்தம், ப.129.
6. அ.நடேசமுதலியார், வள்ளுவர் அறம், ப.92.
7. ம. இராசமாணிக்கம், (உ.ஆ.), பழமொழி நானூறு மூலமும் உரையும், ப.241.
8. முத்துகுமாரசுவாமி தம்பிரான், திருக்குறள் உரைக்கொத்து, ப.236.
9. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.71.
10. வித்துவான் திரு.ந.சேதுரகுநாதனார், பதினெண்கீழ்க்கணக்குச் சொற்பொழிவுகள், ப.56.
11. அ.பொன்னுசாமிப்பிள்ளை,(உ.ஆ.)அறநெறிச்சாரம் மூலமும் விருத்தியுரையும், ப.37.
12. ஆ.மாரிமுத்து, (உ.ஆ.), நீதிநூற்கொத்து, இரண்டாம் பாகம், ப.70.
13. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.146.
14. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.59.
15. துரை-தண்டபாணி, (உ.ஆ.), நீதிநூல்கள், ப.9.
16. தி.சு. பாலசுந்தரம்பிள்ளை, (உ.ஆ.), நீதிநூற்கொத்து, மூலமும் உரையும், ப.54.
17. தி.மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர் (துறவறவியல்), ப.70.
18. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.61.
19. இராதாகிருஷ்ணபிள்ளை, தமிழகத்தில் சமணம், ப.136.
20. க்ரியாவின் தற்காலிக தமிழ் அகராதி, ப.629.
21. மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர், துறவறவியல், ப.82.
22. விவிலியம், புதிய ஏற்பாடு, லூக்கா, ப.21.
23. மு.வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.413.
24. செந்துறைமுத்து, வள்ளுவர் வகுத்த அறம், ப.135.
25. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.60.

26. சாமி. சிதம்பரனார், வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், ப.93.
27. முத்துக்குமாரசுவாமித் தம்பிரான், திருக்குறள் உரைக்கொத்து, ப.338.
28. நா. கதிரைவேற்பிள்ளை, தமிழ்மொழியகராதி, ப.308.
29. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.184.
30. நாமக்கல் கவிஞர், திருவள்ளுவர் திடுக்கிடுவார், ப.21.

# இயல் ஐந்து

## திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் அரசியல் கருத்துக்கள்

# இயல் ஐந்து

## திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் அரசியல் கருத்துக்கள்

### 5.0. முன்னுரை

நாடு முழுவதும் தன் குடையின்கீழ் கொண்டு ஆட்சி நடத்துபவனே அரசனாவான்; அவ்வரசன் நாட்டில் நடக்கும் நல்லனவற்றிற்கும் தீயனவற்றிற்கும் பொறுப்பாவான். நாட்டில் செங்கோலாட்சி நடைபெறுவதற்கு அவ்வரசனிடம் சில பயிற்சிகளும் பண்புகளும் எதிர்பார்க்கப்படுகின்றன. அந்த அடிப்படையிலே வள்ளுவர் இருபத்தைந்து அதிகாரங்களில் அரசனுக்கு வேண்டிய தகுதிகளையும் பண்புகளையும் எடுத்துரைத்துள்ளார். பிற்கால நீதிநூலாசிரியர்களும் அரசியலைப் பற்றிப் பேசியுள்ளனர். வள்ளுவரும் பிற்கால நீதிநூலாசிரியர்களும் கூறும் அரசியல் கருத்துக்களை விளக்கி ஒற்றுமை வேற்றுமைகளை எடுத்துரைப்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

"அரசியல் என்பது ஒருகலை; சாஸ்திரமும் கூட; அகவாழ்க்கையை ஒழுங்கு படுத்திக் கொடுப்பது கலை; புறவாழ்க்கையைப் பண்பட்ட நிலையில் வைத்திருப்பதற்குத் துணைசெய்வது சாஸ்திரம்; பூரண வாழ்க்கைக்குக் கலையும் தேவை; சாஸ்திரமும் தேவை; இரண்டும் உயிரும் உடலும் போல மனமும் அறிவும் போல பிரதியொரு மனிதனுடைய அகவாழ்க்கையையும் புறவாழ்க்கையையும் ஒன்றுபடுத்திச் செலுத்திக்கொண்டு போவது அரசியல். ஒரே மனிதன் குடும்பத்தில் எஜமானனாயிருக்கின்றான்; காரியாலயத்தில் ஊழியனாயிருக்கிறான்; சமுதாயத்தில் பிரஜையாயிருக்கிறான்; இப்படி ஒவ்வொரு துறையிலும் இவன் ஆற்றவேண்டிய கடமைகளும் உண்டு; அனுபவிக்கவேண்டிய உரிமைகளும் உண்டு. இந்த இரண்டினையும் வலியுறுத்திக் காட்டுவது அரசியல்"[1] என்கிறார் சாமிநாதசர்மா.

"அரசு எனப்படுவது பொதுவாகப் பிறரை அடக்கியாளுதல் என்னும் பொருளில் வழங்குகிறது. செய்யுளில் அது அரசன் தொழிலையும் அரசனையும் குறிக்கிறது. பிறர்

பொருள்களையும் பிறமக்களையும் உடைமையாகக் கொண்டவன் அரசன் என்று பொருள்படும்படி அமைந்துள்ளது."[2] மொத்தத்தில் நாட்டில் உள்ள அனைத்துப் பொறுப்புக்களையும் ஏற்றுக்கொண்டு மக்களை காப்பது அரசனின் கடமையாகும் என்பதை அறியமுடிகிறது.

## 5.1. வள்ளுவமும் அரசியலும்

"அரசியலாவது அரசன் நீதி கூறுதல், காவலை நடத்தும் முறைமை"[3] என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர். வள்ளுவர், அரசியல் அதிகாரங்களில் அரசனின் இயல்புகள், மேற்கொள்ளவேண்டிய நெறிமுறைகள், அவன் ஆற்றவேண்டிய கடமைகள், நாட்டின் சிறப்பு, நாட்டில் வாழும் மக்களின் சிறப்பு போன்ற செய்திகளை இருபத்தைந்து அதிகாரங்களில் குறிப்பிட்டுள்ளார். அவையாவன: இறைமாட்சி, கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை, குற்றங்கடிதல், பெரியாரைத்துணைக்கோடல், சிற்றினம் சேராமை, தெரிந்து செயல்வகை, வலியறிதல், காலம் அறிதல், இடன் அறிதல், தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல், சுற்றம்தழால், பொச்சாவாமை, செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை, கண்ணோட்டம், ஒற்றாடல், ஊக்கம் உடைமை, மடியின்மை, ஆள்வினை உடைமை, இடுக்கண் அழியாமை என்பனவாகும்.

### 5.1.1. இறைமாட்சி

உலகத்தில் உள்ள அனைத்து உயிர்களையும் காத்துத் துன்பத்தைப் போக்கும் இறைவனைப் போல் மக்களைக் காக்கும் தலைவனாகிய அரசனை 'இறை' என்ற சொல்லால் குறிப்பிடுகிறார் வள்ளுவர். அரசனுடைய நற்செயல் களையும் நற்குணங்களையும் பற்றி 'இறைமாட்சி'யில் விளக்குகிறது வள்ளுவம். குடிமக்களைக் காத்து அவர்களுக்கு நேரிடும் இடையூறுகளைக் களைந்து காப்பாற்றும் மன்னவன் இறை என்று போற்றப்படுவான் என்கிறார் வள்ளுவர்.

"ஜனங்கள் ஏன் ஒரு காலத்தில் அரசர்களைக் கடவுளின் பிரதிநிதிகள் என்று கருதிப் போற்றிவந்தார்கள்? கடவுள் நிறைவுடையவர்; நடுநிலைமை உடையவர்;

தீயாரை ஒடுக்கி நல்லாரைக் காப்பாற்றும் நல்லியல்பு வாய்ந்தவர்; ஜீவராசிகளை முன்னேற்ற மார்க்கத்தில் கொண்டு செலுத்தும் தலைவர். இந்தமாதிரியான தன்மைகளையெல்லாம் ஓர் அரசனிடத்தில் எதிர்பார்த்து அல்லது இந்த தன்மைகளையுடையவன்தான் அரசனாயிருக்கத் தகுதியுடையவன் என்று தீர்மானித்து, அரசனிடத்தில் கடவுள் தன்மையைப் புகுத்தினார்கள் ஜனங்கள். கடவுள் அம்சம் உடையவர்கள்தான் அரசர்களாய் இருப்பதற்குத் தகுதியுடையவர்கள் என்பன போன்ற நம்பிக்கைகளே, அரசர்கள் கடவுளின் பிரதிநிதிகள் என்ற எண்ணத்தை வேரூன்றச் செய்துவிட்டன"[4] என்று கூறுகிறார் சாமிநாதசர்மா.

"அரசன் தெய்வத்தன்மை கொண்டவன் என்ற கொள்கையும் கடவுளால் படைக்கப்பட்டவன் என்ற கொள்கையும் வள்ளுவரிடம் இல்லை. அரசனை அவர் சமுதாயத் தலைவன், மனிதருள் உயர்ந்தோன், சான்றோன், அறிஞன் எனக் காட்டுகிறார்"[5] என்பர் முருகரத்தனம்..

வள்ளுவர், படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்னும் ஆறு உறுப்புக்களைக் கொண்டவனே அரசன் என்றும் அவனே ஆண் சிங்கம் போன்றவனாவான் (கு.381) என்றும் கருதுகின்றார். மேலும், அஞ்சாமை, ஈகை, அறிவு, ஊக்கம் ஆகிய நான்கு பண்புகளை அவ்வரசன் பெற்றிருத்தல் வேண்டும்; அவனிடத்தில் சோர்வு இருத்தல் கூடாது (கு.382); அரசன் அறத்தினின்று வழுவாத இயல்புடையவனாய் இருத்தலோடு கல்வியறிவு பெற்றவனாயும் இருத்தல் வேண்டும் (கு.383); மேலும், பொருள்வரும் வழிகளை அறிந்து பொருளை ஈட்டுவதோடு அவற்றைக் காக்கவும் வகுக்கவும் அரசனுக்குத் தெரிந்திருக்கவேண்டும் (கு.385); மக்களின் பார்வைக்கு எளியவனாகவும் கடுஞ்சொல் பேசாதவனாகவும் அவ்வரசன் திகழவேண்டும் (கு.386); மக்களின் குறைகளை இன்முகத்துடன் கேட்டு அவர்களின் குற்றங்களைப் பொறுத்துக்கொள்ளும் அரசனது குடையின்கீழ் உலகம் தங்கும் (கு.389) என்றும் அருள், செங்கோல், ஆட்சி, குடிகளை ஓம்புதல் ஆகிய நான்கினையும் பெற்றவன் வேந்தர்க்கு எல்லாம் ஒளி போன்றவன் (கு.390) என்றும்

குறிப்பிடுகின்றார் வள்ளுவர். எனவே, மக்கள் நலம்பேணும் சமுதாயத் தலைவனுக்கு உரிய குணத்தையே வள்ளுவர் விரும்புகிறார் என்பதை அறியமுடிகிறது.

"திருக்குறள் தோன்றிய காலம் மன்னர்கள் ஆண்ட காலம், அரசியல் சட்டம் அமைத்து அதன்படி நாட்டை மன்னர்கள் ஆண்டதாகச் சரித்திரம் இல்லை; அவர்கள் விரும்பியதைச் செய்தார்கள்; விரும்பியபடி வாழ்ந்தார்கள்; அவர்கள் விருப்பமே நாட்டின் சட்டம்; அத்தகைய ஒரு காலக்கட்டத்தில் தோன்றிய திருக்குறளில் பல்வேறு நாடுகளில் அரசியல் சட்டத்தை ஆராய்ந்து இந்தியாவின் தலைசிறந்த நிபுணர்களாலும் சட்ட மேதைகளாலும் உருவாக்கப்பட்ட நமது அரசியல் சட்டத்தின் அடிப்படைத் தத்துவங்கள், கொள்கைகள் அனைத்தும் இடம் பெற்றுள்ளன என்பதைக் காணும்பொழுது பெருமையாக உள்ளது"[6] என்று திருக்குறளின் அரசியல் முறையைப் பாராட்டுகிறார் பெ.வேணுகோபால்.

"பிற்காலநீதிநூல்கள் அரசியல் பற்றிய கருத்துக்களை அதிகம் கூறவில்லை. அவை இல்லறக்கருத்துக்களையும் துறவறக்கருத்துக்களையும் பொது அறங்களையும் மட்டுமே கூறிச்செல்கின்றன. இளஞ்சிறார்க்கு அறிவு கொளுத்தும் பொருட்டு அகரவரிசைப்படி ஆத்திசூடி, கொன்றைவேந்தன் போன்ற நூல்களை ஔவையார் அருளினார். அவரால் இயற்றப்பெற்ற நல்வழி, வாக்குண்டாம் என்னும் நூல்களும் அந்நோக்கத்தால் தோன்றியவையே. சிவப்பிரகாசரும் எளிய, இனிய உவமைகளால் விழுமிய நீதிகளை இளையோர்க்குக் கூறி நன்னெறி பாடினார். ஆகவே, நன்னெறி, வாக்குண்டாம், நல்வழி என்னும் நூல்களில் அறவே அரசியல் இல்லை. இடைக்காலத்தில் சமயமும் அறமும் பிரிக்கமுடியாதபடி ஒன்றியமையான், 'நீறில்லா நெற்றி பாழ்', 'திருமாலுக்கு அடிமை செய்', 'சிவாய நமவென்று சிந்தித்திருப் போருக்கு அபாயம் ஒரு நாளும் இல்லை' என்பன போன்ற வைதீக சமயக்கருத்துக்கள் அறநூல்களில் இடம்பெறலாயின. அதன் காரணமாக அரசியல் கூறும் நோக்கில் முனைப்பு ஏற்படவில்லை"[7] என்று சாரங்கபாணி குறிப்பிட்டுள்ளார்.

17-ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு தோன்றிய பிற்கால நீதிநூல்களான குமரகுருபரரின் நீதிநெறிவிளக்கம், வேதநாயகரின் நீதிநூல் போன்றவையே அரசியல்

பற்றிய கருத்துக்களைக் கூறிச்செல்கின்றன.சமணசமயச் சார்புடைய அறநூல்களான அருங்கலச்செப்பு, அறநெறிச்சாரம் போன்ற நூல்களில் அரசியல் பற்றிய கருத்துக்கள் அதிகம் பேசப்படவில்லை.

நீதிநெறிவிளக்கம், அரசனது இயல்பு, ஆட்சிமுறை போன்றவற்றைக் கீழ்வருமாறு எடுத்துரைக்கிறது: அதாவது, நாடாளும் மன்னன் அஞ்சாமை, அறிவு, ஊக்கம், ஈகை போன்ற பண்புகளைப் பெற்று இருத்தல்வேண்டும்; அரசன் தன்னுடைய பார்வையால் மக்கள் கருத்தினை உணர்ந்தும் செவியால் புறத்தே நடப்பதை அறிந்தும் ஒழுகுதல் வேண்டும்; அத்தகைய ஆட்சி செய்யும் மன்னன்வழியே மக்கள் செல்வார்கள் (நீதி.நெ.வி.33) என்று கூறுகிறது.

வேதநாயகர், குடிகள் நலமே சிறந்தது என்று அரசன் கருதுதல், கடுஞ்சொல் பேசாதிருத்தல், பிற உயிர்களைத் தன் உயிர் போல கருதுதல், பிறர் துன்பத்தைக் கண்டு கண்ணீர் விடுதல், உணவின்றி உறக்கமின்றி நகரெங்கும் சுற்றிவருதல் போன்ற குணங்களைப் பெற்றவனே சிறந்த மன்னன் ஆவான் (நீதி.நூ.அதி.3 பா.12) என்கிறார்.

திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் நாடாளும் மன்னன் மக்களுக்கு இடையூறு வராமல் பாதுகாத்து நாட்டைச் சிறப்புற ஆட்சி செய்வதற்கு வேண்டிய இயல்புகளை உணர்த்துகின்றன.

### 5.1.2. கல்வி

உலகில் பிறந்த ஒவ்வொருவரும் இயற்கையில் அறிவு உடையவர்கள். அத்தகைய இயற்கை அறிவு வளர்வதற்குக் கல்வி தேவை. கல்வி அறியாமையைப் போக்கி அறிவை வளரச்செய்யும் தன்மை கொண்டது. தனிமனிதனுக்குத் தேவைப்படும் கல்வி, சமுதாய வளர்ச்சிக்கும் மிகவும் உதவும் என்பதை உணர்ந்த வள்ளுவர் கல்வி, கல்லாமை, கேள்வி, அறிவுடைமை என நான்கு அதிகாரங்களைப் பொருட்பாலில் அமைத்து கல்வியின் தேவையை விளக்குகின்றார்.

“எல்லோர்க்கும் இன்றியமையாத கல்வியைத் திருவள்ளுவர் அரசியலுள் வைத்துள்ளமை சிந்தித்தற்குரியது. உலகினையாளும் அரசன் கல்விச் செல்வமின்றி யிருப்பின் தன்னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படா தொழிவான்; அவனது நாடு நாடாகாமல் காடாகக் காட்சி அளிக்கும்; அரசனுக்குக் கல்வியில்லாதபோது அவன் கோலின்கீழ் வாழும் குடிமக்கள் எங்ஙனம் கல்வியைப் பெற்றுக் கவினுற்று விளங்கக் கூடும்? நாடு நாடாகவும் மக்கள் மக்களாகவும் விளங்க அரசன் கல்வியறிவு உடையவனாக விளங்குதல் வேண்டும் என்பதனை நோக்கியே கல்வி அரசியலில் இடம்பெற்று விளங்குகிறது. எனினும் யாவர்க்கும் நன்மை பயக்கும் சிறப்பு கல்விக்குண்டு”[8] என்கிறார் மதுரை முதலியார். நாட்டை ஆளும் மன்னனுக்குக் கல்வி மிக முக்கியமானதாகும். மன்னன் எவ்வழியோ குடிகளும் அவ்வழி என்பதற்கு ஏற்ப வள்ளுவர் கல்வியை அனைவருக்கும் பொதுவாகக் கூறினாலும் கல்வி அரசனுக்கு முக்கிய தேவை என்பதை உணர்ந்து அரசியலில் இவ்வதிகாரத்தை வைத்துள்ளார் எனலாம்.

“கௌடலியர் வருணாசிரமக் கல்வியை அரசனுக்கு வற்புறுத்துகிறார். அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் என நால்வகையினர்க்கும் தனித்தனிக் கல்வி வகை உண்டு எனப் பிரித்துக் கூறுகிறார். ஆனால், வள்ளுவரோ கல்வியை அனைவருக்கும் பொதுவாகக் கூறி அரசர்க்கு முதன்மையாக வற்புறுத்துகிறார்”[9] என்று குறிப்பிடுகிறார் வேலு.

ஒருவன் கற்கத் தகுந்த நூல்களைக் கசடறக் கற்று, கற்ற கல்விக்குத் தக்கநெறியில் நிற்கவேண்டும் (கு.391) என்கிறார் வள்ளுவர். மேலும், எண்ணும் எழுத்தும் வாழும் மக்களுக்குக் கண்கள் போன்றவை (கு.392); ஆகையால், கல்வி கற்றோரை மட்டுமே கண்ணுடையவராகக் கருதுகிறார் (கு.393). கேணியைத் தோண்டிய அளவிற்கு நீர் சுரப்பதுபோல ஒருவன் கல்வி கற்றளவிற்கு அறிவு வளரும் (கு.395) என்றும், கற்றவனுக்கு நாடும் ஊரும் சொந்தமாகும் (கு.397) என்றும்

வள்ளுவர் நவில்கின்றார். ஒருவன் கற்ற கல்வியானது ஏழு பிறப்புக்கும் உதவும் என்பதை,

*"ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்கு*
*எழுமையும் ஏமாப்பு உடைத்து" (கு.398)*

என்ற குறட்பாவழி அறியலாம். மேலும், ஒருவனுடைய வாழ்வில் அழிவில்லாத செல்வமாகக் கருதப்படுவது கல்விச்செல்வமாகும் (கு.400) என்பதை வள்ளுவர் வாய்மொழி வழியாக அறியமுடிகிறது.)

ஆத்திசூடி, 'இளமையில் கல்' (ஆத்.29), 'எண் எழுத்து இகழேல்' (பா.7), 'நூல் பல கல்' (பா.71), 'ஓதுவது ஒழியேல்' (பா.11), 'சான்றோர் இனத்திரு' (பா.45) என்று அறிவுறுத்துகிறது. எண்ணும் எழுத்தும் கண்களுக்கு நிகராகும் (கொ.வே.7) என்கிறது கொன்றைவேந்தன். அதாவது, கண்கள் எப்படி மனிதனுக்கு அடிப்படைத் தேவையாக அமைகிறதோ, அதைப்போன்று எண்ணும் எழுத்தும் அமைகிறது என்பதை ஔவையார்வழி உணரமுடிகிறது. மேலும், நூல்களில் சொல்லியபடி ஒருவன் நல்வழியில் ஒழுகுதல் வேண்டும் (பா.53) என்றும் கல்வி கற்காதவனுக்கு உணர்வோடு கூடிய ஒழுக்கம் இல்லை (பா.91) என்றும் ஔவையார் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். ஒருவனுக்குச் சிறந்த ஒழுக்கத்தைத் தருவது கல்வியாகும். அத்தகைய கல்வியைக் கற்று, கற்றவழியில் நிற்கவேண்டும் என்று கட்டளையிடுகின்றார் ஔவையார்.

ஒருவன் கல்வி கற்றவனைப் போல் பாவனை செய்யக்கூடாது என்பதற்கு, மயிலுடன் வான்கோழியைக் கீழ்வரும் பாடல்வழி ஒப்பிட்டுக் காட்டுகிறது மூதுரை.

*"கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி*
*தானும் அதுவாகப் பாவித்துத் தானுந்தன்*
*பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே*
*கல்லாதான் கற்ற கவி" (மூது .14)*

அரசனைவிட அறிஞனே சிறப்புடையவானக் கருதப்படுவான்; ஏனெனில், அரசனுக்கு அவனுடைய நாட்டில் மட்டுமே சிறப்பு; கற்றறிந்தவர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு (மூது.26) என்று கூறி வள்ளுவத்தை வழிமொழிகிறது மூதுரை.

மாசு இல்லாமல் கற்றல், கற்ற நூல்களை ஆராய்தல், கற்றவருடன் நட்பு கொண்டு இருத்தல் போன்றவை கற்றவர்களுக்கு உரிய இயல்புகளாகச் சுட்டுகிறது அறநெறிச்சாரம் (அறநெறி.71). மேலும், கற்றல், கற்றவரிடம் கேட்டுத் தெளிவு பெறுதல், கற்றபடி நிற்றல் போன்ற குணங்கள் நிறைந்த மக்கட்பிறப்பைப் போன்று சிறந்த பிறப்பு வேறில்லை (பா.72) என்றும் கற்றபடி ஒழுகாதவன் தாமரைப்பூ கல்பட்டு சிதைவதுபோல, துன்பத்தால் சிதைந்து அல்லப்படுவான் (பா.73) என்றும் அறநெறிச்சாரம் கூறுகிறது.

கசடறக் கற்பதே கல்வி கற்றவனுக்கு அழகாகும் என்றும் ஒருவன் எந்தக் குடியில் பிறந்திருந்தாலும் கற்றிருந்தால் மட்டுமே அவனை மக்கள் வரவேற்பார்கள் (வெ.வே.38) என்றும் சிறப்பிக்கிறது வெற்றிவேற்கை. மேலும்,

*"கற்கை நன்றே கற்கை நன்றே,*
*பிச்சைப் புகினும் கற்கை நன்றே" (வெ.வே.35)*

என்று கல்வி கற்பதன் முக்கியத்துவத்தை எடுத்துரைக்கிறது.

கற்றவன் எப்பொழுதும் செருக்குக் கொள்ளக்கூடாது (நன்.7) என்கிறது நன்னெறி. மேலும், அரசர்களும் கற்றறிந்த புலவர்களுக்கு ஒப்பாகமாட்டார்கள் (பா.40) என்று இந்நூல் நவில்கிறது. நீதிநெறிவிளக்கம், கல்விக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்திருப்பதைக் கீழ்வரும் கருத்துக்களின்வழி அறியலாம். அதாவது, கல்வியானது ஒருவனுடைய வாழ்வின் எல்லைவரை வந்து உதவும் (நீதி.நெ.வி.2) அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றைத் தரும்; செல்லும் இடங்களில் சிறப்பைத்தரும்; கவலை நேரிடும் பொழுது கைகொடுத்து உதவும்; கைப்பொருள் போனாலும், கல்விப்பொருள் போகாது என்று கல்வியை சிறப்பிக்கிறது இந்நூல். மேலும், வாழ்வின் துணை பலவகைப்படும். அவை வாழ்க்கைத்துணை, ஊன்றுகோல், பொருள் துணை போன்ற இன்னும் பல துணைகள். இவை அனைத்தும் வெளித்தோற்றத்தால் அமைந்த துணைகளாகும்; ஆனால், கல்வி அகத்துணை

மட்டுமல்லாது உயிர்க்கும் உற்ற துணையாகும் என்பதை இந்நூலாசிரியர் கீழ்வரும் பாடல்வழிக் குறிப்பிட்டுள்ளார் :

*". . . . . . . உறும்கவல் ஒன்(று)*
*உற்றுழியும் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லை*
*சிற்றுயிர்க்(கு) உற்றதுணை" (நீதி.நெ.வி.2)*

என்கிறவிதமாக, மேற்காணும் பொருளை உணர்த்தி நிற்கிறது இப்பாடல்.

குமரகுருபரர், ஒருவனுக்கு அறியாமையின் நீக்கமும் அறிவின் பெருக்கமும் ஒரு சேர கல்வியால் நிகழ்வனவாகும்; கல்வி கற்பது ஒருவனுக்குத் தொடக்கத்தில் துன்பமாக இருந்தாலும் கற்ற பிறகு அக்கல்வி அவனை இன்பத்தில் நிலை நிறுத்தும் (நீதி.நெ.வி.3) என்கிறார். மேலும், கல்வியால் வீடும் நாடும் சிறக்கும் என்பதோடு கல்வியைக் குடும்ப அமைப்போடு ஒப்பிடுகின்றார் இந்நூலாசிரியர். கல்வி கற்புடைய மனைவி போன்றது; கவிதையே புதல்வன்; சொல்வன்மையே செல்வம் (பா.4). புலவன், கதை, காவியம், நாடகம் போன்ற இலக்கியங்களைப் படைக்கின்றான்; காலவேகத்தில் இவற்றையெல்லாம் படைத்த புலவன் மறைந்தாலும் அவனால் செய்யப்பட்ட படைப்பு காலங்கடந்து நிற்கிறது (பா.7). மேலும், கல்வியின் எல்லை கண்டவர் யாரும் இல்லை; ஆகையால் அனைத்தும் கற்றவர் போல் ஒருவன் செருக்குக் கொள்ளக்கூடாது (பா.14) என்கிறார் குமரகுருபரர். தாம் முயற்சி செய்து கற்ற கல்விச் செல்வத்தைப் பணத்துக்காக விற்றல் மிகவும் கொடுமையானது; இச்செயலைச் செய்கின்றவன் கூற்றுவனால் தண்டிக்கப்படுவான் என்று அவர் எச்சரிக்கிறார். கல்வி கற்றவன் வறுமையாளனாக இருப்பின் அவன் கற்ற கல்வியால் பயன் எதுவும் இல்லை (பா.10) என்றும் அவர் சுட்டுகின்றார். இதன் மூலம், கல்விக்குப் பகை வறுமை என்பது குமரகுருபரர் கண்ட உண்மையாகும். சில நாளே வாழ்ந்து மடியும் இந்த நிலையற்ற உடம்பினால் எந்தப்பயனும் இல்லை. கல்வி கற்று மனித சமூகம் பயனடையும்படி வாழ்வதே உயர்ந்த வாழ்வு என்று குமரகுருபரர் உணர்த்துவதை அறியமுடிகிறது.

அனைவருக்கும் கண்கள் இரண்டு; ஆயின் கற்றோர்க்கு மட்டும் மூன்று கண்கள்; கற்றவர்களுக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு; கல்வி ஒருவனுடைய அறியாமையையும் ஆணவத்தையும் போக்குவது (நீதி.வெ.69) என்றெல்லாம் விளக்குகிறது நீதிவெண்பா.

விவேகசிந்தாமணி, கல்வி கற்றோர், அறிவில் சிறந்தவர்களைக் கண்டு மகிழ்ச்சி கொள்வர் (வி.சி.தொ.Iபா.10) என்று கூறுகிறது. உலகநீதி., கல்வி கற்காமல் ஒரு நாளும் இருக்கக்கூடாது (உலக.1); கல்விச்செல்வமே உயர்ந்த செல்வம் என்பதை உணர்ந்த உலகநாதர் தாம் படைத்த நூலில் முதல்வரியாகக் கல்வியின் சிறப்பை வலியுறுத்துவது அவருக்கு கல்விமேல் இருந்த ஈடுபாட்டை வெளிப்படுத்துகிறது.

கல்வி கற்றுவிட்டோம் என்ற செருக்கு ஒருவனுக்கு இருக்கக்கூடாது என்பதனை உணர்ந்த வேதநாயகர், 'கல்விச்செருக்கு' என்ற அதிகாரத்தை அமைத்து அச்செருக்கினால் ஏற்படும் தீமைகளை எடுத்துரைக்கிறார். ஒருவன் பாடும் கவியில் உள்ள கற்பனைகள் அனைத்தும் முன்னோர் பாடியதாகும்;ஆகையால், முற்றும் உணர்ந்தோம் என்ற செருக்கு ஒருவனுக்கு இருத்தல் கூடாது; (நீதி.நூ.அதி.27பா.1) ஏனெனில், அறியாமையின் காரணமாக ஏற்படுவது செருக்கு என்கிறார் வேதநாயகர். மேலும், இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழின் முழுத் தன்மையை உணர்ந்தவர் ஒருவரும் இருக்கமுடியாது; அந்த உண்மையை அனைவரும் உணருதல் வேண்டும். பரந்த நிலப்பரப்பைக் கொண்ட இவ்வுலகத்தில் வாழும் மக்கள் தன்னை உயர்வாகக் கருதிக்கொண்டு செருக்குக் கொள்ளுதல் கூடாது (பா.5) என்கிறார். 'கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு' என்ற வாய்மொழிக்கு ஏற்ப ஒருவன் கற்கவேண்டியது எவ்வளவோ இருக்கிறது. அதனால், அனைத்தும் கற்றுவிட்டோம் என்று ஒருவன் செருக்குக் கொள்ளக்கூடாது என்று வேதநாயகர் அறிவுறுத்துகின்றார்.

திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் ஒருவனுக்கு வாழ்வின் எல்லைவரை கல்வி உதவக்கூடியது என்று கூறுகின்றன. நீதிநூல்கள் கல்வியைக் கண்களுக்கு

நிகராகக் கூறுவதன்வழி கல்வியின் இன்றியமையாமையைப் புலப்படுத்துகின்றன. கல்வியாளர்களுக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு என்று நீதிநூல்கள் கூறுகின்றன.

### 5.1.3. கல்லாமை

கல்வியின் இன்றியமையாமையை எடுத்துரைத்த வள்ளுவர் கற்றோருக்கு எதிர்மறையாக அமையும் கல்லாதவனின் இயல்பினையும், அவனுக்கு ஏற்படும் தீங்கினையும் சுட்டுகிறார். கல்லாமை என்பதற்குக் "கற்றலைச் செய்யாமை"[10] என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர். கல்வி கற்காதவன் கற்றவர் முன் நின்று பேசக்கூடாது; அவ்வாறு பேசுதல் சூதாடும்போது அரங்கு இழைக்காமல் வட்டுக்காயை உருட்டுவதற்குச் சமமாகும் என்பதை வள்ளுவம்,

*"அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய*
*நூலின்றிக் கோட்டி கொளல்" (குறள்.401)*

என்ற குறட்பாவழி உணர்த்துகிறது. மேலும், கல்லாதவன் கற்றவர்முன் அடக்கமாக இருத்தல் வேண்டும் (கு.403); கல்லாதவனுக்கு அறிவு இருப்பினும் அறிவுடையோர் அவனை ஏற்றுக்கொள்ளமாட்டார்கள் (கு.404); அவன் ஒன்றும் விளையாத களர்நிலத்திற்குச் சமமாவான் (கு.406) என்றும் கல்லாதவன் உயிரோடு இருந்தும் பயனில்லை என்றும் குறிப்பிடுகிறது. கல்லாதவனிடம் உள்ள செல்வத்தைவிட கற்றவரிடத்தில் உள்ள வறுமையே மேலானதாக வள்ளுவர் கருதுகின்றார் (கு.408). கல்லாதவன் உயர்க்குடியில் பிறந்திருந்தாலும் அதனால் அவனுக்குப் பெருமை இல்லை (கு.409) என்றும் கூறியுள்ளார் வள்ளுவர். கல்வி கற்காதவனை விலங்கு, களர் ஆகியவற்றிற்கு ஒப்பிட்டு வள்ளுவர் கூறுவதால் சமுதாயத்தில் வாழும் ஒவ்வொரு மனிதனும் கல்வியைக் கற்று வாழவேண்டும் என்று அவர் உணர்த்த விரும்பியதை அறியமுடிகிறது.

கல்வி கற்காதவனுக்கு ஒழுக்கம் இருக்காது (கொ.வே.9) என்று கொன்றை வேந்தனும், கல்லாதவன் கற்றவனைப்போல பாவனை செய்யக்கூடாது (மூது.14) என்று மூதுரையும் கூறுகின்றன. கல்லாதவனாக இருந்தாலும் அவனிடத்தில் பொருள்

இருந்தால் அனைவரும் மதிப்பார்கள் என்று உலக உண்மையை நவில்வதைக் கீழ்வரும் 'நல்வழி' பாடல்வழி அறியலாம் :

*"கல்லானே ஆனாலும் கைப்பொருளான் உண்டாயின்*
*எல்லாரும் சென்று எதிர் கொள்வர்"* *(நல்.34 : 1-2)*

அறநெறிச்சாரம், கல்லாதவன் கல்வியைப்பற்றி ஒருபொழுதும் உணரமாட்டான் (அறநெறி.29) என்கிறது. கல்லாதவன் கற்றறிந்த புலவர்கள் கூடிய இடத்தில் அடக்கம் இல்லாமல் அழுக்கு வாயைத் திறந்து பேசக்கூடாது (நீதி.நெ.வி.23) என்று அறிவுறுத்துகிறது நீதிநெறிவிளக்கம். கல்வி கற்காதவனைப் பதர் என்றும் அவன் எக்குடியில் பிறந்தாலும் கல்லாதவனாகக் கருதப்படுவான் (வெ.வே.36) என்றும் வெற்றிவேற்கை கூறுகிறது. கல்வி கற்காதவனின் நட்பு தீமைதரக் கூடியதாகும்; அதனால், அவனுடைய நட்பினை விலக்கி வாழ்வது கற்றோருக்குப் பெருமை (நன்.25) என அறிவுறுத்துகிறது நன்னெறி.

விவேகசிந்தாமணி, பெற்றோர் பிள்ளைகளைச் செல்லமாக வளர்க்காமல் கல்வி கற்பிக்கவேண்டும். அவர்கள் தம் பிள்ளைகளைச் செல்லமாக வளர்த்தால் அது எமனை வளர்ப்பதற்குச் சமம் (வி.சி..தொ.II பா.3) எனக் குறிப்பிடுகிறது. நீதிவெண்பா, கல்லாதவர் பலர் கூடிவாழ்ந்தாலும் கல்வி கற்ற ஒருவனுக்கு அவர்கள் ஒப்பாகமாட்டார்கள் (நீதி.வெ.98) என்று குறிப்பிடுகிறது.

வேதநாயகர், கல்லாதவனிடத்தில் உள்ள செல்வம் பயனற்ற வழியில் வீண்செலவாகும் என்கிறது. பெற்றோர் பிள்ளைகளுக்குக் கல்வி கற்றுத்தரல் வேண்டும் (நீதி.நூ.அதி.8பா.8); இல்லையெனில், அப்பிள்ளையை வளர்த்தல் கூற்றுவனை வளர்ப்பதற்குச் சமம் என்றும் கற்றுத்தராமல் இருத்தல் பச்சிளங் குழந்தையை மழையின்மீதுள்ள கல்லின் ஓரத்தில் வைப்பதற்குச் சமம் (பா.6) என்றும் குறிப்பிடுகின்றார்.

நீதிநூல்கள் அனைத்தும் கல்லாமையின் இழிவினைச் சுட்டிக்காட்டி, ஒவ்வொருவரும் கல்வி கற்றுப் பெருமையடைதல் வேண்டும் என்று அறிவுறுத்து கின்றன.

## 5.1.4. கேள்வி

நூற்பொருளைப் பற்றிக் கற்றறிந்த சான்றோர்கள் கூறக்கேட்டலே கேள்வி யாகும். எல்லாவற்றையும் கல்வியறிவால் தெரிந்துகொள்ள முடியாது. சிலவற்றை அனுபவமிக்கோர் கூறுவதைக் கேட்பதால் பெறமுடியும். எனவேதான் பொருட் செல்வம், கல்விச்செல்வம் ஆகியவற்றின் தேவையைப் பேசிய வள்ளுவர் கேள்விச் செல்வத்தைப் பற்றியும் விளக்குகிறார். எல்லாச் செல்வங்களிலும் கேள்விச் செல்வமே சிறந்தது என்பதை,

*“செல்வத்துள் செல்வம் செவிச்செல்வம் அச்செல்வம்*
*செல்வத்துள் எல்லாம் தலை” (குறள்.411)*

என்ற குறட்பா விளக்குகிறது.

செவிக்கு உணவு இல்லாதபோதுதான் வயிற்றுக்கு உணவு தரப்படும் (கு.412) என்பதன் மூலம் கேள்விச் செல்வத்தின் சிறப்பு வலியுறுத்தப்படுகிறது. கேள்வி அறிவுடையவரைத் தேவருக்குச் சமமாகக் (கு.413) கருதுகின்றார் வள்ளுவர். ஒருவன் கற்கவில்லை எனினும் கற்றவரிடம் கேட்டறிதல் வேண்டும் (கு.412); ஏனெனில், கேள்விச் செல்வம் ஒருவனுக்கு ஊன்றுகோல் போல் துணைநிற்கும் (கு.414) என்று கேள்விச் செல்வத்தைச் சிறப்பிக்கிறார் வள்ளுவர். மேலும், நல்லவற்றைக் கேட்பவனுக்குப் பெருமைகிட்டும் (கு.416) என்றும் கேள்வியறிவினை உடையவர் பேதைமையானவற்றைச் சொல்லமாட்டார்கள் (கு.417) என்றும் வள்ளுவர் கருது கின்றார். கல்விச் செல்வத்தினைப் பெறாதவர்களைக் ‘குருடர்கள்’ என்று கூறிய வள்ளுவர், காதுகள் இருந்தும் கேளாதவரைச் ‘செவிடர்’ என்று கூறுவதை,

*“கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியால்*
*தோட்கப் படாத செவி” (குறள். 418)*

என்ற குறட்பாவழி அறியலாம். கேள்விச் சுவையை உணராமல் உணவுச்சுவையை மட்டும் உணரும் மக்கள் இறந்தவர்களுக்கு நிகராவார் (கு.420) என்பதன்வழிக் கேள்விச் செல்வத்தின் சிறப்பை அறியமுடிகிறது.

நல்ல வார்த்தையைக் கேட்பதற்கு முயற்சி செய்யவேண்டும் (ஆத்.39) என ஆத்திசூடியும் நல்லவர்களுடைய சொற்களைக் கேட்பதால் ஒருவனுக்கு நல்ல ஒழுக்கம் உண்டாகும் (மூது.8) என்று மூதுரையும் கூறுகின்றன.

அறிவில் சிறந்த நல்லவர்களின் சொல் பிறருக்கு நன்மை தரும் (நீதி.நெ.வி.21) என்று நீதிநெறிவிளக்கம் நவில்கிறது. ஒருவன் நல்லார், தீயார் என்று வேற்றுமை பார்க்காமல் கேட்போரின் இயல்புக்கு ஏற்றாற்போல் பேசவேண்டும் (நீதி.வெ.71) என்று நீதிவெண்பா வலியுறுத்துகிறது.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் ஒருவன் கற்கவில்லையாயினும் அறிவுடைய சான்றோரிடத்தில் கேட்டறிதலே சிறந்தது என்று வலியுறுத்திச் செல்வதை அறியமுடிகிறது.

### 5.1.5. அறிவுடைமை

ஒருவன் மனம்போன போக்கில் போகாமல் நன்மை தீமைகளைப் பகுத்துணரச் செய்வது அவனது அறிவாகும். அறிவு ஒருவனை அழிவிலிருந்து காக்கும் கருவியாகும் என்பதை உணர்த்த வள்ளுவர் 'அறிவுடைமை' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். "நிலவுலகில் வாழ்வார்க்குச் சிறப்பாக ஆள்வார்க்கு அறிவானது அழிவு வராமல் காக்கும் கருவியாகும். அதுவுமன்றிப் பகைவராலும் அழிக்க முடியாத உள்ளரணாம்"[11] என்று விளக்கப்படுகிறது.

பொருளின் உண்மைத் தன்மையை உணரவைப்பது அறிவு (கு.423); ஒருவனை உலகத்தோடு ஒட்டி வாழ வழிவகுப்பது (கு.426); எதிர்காலத்தில் நிகழப்போவதை அறியும் ஆற்றலைப் பெறவைப்பது அறிவேயாகும் (கு.427); அறிவுடையோர் எல்லாம் உடையவராவார். ஏனெனில், அவர்கள் வரப்போகும் துன்பத்தை அறிந்து முன்னே காத்துக்கொள்ளும் திறம் படைத்தவர்கள் (கு.429) என்று அறிவினால் ஏற்படும் நன்மையைக் குறிப்பிடுகின்றார் வள்ளுவர்.

"எல்லா நற்பண்புகளுக்கும் அடிப்படையாக விளங்குவது அறிவுடைமை. ஒருவனிடத்திலுள்ள நல்ல பண்புகளை விளக்கமுறச் செய்வதும் அறிவுடைமை;

கணிதத்தில் பல சிக்கல்களுக்குத் தீர்வுகாண உதவும் சூத்திரங்கள் போல, வாழ்க்கைச் சிக்கல்களுக்குத் தீர்வுகாண உதவும் சூத்திரங்களே குறட்பாக்கள். அவற்றை ஆய்ந்து கற்று அதன்படி நடப்பதே அறிவுடைமை"[12] என அறிவின் மேன்மைப் பற்றி எடுத்துரைக்கப்படுகிறது.அறிவில்லாதவரிடம் எல்லாம் இருந்தாலும், அறிவு இல்லாததால் அவர் ஒன்றும் இல்லாதவரேயாவார் (கு.430) என்று வள்ளுவர் கருதுகிறார். ஒருவனை அழிவிலிருந்து காப்பதோடு அவனுடைய நற்பண்புகளுக்கு அடிப்படையாக அமைவது அறிவாகும். அத்தகைய அறிவினைப் பயன்படுத்தி ஒருவன் உயர்நிலையை அடையவேண்டும் என்பதே வள்ளுவரின் விருப்பம் ஆகும்.

'மோனம் (மௌனம்) என்பது ஞான வரம்பு' என்று கொன்றைவேந்தனும் (கொ.வே.80),அவரவர் கற்ற அளவிற்கு ஏற்ப அறிவு வளரும் (மூது.7); அறிவுடையோன் எப்பொழுதும் பிறர்க்கு நன்மை செய்து வாழ்வான் (மூது.30) என்று மூதுரையும் கூறுகின்றன. அறநெறிச்சாரம், அறிவுடையோர் எப்பொழுதும் சிற்றினம் சேரார் (அறநெறி.75) என்கிறது. அறிவுடைய ஒருவனை அரசனும் விரும்புவான் (வெ.வே.39) என்று வெற்றிவேற்கை குறிப்பிடுகிறது.

நன்னெறி, அறிவுடையோர் தம் செல்வநிலைக்கு ஏற்பப் பிறர்க்குக் கொடுத்து உதவுவர் (நன்.13); அறிவுடையாரிடத்தில் செல்வச்செருக்கு இருக்காது (பா.14); அவர்கள் பிறருடைய துன்பத்தைத் தம்முடைய துன்பமாக எண்ணி வருந்துவர் (பா.20); அத்தகையோர் பிறருடைய பழிக்கு அஞ்சி வாழ்வர் (பா.34); அவர்கள் அரசர்களினும் உயர்ந்தவராவார் என்று அறிவுடையோரின் சிறப்புகளைக் கூறுகிறது.

அறிவுடைய ஒருவனிடத்தில்தான் கல்வி வந்துசேரும் (நீதி.நெ.வி.24); குற்றங்களை நீக்கி நல்லநெறியைக் கடைபிடிப்பதே சிறந்த அறிவுடைமையாகும் (பா.33) என்று நீதிநெறிவிளக்கமும் அறிவுடையாரை அறிவுடையவரே அறிவர் (வி.சி.தொ.**II** பா.100) என்று விவேகசிந்தாமணியும் கூறுகின்றன.

நீதிவெண்பா, அறிவுடையவன் பகைவனுக்கும் நண்பனாவான் என்பதைக் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*"அறிவன் பகையேனும் அன்புசேர் நட்பாம்*
*சிறுவன் பகையாம் செறிந்த - அறிவுடைய*
*வென்றி வனசரன்தான் வேதியனைக் காத்தான்முன்*
*கொன்றதொரு வேந்தைக் குரங்கு" ( நீதி.வெ.3)*

மேலும், அறிவுடையவனுக்கு எப்பொழுதும் துன்பம் இல்லை (நீதி.வெ.48) என்கிறது.

வேதநாயகர், அறிவின் உருவான ஆண்டவனை எண்ணிப் போற்றவேண்டும் (நீதி.நூ.அதி.2.பா.17) என்கிறார். தன்னுடைய அறிவாற்றலால் நன்மை தீமைகளை அறிந்து உலகைக் காக்கும் முழுமுதலை வணங்கவேண்டும் என்று வேதநாயகர் கூறுவதன்வழி அறியமுடிகிறது.

அறிவினால் கல்வி, ஈகை, பிறர் துன்பத்தைத் தம் துன்பமாகக் கருதுதல், உலகைத் தழுவி வாழும் உயர்ந்த மனப்பான்மை போன்ற நல்லநெறிகளை ஒருவன் அடையமுடியும் எனத் திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் விளக்குகின்றன. பிற நீதிநூல்கள் உலகியல் அறிவினைப் பற்றிச் சிறப்பித்துக்கூற வேதநாயகர், இறைவனுடைய அறிவைச் சிறப்பிக்கிறார். மனிதனிடத்தில் உள்ள அறிவு சில நேரங்களில் தன்னலமாகக்கூட மாறும். தன்னலமற்றது இறையறிவு. எனவே, இறையறிவைப் போற்றுவதே சிறப்பு என்று வேதநாயகர் கருதியிருக்கலாம்.

### 5.1.6. குற்றங்கடிதல்

இன்பத்திற்கு எதிராகத் துன்பங்களைத் தரக்கூடிய குற்றங்கள் பல உண்டு. அக்குற்றங்களால் மனித வாழ்க்கைக்குப் பல தீங்குகள் ஏற்படும். ஆகையால், ஒருவன் குற்றத்தைக் கடிதல் வேண்டும். தனிமனிதன் செய்யும் குற்றத்தால் அவன் வாழும் சமுதாயம் பாழ்படும். ஆகையால், வள்ளுவர், சமுதாயத்தைக் காக்கும் அரசன் குற்றம் செய்தால் அந்நாடே பலவகையில் பாழ்படும் என்று குறிப்பிடுகின்றார். எனவே, நாடாளும் மன்னனுக்கு இது மிகவும் அவசியம் என்பதைக் 'குற்றங்கடிதல்' அதிகாரத்தின்வழி விளக்குகிறார் வள்ளுவர். செருக்கு, சினம், காமம் ஆகிய

குற்றங்கள் இல்லாதவனுடைய வாழ்வு பெருமிதம் அடையும் (கு.431) என்கிறது வள்ளுவம். பரிமேலழகர், “காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்கள் ஆறினையும் அரசன் தன்கண் நிகழாமல் கடிதல் குற்றங்கடிதல்”[13] என்று விளக்கம் தருகிறார்.

“பரிமேலழகர், சிறுமை என்பது காமம் மட்டுமே எனக் கருதுகிறார். வள்ளுவர் ‘குற்றங்கடிதல்’ என்னும் அதிகாரத்தில் காமம் என்பது ஒரு குற்றம் எனக் கடிந்துரைக்கவில்லை. வடநூலார் சொல்லியிருக்கின்ற காரணத்தால் வள்ளுவரும் சொல்லியிருக்க வேண்டும் எனக் கருதிப் பரிமேலழகர் இக்குறளில் காமத்தைத் திணிக்கிறார்”[14] என்று குறிப்பிடுகின்றார் தி.முருகரத்தனம்.

பழிக்கு நாணுகின்ற மன்னன், தினையளவு குற்றம் ஏற்பட்டாலும் அதைப் பனையளவாக எண்ணி மீண்டும் குற்றம் வராமல் காத்துக்கொள்ளவேண்டும் (கு.433); குற்றமே ஒருவனுக்கு அழிவை உண்டாக்கும் (கு.434) என்கிறார் வள்ளுவர். மேலும், தன்னுடைய குற்றத்தைக் கடிந்த பின்பு பிறர் குற்றத்தைக் கடிதல் வேண்டும் (கு.436); அதுவே ஆட்சிமுறைக்கு உரிய பண்பாகும்; மன்னன் தற்புகழ்ச்சி கொள்ளக்கூடாது; நன்மைதராத தீயசெயல்களைச் செய்யக்கூடாது (கு.439) என்று அறிவுறுத்துகிறது வள்ளுவம்.எனவே, பிறருடைய பகை, பழி இவற்றிற்கு இடந்தராமல் அரசன் குற்றத்தைக் கடிதல் வேண்டும் என்பது வள்ளுவர் வாய்மொழி ஆகும்.

ஒருவர் குற்றங்கள் வராமல் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டும் (அறநெறி.6) என்று அறிநெறிச்சாரம் அறிவுறுத்துகிறது. நீதிநெறிவிளக்கம், மனம், மொழி, மெய்களால் குற்றம் நிகழாதவாறு நடந்துகொள்ளவேண்டும் என்றும் குற்றத்தைக்கடிதல் அறிவுடையோர் குணமாகும் (நீதி.நெ.வி.60) என்றும் கூறுகிறது. மேலும், ஒருவன் தன்னிடம் தினையளவு குற்றம் இருப்பினும் அதை நீக்கிவிட வேண்டும் என்று கூறி வள்ளுவத்தை வழிமொழிகிறது.

நீதிநூல்கள், ஒருவன் தன்னிடத்தில் உள்ள குற்றத்தைக் கடிதல் வேண்டும் என்று கூற உலகநீதி, பிறருடைய குற்றத்தைச் சொல்லிக்கொண்டு திரியக்கூடாது (உலக.3) என்றும் வெற்றிவேற்கை, சிறியவர் செய்யும் குற்றங்களைப் பெரியவர்கள்

பொறுத்துக்கொள்ள வேண்டும் (வெ.வே.31) என்றும் கூறுகின்றன. இதன்வழி அறிவில்லாத சிறியோர் நன்மை, தீமைகளைப் பகுத்துணரத் தெரியாதவர்கள்; ஆகையால், அவர்கள் செய்யும் குற்றங்களைப் பொறுப்பது பெரியோர் கடமையென வெற்றிவேற்கை கூறுவதை உணரமுடிகிறது.

வள்ளுவத்தில் குற்றங்கடிதல் அரசனுக்குச் சொல்லப்பட்டாலும் அது தனிமனித வாழ்விற்கும் பொதுவாழ்விற்கும் பொருந்தும். ஒருவன் சிறிய குற்றம் செய்தாலும் அது பெருங்குற்றமாகக் கருதப்படவேண்டும் என்று நீதிநூல்கள் கூறுகின்றன. மேலும், மனம், மொழி, மெய்களால் ஏற்படும் குற்றங்களை நீக்கி வாழ்வதே அறிவுடையோர் செயலாகக் கருதப்படுகிறது.

### 5.1.7. பெரியாரைத் துணைக்கோடல்

ஒருவனுடைய குணங்களை ஆராய்ந்த பின்பு அவனுடைய உயர்வினைப் பாராட்டுவதும் தவறுகளை நீக்கச்செய்வதும் பெரியோரின் செயலாகும். அவர்கள் அறிவிலும் அனுபவத்திலும் சிறந்தவர்கள். ஆதலால், அத்தகையப் பெரியாரின் துணை நாடாளும் மன்னனுக்குக் கட்டாயம் தேவை என்று வலியுறுத்துகிறார் வள்ளுவர். எனவேதான் அறத்தைப் பற்றி அறிந்த அறிவுடையவர்களை ஒருவன் துணையாகக் கொள்ளவேண்டும் (கு.441); அவர்களைச் சுற்றத்தாராக்கிக் கொள்ளும் வல்லமை எல்லாவற்றிலும் சிறந்ததாகும் (கு.444); அத்தகையவனுக்குத் தீங்கு செய்யக்கூடிய பகைவன் ஒருவனும் இல்லை (கு.446) என்கிறது வள்ளுவம்.

பெரியாரின் துணையில்லாத அரசன் பகைவன் இல்லாவிட்டாலும் கெடுவான் (கு.448); முதல் இலார்க்கு ஊதியம் இல்லாததுபோல பெரியாரின் துணை இல்லாதவருக்கு நிலைபேறு இல்லை (கு.449) என்றும் அரசன் பகையைத் தேடிக் கொள்வதைவிடப் பத்துமடங்கு தீமை பெரியாரின் துணையின்மையால் உண்டாகும் (கு.450) என்றும் வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

“தலைவன் யார் என்ற கவலையே இல்லாமல் பொது நன்மையே கருத்தில் கொண்டு, நன்மை தீமைகளை நடுநிலையிலிருந்து எடுத்துக்கூறித் தவறுகண்ட

போது கடிந்து திருத்த முயலும் பெரியோர்களின் துணைக்கொள்ள வேண்டும்”[15] என்கிறார் மு.வரதராசனார்.

ஆத்திசூடியில் பெரியோரின் துணைகொண்டு அவர்கள் சொற்படி நடக்க வேண்டும் (ஆத்.83,95) என்று கூறிய ஔவையார், கொன்றைவேந்தனில் பெரியோரின் வார்த்தை அமிர்தம் போன்றது (கொ.வே.75) என்று குறிப்பிடுகிறார்.

நல்லாரைக் காண்பது சிறப்பானதாகும் (மூது.18) என்று கூறுகிறது மூதுரை. அறத்தின் தன்மையைப் பிறர்க்கு உணர்த்தி அவர்களை அடக்கி ஆளும் தன்மை கொண்டவர் பெரியோர் (அறநெறி.96) என்கிறது அறிநெறிச்சாரம். மேலும், பெரியோருடன் நட்புகொண்டவனிடம் செல்வம் பெருகும்; பழிபாவங்கள் நிகழாது என்று கூறுகிறது இந்நூல்.

பெரியோர்கள் இல்லாத நாட்டில் குடியிருப்பதைவிட தேனை உண்ணும் குறவருடைய மலைநாட்டில் வாழ்வதே சிறப்பு (வெ.வே.64) என்று அறிவுறுத்துகிறது வெற்றி வேற்கை. உலகநீதி, மூத்தோர் சொற்களை மறக்கக்கூடாது (உலக.5) என்று வற்புறுத்துகிறது. நீதிநெறிவிளக்கம், பெரியோரைத் துணைகொள்ளாத ஒருவனுக்கு ஏற்படும் தீங்கினை எடுத்துரைக்கிறது. செல்வக்களிப்பினால் பெரியோரை எதிர் கொண்டவனிடத்தில் திருமகள் அவனை விட்டு நீங்கி, அதனால் மூதேவியின் சேர்க்கை உண்டாகும் (நீதி.நெ.வி.36) என்கிறது. எனவே, ஒருவன் பெரியோரை எதிர்த்து நின்றால் செல்வம் நீங்கி வறுமையில் வாட நேரிடும் என்பதை இந்நூல் வழி அறியமுடிகிறது.

பெரியோரைச் சேர்ந்தால் ஒருவனுக்கு உயர்வு உண்டாகும் (நீதி.வெ.2) என்று சிறப்பிக்கிறது நீதிவெண்பா. வேதநாயகர், ‘தாழ்ந்தோர் உயர்ந்தோர்க்கு அடங்கல்’ என்று ஓர் அதிகாரம் அமைத்துள்ளார். குடிகளாகிய மாணாக்கர், வீட்டுவேலை செய்வோர், கொல்லர், தச்சர், நாவிதர், வண்ணார், வேலையாட்கள், தொழிலாளர்கள் எல்லோரும் உயர்ந்தோர் சொல்லுக்கு அடங்கி அவரவர் செய்யும் தொழிலைப் பெருமையுடன் செய்யவேண்டும். இத்தகையவனுக்கு இம்மையின்பமும் மறுமை இன்பமும் எளிதில் கிட்டும் (நீதி.நூ. அதி.14 பா.2) என்கிறார்.

அறிவில் சிறந்த பெரியோர்களையும் சான்றோர்களையும் ஒவ்வொருவரும் துணையாகக் கொள்ளவேண்டியதன் அவசியத்தைத் திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் வலியுறுத்துகின்றன. திருக்குறள், நல்லாட்சி நடத்த அரசன் பெரியோரைப் துணைகொள்ளவேண்டியதன் அவசியத்தை வலியுறுத்துகிறது.. திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் பெரியோரின் சொல்லுக்குக் கட்டுப்பட்டு ஒவ்வொருவரும் நடக்கவேண்டும் என்று கூறிச்செல்கின்றன.

### 5.1.8. சிற்றினம் சேராமை

நற்பண்புகளைப் பெற்று வாழவிரும்பும் ஒருவன் அறிவற்ற கீழ்மக்களுடன் சேரக்கூடாது. அவ்வாறு சேர்ந்தால் பல துன்பங்களை அடைய நேரிடும் என்பதை உணர்த்த 'சிற்றினம் சேராமை' அதிகாரத்தை அமைத்துள்ளார் வள்ளுவர்.

பெரியோர்கள் சிற்றினத்தைக் கண்டு அஞ்சி ஒதுங்குவர் (கு.451); ஏனெனில், ஒருவன் சேரும் இனத்தைப் பொறுத்து அவனுடைய அறிவு வளரும் (கு.452); ஒருவனுடைய உள்ளத்தூய்மையும் வினைத்தூய்மையும் அவன் சார்ந்துள்ள இனத்தைப் பொறுத்தே அமையும் (கு.455) என்று வள்ளுவம் கூறுகிறது. இனத் தூய்மை கொண்டவன் செய்யும் செயலால் நன்மை அடையமுடியும் (கு.456) என்கிறது குறட்பா. மேலும், இனத்தின் நலம் ஒருவனுக்குப் புகழைத் தேடித்தரும் (கு.457) என்றும், இனத்தின் நன்மையால் அவனுக்கு மறுமையின்பம் கிடைக்கும் (கு.459) என்றும் கூறுகிறார் வள்ளுவர். ஒருவனுடைய அறிவு, செயல் அனைத்தும் அவன் சேரும் இனத்தைச் சார்ந்தே அமையும் என்பதை உணர்ந்து, தீமைதரக்கூடிய சிற்றினத்தை ஒதுக்கி நன்மை தரும் இனத்தையே ஒருவன் துணைக்கொள்ள வேண்டும் என்று வள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

'பையலோடிணங்கேல்' (ஆத்.85) என்கிறது ஆத்திசூடி. இதற்கு "அறிவில்லாத தீய சிறுவர்களுடன் சேரக்கூடாது"[16] என்று விளக்கம் தருகிறார் துரை-தண்டபாணி. மேலும், மூர்க்கத்தன்மை கொண்டவர்களிடம் ஒருவன் சேரக்கூடாது (ஆத்.93) என்று அறிவுறுத்துகிறது ஆத்திசூடி. தீயவர்களுடைய சேர்க்கை துன்பத்தைத் தரும் (கொ.வே.48) என்று கொன்றைவேந்தன் நவில்கிறது.

மூதுரை, கீழ்மக்களின் மனம் கல்லைப் போன்று எதற்கும் இளகாத தன்மை கொண்டது. ஆகையால், அவர்களுடன் சேரக்கூடாது (மூது.9) என்று கட்டளை யிடுகிறது. தீயவர்கள் நட்பு நாளுக்குநாள் தேய்ந்து பயனின்றி அழியும் என்பதை நன்னெறி,

*“நல்லார் செயுங்கேண்மை நாடோறும் நன்றாகும்*
*அல்லார் செயுங்கேண்மைஆகாதே” (நன்.38 : 1-2)*

என்ற பாடல்வழி விளக்குகிறது.

கீழ்மக்கள் தமக்குத் துன்பம் நேர்ந்தாலும் அவற்றிலிருந்து தப்பிப் பிழைக்க முயற்சி செய்யமாட்டார்கள் (நீதி.நெ.வி.33) என்று நீதிநெறிவிளக்கம் குறிப்பிடுகிறது. கீழ்மக்களுக்கு நன்மை, தீமை, இன்பம், துன்பம் இவற்றை ஆராயத் தெரியாது என நீதிநெறிவிளக்கம் சுட்டுவதை அறியமுடிகிறது.

விவேகசிந்தாமணி, சிற்றினத்தாருடன் சேர்ந்தவர் நல்வாழ்வை அடைய முடியாது; ஆகையால், அவர்களுடன் நட்புக்கொள்ளக்கூடாது (வி.சி.தொ.Iபா.48) என்று வற்புறுத்துகிறது.

கீழ்மக்களிடத்தில் ஒருவன் சேரக்கூடாது (உலக.7) என்று உலகநீதி கட்டளையிடுகிறது. நீதிவெண்பா, அறிவில் சிறியோர் பிறரிடம் பேசும்பொழுது சிடுசிடுத்துப் பேசுவர் (நீதி.வெ.35) என்று சிறியோர் இயல்பினைச் சுட்டுகிறது.

“சிற்றறிவினையுடையவர்கள் எப்பொழுதும் சிடுசிடு என்று இரைச்சலெடுத்துப் பேசுவார்கள். கல்வி கேள்விகளால் நிறைந்து அடங்கிய பேரறிவாளர்கள் அப்படி சிடு சிடு என்னும் இரைச்சல் பேச்சொன்றும் பேசமாட்டார்கள்”[17] என்று தி.சு.பாலசுந்தரம் பிள்ளை விளக்குகிறார்.

வேதநாயகர், ‘தீயாரைச் சேராமை’ என்ற அதிகாரத்தின்வழி தீயவரின் இயல்பையும், மேலோர் அவர்களைச் சேர்வதால் ஏற்படும் இழிநிலை பற்றியும் விளக்குகிறார்: அதாவது, தீயோருடன் தீயோரே பழகுவர் அறிவுடையவர் கீழோரைச் சேர்ந்தால் இழிவினை அடைவர் (நீதி.நூ.அதி.30 பா.2); மக்கள் உயர்வதும்

தாழ்வதும் அவரவர் சார்ந்த இனத்தின் தன்மையைப் பொறுத்து அமையும் (பா.6) என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒருவனுடைய நல்ல பண்பும் தீய பண்பும் அவன் சேரும் இனத்தைப் பொறுத்து அமையும். அதனால் சிற்றினத்தாருடன் சேராமல் நற்பண்பு கொண்டவருடன் ஒருவன் நட்புகொள்ளவேண்டும் என்று நீதிநூல்கள் அறிவுறுத்துவதை உணரமுடிகிறது.

### 5.1.9. தெரிந்து செயல்வகையும் தெரிந்துதெளிதலும்

ஒருவன் ஒரு வினை அல்லது செயலைச் செய்வதற்குத் தொடங்கும் முன்பு எண்ணிப்பார்த்து முடிவு செய்தலே தெரிந்து செயல்வகையாகும். "அதாவது அரசன், தான் வினைகளை ஆராய்ந்து செய்யும் திறம்"[18] என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர். தெரிந்து தெளிதல் என்பது ஒருவனின் குணத்தை ஆராய்ந்து செயல்படுதல் என்றும் 'தெரிந்து வினையாடல்' ஒருவனின் தகுதி, திறமையறிந்து செயலில் அமர்த்துதல் என்றும் குறிப்பிடப்படுகிறது. தெரிந்து தெளிதல் என்பதற்கு "அமைச்சர் முதலாயினாரைப் பிறப்பு, குணம், அறிவு என்பனவற்றையும் செயலையும் காட்சி, கருத்து என்னும் அளவைகளான் ஆராய்ந்து தெளிதல்"[19] எனப் பரிமேலழகர் விளக்கம் தருகிறார். நாடாளும் மன்னன் தன்னுடைய ஆட்சிக்கு வேண்டிய அமைச்சர், தூதர், ஒற்றர், படைத்தலைவர் போன்றவர்களை ஆராய்ந்து தேர்ந்தெடுத்தலின் அவசியம் இவற்றின்வழி வலியுறுத்தப்படுகிறது.

வள்ளுவர், ஒரு வினையால் வரும் ஊதியம், இழப்பு போன்றவற்றை ஆராய்ந்த பின்னரே ஒருவன் அவ்வினையைத் தொடங்குதல் வேண்டும் (கு.461); முதற்பொருளை இழக்கவைக்கும் வினையை ஒருவன் தொடங்குதல் கூடாது (கு.463); எந்தச் செயலையும் நன்றாக எண்ணிப் பார்த்த பிறகே துணிந்து செயல்படவேண்டும் (கு.467); தெளிந்தபின் செயலைத் தொடங்கவேண்டும் (கு.464); செயலின் வகைகளைச் சூழ்ந்து தகுந்த சமயத்தில் செய்யவேண்டும் என்றெல்லாம் அறிவுறுத்துகிறார்.

அறம், பொருள், இன்பம், உயிரச்சம் ஆகிய நான்கின் திறத்தை ஆராய்ந்த பிறகே ஒருவனைத் தேர்ந்தெடுக்க வேண்டும் (கு.501); மேலும், குடிப்பிறப்பு, குணம்,

குற்றம், நாணம் ஆகியவற்றை ஆராய்ந்து தெளிதல் வேண்டும் (கு.502); சுற்றம் இல்லாதவர், அறிவு இல்லாதவர் போன்றவர்களைத் தேர்ந்தெடுக்ககூடாது (கு.506) என்கிறார் வள்ளுவர்.

தெரிந்து வினையாடலாவது "தெளியப்பட்டவரை அவர் செய்யவல்ல வினைகளை அறிந்து அவற்றின்கண்ணே ஆளும் திறம்"[20] என்று பரிமேலழகர் விளக்கம் தருகிறார். வள்ளுவர், நன்மை, தீமையை ஆராய்ந்து பொருத்தமான செயலில் ஒருவனை அமர்த்துதல் வேண்டும் (கு.511); அரசன் நாட்டில் ஏற்படும் இடையூறுகளை நீக்குபவனாகவும், அன்பு, அறிவு, தேற்றம், அவாவின்மை ஆகிய பண்புகளைப் பெற்றவனாகவும் (கு.513), செயலைச் செய்கின்ற தன்மை, காலம் ஆகியவற்றை அறிந்து செயல்படும் திறமை உள்ளவனாகவும் இருத்தல்வேண்டும் (கு.516) என்கிறார். மேலும், வினையைச் செய்பவனின் தகுதி அறிந்து தேர்ந்தெடுக்கவேண்டுமே அன்றி சிறந்தவன் என ஏவக்கூடாது என்பதை வள்ளுவர்,

*"அறிந்துஆற்றிச் செய்கிற்பாற்கு அல்லால் வினைதான்*
*சிறந்தானென்று ஏவற்பாற் றன்று" (குறள்.515)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார். மேலும், ஒருவனை ஆராய்ந்த பிறகே அவனிடம் தொழிலை ஒப்படைக்கவேண்டும் (கு.518) என்றும் வினையைச் செய்பவனை நாள்தோறும் சென்று ஆராய்தல் வேண்டும் (கு.520) என்றும் குறிப்பிடுகிறார். "ஒரு திட்டம் வெற்றியுடன் முடியவேண்டுமானால் முதலில் அத்திட்டத்தை நடத்துவதற்கு தகுதியும் திறமையும் உள்ளவரைத் தேர்ந்தெடுக்கவேண்டும்; அவரிடம் அத்திட்டத்தை நடத்தும் பொறுப்பு முழுவதையும் ஒப்படைக்கவேண்டும்; அத்திட்டத்தின் வெற்றி தோல்விக்கு அவரையே முழுப்பொறுப்பாளியாக்கிவிட வேண்டும்; இவ்வாறு செய்துவிட்டால் அவர் ஊக்கமுடன் உழைப்பார். திட்டத்தை வெற்றியுடன் முடித்து மக்கள் பாராட்டைப் பெறவேண்டும் என்ற ஆவலுடன் வேலை செய்வார்"[21] என்று சாமி. சிதம்பரனார் குறிப்பிடுகின்றார். வள்ளுவரால் சொல்லப்பட்ட தகுதியும் திறமையும் மன்னனுக்கு உரியவை என்றாலும் மக்களுக்கும் அவை பொருந்துவனவாக அமைகின்றன எனலாம்.

ஆத்திசூடி, ஒருவனுடைய குணத்தை அறிந்தபின்பு அவனுடன் பழகுதல் வேண்டும் (ஆத்.19) என்று அறிவுறுத்துகிறது. அறநெறிச்சாரம், ஒருவனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவன் செய்யும் செயலே காரணமாகும்; இன்பம், துன்பம் இரண்டும் மாறிமாறி வரும்பொழுது அவற்றைக்கண்டு மகிழ்ச்சியும் வருத்தமும் கொள்ளாமல் அவை எந்த வினைகளால் வந்தவை என்று ஆராய்ந்து தெளிதல் வேண்டும் (அறநெறி.150) என்கிறது. நீதிநெறிவிளக்கம், வினையின் அடிப்படைக் காரணத்தை உணர்ந்து அதன் பயனை ஆராய்ந்த பின்பு அதைச் செய்யத் தொடங்குதல் வேண்டும் (நீதி.நெ.வி.52) என்கிறது. நிதீவெண்பா, ஒருவன் ஒருசெயலைச் செய்யும்பொழுது ஆராய்ந்து செய்யவில்லை என்றால் அச்செயல், செய்பவனைப் பெருந்துன்பத்திற்கு உட்படுத்தும் (நீதி.வெ.16)என்று உணர்த்துகிறது.

மேற்கூறப்பட்டுள்ள கருத்துக்களின்வழி, திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் ஒரு செயலைச் செய்யும் பொழுது ஆராய்ந்து செயல்படவேண்டியதன் தேவையை வற்புறுத்துவது குறித்து அறியமுடிகின்றது.

### 5.1.10. வலியறிதல்

ஒருவன் ஒரு செயலைச் செய்து வெற்றிபெற, தனக்கும் தன் பகைவர்க்கும் உள்ள வலிமைகளை ஆராய்ந்து தொடங்குதல் என்பதே ‘வலியறிதல்’ எனப்படும். பரிமேலழகர், “அவ்வுபாயங்களுள் ஒறுத்தல் குறித்த அரசன் நால்வகை வலியையும் அளந்தறிதல் என்று விளக்கம் தருகிறார்”.[22] வள்ளுவர், வலியறிதல் பற்றிக் கூறுகையில், வினை வலியும் தன்வலியும் மாற்றான்வலியும் துணை வலியும் ஆராய்ந்து ஒருவன் செயல்படவேண்டும் (கு.471); வினையின் வலிமை பொருளின் அளவு, வருவாய் அளவு, செலவின் அளவு போன்றவற்றின் அளவுகளை ஆராய்ந்து வலிமைக்கு ஏற்றவாறு செயல்படவேண்டும் (கு.473) என்கிறார். பொருளின் அளவை ஆராயாமல் மேற்கொள்ளும் ஒப்புரவினால் செல்வத்தின் அளவு விரைவில் கெடும் (கு.480) என்று கூறுகிறது வள்ளுவம். அரசன் மக்களுக்குப் பொருள் வழங்கி உதவி செய்தல் வேண்டும்; ஆயின் அதுவும் எல்லை கடந்தால் கேடுவரும் (கு.479); இதனை உணர்ந்து அரசன் அளவறிந்து செயல்படவேண்டும் என்று குறள் வலியுறுத்துகின்றது.

ஆத்திசூடி, தன்னிடத்தில் உள்ள பொருளை வீண்செலவு செய்யாமல் வாழ வேண்டும் (ஆத்.85) என்கிறது. கொன்றைவேந்தன், பொருளினைத் தேடாமல் தன்னிடத்தில் உள்ள பொருளைச் செலவழிக்கக்கூடாது (கொ.வே.44); அதிகமான செல்வத்தைப் பெற்றவனாக இருந்தாலும் வருவாய்க்கு ஏற்ற செலவு செய்யவேண்டும் (பா.81) என்று அறிவுறுத்துகிறது.

வரவுக்கு மிகுதியாகச் செலவு செய்பவன் பழிபாவங்களை அடைவான்; மானங் கெட்டு மதியிழந்து நிற்பான்; தான் செல்லும் திசைகளில் திருடனாகி, எழுவகைப் பிறப்புகளிலும் பாவத்தினைப் பெற்று வாழ்வான் (நல்.25) என்று நல்வழி எடுத்து உரைக்கின்றது. முதலாக வரும் பொருளை வைத்துக்கொண்டு வாணிபம் செய்து, அதனால் வரும் லாபத்தை அனுபவிக்காத வணிகனைப் 'பதர்' என்று சாடுகிறது (வெ.வே.97) வெற்றிவேற்கை. மொத்தத்தில் ஒருவன் வரவுக்குத் தக்க செலவு செய்யவேண்டும் என்று பிற்காலநீதிநூல்கள் வற்புறுத்துகின்றன.

ஒருவன், தான் பெற்ற பொருளைக் கொண்டு மகிழாமல், மேலும் பொருளைப் பெற விரும்பினால் கையில் உள்ள பொருளையும் இழந்து, தானும் அழிந்து போவான் (நீதி.நெ.வி.64) என்கிறது நீதிநெறிவிளக்கம். 'போதும் என்ற மனமே பொன்செய்யும் மருந்து' என்பதற்கு ஏற்பத் தமக்குக் கிடைத்த பொருளைக் கொண்டு இன்புற்று வாழ வேண்டும் என்று நீதிநெறிவிளக்கம் வலியுறுத்துவதை அறியமுடிகிறது.

விவேகசிந்தாமணி, பொருள் இருந்தால் மட்டுமே ஒருவன் புகழ், புண்ணியம், பெருமை போன்றவற்றைப் பெறமுடியும்; இல்லையெனில் அவன் வாழ்ந்தும் பயனில்லை (வி.சி.தொ.Iபா.61) என்கிறது. ஒருவன் வருவாய்க்கு ஏற்ற செலவு செய்து, பொருளைச் சேகரித்தலின் அவசியத்தை விவேகசிந்தாமணி உணர்த்துகிறது.

திருக்குறள், மாற்றான்வலி, தன்வலி, வரவு, செலவு, ஊதியம் ஆகியவற்றை ஆராய்ந்து, தத்தம் வலிமைக்கு ஏற்றவாறு ஒவ்வொருவரும் செயல்படவேண்டும் என்று அறிவுறுத்துகின்றது. பிற்காலநீதிநூல்கள் அளவறிந்து வாழாதவனைப் பலவாறு சாடுகின்றன.

### 5.1.11. காலம் அறிதல்

ஒருவன் செய்யத்தக்க செயலைக் காலம் அறிந்து செய்து முடிக்கவேண்டும். இல்லையெனில் அச்செயலால் ஒருவனுக்கு எந்தப்பயனும் இல்லை. காலமாற்றத்தால் பற்பல மாறுதல்கள் உண்டாகின்றன. சிலர் எக்காலத்தையும் வெல்லும் திறமை பெற்றவர்களாக இருப்பார்கள்; ஏனெனில், அவர்கள் காலத்தை நன்கு அறிந்தவர்கள். காலம் அறிந்து செயல்படுதல் நாடாளும் மன்னனுக்கு மிகவும் அவசியமானதாகும் என்று எண்ணிய வள்ளுவர் 'காலமறிதல்' அதிகாரத்தை அரசியலில் வைத்துள்ளார்.

கூகையை வெல்வதற்குக் காக்கைக்குச் சரியான காலம் பகல் பொழுதாகும் (கு.481); அதுபோலப் பகைவரை வெல்லக்கருதும் வேந்தர், செல்வம் தன்னிடமிருந்து நீங்காமல் சேர்க்க நினைக்கும் வேந்தர், செய்யத்தக்க செயலைச் செய்துமுடிக்க நினைப்பவர், உலகத்தையே ஆளக்கருதுபவர், ஊக்கமுடையவர், அறிவுடையவர் என்பன போன்றோர் காலம் அறிந்து செயலாற்றவேண்டும் (கு.482,483, 484,485,486,487) என்று குறிப்பிடுகின்றார் வள்ளுவர். காலம் வரும் வரை ஒருவன் செயல்புரியக் காத்திருக்க வேண்டும் என்று வள்ளுவர் வாய்ச்சொல் உணர்த்துகிறது. பொறுத்திருக்கும் காலத்தில் ஒருவன் கொக்குபோல் அமைதி காத்துக் காலம் வாய்த்தபோது செய்துமுடிக்க வேண்டும் என்பதை,

*"கொக்குஒக்க கூம்பும் பருவத்து; மற்றுஅதன்*
*குத்துஒக்க சீர்த்த இடத்து"* *(குறள். 490)*

என்ற குறட்பாவழி அறிமுடிகிறது.

ஆத்திசூடி, உரிய காலத்தில் பயிர் செய்யவேண்டும் (ஆத்.22) என்று கூறி, உழவுத்தொழிலின் சிறப்பை உணர்த்துகிறது. மூதுரை, எந்தச் செயலும் முடியும் காலத்தில்தான் முடியும்; ஆகையால், காலம் அறிந்து செயல்படவேண்டும் (மூது.5) என்று கட்டளையிடுகிறது. ஒரு செயலைச் செய்ய நினைக்கும் ஒருவனுக்கு, முடிய வேண்டிய காலம் வந்தபோது அச்செயலானது கைகூடும் (நல்.4) என்று நல்வழியும், ஒருவன் வினையைச் செய்யும்போது காலத்தையும் இடத்தையும் ஆராய்ந்து செயல்படவேண்டும் (நீதி.நெ.வி.52) என்று நீதிநெறிவிளக்கமும் கூறுகின்றன.

நீதிவெண்பா, ஒருவன் பேசும்பொழுது காலத்தையும் இடத்தையும் அறிந்து பேசவேண்டும் (நீதி.வெ.67) என்று கூறுகிறது.

வேதநாயகர், உயிருடன் வாழும்போதே உரிய காலத்தில் ஒருவன் விரைந்து அறம் செய்தல் வேண்டும்; உயிர் நீங்கிய உடம்பு சுடப்படும் காடு நாள்தோறும் விரைந்துவா என்று அழைத்துகொண்டு இருக்கிறது; கூற்றுவன் எந்த நேரத்திலும் நெருங்குவான்; ஆதலால், கூற்றுவன் நெருங்கும் காலத்துக்கு முன்பே ஒருவன் புண்ணியத்தைச் செய்தல் வேண்டும் (நீதி.நூ.அதி.42 பா.4) என்கிறார்.

திருக்குறள், காலம் அறிந்து ஒருவன் செயலில் ஈடுபடவேண்டும் என்று வற்புறுத்துவதை அறியமுடிகிறது. தொழில், பேச்சு, அறம் ஆகியவற்றைச் செய்யும் ஒருவர் காலத்தை அறிந்து செய்தல்வேண்டும் என்று பிற்காலநீதிநூல்கள் கூறுவதை அறியமுடிகின்றது.

### 5.1.12. இடனறிதல்

இடனறிதல் என்பது, அரசன் வினைசெய்யும் இடத்தை அறிதலாகும். அரசன் உடல்வலிமை, படைவலிமை போன்ற வலிமைகள் பெற்று இருந்தாலும் அவனுக்குப் பகைவரை வெல்லுவதற்குரிய இடவலிமையும் தேவையாகும். இடம் சரியாக இல்லையெனில் ஒருவருக்குத் தோல்வியே உண்டாகும் என்பதை உணர்ந்த வள்ளுவர் 'இடனறிதல்' அதிகாரத்தை அமைத்துள்ளார்.

ஒருவன் செயலைச் செய்ய தொடங்கும் முன்பு, செயல் செய்யும் இடத்தை அறிதல் வேண்டும் (கு.491); இடனறிந்து செயல்படுவோரின் தன்மையை அறிந்து பகைவர் தம் எண்ணத்தை இழந்துவிடுவர் (கு.494); முதலை ஆழமுள்ள நீரில்தான் பிற உயிர்களை வெல்லும் (கு.495); ஆனால், நீரைவிட்டு நீங்கிவிட்டால் அம்முதலையைப் பிற உயிர்கள் வென்றுவிடும் என்று சான்றுகாட்டி, இடனறிந்து செயல்படவேண்டியதன் தன்மையை உணர்த்துகின்றார். மேலும், நிலத்தில் ஓடும் ஆற்றல் மிக்க பெரிய தேர்களால் கடலின்கண் ஓடமுடியாது (கு.496); செய்யும்

செயலைத் தக்க இடத்தில் பொருந்திச் செய்வதற்கு அஞ்சாமையைத் தவிர வேறு துணை தேவையில்லை (கு.497) என்று வள்ளுவர் வலியுறுத்துகின்றார்.

நீதிநெறிவிளக்கம், ஒருவன் வினையைச் செய்ய தொடங்குமுன்பு இடத்தை ஆராய்ந்து தொடங்குதல் வேண்டும் (நீதி.நெ.வி.52) என்கிறது. விவேகசிந்தாமணி, ஒவ்வொருவருக்கும் அவரவர் இருப்பிடமே வலிமை என்று கூறுகிறது. நீரில் இருக்கும் பொழுது பெரிய யானையைப் பற்றி இழுக்கும் முதலைக்குக் கரையில் இருக்கும் பூனையைப் பிடிக்க வல்லமை இருக்காது. அதுபோல, மன்னரும் நான்குவகை படைகளூடன் தன்னுடைய இருப்பிடத்தை விட்டுச்சென்றால் செய்வது அறியாமல் தயங்குவார் (வி.சி.தொ.I பா.53).எனவே, படையினை உடைய மன்னர்கள் தன்னுடைய இருப்பிடத்தை விட்டு வேறு இடத்திற்குச் சென்று போரிடக்கூடாது என்று விவேகசிந்தாமணி வலியுறுத்துகிறது.

ஒருவன் ஒரு செயலைத் தொடங்கும் முன்பு இடத்தின் வலிமையை அறிந்து செயல்படவேண்டும் என்று நீதிநூல்கள் அனைத்துமே வலியுறுத்துகின்றன.

### 5.1.13. சுற்றந்தழால்

ஒருவன் வறுமையுற்று வாடும் காலத்தில் அவனைத் தம்மோடு சேர்த்துக் கொண்டு இன்பமடையச் செய்பவர்கள் சுற்றத்தார்கள். இத்தகைய சுற்றம் தனிமனிதனுக்கு மட்டுமல்லாது நாடாளும் மன்னனுக்கும் தேவை என்பதன் அடிப் படையில் வள்ளுவர் ‘சுற்றந்தழால்’ என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார்.

வள்ளுவர், ஒருவன் வறியவனான பொழுதும் பழமையைப் பாராட்டுபவர்கள் சுற்றத்தார்கள்; அன்புடையவனாகவும் ஈகை பண்பு கொண்டவனாகவும் இன்சொல் கூறுபவனாகவும் (கு.525); கொடைத்தன்மை கொண்டும் சினமற்றவனாகவும் விளங்கும் ஒருவன் சுற்றத்தாரைப் பெற்றிருப்பது போல இந்த உலகில் வேறு யாரும் இல்லை (கு.526) என்கிறார். மேலும், காக்கை போன்று சுற்றத்தைக் கூவி அழைத்து உண்ணும் இயல்பு ஒருவனுக்கு இருத்தல்வேண்டும் (கு.527) என்றும் தன்னிடமிருந்து

பிரிந்து மீண்டும் தன்னை நாடி வருபவனை அரசன் ஆராய்ந்து உறவுகொள்ள வேண்டும் (கு.530) என்றும் வள்ளுவம் நவில்கிறது.

"சுற்றந்தழால் என்ற ஒரு அதிகாரத்தில் நாம் பொதுவாகப் படிக்கும்போது ஒவ்வொவரும் தங்கள் சுற்றத்தார்களைத் தழுவி வாழவேண்டும் என்ற எண்ணம்தான் வருகின்றது. ஆனால், 'ஊழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன் இழைத்து இருந்து எண்ணிக் கொளல்' என்ற கருத்தைச் சொல்லுகின்றார் திருவள்ளுவர். சுற்றம் என்றால் குடிமக்களைச் சார்ந்திருக்கின்ற சுற்றம் மட்டும் அன்று. அரசரைச் சார்ந்து வாழ்கின்ற அரசுகளையும் குறிக்கின்ற போக்கில் அவர் விளக்குகின்றார். ஆகவே, எங்கும் அரசனையும் குடிமக்களையும் மறக்கவில்லை என்றுதான் கூறவேண்டியிருக்கிறது. ஆக முடிமன்னவர்க்கும் குடிமக்களுக்கும் உரிய அரசியலை இணைத்தே கூறுகின்றார் திருவள்ளுவர் என்ற கருத்தை எண்ணிப்பார்க்க வேண்டும்"[23] என்கிறார் மு. வரதராசனார்.

ஊரில் உள்ளவர்களுடன் ஒருவன் கூடி வாழவேண்டும் (ஆத்.104) என்று ஆத்திசூடி அறிவுறுத்துகிறது. ஒருவன் குடும்பத்துடன் உறவுகொண்டு வாழ்வதோடு, ஊரில் உள்ள மக்களோடும் கூடி வாழ்ந்து நட்பை வளர்த்துக்கொள்வது சிறந்தது என்று அறிவுறுத்துகிறது இந்நூல். கொன்றைவேந்தன், சுற்றத்தார்களால் சூழப்பட்டு வாழ்வதே ஒருவனுக்கு அழகாகும் (கொ.வே.30); பிறர் குற்றம் பார்ப்பவனுக்குச் சுற்றம் வராது (பா.18) என்று எடுத்துரைக்கிறது.

அறநெறிச்சாரம், ஒருவன் வறுமையுற்ற பொழுது பகுத்துக்கொடுத்துத் தாமும் உண்டு வாழ்பவரே சுற்றத்தார்கள் என்றும் அறமே ஒருவனுக்குத் தந்தை; நற்குணமே அவனுக்குத் தாய்; கல்வியே அவனுக்கு நண்பன்; துணிவு அவனுக்குத் தம்பி எனவும், இத்தகைய உறுதிதரக்கூடிய சுற்றமே உண்மையான சுற்றமாகும் (அறநெறி.212) என்றும் கூறுகிறது. உற்றோர் எல்லாம் உறவினர் ஆகமாட்டார்; துன்பம் வரும்பொழுது உறவு கொள்பவரே சுற்றத்தார் ஆவார் (வெ.வே.3) என்று வெற்றிவேற்கையும், பகையுடைய வஞ்சகரிடத்தில் உறவு வைத்துக்கொள்ளக் கூடாது (நீதி.நெ.வி.56) என்று நீதிநெறிவிளக்கமும் கூறுகின்றன. மாற்றானை உறவு

என்று நம்புதல் கூடாது; தம்மை உதாசினம் செய்த உறவினர்களிடத்தில் ஒருவன் உறவு வைக்கக்கூடாது (உலக.10) என்று உலகநீதியும், தீயோர்க்கு நன்மை செய்பவன் தன் சுற்றத்தாருடன் சேர்ந்து அழிவான் (நீதி.வெ.74) என்று நீதிவெண்பாவும் கூறுகின்றன.

வேதநாயகர், கணவன், மனைவியின் சுற்றத்தாரிடமும் மனைவி கணவனின் சுற்றத்தாரிடமும் அன்பு செய்து வாழவேண்டும் (நீதி.நூ.அதி.11 பா.37) என்கிறார்..

நீதிநூல்கள், சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும் சுற்றத்தைப் பேணி வாழ வேண்டும் என்று அறிவுறுத்துகின்றன. பகைவரிடமும் தம்மை மதிக்காதவனிடமும் உறவுகொள்ளக்கூடாது என்று பிற்கால நீதிநூல்கள் வலியுறுத்துகின்றன. திருக்குறள் அரசனுக்கு வேண்டிய சுற்றத்தைப் பற்றிக் கூறினாலும் அது ஒவ்வொரு தனி மனிதனுக்கும் கூறும் பொதுவான கருத்தாக அமைகிறது. ஆத்திசூடி ஒருவனுக்குச் சுற்றம் எனக் கருதப்படுவது உறவினர் மட்டுமல்ல; அவன் வாழும் ஊரில் உள்ள மக்களும்தான் என்று கூறுகிறது. ஔவையார், ஒருவன்தான் வாழும் ஊரில் உள்ள மக்களுடன் நட்புகொண்டால்தான் அவனது வாழ்க்கை இனிதாக அமையும் என்று கருதுவதை அறியமுடிகிறது. அக்காலத்தில் ஊர் என்பது 50 முதல் 100 குடும்பங்கள் கொண்டதாக விளங்கி இருக்கலாம். ஊர் மக்கள் ஒற்றுமையுடன் செயல்படவேண்டும்; அப்பொழுதுதான் சமுதாயத்தில் அமைதி நிலவும் என்றும், ஒருவனின் உறவினர் வேறு ஊர்களில் இருக்கும்போது அவனுக்கு உதவுபவர்கள் அவ்வூரில் அக்கம் பக்கத்தில் உள்ளோரே என்ற அடிப்படையிலும் இவ்வாறு கூறியிருக்கலாம். ‘ஊரோடு ஒத்துவாழ்’ என்பதும் இதற்கு அடிப்படை ஆகும்.

வேதநாயகர், குடும்பத்தில் அமைதி நிலவ கணவனும் மனைவியும் ஒருவர் மற்றொருவரின் சுற்றத்தாரிடம் அன்பு செலுத்தினால்தான் முடியும் என்று கருதுகின்றார். மேலும், பிற்காலத்தில் ஒவ்வொரு குடும்பத்திலும் கணவன் மனைவியரிடையே ஏற்படும் சண்டை சச்சரவுகளுக்குக் காரணம் சுற்றத்தாரே என்ற அடிப்படையில் இவ்வாறு கூறியிருக்கிறார் எனலாம்.

### 5.1.14. செங்கோன்மை

ஒரு நாட்டின் வாழ்வும் தாழ்வும் ஆட்சியாளரின் ஆட்சித் திறமையைப் பொறுத்து அமையும். நாட்டில் சிறப்புற ஆட்சி செய்வது மன்னனின் கடமை ஆகும். இதனை உணர்ந்தே வள்ளுவர் 'செங்கோன்மை' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். மன்னன் நடுவுநிலையுடன் ஆராய்ந்து செயல்படுவதே நல்லாட்சி புரிவதற்குரிய நெறியாகும். (கு.541); அறநெறியைப் பின்பற்றி ஆட்சிபுரியும் மன்னனின் கோல்நோக்கிக் குடிகள் வாழ்வர் (கு.542) என்கிறார் வள்ளுவர். அந்தணர் நூற்கும் அறத்திற்கும் அடிப்படையாக நிற்பது மன்னனின் செங்கோலாகும் (கு.543) என்றும் குடிகளைத் தழுவிச் செங்கோல் செலுத்தினால் உலகம் நிலைபெறும் (கு.544) என்றும் வள்ளுவம் நவில்கிறது. எனவே, மக்கள் நலம்பேணும் சமுதாயத்தையே காண விரும்புகிறார் வள்ளுவர்.

மன்னனுக்கு வெற்றி தருவது செங்கோலாட்சி ஆகும் (கு.546); அதாவது, செங்கோலாட்சிதான் மன்னனைக் காப்பாற்றும் (கு.547); செங்கோலாட்சி நடை பெறாத நாட்டில் பருவமழை பெய்யாது; மன்னன் தானே கெடுவான் (கு.548) என்று கூறுகிறது வள்ளுவம். மேலும், குடிமக்களைக் காக்கும் மன்னன், அவர்களுடைய குற்றங்களைக் கடிந்து அவர்களுள் கொடியவரைக் கொலைத் தண்டனையால் ஒறுத்தல் வேண்டும் என்பதை,

*"கொலையிற் கொடியாரை வேந்துஒறுத்தல் பைங்கூழ்*
*களைகட் டதனொடு நேர்"* *(குறள்.550)*

என்ற குறட்பாவழி வள்ளுவம் உணர்த்துகிறது.

"உலகிலேயே உயர்ந்த அறம் கொல்லாமையே என்பது வள்ளுவர்வழி. ஆனாலும் அரசன் சில வேளைகளில் கொலையும் செய்தே தீரவேண்டிய கட்டாயம் அமையும் என வள்ளுவர் கூறுவது நோக்கத்தக்கது. தான் வாழ்வதற்காக எவ்வுயிரையும் கொல்லக் கூடாது என்பது வள்ளுவர் கருத்து. ஆனாலும் பிறரை வாழவிடாமல் தடுக்கும் எவரையும் வாழவிடாது செய்தல் மன்னனின் செங்கோல் ஆகும் என வள்ளுவர் கூறுகிறார். உழவன், வேளாண்மை செய்து விருந்தோம்புகின்றவனாயினும், பயிர்களை

வளரச்செய்து பயன்பெறுகின்றவனாயினும் களைகளைப் பிடுங்கக்கூடாது என்று எண்ணுவானானால் அவன் தொழில், குறிக்கோள் பயனற்றுப்போகும். அதேபோல அரசன் கொடியவர்களைக் கொலைசெய்தல் வேண்டும் என்று கூறுவதால் வள்ளுவர் கருணையற்றவரோ என எண்ணத் தோன்றும். இங்குக் கண்ணோட்டம், அன்பு, அருள், கருணை ஆகிய சொற்களை நன்கு தெரிந்துகொள்ளின் அந்த மயக்கம் நீக்கும். கொலைஞனை ஒறுக்காது விடுதல் கருணையாகாது".[24] எனவே, குற்றவாளிகளைக் கண்டுபிடித்து அவர்களைத் திருத்தும் பொருட்டும் மக்கள் அவர்களிடமிருந்து பாதுகாக்கப்பட வேண்டும் என்பதன் பொருட்டும் அரசன் தண்டனை விதிக்கவேண்டும் என வள்ளுவர் அறிவுறுத்துவதை உணரமுடிகிறது.

ஆத்திசூடி, 'சக்கர நெறிநில்' (ஆத்.43) என்று மக்களுக்கு அறிவுறுத்துகிறது. "அரசனுடைய ஆணையாகிய சக்கரம் செல்லும் வழியிலே அடங்கியிரு"[25] என்று விளக்கம் தருகிறார் வேங்கடசாமி நாட்டார். மூதுரை, அரசர்கள் தம் செல்வம் குறைந்த போதிலும் மனதால் சோர்வு அடையமாட்டார்கள் (மூது.28) என்று சிறப்பிக்கிறது. மன்னவர்க்கு அழகு செங்கோல் முறைமை (வெ.வே.5) என்று வெற்றிவேற்கை கூறுகிறது.

காக்கையின் எதிரிலே நின்றுகொண்டு, காக்கை வெண்மை நிறமுடையது என்று உண்மைக்கு மாறாகப் பேசும் மக்கள் உளர். தாயைக் கொலை செய்வதும் பொருத்தமானது என்று சிலர் வாதிடுவர்; இத்தகையோரால் சூழப்பட்டுள்ளவன் அரசன். அந்த நிலையிலும் அவ்வரசன் நடுநிலையுடன் தீர்ப்பு வழங்கவேண்டும் (நீதி.நெ.வி.38); மேலும், அவ்வரசன் குடிமக்களை வருத்தி வரிவாங்காமலும் இருத்தல் வேண்டும் என்று நீதிநெறிவிளக்கம் குறிப்பிடுகிறது. மேலும், செங்கோல் ஆட்சி செய்யும் மன்னனே குடிகளுக்குத் தெய்வம்; அத்தகைய அரசனுடைய ஆணை வழியே குடிமக்கள் ஒழுகுவர் (பா.26) என்று கூறுகிறது நீதிநெறிவிளக்கம். விவேகசிந்தாமணி, நீதி தவறாமல் ஆட்சி செய்யும் மன்னன் வாழும் நாட்டில் மாதம் ஒருமுறை மழை பெய்யும் (வி.சி.தொ.**I** பா.27) என்கிறது. கொற்றவனோடு எதிர்த்துப் பேசக்கூடாது (உலக.4) என்று மக்களுக்கு அறிவுறுத்துகிறது உலகநீதி.

வேதநாயகர், 'அரசியல்பு' என்ற அதிகாரத்தில் மன்னன் குடிமக்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளையும் பண்புகளையும் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்: குடிமக்களின் துன்பத்தை நீக்கி இன்பம்பெறச் செய்பவனே சிறந்த மன்னனாவான்; குடிகளுக்குத் துன்பம் செய்பவன் தன்மகனாக இருந்தாலும் அரசன் தண்டித்தல் வேண்டும்; குடிகள் நலமே தன் நலமாகக் கருதுபவனாக அவ்வரசன் இருத்தல் வேண்டும் (நீதி.நூ.அதி.3பா.1); மன்னன் குடிகளைக் காக்கும் பொருட்டு உணவின்றி உறக்கமின்றிச் சுற்றி வருபவனாகவும் புகழுடன் நாட்டை ஆளும் திறமை பெற்றிருத்தல் வேண்டும் (பா.2) என்றும் கூறுகிறார் வேதநாயகர்.

தானம், கண்ணோட்டம், மெய்ம்மை, தவம், தெய்வ வணக்கம், பொறுமை, மானம் போன்ற குணங்களை இயல்பாகவே மன்னன் பெற்றிருத்தல்வேண்டும் (பா.5); நாட்டில் பூங்கா, சாலை, குளம், ஆறு, கோவில் போன்றவற்றை அரசன் அமைக்க வேண்டும் (பா.6); வேளாண்மை, வாணிபம், கைத்தொழில் ஆகியவற்றை அரசன் பெருகச் செய்தல்வேண்டும்; வழக்காளியும் எதிர்வழக்காளியும் சான்று சொல்வோரும் கூறுவனவற்றைக் கேட்டு நடுவுநிலைமையுடன் தீர்ப்புசொல்ல வேண்டும்; ஏனெனில், அவனுடைய செங்கோலே அவனுக்கு வெற்றியைத்தந்து வலிமையைச் சேர்க்கும் (பா.7) என்று வேதநாயகர் குறிப்பிடுகின்றார்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் நாடாளும் மன்னனுக்குச் செங்கோன்மையே வெற்றிதரக்கூடியதாக அமையும் என்றும் மன்னன் குற்றங்கள் செய்வோரைத் தண்டித்து நீதிவழங்குதல் வேண்டும் என்றும் கூறுகின்றன. மேலும், அத்தகைய மன்னன் வாழும் நாட்டில் பருவமழை தவறாது பொழியும் என்றும் கூறுகின்றன.

### 5.1.15. கொடுங்கோன்மை

நாடாளும் மன்னன் செங்கோன்மைக்கு எதிராகக் குடிகளை வருத்தித் துன்ப நிலைக்குக் கொண்டு செல்லும் ஆட்சி செய்தால் அதுவே கொடுங்கோலாட்சி

எனப்படும். அத்தகைய கொடுங்கோலாட்சி நடைபெறும் நாட்டில் பெரும் தீமைகள் ஏற்படும் என்கிறார் வள்ளுவர். அதாவது, குடிகளைத் துன்புறுத்தும் மன்னன் கொலை செய்வாரைவிடக் கொடியவன் ஆவான் (கு.551); குடிகளிடம் அதிக வரிவாங்கும் மன்னன் வழிப்பறிக்காரனுக்குச் சமமாவான் (கு.552); அத்தகையோன் பொருளையும் குடிகளையும் ஒருசேர இழக்கநேரிடும் (கு.553); கொடுங்கோல் ஆட்சி நடைபெறும் நாட்டில் மக்கள் அனைவரும் துன்புறுவர் (கு.557); மேலும், நாட்டில் பருவமழை பெய்யாது (கு.559); அந்நாடு புகழ் அடையாது; நாட்டில் ஆவின் பயனும் குன்றும்; அந்தணரும் கற்ற கல்வியை மறப்பர் (கு.560) என்கிறார்.

“முறை செய்தலும் மக்களைக் காத்தலும் அரசன் குறிக்கோள். அவற்றிற்கு மாறுபட்டவன் கொடுங்கோலன்”[26] என்கிறார் முருகரத்தனம். மன்னன் செங்கோலாட்சி செய்வதே முழுநோக்கமாகக் கொண்டிருத்தல் வேண்டும் என்பது இவற்றின்வழிப் பெறப்படுகிறது.

கோபம் கொள்ளும் அரசனுக்குத் துணையாக யாரும் இருக்கமாட்டார்கள் (கொ.வே.88) என்று கொன்றைவேந்தன் குறிப்பிடுகிறது. கொடுங்கோல் ஆட்சிபுரியும் மன்னன் நாட்டில் வாழ்வதைவிட கொடியபுலி வாழும் காட்டில் வாழ்வது மேலானது (வெ.வே.63) என்று வெற்றிவேற்கை கூறுகின்றது.

குடிமக்களைப் பாதுகாக்காத மன்னனிடம் வில், வாள், வேல் போன்ற கருவிகள் இருந்தாலும் பயன் இல்லை; அக்குடிகள் தமக்கு வேண்டியவற்றைக் கேட்டால் அரசன் அம்மக்களை அச்சுறுத்துவான்; அவர்கள் பேச்சை நின்று மன்னன் செவிமடுக்கமாட்டான் (நீதி.நெ.வி.27) என்கிறது நீதிநெறிவிளக்கம். இதன்வழி, கொடுங்கோலாட்சி நடைபெறும் நாட்டில் மக்கள் அரசனை எதிர்த்து எந்தச்செயலும் செய்ய இயலாது என்பது வெளிப்படை. குடிகளின் குறைகளைப் பார்க்காமலும் கேட்காமலும் இருப்பவன் பெருமூச்சோடு கூடிய பிணம் (பா.30) என்று குமரகுருபரர் குறிப்பிடுகின்றார். இத்தகைய மன்னன் முறையான ஆட்சி நடத்தமுடியாது என்றும் இவர் கூறுகிறார்.

நாட்டை ஆளும் மன்னன் மக்களிடத்தில் அன்பு காட்டவில்லையெனில் மக்கள் அவரவர்க்கும் அன்புகாட்டும் இடத்திற்குச் சென்றுவிடுவர் (வி.சி.தொ.Iபா.72) என்கிறது விவேகசிந்தாமணி. வேதநாயகர், கொடுங்கோலாட்சி செய்யும் மன்னன் உண்ணும் உணவினை நஞ்சு என்றும் அவனுடைய அரண்மனையைச் சுடுகாடு (நீதி.நூ.அதி.3பா.10) என்றும் கூறுகிறார்.

வள்ளுவர், நாட்டில் பருவமழை பெய்வதற்கும் பெய்யாமைக்கும் முறையே செங்கோன்மையும் கொடுங்கோன்மையும் காரணமாகும் என்று கூறுகிறார். கொடுங்கோலாட்சியால் நாட்டின் வளம் குன்றுவதோடு குடிகளும் துன்புறுவர். ஆதலால், மன்னன் செங்கோலாட்சி செலுத்தவேண்டும் என நீதிநூல்கள் வற்புறுத்துகின்றன.

முடியாட்சி நடைபெறும் காலத்தில் எல்லா அதிகாரங்களும் மன்னனிடமே இருந்தன. அரசனை யாரும் எதிர்த்து அந்நாட்டில் வாழமுடியாது; அத்தகைய மன்னன் மக்களுக்காகவே வாழவேண்டும். அவர்களை மன்னன் பாதுகாத்து நல்லநெறியில் ஆட்சிசெலுத்தி வந்ததையும் வரலாறு புலப்படுத்துகின்றது. அதே நேரத்தில் மன்னன் தன் விருப்பப்படி ஆட்சி நடத்தி மக்களின் பகையைத் தேடிக்கொண்டதையும் வரலாறு புலப்படுத்துகின்றது.

### 5.1.16. வெருவந்த செய்யாமை

நாட்டை ஆளும் மன்னன் அதிகாரமும் செல்வாக்கும் உடையவன்; அவனை நோக்கும்பொழுது நாட்டில் வாழும் மக்கள் அதிகாரத்திலும் செல்வாக்கிலும் குறைந்தவர்களாகக் காட்சியளிப்பார்கள்; மன்னனைக் காணும்போதும், அவனது ஆட்சியை நினைக்கும் பொழுதும் அம்மக்கள் மனதில் அச்சம் தோன்றக்கூடாது என்பதை உணர்ந்த வள்ளுவர் ‘வெருவந்த செய்யாமை’ என்ற அதிகாரத்தை அமைத்துள்ளார்.

குடிமக்கள் செய்த குற்றத்தை ஆராய்ந்து, மீண்டும் அக்குற்றம் ஏற்படாவண்ணம் தண்டிப்பவனே மன்னன் ஆவான் (கு.561); அவ்வரசன் தன்

குடிமக்கள் அஞ்சும்படியான கொடுமைகளைச் செய்தால் விரைவில் அழிவான் (கு.563); அவனைக் கடுமையானவன் என்று குடிகள் சொன்னால் அவன் ஆயுள் குறையும் (கு.564) என்று வள்ளுவம் கூறுகின்றது. குடிகளின் வன்சொற்களுக்கு மன்னனை அழித்துவிடும் ஆற்றல் உண்டு என்று வள்ளுவர் கருதுகிறார். மேலும், கடுஞ்சொல் உடையவனாகவும் கண்ணோட்டம் இல்லாதவனாகவும் இருக்கும் மன்னனின் செல்வம் விரைவில் அழியும் (கு.566) என்றும் அவனுடைய கடுஞ்சொல்லும் தண்டனையும் வெற்றிக்குக் காரணமான வலிமையைக் கெடுக்கும் (கு.567) என்றும் வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

"முறைசெயல் ஆட்சியிலிருந்து பிரித்துத் தனித்து இயங்கும் ஒன்றாக (**Independent judiciary**) விளங்குகிறது. ஆள்வோரே முறை வழங்குவோராக இருந்தால் ஆள்வோரால் விளையும் தீமைகளையும் கொடுமைகளையும் எதிர்த்து யாரிடம் முறையிடுவது? ஆதலால், முறைசெயற்பணியும் ஆட்சிப்பணியும் ஒரே இடத்தில் இருத்தலை இன்றைய உலகம் ஒப்புவது இல்லை. ஆனால், பண்டை உலகில் அரசனே முறைவழங்குவோன்; அவனே தலைமை நீதிமன்றம்; நாட்டில் ஊர்தோறுமோ, நகர்தோறுமோ முறை மன்றங்கள் அன்று இருந்திருக்கலாம். ஆனால், தலைநகரில் வாழும் அரசனே இறுதித் தீர்ப்பிற்கு உரியவன். அவனுடைய சிறப்புக் கருதியே செங்கோன்மை, கொடுங்கோன்மை, வெருவந்த செய்யாமை போன்ற அதிகாரங்கள் திருக்குறளில் இயற்றப்பட்டுள்ளனவாக உரையாசிரியர்கள் கருதுகின்றனர். செங்கோன்மை பற்றிய கருத்தையே எதிர்மறையில் கொடுங் கோன்மை, வெருவந்த செய்யாமை என்னும் அதிகாரங்கள் கூறுகின்றன"[27] என்கிறார் முருகரத்தனம். ஆட்சிப்பணியில் இருக்கும் மன்னனே தீர்ப்பு வழங்கும் பணியைச் செய்பவனாகவும் இருந்துள்ளான் என்பதை அறியமுடிகிறது.

குடிமக்களை அச்சுறுத்தும் மன்னனைப் பிணம் (நீதி.நெ.வி.31) என்றும் மக்கள் மன்னனைக் கண்டு அஞ்சும்படி நடத்தல் கூடாது என்றும் நீதிநெறிவிளக்கம் கூறுகிறது.

"வேட்டை, சூது, சிற்றின்பம், கள் ஆகியவற்றை விரும்பும் அரசன் மக்களிடம் அஞ்சத்தகும் விதத்தில் முறை செய்தல் கூடும் என்பதால் இக்குணங்களைக்

கீழ்க்கணக்கு நூல்கள் வெறுக்கின்றன".[28] கீழ்க்கணக்கு நூல்களுக்குப் பிறகு தோன்றிய பிற்கால நீதிநூல்களும் இத்தகைய குணங்களைக் குற்றமாகக் கருதிக் கண்டிக்கின்றன என்பதை உணரமுடிகிறது.

### 5.1.17. கண்ணோட்டம்

மன்னன் குடிகளுக்கும் நாட்டிற்கும் முழுமுதற்காரணமானவன். அத்தகைய மன்னன் மக்களிடத்தில் தொடர்புகொள்ளும்பொழுது கண்ணோட்டத்துடன் இருந்து குடிமக்களைக் காப்பாற்ற வேண்டும் என்பதை வள்ளுவர் கீழ்வருமாறு எடுத்துரைக் கிறார்: ஒருவனுடைய கண்ணிற்கு அணிகலனாகத் திகழ்வது கண்ணோட்டமாகும் (கு.575); கண்ணோட்டத்தினால் பிறருக்கு உதவி செய்யும் பொழுது முறைதவறக் கூடாது என்கிறது வள்ளுவம். இத்துடன் கண்ணோட்டம் இல்லாதவனுக்குக் கண்கள் இருந்தும் பயனில்லை (கு.576); அவன் உயிரோடு இருந்தாலும் நிலத்திற்குச் சுமையாவான் (கு.572); அவன் மரம் போன்றவனாவான் (கு.576) என்றும் கூறிச் செல்கிறது.

"கண்ணோட்டம் என்பது வேறு; கருணை என்பது வேறு; குற்றவாளிகள் தண்டனைத் தீர்ப்புக்களைப் பெற்ற பின்னர் மாநிலத்தலைவர் (**Governor**) அல்லது நாட்டின் தலைவர் (**President**) கருணைகாட்டித் தண்டனை பெற்ற குற்றவாளிகளை விடுவிப்பது உண்டு. முறைசெய்து முடித்தபின் தண்டனை பெற்றவர்மீது கருணைகாட்டலாம். ஆனால், வழக்கை விசாரணை செய்யும்பொழுது கண்ணோட்டம் காட்டுவது கூடாது என்பதும் குறள் கூறும் சட்டநெறியாகும்".[29] எனவே, நாட்டை ஆளும் மன்னன் முறைசெய்யும்பொழுது தவறுகளுக்கு ஏற்பத் தண்டனை வழங்கவேண்டும். அவ்வாறு வழங்கும் போது மன்னருக்குக் கண்ணோட்டம் என்பது மிகவும் அவசியமாகிறது.

நல்வழி, ஒருவனுடைய கண்கள் நீங்காத கருணையால் சிறப்படையும் (நல்.16) என்கிறது. உறுப்புக்கள் எல்லாம் மின்னும் ஆபரணங்களை அணிந்து கொண்டாலும் பார்ப்பதற்குக் காரணமாகிய கண்ணுக்கு அவை ஒப்பாகாது (நன்.40) என்று நன்னெறியும், கண்ணால் கருத்தை உணரச்செய்து குடிகளைக்

காக்கவேண்டும் இல்லையெனில் கண் இருந்தும் பயனில்லை (நீதி.நெ.வி.28) என்று நீதிநெறிவிளக்கமும் கூறுகின்றன.

வேதநாயகர், ஆட்சிமுறையில் வழுவாது கண்ணோட்டத்துடன் குடிகளைக் காக்கும் மன்னனைக் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறார் :

*"ஞானநற் குணத்தின் மேன்மையா லெவர்க்கு*
*நாயகந் தானெனத் தெரிந்துத்*
*தானமும் தயையும் மெய்ம்மையும் தவமுந்*
*தற்பரன் வணக்கமும் பொறையு*
*மானமு மிகுந்து நரரெலாஞ் செழிக்க*
*மகிழர சளிப்பவன் மன்னே"* *(நீதி.நூ.அதி.3 பா.5)*

"நல்லறிவாலும் நற்பண்பாலும் குடிகளை நடத்துவோன் எல்லோர்க்குந் தலைவனாவான்; தானம், கண்ணோட்டம், மெய்ம்மை, தவம், தெய்வ வணக்கம், பொறுமை, மானம் முதலியன இயல்பாய் அமைந்து மக்கள் எல்லாம் மகிழ்வுற ஆள்வோன் வேந்தன்"[30] என்று விளக்கப்படுகிறது.

### 5.1.18. ஒற்றாடல்

நாட்டில் ஏற்படும் மறைமுக நடவடிக்கைகள் பலவற்றை ஆராய்வது அரசின் முக்கிய நோக்கமாக இருக்கவேண்டும். ஆகையால், அரசர்கள் தன்னுடைய நாட்டிலும் பிறருடைய நாட்டிலும் ஏற்படும் நடவடிக்கைகளை அறிந்துகொள்வதற்கு ஒற்றாய்தல் அவசியமானதாகும். இதனை 'ஒற்றாடல்' என்ற அதிகாரம்வழி விளக்கியுள்ளார் வள்ளுவர்.

"அரசர்கள் போர் மேற்கொள்ளும் போது மறவர்கள் மட்டுமே போரில் ஈடுபடலாம் ; மற்றவர்கள் ஈடுபடலாகாது என்று போர் நெறியாளர்கள் வற்புறுத்துகின்றனர். இந்திய அர்த்தசாஸ்திரங்கள் இத்தகைய மறைமுகப் போர்ச் செயல்களில் உடன்பட்டிருப்ப தாகவும் வெற்றி ஒன்றையே கருத்தில் கொண்டதால் இத்தகைய மறைமுகப் போர்ச் செயல்கள் தேவை"[31] என்று கவுடல்யர் கூறுவதாகவும் முருகரத்தனம் அவர்கள் தம்

நூலில் குறிப்பிட்டுள்ளார். வள்ளுவர், ஒற்றனைப் பற்றி ஒற்றாடல் அதிகாரத்தில் சிறப்பாகவே கூறுகிறார் எனலாம்.

வினைசெய்வார், சுற்றத்தார், வேண்டியவர், வேண்டாதவர் என்று அனைவரையும் ஒற்றன் ஆராயவேண்டும் (கு.584); மறைபொருளைக் கேட்பவனாகவும் கேட்டவற்றை ஐயப்பாடின்றிச் சொல்பவனாகவும் அவ்வொற்றன் இருத்தல் வேண்டும் (கு.587); பிறருடைய பார்வைக்கு அஞ்சும் தன்மை கொண்டவனாக ஒற்றன் இருக்கக்கூடாது என்கிறார் வள்ளுவர். மேலும், ஒற்றனுக்குச் சோர்வு இல்லாதிருத்தல் மிகவும் அவசியமானதாகும் (கு.586) என்றும் வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

"அமைச்சர் ஒற்றர் மூலம் அறியாதது ஒன்றுமில்லை என வான்மீகம் கூறுகிறது என்றும் ஒற்றர் இல்லாது கொற்றவர் இல்லை என்று பீஷ்மரும் கூறுவர் என்று அரசியலில் ஒற்றின் இன்றியமையாமையை எடுத்துக்காட்டுவர்"[32] எஸ்.இராம கிருஷ்ணன். அரசன் ஒற்றர்களுக்குச் செய்யவேண்டியவற்றைப் பிறர் அறியுமாறு செய்யக்கூடாது (கு.590) என்கிறார் வள்ளுவர். அரசனின் வெற்றிக்கு உறுதுணையாக உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் நடக்கும் நிகழ்ச்சிகளை மறைமுகமாக அறிந்து செயலாற்றுபவன் ஒற்றனாவான் (கு.582) என வள்ளுவர் ஒற்றரின் செயலை விளக்குகிறார்.

நீதிநெறிவிளக்கம், நாட்டை ஆளும் மன்னன் குடிமக்களின் குறைகளைத் தானே அறிவதும், அவர்கள் கூறும் குறைகளை மாற்றுருக்கொண்டு அறிவதும், ஒற்றர் மூலமாக அறிவதும் செங்கோல் முறையாகும் (நீதி.நெ.வி.32) என்கிறது.

மன்னன், ஒற்றர்மொழியினைக் கேட்பதோடு பிறர்மொழியைக் கேட்டும் உண்மை அறியவேண்டும் (நீதி.நூ.அதி.3.பா.7) என்று அறிவுறுத்துகிறார் வேதநாயகர்.

திருக்குறளும் நீதிநெறிவிளக்கமும் பிறர் அறியாத வகையில் செயலாற்றும் ஒற்றனின் தன்மையைக் கூறுகின்றன.அமைச்சர், தூதுவர், ஒற்றர் ஆகிய மூவரும் அரசனுக்குப் பணியாற்றித் தன்னுடைய உயிரையும் கொடுக்கத் தயங்காதவர்களாக இருக்கவேண்டும் என வள்ளுவம் கருதுகிறது.

ஒரு நாட்டில் நல்லாட்சி நிலவுவதற்கும் மக்களின் பாதுகாப்பிற்கும் அரசன் ஒற்றர்களைக் கையாள்கிறான். அவ்வொற்றர்கள் எப்படிப்பட்டவர்களாக இருக்க வேண்டும் என்பதை நீதிநூல்கள் விளக்குகின்றன. ஓர் ஒற்றன் சொன்னதை மட்டும் ஏற்றுக்கொண்டு அரசு நடத்தாமல் அவனை மற்றொர் ஒற்றனைக் கொண்டு கண்காணிக்க வேண்டும் என்றும் இந்நூல்கள் அறிவுறுத்துகின்றன. ஏனெனில், தனி மனிதன் விருப்பு வெறுப்பிற்கு ஆளாக நேரிடும். அதனால், சிக்கல்கள் ஏற்படலாம். ஒற்றனே ஆயினும் அவனும் மனிதன் தான் என்பதைக் கருத்திற்கொள்ளல் நலம் என்னும் கருத்து மேற்கண்டவற்றின்வழி முன்வைக்கப்படுகிறது.

### 5.1.19. ஊக்கமுடைமை

ஒருவனின் உள்ளத்தின் உறுதியே ஊக்கம் ஆகும். தனி மனிதனோ நாடாளும் மன்னனோ ஊக்கம் இல்லாதவர்களாக இருந்தால் அவர்கள் திறமையற்றவர்களாகக் கருதப்படுவர். நாடாளும் மன்னன் திறமையுள்ளவனாக இருந்தால்தான் நாட்டு மக்களைப் பகைவரிடமிருந்தும் பிற தீங்குகளிலிருந்தும் காப்பாற்றமுடியும். அதற்கு அவ்வரசனுக்கு ஊக்கம் தேவையாகும் என்பதன் அடிப்படையில் வள்ளுவர் 'ஊக்க முடைமையை' அரசியலில் வைத்துள்ளார் எனலாம். ஊக்கம் உடையவனிடத்தில் ஆக்கம், உயர்வு அனைத்தும் வந்து சேரும் (கு.594); ஊக்கம் உடையவன் அழிவு வந்தவிடத்தும் தளரமாட்டான் (கு.593); அவன் செல்வத்தை இழந்தாலும் கலங்க மாட்டான்; தன்னுடைய உயர்வைப் பற்றியே எண்ணிக்கொண்டு இருப்பான் (கு.596) என்று வள்ளுவர் மொழிகின்றார். பருத்த உடம்பையுடைய யானையை, ஊக்க முள்ளதாகிய புலி தாக்கினால், அதனைக் கண்டு யானை அஞ்சி ஓடும் என்பதை வள்ளுவர்,

*"பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை*
*வெரூஉம் புலிதாக் குறின்" (குறள்.599)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார். எனவே, வலிமையைத் தருவது ஊக்கமாகும். அத்தகைய ஊக்கம் மனிதர்களுக்குத் தேவை. அவ்வூக்கம் இல்லாதவனை மரத்திற்கு (கு.600) ஒப்பாவான் என்கிறார் வள்ளுவர். ஒவ்வொருவரும் ஊக்கத்தோடு செயல்பட்டுச் சிறப்புறவேண்டும் என்பதே வள்ளுவர் விருப்பம்.

ஒருவன் ஊக்கத்தைக் கைவிடக்கூடாது (ஆத்.6) என்று ஆத்திசூடியும் ஊக்கம் உடையவனாக ஒருவன் வாழ்ந்தால்தான் ஆக்கத்திற்கு அழகு (கொ.வே.86) என்று கொன்றைவேந்தனும் கூறுகின்றன. அறிநெறிச்சாரம், ஒருவனுடைய உயர்வுக்கும் தாழ்வுக்கும் அவன் செய்யும் ஊக்கமுடைய செயலே காரணமாகும் (அறநெறி.77) என்கிறது. ஒருவன் செல்வம் சேர்ப்பதற்கு ஊக்கம் தேவை (நீதி.நெ.வி.65) என்று கூறுகிறது நீதிநெறிவிளக்கம்.

நீதிநூல்கள், ஒருவன் சோம்பல் இல்லாமல் ஊக்கத்துடன் வாழவேண்டும் என்று கூறுகின்றன. ஊக்கமுடையவனே வாழ்வில் உயரமுடியும் என்பதால் வள்ளுவர் ஊக்க முடைமை என்னும் அதிகாரத்தை மடியின்மையின் முன் வைத்துள்ளார்.

## 5.1.20. மடியின்மை

மன உறுதியும் வலிமையும் இல்லாத மனிதனிடம் சோம்பல் உருவாகும். அச்சோம்பலானது நாடாளும் மன்னனிடம் உருவாகக்கூடாது என்பதை வள்ளுவர் மடியின்மை அதிகாரத்தின்வழி விளக்குகின்றார்.ஒருவன் மடியுடையவனாக இருந்தால் அவனுடைய குடும்பம் அழியும் (கு.601); சோம்பல், மறதி, அளவு கடந்த தூக்கம், காலம் நீட்டித்துச் செயல்படுதல் ஆகிய இவை நான்கு இயல்புகளும் கொண்டவன் கெடுவான் (கு.605) என்கிறார் வள்ளுவர்.

"பாராளும் மன்னர்கள் மடிகொண்டு சோம்பியிருந்தால் பாராளுதல் செவ்வனே நடைபெறாது. அரசன்பணி ஓய்வு, ஒழிவு இல்லாத பணி என்பதை எளிதிலே உய்த்து உணரலாம். இந்திய அரசியற் சிந்தனையாளர்கள் இந்திய அரசர்கள் ஒரு நாளைக்கு மூன்று மணி நேரமே உறங்கலாம் என வரையறுத்து, எஞ்சிய 21 மணி நேரத்தையும் அரசுப்பணி புரிவதற்கே திட்டம் வகுத்தனர். இந்நிலையில் மன்னன் மடிகொள்ளு வதற்கு இடம் எது? மடி இடம்பெற்றால் இன்னலே பெறுவர்; கேட்டை அடைவர்"[33] தனிமனிதன் சோம்பலினால் குடும்பவாழ்வும் அரசனின் சோம்பலினால் அரசியல் வாழ்வும் வீழ்ந்துவிடும்.

வள்ளுவம், அரசனின் சோம்பல் அவனைப் பகைவர்க்கு அடிமையாகச் செய்யும் (கு.608); அவனால் பகைவனை எதிர்த்துப் போரிடமுடியாது; இதனால் அவனுக்கு மட்டுமின்றி அவன் ஆளும் நாட்டிற்கே கேடு உண்டாகும் என்கிறது.ஆயின் சோர்வின்றி உழைப்பவர்கள் 'ஊழையும் உட்பக்கம் காண்பர்' என்று வள்ளுவர் கூறுகின்றார்.

ஒருவன் சோம்பேறியாக இருக்கக்கூடாது (ஆத்.54) என்று ஆத்திசூடியும் சோம்பேறியாக இருப்பவன் துன்பப்படுவான் (கொ.வே.36) என்று கொன்றைவேந்தனும் கூறிச்செல்கின்றன. அறநெறிச்சாரம், அச்சமின்றி முயற்சியுடன் வாழ்பவனையே துணையாகக் கொள்ளவேண்டும் (அறநெறி.53) என்று நவில்கிறது. ஊழ்வினையால் எல்லாம் நடக்கும் என்று ஒருவன் முயற்சி செய்யாமல் இருக்கக்கூடாது என்கிறது நீதிநெறிவிளக்கம் (நீதி.நெ.வி.50). விவேகசிந்தாமணி, ஒருவனுடைய வறுமைக்குக் காரணம் அவனுடைய சோம்பல் தன்மையாகும் (வி.சி.30); அச்சோம்பலால் அவனுக்குச் செல்வம் கிடைக்காது; கொடிய பசியால் அவன் துன்புற நேரிடும் என்கிறது. எனவே, ஒருவன் வறுமையை ஒழிக்க முயற்சியை மேற்கொண்டு சோம்பலை ஒழிக்கவேண்டும் (வி.சி.31) என்று விவேகசிந்தாமணி கோடிட்டுக் காட்டுகின்றது.

வேதநாயகர், சோம்பேறியைப் பிணம் என்றும் பட்டுப்போன மரம், செடி, கொடிகளுக்கும் அவன் நிகராவான் (நீதி.நூ.அதி.24பா.1) என்றும் குறிப்பிடுகின்றார். அதாவது, மனிதனின் உடல் உறுப்புக்கள் அனைத்தும் வேலைசெய்யும் பொருட்டாக அமைந்தவை; அத்தகைய உறுப்புக்களைப் பெற்றவன் வேலை செய்யாமல் சோம்பி வாழ்ந்தால் உடல் வலிமை கெட்டு நோயால் துன்புறுவான்; அவனுக்குப் பாவங்கள் வந்து சேரும் (பா.4); அதனால், வேந்தரும் புலவரும் சோம்பல் கொள்ளக்கூடாது (பா.5) என்று அறிவுறுத்துகிறார்.

நீதிநூல்கள் அனைத்தும் ஒருவன் சோம்பலின்றி உழைத்துப் பிழைக்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றன. வள்ளுவம், அரசன் சோம்பலை முற்றிலும் அகற்றிச் சுறுசுறுப்புடன் வாழ வழிகாட்டுகிறது. சோம்பல் உடையவன் தன் நிலைக்கு விதியைக் காரணங்காட்டக்கூடாது என்று நீதிநெறிவிளக்கம் அறிவுறுத்துகிறது.

ஒருவனுடைய சோம்பலால் செல்வம் அழிந்து அவனுக்கு வறுமை உண்டாகும் என்று பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன. வள்ளுவர், நாடாளும் மன்னனுக்கு மறதியால் சோர்வு ஏற்படக்கூடாது என்பதைக் கூற 'பொச்சாவாமை' என்னும் அதிகாரத்தையும் அமைத்துள்ளார்.

### 5.1.21. ஆள்வினையுடைமை

ஒருவன் எந்தச் செயலை செய்யும்பொழுதும் மனதில் சோர்வு இருத்தல் கூடாது; தொடங்கியது முதல் இறுதிவரை முயற்சியுடன் செயல்படவேண்டும். முயன்றால் முடியாதது இல்லை, முயற்சி திருவினை ஆக்கும் என்பதை விளக்க வந்ததே 'ஆள்வினையுடைமை' என்னும் அதிகாரமாகும். "ஆள்வினை யுடைமையாவது இடைவிடாத மெய்ம்முயற்சி உடையன் ஆதல்"[34] என்று பரிமேலழகர் விளக்கம் தருகிறார்.

வள்ளுவர், ஒரு செயலைச் செய்ய வேண்டுமெனில் ஒருவன் சோர்வுறாமல் இருக்க வேண்டும் (கு.611) என்கிறார். "துவள்கின்ற இளங்கொம்பாகி வழியிலே நின்ற சிறு மரமும் உள்வயிரங் கொண்டு முற்றிய காலத்தில் ஆண் யானையைக் கட்டுவதற்குரிய கட்டுத்தறியாக உதவும்; அதுபோல ஒருவன், முயற்சியால் தம்மை ஆற்றலுடையவராகச் செய்து கொள்ளல் வேண்டும்"[35] என்று நாலடியார் கூறுகிறது. முயற்சி இல்லாதவன் உதவிசெய்வது பேடியின் கையில் வாளைக்கொடுத்து ஆளும் தன்மை போன்றது (கு.614); அத்தகையவனிடத்தில் சோம்பலும் வறுமையும் நிலைத்து நிற்கும் (கு.616). இத்தன்மை கொண்டவன் பிறர்க்கு உதவிசெய்து வாழ்வது அரிதானதாகும். சோம்பல் உள்ளவனிடத்தில் மூதேவியும், முயற்சி உள்ளவனிடத்தில் திருமகளும் வாழ்வாள் (கு.617) என்று கூறியுள்ள வள்ளுவர், முயற்சியில்லாதவனுக்குப் பழியும் உண்டாகும் (கு.618) என்று குறிப்பிடுகின்றார். மேலும், தெய்வத்தால் ஆகாதெனினும் ஒருவன் எடுத்த முயற்சிக்கு ஏற்றாற்போல் அவனுக்குக் கூலி கிடைக்கும். (கு.619) முயற்சியானது ஊழையும் தோல்வியுறச் செய்யும் (கு.620) என்கிறார் வள்ளுவர்.

“முயற்சி திருவினையாக்கும் என்பது வள்ளுவர் வாய்மொழி. எனவே, முயற்சி செய்பவர் அதன் பயனை அடையாமல் போவார்கள் எனும் கருத்து திருவள்ளுவரின் அடிப்படைக்கொள்கைக்கு முரணான பொருளைத் தருவதாக அமையும். ஒருவன் அரும்பாடுபட்டு முயன்றும் அவனுடைய நோக்கம் கைகூடவில்லையானால், மேற்கண்ட முயற்சியில் யாதோ ஒரு குறை இருக்கவேண்டும். அக்குறை யாதாக இருக்கக் கூடும்? அந்த மனிதன் திட்டமிட்டு, தேவையான வரையறை இல்லாமல் ‘ஏனோ தானோ’ என முழுஈடுபாடு இல்லாமல் செய்யும் முயற்சி, ஒருகால் எதிர்பார்த்த பலனைத் தராமல் போய்விடலாம் என்பது பேராசிரியர் கா.சுப்பிரமணிய பிள்ளையின் கருத்தாகும். இத்தகைய புதிய விளக்கம் தருவதன் மூலம் தன் முயற்சி இல்லாமல் மனிதர் யாரும், மனச்சோர்வு அடையக்கூடாது எனும் உயர்ந்த நோக்கம் புலப்படுகிறது”[36] என்கிறார் க.த.திருநாவுக்கரசு.

“வள்ளுவர், விதியை வெல்லமுடியும் என்று எண்ணியிருப்பது பெரிதும் வியக்கத் தக்கது. பண்டை காலத்தில் இயற்கையைக் (மழை, இடி, மின்னல்) கண்டு மனிதன் நடுங்கினான். அவன் அறிவு வளர வளர இயற்கையைத் தன்வயப்படுத்தி வருகிறான். மனிதன் இன்றைய விஞ்ஞானத் தொழில்நுட்ப வளர்ச்சியால் இயற்கையைத் தன் ஏவலுக்குப் பயன்படுத்தும் நிலைக்கு உயர்ந்துகொண்டு வருகிறான். இயற்கையை வென்று வரும் மனிதச் சமுதாயம், விதியெனும் பழம்நம்பிக்கையையும் அகற்றத்தான் போகிறது என்பதில் ஐயமில்லை”[37] என்று பா.வீரமணி குறிப்பிடுகின்றார். தெய்வத்தால் தடை ஏற்படினும் அவற்றை முயற்சியால் வெல்லலாம் என்று வள்ளுவர் வலியுறுத்துவதை அவர்தம் குறட்பாக்களின்வழி அறியமுடிகிறது

ஆத்திசூடி, ஒருவன் முயற்சியைக் கைவிடுதல் கூடாது (ஆத்.6) என்கிறது. மேலும், ‘வைகறைத் துயிலெழு’ (பா.107) என்று கூறி ஒருவனுடைய சுறுசுறுப்பிற்கு வழிவகுக்கிறது. சமுதாயத்தின் முன்னேற்றம் தனிமனிதனின் முயற்சியைப் பொறுத்தே அமைகிறது. அதனால் ஒவ்வொருவரும் முயற்சியுடன் வாழவேண்டும் என்று ஔவையார் அறிவுறுத்துகிறார். அறம் செய்ய நினைக்கும் ஒருவனுக்கு முயற்சி மிகவும் தேவையாகும் (அறநெறி.154) என்கிறது அறநெறிச்சாரம்.

ஊழினால் ஒருவன் செய்வது நல்வினை என்றாலும் தீவினைப் பயனால் தீமையாகவே முடியும் (நீதி.நெ.வி.50) என்று நீதிநெறிவிளக்கம் கூறிவிட்டு, இடைவிடாத முயற்சியுடையவன் ஊழின் வலிமையையும் வெல்லுவான் (பா.51) என்று விளக்குவது முன்னுக்குப்பின் முரணாக அமைகிறது. விவேகசிந்தாமணி, ஒருவனுக்குச் செல்வம் வேண்டுமெனில் அவன் முயற்சியை மேற்கொள்ளவேண்டும் (வி.சி.தொ.IIபா.59); அவனுக்குக் கடவுள் கூலியைத் தருவான் (வி.சி.தொ.II பா.); முயற்சி இல்லாதவனுக்கு வறுமை வரும்; முயற்சி இல்லாதவன் தன்நிலைக்கு எதையும் காரணம் காட்டக்கூடாது என்கிறது. நீதிவெண்பா, சோம்பல் இல்லாமல் தன்னால் இயன்ற தொழிலைச் செய்கின்றவனுக்கு வறுமை என்பதே இல்லை (நீதி.வெ.44) என்று கூறுகிறது.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் ஒவ்வொருவரும் முயற்சி மேற்கொள்ள வேண்டியதன் அவசியத்தைக் கூறுகின்றன. அதாவது, முயற்சியால் ஒருவனுக்குப் பிறவிப்பிணி, வறுமை போன்றவை நீங்கும். எனவே சோம்பலை நீக்கி முயற்சியுடன் ஒவ்வொரு தனிமனிதனும் செயல்பட்டால் வறுமையை நீக்கிச் செல்வத்தைப் பெற்று, வளமுடன் வாழலாம் என நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன.

### 5.1.22. இடுக்கண் அழியாமை

ஒருவனுக்குத் துன்பம் வந்த காலத்து அதற்காக மனம் கலங்காமல் இருத்தலே ‘இடுக்கண் அழியாமை’ ஆகும். நாடாளும் மன்னனுக்குத் தனி வாழ்விலும் பொதுவாழ்விலும் துன்பங்கள் தோன்றலாம். அவற்றை நினைத்துக் கலங்காமல் இருக்கவேண்டும் என்று வள்ளுவர் வலியுறுத்துகிறார். வெள்ளம் போல் அளவற்ற துன்பம் வந்தாலும் அதற்காகக் கலங்குதல் கூடாது (கு.622); அத்துன்பத்தை விடா முயற்சி செய்து நீக்கவேண்டும்; மேலும், இன்பத்தை விரும்பாதவன் துன்பம் வந்த பொழுதும் வருந்துவது இல்லை (கு.628) என்றும், துன்பம் வந்தபோது கலங்காமல் இருப்பவன் துன்பத்திற்கே துன்பம் விளைவிப்பான் (கு.623) என்றும் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மேலும், இன்பமும் துன்பமும் கலந்ததே மனித வாழ்க்கையாகும்.

அதனால், துன்பத்தைக் கண்டு ஒருவன் வருத்தம் கொள்ளாமல் அவற்றைக் களைவதற்கு முற்படவேண்டும் என வள்ளுவர் அறிவுறுத்துவதை உணரமுடிகிறது.

நாடாளும் மன்னன் துன்பத்தை இன்பமாகக் கருதினால் பகைவனும் அவனைச் சிறப்பு செய்வான் (கு.630) என்கிறார் வள்ளுவர். எனவே, ஒருவன் இடுக்கண் வரும்பொழுது அதனைக் கண்டு கலங்குதல் கூடாது என்று வள்ளுவம் அறிவுறுத்துகிறது.

துன்பத்திற்கு இடங்கொடுக்கக் கூடாது (ஆத்.59) என்று கூறும் ஆத்திசூடி, மேலும், 'மனம்தடு மாறேல்' (ஆத்.88) என்று அறிவுறுத்துகிறது. "மனம் கலங்காதபடி எந்த விசயத்தையும் நிதானத்துடன் செய்யவேண்டும்"[38] என்று விளக்கம் தருகிறார் துரை-தண்டபாணி. தனக்குத் துன்பம் செய்தவனுக்கும் அறிவுடையோர் நன்மை செய்வர் (மூது.30) என்று மூதுரையும் கூறுகின்றன. நல்வழி, துன்பம் தரக்கூடிய உடம்பின் தன்மையை உணர்ந்து பிறர்க்குக் கொடுத்து வாழவேண்டும் (நல்.3) என்று கூறுகிறது.

அறநெறிச்சாரம், அறிவுடையோர் துன்பத்தைக் கண்டு வருத்தம் கொள்வதும் இல்லை; இன்பத்தைக்கண்டு மகிழ்ச்சி கொள்வதும் இல்லை என்றும் துன்பங்கள் தொடர்ந்து வந்தாலும் அதனைத் தாங்கிக் கொள்வதே ஒருவனுக்குத் தலையாய குணமாகும் (அறநெறி.107) என்றும் குறிப்பிடுகிறது.

நன்னெறி, மேலோர் தனக்குத் துன்பம் வந்தாலும் போக்கிக்கொள்ளாமல் பிறருடைய துன்பத்தைப் போக்குவார்கள் என்பதை,

*"தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குநூஉம்*
*வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்" (நன்.10:1-2)*

என்று கூறுவதன்வழி, பிறர் துன்பத்தையும் தன் துன்பமாகக் கருதுவது மேலோர் செயல் என உணர்த்துகிறது. ஒருவன் தனக்கு எத்தகைய இடுக்கண் நேர்ந்தாலும் அவன் செய்ய நினைத்த செயலைச் செய்து முடிக்கவேண்டும் என்று நீதிநெறிவிளக்கம் அறிவுறுத்துகிறது.

பாதுகாத்து வைக்கும் பொருளால் ஒருவனுக்குத் துன்பமே மிகுதி என்பதை கீழ்வரும் நீதிவெண்பா பாடல் விளக்குகிறது :

*“இன்னல் தரும் பொருளை ஈட்டுதலும் துன்பமே*
*பின்னதனைப் பேணுதலும் துன்பமே -அன்ன*
*தழித்தலும் துன்பமே யந்தோ பிறர்பால்*
*இழத்தலும் துன்பமே யாம்”* *(நீதி.வெ.46)*

அதாவது, “துன்பத்தை அளிக்கக்கூடிய பொருளைத் திரட்டுவதும் துன்பம் அளிப்பதாகும். பின்பு அதை மற்றவர் கவராமல் பாதுகாப்பதும் துன்பமே ஆகும். அச்செல்வத்தைச் செலவு செய்வதும் துன்பமே ஆகும். அச்செல்வத்தை மற்றவரிடம் தந்து இழந்துவிடுவதும் துன்பமேயாகும்”[39] என்று விளக்குகிறார் அ.மாணிக்கனார். எனவே, துன்பத்தைக் கண்டு கலக்கம் கொள்ளாமல் தன்னிடத்தில் உள்ள பொருளைக் கொண்டு பிறருடன் பகுத்துண்டு வாழவேண்டும் என நீதிவெண்பா கூறுகின்றது.

வேதநாயகர், ‘துன்பம்’ என்ற அதிகாரத்தில் துன்பம் உண்டாவது உலக இயல்பு.அதனைக்கண்டு ஒருவன் அஞ்சுதல் கூடாது.செல்வத்தை உடையவரானாலும் நாடாளும் மன்னராய்த் திகழ்ந்தாலும் நிலைத்த இன்பம் பெற்று வாழ்பவர் எவரும் இல்லை என்கிறார். (நீதி.அதி.41 பா.3) வெளிச்சத்துடன் இருளும் நிழலுடன் வெயிலும், மழையுடன் மின்னலும் இடியும் மாறி மாறி வருவது போல இன்பத்துடன் துன்பம் வருவதையும் சமமாக எண்ணுதல் வேண்டும்; மேலும், துன்பமே நன்மை செய்வதற்கும் அறிவு வளர்வதற்கும் காரணமாகும் என்றும் உலகில் தோன்றும் இன்பமே பாவம் செய்வதற்கும் அறியாமைக்கும் காரணமாகும் என்றும் குறிப்பிடுகின்றார்.

நீதிநூல்கள் அனைத்தும், இன்பமும் துன்பமும் மனிதனிடத்தில் நிலையாக இருப்பதில்லை; அவை மாறி மாறி வந்து கொண்டே இருக்கும்; ஆகையால், அவற்றைக் கண்டு ஒவ்வொருவரும் மனங்கலங்காமல் இருத்தல்வேண்டும் என்று கூறுகின்றன. திருக்குறளும் வேதநாயகரின் நீதிநூலும் இதற்கெனத் தனித்தனி

அதிகாரம் அமைத்து விளக்குகின்றன. பிற்கால நீதிநூல்கள் பொதுவாகவே கூறிச் செல்கின்றன. வள்ளுவர், அரசியலில் இறுதி அதிகாரமாக இடுக்கண் அழியாமையை அமைத்து, இடுக்கண் வந்துழியும் அரசன் உறுதியோடு இருத்தல் வேண்டும் என்று வலியுறுத்துகிறார்.

பிற்கால நீதிநூல்கள், தனிமனிதனுக்கு இடுக்கண் நேர்ந்தபோது அவன் மனம் தளர்ந்து தொடங்கிய செயல் முடிக்க முடியாமல் போய்விடும் என்றும் அவன் இவ்வுலகில் இன்பமாகவோ அமைதியாகவோ வாழமுடியாது என்றும் கருதுகின்றன. வள்ளுவர், அரசியலில் இவ்வதிகாரத்தை வைத்து நாட்டை ஆளும் அரசன் இடுக்கண் கண்டு மனந்தளர்ந்தால், அவன் மட்டுமல்ல அவன் ஆட்சிபுரியும் நாடும் நாட்டு மக்களும் இழிநிலைக்குத் தள்ளப்படுவர். அதனால், ஒருபோதும் துன்பத்தைக் கண்டு மனந்தளரக்கூடாது; உறுதியோடு அத்துன்பத்தைக் களைதல் வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

## 5.2. முடிவுரை

நாட்டில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருக்கும் மன்னன் மக்களின் முன்னேற்றத் திற்கும் நல்வாழ்விற்கும் பாடுபடவேண்டும் என்று நீதிநூல்கள் கூறுகின்றன.

ஒரு மனிதனைப் பக்குவப்படுத்தி ஒழுக்கம் பெறச்செய்வது கல்வியாகும். அக்கல்வியை அனைவரும் கற்றுத் தெளியவேண்டும் என்று திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் விரும்புகின்றன. ஒருவன் கற்கும் கல்வியானது அப்பிறப்பிற்கு மட்டுமின்றி ஏழு பிறவிகளுக்கும் உதவும் தன்மையுடையது என்று வள்ளுவம் கூறுகின்றது.

பிற்கால நீதிநூல்கள், ஒருவனுடைய வாழ்வின் முடிவுவரை வந்து துணை புரிவது கல்வியாகும்; அக்கல்வியை ஒருவன் எவ்வளவு வறுமை நேர்ந்தாலும் பிச்சை எடுத்தாவது கல்வி கற்கவேண்டும் என்று வற்புறுத்துகின்றன. கற்றோன் கல்வியை விற்பனை செய்யக்கூடாது என்றும் கல்வி கற்றவன் செருக்கு இல்லாமல் வாழவேண்டும் என்றும் நீதிநூல்கள் கூறுகின்றன.

வள்ளுவம், கல்வியைக் கற்றுத்தெளிதல், கேட்டறிதல் என்ற இரு முறைகளில் அமைத்துள்ளது. ஒருவன் தானே கல்வி கற்றுத் தெளிதலைவிடச் சான்றோர் சொல் கேட்டால் நன்மை உண்டாகும். எனவே, ஒருவன் கல்வி கற்காவிட்டாலும் கேள்வியறிவு பெறுதல் சிறந்தது என்கிறார் வள்ளுவர். பிற்கால நீதிநூல்களும் கற்றோரின் வாய்ச் சொல்லை ஒருவன் கேட்டறிதல் வேண்டும் என்று கூறுவது வள்ளுவர் கூறும் கருத்திற்கு வழிமொழிவதாய் அமைகின்றது.

ஒருவன் நன்மை, தீமைகளை உணர்ந்து நல்வழியில் செல்ல வழிகாட்டுவது அறிவு. அந்த அறிவினைப் பயன்படுத்தி அரசாட்சி நடத்துவதே அரசனுக்குச் சிறப்பு தரும் என்கிறது வள்ளுவம். பிற்கால நீதிநூல்களும் அறிவுடையவன் நற்பண்பைப் பெற்று வாழ்வான் என்று கூறுகின்றன.

வள்ளுவம், செங்கோல் ஆட்சி செய்யும் மன்னன் செருக்கு, சினம், காமம் போன்ற குற்றங்களைக் கடிதல் வேண்டும் என்று வற்புறுத்துகிறது. புலால் உண்ணல், பிற உயிர்களைக் கொலை செய்தல், பிறனில் விழைதல், புறங்கூறுதல் போன்றவை தனிமனித வாழ்வில் ஏற்படும் குற்றங்களாகவும் கள்ளுண்ணல், சூதாடுதல், வரைவில் மகளிரைச் சேர்தல் போன்றவை அரசியல் மற்றும் சமுதாயத்தில் நிகழும் குற்றங்களாகவும் கருதி அவற்றை வள்ளுவம் வன்மையாகக் கண்டிக்கின்றது. பிற்காலநீதிநூல்களும் இவைகளைப் பெரும்குற்றமாகக் கருதி அவற்றை ஒவ்வொருவரும் கடிதல் வேண்டும் என்று வற்புறுத்துகின்றன.

நாட்டை ஆளும் மன்னன் தன்னுடைய மனம்போன போக்கில் போகாமல், சிற்றினத்தை ஒதுக்கிப் பெரியோரின் துணைகொண்டு வாழவேண்டும் என்று வள்ளுவம் வலியுறுத்துகிறது. பெரியோரை எதிர்கொள்பவனுக்குப் பெரும் துன்பம் நேரிடும் என்று பிற்கால நீதிநூல்கள் சாடுகின்றன.

குற்றங்களைக் கடிந்தவனே செங்கோல் ஆட்சி செய்வதற்கு உரியவனாவான் என்று வள்ளுவம் கருதுகின்றது. நாடாளும் மன்னன் நண்பர், பகைவர் என வேற்றுமை பாராமல் நடுவுநிலைமையோடு நீதி செலுத்தவேண்டும்; இல்லையெனில் பருவமழை பெய்யாது என நீதிநூல்கள் கூறுகின்றன.

மக்கள் செய்யும் தவறுகளுக்கு ஏற்றாற்போல நாட்டை ஆளும் மன்னன் தண்டனை கொடுத்தல் வேண்டும்; இவ்வாறு தண்டனை கொடுக்கும்பொழுது மன்னனுக்குக் கண்ணோட்டம் மிகவும் அவசியம் என்று நீதிநூல்கள் கூறுகின்றன.

நாட்டை ஆளும் மன்னன் ஒற்றர்களின் வழியாக நாட்டின் உண்மைத் தன்மையை உணரவேண்டும் என்கிறது வள்ளுவம். பிற்காலநீதிநூல்கள் ஒற்றர்களைப் பற்றி அதிகம் பேசாவிட்டாலும் ஒரு சில நூல்கள் ஒற்றின் தன்மையை விளக்கியுள்ளன.

ஒருவனுடைய உள்ளத்தூய்மையும் வினைத்தூய்மையும் அவன் சேர்ந்துள்ள இனத்தைப் பொறுத்தே அமையும் என்று நீதிநூல்கள் எடுத்துரைக்கின்றன. நல்வழியில் ஈட்டிய பொருளைக் கொண்டு பிறருக்குக் கொடுத்து வாழவேண்டும். கொடுக்கும்பொழுது தன்னிடத்தில் இருப்பதற்கு ஏற்றாற்போல கொடுக்கவேண்டும் என்றும் வருவாய்க்கு ஏற்றமுறையில் ஒருவன் செலவு செய்யவேண்டும் என்றும் நீதிநூல்கள் வற்புறுத்துகின்றன. மன்னன் காலத்தையும் இடத்தையும் அறிந்து செயல்படவேண்டும் என்று வள்ளுவம் வலியுறுத்துகிறது. பிற்காலநீதிநூல்களும் வள்ளுவர் கருத்தை வழிமொழிகின்றன.

சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும் பிறருடைய உழைப்பால் உண்டு வாழக்கூடாது. சோம்பித்திரியாமல் தானே உழைத்து முயற்சியை மேற்கொண்டு, துன்பம் இல்லாமல் வாழவேண்டும் என்று திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் நவில்கின்றன.

தன்னுடைய முயற்சியால் ஒருவன் உழைத்த பொருளைக் கொண்டு பிறருக்கு உதவுவதன் மூலம் அவ்வுதவியானது தனிமனிதனின் இல்லற வாழ்க்கைக்கு மட்டுமின்றி அரசியல் வாழ்க்கைக்கும் சமூக மேம்பாட்டிற்கும் காரணமாக அமைகிறது என்பதை நீதிநூல்களின் வழி அறியமுடிகிறது.

## அடிக்குறிப்புக்கள்

1. வெ. சாமிநாதசர்மா, அரசியல் அறிவு, ப. 38.
2. கு.அருணாசலக் கவுண்டர், (ப.ஆ.), வழிகாட்டும் வள்ளுவர், ஆராய்ச்சிச் சொற்பொழிவுகள், ப.1.
3. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.189.
4. வெ. சாமிநாதசர்மா, அரசியல் அறிவு, பக்.74-75.
5. தி. முருகரத்தனம், குறள் கூறும் இறைமாட்சி, ப.78.
6. நீதி அரசன் பெ.வேணுகோபால், அய்யன் திருவள்ளுவர் குறளில் காணும் சட்ட அடிப்படையும் சமூக நீதியும், ப.5.
7. இரா. சாரங்கபாணி, 'வள்ளுவர் கண்ட அரசியலும் பிற அற இலக்கியத்தார் கண்ட அரசியலும்', வள்ளுவர் வகுத்த அரசியல், (கருத்தரங்கக் கட்டுரைகள்), ப.44.
8. கு. மதுரை முதலியார், திருவள்ளுவர் அரசு, ப.10.
9. இரா.வேலு, திருக்குறள் கௌடலீயம் ஒப்பாய்வு, ப.68.
10. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.198.
11. ஞா.தேவநேயப்பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, ப.31.
12. து. வெள்ளமுத்து, 'திருக்குறளில் அறிவுடைமை', இருபத்தொன்றாவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, ப. 911.
13. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.210.
14. தி. முருகரத்தனம், குறள் கூறும் இறைமாட்சி, ப.87.
15. மு. வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.118.
16. துரை-தண்டபாணி (உ.ஆ.), நீதிநூல்கள், ப.22.
17. தி.சு.பாலசுந்தரம்பிள்ளை, (உ.ஆ.), நீதிநூற்கொத்து மூலமும் உரையும், (இரண்டாம்பாகம்), ப.35.
18. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.222.
19. மேலது., ப. 239.
20. மேலது., ப. 244.
21. சாமி. சிதம்பரனார், வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், ப.115.
22. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.227.

23. மு.வரதராசனார், ‘வள்ளுவர் கண்ட அரசியல் அன்றும் இன்றும்’, வள்ளுவர் வகுத்த அரசியல், கருத்தரங்கக் கட்டுரைகள், ப. 8.
24. ப. முருகன், வள்ளுவம் பன்னோக்குப் பார்வை, ப.15.
25. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), நீதிநூற்கொத்து மூலமும் உரையும், (முதற்பாகம்), ப.17.
26. தி. முருகரத்தனம், குறள் கூறும் இறைமாட்சி, ப.78.
27. மேலது., ப.127.
28. த. செல்லக்கனி, புதிய ஏற்பாடும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் அறக்கருத்துக்கள் - ஓர் ஒப்பீடு, ப.256.
29. மா. சண்முக சுப்பிரமணியம், குறள் கூறும் சட்டநெறி, பக்.208-209.
30. ப. இராமநாதபிள்ளை, (உ.ஆ.), நீதிநூல் உரையுடன், ப. 27.
31. தி. முருகரத்தனம், குறள் கூறும் அரசு, ப.133.
32. எஸ். இராமகிருஷ்ணன், கம்பன் கண்ட அரசியல், ப.125.
33. தி. முருகரத்தனம், குறள் கூறும் இறைமாட்சி, ப.70.
34. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.283.
35. தி.சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள், (உ.ஆ.), நாலடியார் உரையுடன், ப.151.
36. ப. முருகன், வள்ளுவம் பன்னோக்குப் பார்வை, பக்.34-35.
37. பா. வீரமணி, வள்ளுவரும் இயங்கியல் தத்துவஞானக் கூறுகளும், ப.39.
38. துரை-தண்டபாணி, (உ.ஆ.), நீதிநூல்கள், ப. 27.
39. அ. மாணிக்கனார், (உ.ஆ.), நீதிவெண்பா மூலமும் தெளிவுரையும், ப. 61.

# இயல் ஆறு

## திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் அரச அங்கங்கள்

# இயல் ஆறு

# திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் அரச அங்கங்கள்

## 6.0. முன்னுரை

அரசன் சிறப்புற ஆட்சி செய்ய வேண்டுமெனில் அவன் ஆறு அங்கங்களான படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் போன்றவையின் உறுதுணையுடன் செயல்பட வேண்டும்; இந்த ஆறு அங்கங்களும் மன்னனுக்கு மிகவும் அவசியம் என்பதற்காக வள்ளுவர் 'அங்கவியலை' அமைத்துள்ளார்.பிற்கால நீதிநூலாசிரியர்களும் அங்கங்கள் பற்றிய செய்திகளை வழங்கியுள்ளனர். ஒவ்வொரு அங்கமும் அரசனுக்கு எவ்வாறு துணைபுரிகின்றது என்பதைப் பற்றி திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் கூறும் கருத்துக்களைத் தொகுத்து இவற்றிடையே காணப்படும் ஒற்றுமை வேற்றுமையை எடுத்துரைப்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 6.1. அமைச்சு

அரசியல் என்பது அரசனால் மட்டும் நடத்தப்படுவதன்று; அவன் ஆட்சி செலுத்த உறுதுணையாக நிற்பவன் அமைச்சன். அரசனது ஆட்சி சிறந்து விளங்கவேண்டுமெனில் அமைச்சர்களின் ஆலோசனைகளையும் கேட்டறிதல் வேண்டும்; சங்க இலக்கியங்களில் 'அமைச்சர்' 'மந்திரி' என்னும் சொற்களே அதிகம் காணப்படவில்லை. ஆயின், அக்காலத்தில் அரசர்களுக்கு அறிவுரை கூறி நல்லாட்சி செலுத்த வைத்தவர்கள் புலவர் பெருமக்கள். ஔவையார் போன்றோர் அமைச்சராயும் தூதுவராயும் செயல்பட்டமை சங்க இலக்கியங்கள்வழி அறிய முடிகிறது. அமைச்சர்களைப் பற்றி வள்ளுவர் பத்து அதிகாரங்களை அமைத்து அவற்றில் அமைச்சர் எவ்வாறு இருத்தல் வேண்டும் என்பதைத் தெளிவுபட விளக்குகிறார்.

அமைச்சன் என்பவன் அஞ்சாமை, குடிப்பிறப்பு, திறமை, அறிவு போன்ற பண்புகளை உடையவனாயும் விடாமுயற்சியுடையவனாயும் (கு.632); பகைவரைப்

பிரித்தல், பிரித்தவரை மீண்டும் காத்தல் போன்ற இயல்புகளைப் பெற்றிருப்பவனாயும் இருக்கவேண்டும் (கு.633); மேலும், அவன் சொல்வன்மை மிக்கவனாகவும் (கு.634); இயற்கையறிவோடு செயற்கையறிவு பெற்றவனாயும் அமைச்சன் விளங்கவேண்டும் (கு.637); தேர்ந்த அறிவுடையவனாயும் எக்காலத்திலும் எச்செயலையும் செய்யும் ஆற்றல் மிக்கவனாயும் இருத்தலோடு, அறவழியில் ஒழுகும் வல்லமை பெற்றவனாயும் அமைச்சன் இருக்கவேண்டும் (கு.635) என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

"அறநெறி பிறழாது ஆட்சி செய்ய அரசனுக்கு உதவி புரிபவனே அமைச்சனாவான்; அவ்வாறு துணைபுரியாமல் போனால் பதவியிலிருந்து விலகி விடுகின்றவனே சிறந்த அமைச்சன் என்ற சீனமொழி நீதி இலக்கியமாகிய முதுமொழியின் கொள்கைகளும் வள்ளுவருடன் ஒத்துள்ளது"[1] என்று க.த.திருநாவுக்கரசு குறிப்பிட்டுள்ளார். வள்ளுவர், தவறான வழியை எண்ணிக் கூறுகின்ற ஒரு அமைச்சனைவிட எழுபதுகோடி பகைவர் பக்கத்தில் இருத்தல் அரசனுக்கு நன்மையாகும் என்கிறார். வள்ளுவர் கூறிய கருத்துக்களை ஆராய்ந்து பார்த்தால் அரசனைவிட அமைச்சனே ஆளும் திறத்தில் கவனம் மிக்கவனாய் இருக்கவேண்டும் என்னும் கருத்து வெளிப்படுகிறது.

வெற்றிவேற்கை, 'மந்திரிக்கு அழகு வரும் பொருள் உரைத்தல்' (வெ.வே.8) என்கிறது. நீதிநெறிவிளக்கம், 'அமைச்சனானவன் நெறிதவறிய அரசனை அறிவு பெறச் செய்வான்; அரசன் தன்னைச் சினந்தாலும் அமைச்சன் அவனுக்கு அஞ்சிப் போகமாட்டான்' (நீதி.நெ.வி.45) என்று கூறுகிறது.

நல்ல அமைச்சனைத் துணையாகப் பெறாத மன்னனின் ஆட்சி முறையால் பயன் எதுவும் இல்லை (வி.சி.தொ.I பா.58); அதேநேரத்தில் அறிவில்லாத அவ்வமைச்சரால் அரசாட்சிக்குத் தீமை உண்டாகும் என்கிறது விவேகசிந்தாமணி.

நாட்டை ஆளும் மன்னனுக்கு உடனிருந்து உதவிகளைச் செய்பவன் அமைச்சனாவான். நாட்டு நிலைமையை ஆராய்ந்து அவற்றின் நன்மை தீமைகளை மன்னன் முன்பு எடுத்துரைக்கும் அவன், அஞ்சாமையுடனும் அறிவுடனும் செயல்பட வேண்டும் என்று நீதிநூல்கள் வலியுறுத்துகின்றன. பிற்கால நீதிநூல்கள் அரசன்

சினம் கொண்டாலும் அமைச்சன் அதற்காக அஞ்சிக் கலக்கம் கொள்ளமாட்டான் என்றும் அவ்வமைச்சன் இல்லையெனில் நாடு வளம் பெறாது எனவும் உணர்த்திச் செல்கின்றன.

### 6.1.1. சொல்வன்மை

உலகில் காணப்படும் உயிரினங்களில் பேசும் ஆற்றல் மனிதனுக்கு மட்டும் இருக்கிறது. அத்தகைய ஆற்றல் பெற்ற மனிதன் தன் திறமையை வளர்த்துக் கொள்ளவதோடு மட்டுமல்லாமல் அதை நல்லமுறையில் எல்லோரின் நன்மைக் காகவும் தன்னுடைய சொல்வன்மையைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும்; ஏனெனில், சொல்வன்மையால் ஒருவன் தன் செயல்பாடுகளில் வெற்றி பெறவும் முடியும்; தனிமனிதனுக்கு உதவும் இச்சொல்வன்மை அமைச்சனுக்கு மிகவும் இன்றியமையாதது. இதனடிப்படையில் வள்ளுவர் அமைச்சியலில் 'சொல்வன்மை' அதிகாரத்தை அமைத்துள்ளார்.

நாவன்மையால் ஒருவன் அடையும் பேறு மற்ற பேறுகளைவிட மிகவும் சிறப்புடையது (கு.641); பிறர் பேச்சிற்குச் செவிசாய்க்காதவரையும் கேட்க வைப்பது ஒருவனின் சொல்வன்மையாகும் (கு.643); மேலும், திறன் அறிந்து சொல்லும் சொல் வன்மையைவிட அறம், பொருள் வேறு எதுவும் இல்லை (கு.643); அமைச்சன், தான் சொல்லும் ஒவ்வொரு சொல்லாலும் எந்தவிதத் தவறும் நேர்ந்துவிடாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்; பிறரை வெல்லும் சொல்லை அறிந்த பிறகே அவ்வமைச்சன், தான் சொல்லக் கருதியவற்றைச் சொல்லவேண்டும் (கு.645); எனவே, அமைச்சன் சொல்லில் வல்லவனவாயும் சோர்வு இல்லாதவனாயும் எதற்கும் அஞ்சாதவனாயும் இருத்தல் வேண்டும் (கு.647) என்கிறார் வள்ளுவர். பொதுவாகத் தாம் கற்றதை விரித்துரைக்க முடியாதவர் மலர்ந்திருந்தும் மணம் பெறாத மலருக்கு நிகராவார்கள் (கு.650) என்பது வள்ளுவர் கருத்து.

"படித்துப் பட்டம் பெற்றவர்களைப் பண்டிதர் என்று அறிஞர் உலகம் போற்றுகிறது; புகழ்கிறது; ஆனால் என்ன பயன்? சிலர் தாம் கற்ற வித்தையைப் பிறர் அறியும் வண்ணம் கூறமுடியாதவர்களாகிறார்கள். மணமில்லாத மலர் பார்வைக்கு

அழகாயிருக்கும்; மாலை சூடுவதற்கு ஏற்றதன்று; மணம் பெறாத மலர், தன்னை அறிவித்துக் கொள்ளமுடியாதது போலப் பிறருக்குக் கூறாவிட்டால் கற்றுத் தேர்ந்ததினால் பயன் எதுவும் ஏற்படாது"[2] என்று மாணிக்கவாசகம் சொல்வன்மையின் தேவையை வள்ளுவர் வழிநின்று விளக்குகிறார்.

தாம் கற்றதைத் திறமையாக விரித்துரைப்பவர்களால், நாட்டு மக்கள் மிகுந்த நன்மைகளைப் பெறுவர் என்பது வள்ளுவர் வாக்கு. 'இவர் நாவசைத்தால் நாடு அசையும்' என்ற முதுமொழி இதற்குத்தக அமைகிறது.

சொல்வன்மையைப் பற்றி ஔவையார் தாம் படைத்த ஆத்திசூடியில் 'சுளிக்கச் சொல்லேல்' (ஆத்.48) 'சொற்சோர்வு படேல் (ஆத்.53) 'நொய்ய உரையேல்', (ஆத்.75) 'பழிப்பன பகரேல்' (ஆத்.77) 'வெட்டென பேசேல்' (ஆத்.105) என்றெல்லாம் கூறுகிறார். ஒருவன் பேசும்பொழுது சொல்லில் தெளிவு இருத்தல் வேண்டும்; சோர்வு, அச்சம் எதுவும் இருக்கக்கூடாது என்பதை உணர்ந்துகிறார் ஔவையார். ஒருவனுக்கு உயர்ந்த குணம் என்று சொல்லப்படுவது அவனுடைய வாய்ச்சொல் திறமையே ஆகும் (அறநெறி.173) என்கிறது அறநெறிச்சாரம். வெற்றிவேற்கை, ஒருவனுடைய சொல்திறமையால் அவன் கூறும் பொய்யும் மெய்போலத் தோன்றும் (வெ.வே.73) என்று கூறுகிறது.

கற்றதை விரித்துரையாதவர் பெற்ற கல்வி பொன்மலர் மணம் பெற்றதைப் போன்றதாகும் (நீதி.நெ.வி.5); பலநாள்கள் தாம் கற்ற கல்வியானது, சபையில் சொல்லுவதற்குப் பயன்படாமல் பின்னடைந்தோர்க்கு அச்சத்தைத் தரும்; அக்கல்வியால் பயன் இல்லை (பா.6); கல்வியால் சொல்வன்மை பெறாதவன் நண்பகலில் தன் இல்லாள் பிறனுடன் இன்பம் துய்த்தலைக் கண்டதைவிட பொல்லாதது (பா.8) என்று கடுமையாகக் கூறுகிறது நீதிநெறிவிளக்கம்.

"குமரகுருபரர் தம் பாடல்களில் கல்வியாளர் சொல்வன்மை பெற்றவனாகத் திகழ்தல் வேண்டும் என்று அடிக்கடி தம் பாடல்களில் வலியுறுத்துகிறார். இதற்கு என்ன காரணம் என்று ஆராய்ந்து பார்க்கின்றபோது வள்ளுவர்தான் நம் கண்முன் தோன்றுகிறார். ஏனெனில், வள்ளுவர் தம் திருமறையில் சொல்வன்மை, இனியவை

கூறல், வாய்மை, புறங்கூறாமை, பயனிலசொல்லாமை ஆகிய அதிகாரங்கள்வழி ஒருவனின் சொல்லுக்குள்ள ஆற்றலையும் அந்தச்சொல் அவன் பண்பாட்டை வெளிப் படுத்தும் திறத்தையும் விளக்குகிறார்”[3] எனக் குறிப்பிடுகின்றார் ஜலஜா கோபிநாத்.

கற்றவரையும் கல்லாதவரையும் அவரவர் வாய்ச்சொல்லாலேயே அறியமுடியும் (நீதி.வெ.15) என்று நீதிவெண்பா குறிப்பிடுகின்றது.

பிற்கால நீதிநூல்கள், கற்றவர், கல்லாதவர், நல்லோர், தீயோர் என்பதை அவரவர் சொல்வன்மை கொண்டு அறியலாம் என்றும் ஒருவனுடைய சொல்லே அவனுடைய பண்பைச் சுட்டும் எனவும் எடுத்துரைக்கின்றன.

### 6.1.2. வினைத்தூய்மை

நாட்டை ஆளும் அரசன் தன் நாட்டு மக்கள் நலமுடன் வாழவும் நாடு வளம் பெற்று விளங்கவும் செயல்புரிதல் வேண்டும். அச்செயல் புரிவதற்குத் துணையாக இருப்பவர் அமைச்சர் முதலானோர். ஒருவன் தான் செய்யும் செயல்களை மனத் தூய்மையுடன் செய்தால்தான் பயன் கிடைக்கும். இதனடிப்படையில்தான் வள்ளுவர் ‘வினைத்தூய்மை’ அதிகாரத்தை வைத்துள்ளார்.

வள்ளுவர், ஒருவன் செய்யும் செயல் எல்லா நன்மையும் அளிப்பதாயும் அவன் விரும்பிய அனைத்தும் கொடுப்பதாயும் இருக்கவேண்டும் (கு.651) என்று எண்ணுகிறார். எனவே, புகழையும் நன்மையும் தராத தூய்மையற்ற செயல்களை ஒருவன் செய்யக்கூடாது (கு.652) என அவர் அறிவுறுத்துகிறார். பொதுவாக, ஒருவன் இழிவான செயல்களைச் செய்தால் அதற்காகப் பின்னர் வருந்த நேரிடும் (கு.654); ஆகையால்தான் தன்னை ஈன்றவளின் பசியைக்கண்டு வருந்த நேர்ந்த போதிலும் பழிதரும் செயலைச் செய்யக்கூடாது (கு.656) என்றும் பழிச்செயலால் பெறும் செல்வத்தைவிட சான்றோர் வினைத்தூய்மையால் பெறும் வறுமையே சிறந்தது (கு.657) என்றும் வள்ளுவர் குறிப்பிடுகிறார்.

“எவரும் செய்தல் கூடாதென விலக்கப்பட்ட தீயவினைகளை அமைச்சர்களும் செய்தல் கூடாது. ஆனால், தமக்குள்ள செல்வாக்கால் விதிமுறைகளைக் கடந்து

அமைச்சர்கள் செய்யத் தொடங்கினாலும் எண்ணிய கருமம் நிறைவேறினாலும் முடிவில் துன்பத்தைக் கொடுக்கும். விதிப்படி தகாதெனக் கடியப்பட்டவைகள் அமைச்சர்கட்கும் தகாதனவே. மக்களுக்கொரு விதி; மாநிலம் ஆளும் மதி அமைச்சருக்குப் பிறிதொருவிதி எனக் கொள்ளுதல் கூடாது"[4] என்று விளக்குகிறார் சி.இலக்குவனார்.

பிறரை வருந்தச் செய்து ஒருவன் பொருள் சேர்க்கக்கூடாது (கு.659); ஏனெனில், அது பச்சை மண்கலத்துள் நீரைவிட்டு வைத்தது போன்றதாகும் (கு.660) என்றும் விளக்குகிறார் வள்ளுவர்.

ஒருவன் மனத்தூய்மையோடு இருப்பதோடு மட்டுமல்லாமல் அவன் செயல்புரிய மனஉறுதியும் வேண்டும். எத்தனை இடையூறுகள் நேர்ந்தாலும் எடுத்த செயலைச் செய்து முடிக்க ஒருவனுக்கு மனந்தளராமையும் உடல் சோர்வின்மையும் வேண்டும். இதற்கு அடிப்படை மன உறுதியாகும். இதனை அறிவுறுத்தவே வள்ளுவர் 'வினைத்திட்பம்' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார் எனலாம்.

செய்யும் செயலை இறுதிவரை தொடர்ந்து செய்து முடிப்பதே ஒருவனுக்கு ஆண்மையாகக் கருதப்படும் (கு.663); ஒரு செயலைச் செய்ய எண்ணியவர் எண்ணிய படியே உறுதியுடையவராக இருத்தல்வேண்டும் (கு.664); ஒருவனுடைய உருவத்தைக் கண்டு மதிப்பிடாமல் அவன் வினைசெய்யும் ஆற்றலைக் கொண்டு மதிப்பிட வேண்டும்; துன்பம் வந்தாலும் துணிவு மேற்கொண்டு செயல்புரியவேண்டும் என்றும் செய்யும் தொழிலில் மன உறுதியுடன் இருத்தல்வேண்டும் (கு.664) என்றும் வள்ளுவர் கூறுகின்றார்.

நீதிநெறிவிளக்கம், எடுத்த வினையை முடிப்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கும் ஒருவன் உடல் துன்பத்தைப் பார்க்கமாட்டான் ; பசியைக் கருதமாட்டான்; உறக்கம் கொள்ளமாட்டான்; யார் தீமை செய்தாலும் பொறுத்துக் கொள்வான்; பிறரால் ஏற்படும் அவமானத்தையும் கருதமாட்டான் (நீதி.நெ.வி.53) என்று கூறுகிறது.

அமைச்சன் மனத்தூய்மையுடனும் உறுதியுடனும் ஒரு செயலைச் செய்தால் அச்செயல் வெற்றி பெறுவது உறுதி என்று வள்ளுவரும் குமரகுருபரரும் குறிப்பிடுவதை அறியமுடிகிறது.

### 6.1.3. வினைசெயல்வகை

ஒருவன் செய்யும் செயலின் திறமையே வினைசெயல்வகை எனப்படும். அமைச்சன் வினை செய்யும் திறத்தை உணர்த்துவதற்கு வள்ளுவர் 'வினைசெயல் வகை' அதிகாரத்தை வைத்துள்ளார். ஒருவன் செயலைச் செய்ய நினைக்கும் பொழுது ஆராய்ந்து முடிவெடுக்க வேண்டும் (கு.671); முடிவு எடுத்த பின்பு அவன் காலம் தாழ்த்தாமலும், காலம் தாழ்த்திச் செய்யத்தக்க செயலைக் காலம் தாழ்த்தியும் ஒருவன் செய்யவேண்டும் (கு.672); பொருள், கருவி, காலம், செயல், இடம் ஆகிய அனைத்தையும் எண்ணி ஒருவன் செய்யவேண்டும் (கு.675); ஒரு செயலின் முடிவும் அதனால் உண்டாகும் இடையூறும் ஆராய்ந்து செய்யப்படவேண்டும் (கு.677); ஒரு செயலைச் செய்யும்போது மற்றொரு செயலையும் செய்து முடித்தல் ஒரு யானையால் மற்றொரு யானையைப் பிடித்தலைப் போன்றது என்பதை வள்ளுவர்,

*"வினையால் வினையாக்கிக் கோடல் நனைகவுள்*
*யானையால் யானையாத் தற்று" (குறள்.678)*

என்ற குறட்பாவழி நவில்கிறார். எப்போதும் வினை மேற்கொள்பவன், ஒரு வினையின் நுட்பம் அறிந்தவனின் கருத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று குறிப்பிடுகின்றார் வள்ளுவர்.

'நுண்ணிய கருமமும் எண்ணித் துணி' (ஆத்.52) என்கிறது ஆத்திசூடி. நீதிநெறிவிளக்கம், வினையின் வலிமையை ஆராய்ந்து, பின்பு வினையாற்றத் தொடங்கவேண்டும் (நீதி.நெ.வி.52) என்று வலியுறுத்துகிறது. நீதிவெண்பா, எந்தச் செயலையும் ஆராய்ந்து ஒருவன் செயல்படவேண்டும்; இல்லையெனில் அச்செயலால் துன்பம் உண்டாகும் என்பதைக் கீழ்வரும் கதையினை எடுத்துக்காட்டி விளக்குகிறது :

பார்ப்பனி ஒருத்தி பிள்ளையில்லாமல் இருந்தாள். அப்பிள்ளை இல்லாத குறை நீங்கக் கீரிப்பிள்ளை ஒன்றை வளர்த்து வந்தாள். நெடுநாள் கழித்து அவளுக்குப் பிள்ளை ஒன்று பிறந்தது. தன் குழந்தை போலவே அவள் கீரியிடத்தும் அன்பு

செலுத்தி வந்தாள். ஒரு நாள் தன் குழந்தைக்குக் காவலாகக் கீரிப்பிள்ளையை வைத்துவிட்டு நீரெடுத்துவரக் குடத்துடன் சென்றாள். குழந்தைக்குக் காவலிருந்த கீரிப்பிள்ளை, பாம்பொன்று குழந்தை அருகில் வரக்கண்டது. குழந்தையைப் பாம்பு கடித்துவிடக் கூடுமெனக் கருதிய கீரிப்பிள்ளை பாம்பைக் கடித்துக்கொன்று ஒழுகும் இரத்தத்துடன் பார்ப்பனி எதிரில் சென்றது. இரத்தத்தைக் கண்ணுற்ற பார்ப்பனி, சிறிதும் ஆராயாமல், தன் குழந்தையைக் கீரிப்பிள்ளைதான் கடித்துக் கொன்று விட்டதென்று எண்ணிக் குடத்தை அதன்மீது போட்டுக் கொன்றொழித்தாள். வீடு வந்து சேர்ந்ததும்தான் உண்மையை உணர்ந்து, ஆராயாது செய்த தன் அறியாமையை எண்ணி வருந்தினாள். இதன்வழி எந்தச் செயலையும் ஆராயாமல் செய்வார்க்குத் துன்பம் உண்டாகும் என்று எடுத்துக்காட்டுகிறது நீதிவெண்பா.

எந்த ஒரு செயலையும் செய்யும்போது அதன் செயல்முறை, பயன் ஆகியவற்றை ஆராய்ந்து ஒவ்வொருவருக்கும் அவசியம் என்பதை பிற்கால நீதிநூல்கள் விளக்குகின்றன. நாட்டையாளும் அரசனின் உற்றுழி உதவும் அமைச்சனுக்கு இது நன்கு தெரிந்திருக்கவேண்டும் என்கிறது வள்ளுவம்.

### 6.1.4. தூது

ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் தொடர்பு இல்லாமலோ, பகைகொண்டோ இருக்கமுடியாது. இருநாடுகளுக்கும் இடையில் நல்லுறவு வளர்வதற்கும், பகை நாட்டுடன் போரிட்டு வெற்றி பெறவும் அரசன் பிறருடைய துணையை நாடவேண்டும். அத்துணையே 'தூது' எனலாம். நல்லுறவை வளர்ப்பதே தூதருடைய தலையாய கடமையாகும். வள்ளுவர், தூதரை அமைச்சின் ஒரு கூறாக மதித்துள்ளார். அதனால், தூது பற்றிய அதிகாரத்தை அமைச்சியலில் அவர் வைத்திருக்கின்றார். தூதுவன் எத்தகைய இயல்புகளைப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதைத் தம் குறட்பாக்களில் விளக்கியுள்ளார்.

அன்பு, குடிப்பிறப்பு, வேந்தன் விரும்பும் பண்பு, அறிவு, சொல்வன்மை, கல்வி, பயனற்றவைகளை நீக்கிப் பிறர் மகிழுமாறு பேசுதல், அஞ்சாமை, காலத்தையும் இடத்தையும் அறிந்து கடமை ஆற்றுதல் (கு.681,682,683,684,685,686) போன்றவை

தூதுவருக்கு இருக்கவேண்டிய இயல்புகளாக வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மேலும், தூய்மை, துணிவு போன்ற பண்புகள் அவனிடம் நிறைந்து இருத்தல் வேண்டும் (கு.688); அவன் வாய் சோர்ந்து குற்றமான சொற்களைச் சொல்லக்கூடாது (கு.689); தனக்கு அழிவு வந்தாலும் அதற்காக அத்தூதுவன் அஞ்சாதவனாக இருக்கவேண்டும் என்று கூறுகின்றார்.

தூதரை அரசர் எக்காரணங்கொண்டும் கொல்லுதல் கூடாது என்பது அன்றைய காலக்கட்டத்தில் அரசியல் மரபாக இருந்திருக்கின்றது. சங்க காலத்தில் புலவர்களே தூதுவராகச் செயல்பட்டுள்ளனர் என்பதை இலக்கியங்களில் காண முடிகிறது. "புறநானூற்றில் நெடுங்கிள்ளி, நலங்கிள்ளி இருவருக்கும் இடையே ஏற்பட்ட போரினைத் தடுக்க புலவர் கோவூர்கிழார் எடுத்துக்கொண்ட முயற்சியும் கிள்ளி வளவனிடமிருந்து மலையமான் மக்களைக் காத்தலும் தக்கச் சான்றாகும்".[5] எனவே சங்க காலத்திலே தூதுவராகச் சென்று வந்தமை புலப்படுகிறது.

தூதுவர்கள் தம் உயிருக்கு அழிவு நேர்ந்தாலும் அஞ்சுதல் கூடாது என வள்ளுவர் கூறுவதால் அவர்கள் உயிருக்கு அழிவு எப்போது வேண்டுமானாலும் வரலாம் என்பது தெளிவு.

வேதநாயகர், கொடுங்கோலாட்சி புரியும் மன்னனுடைய நாட்டில் பணிபுரியும் பணியாளராகிய தூதுவனே கூற்றுவன் ஆவான் (நீதி.நூ.அதி.3 பா.10) என்று கூறுவதிலிருந்து தூதுவனைக் கையாளும் அரசனுடைய அழிவுக்கும் அத்தூதுவனே காரணமாவான் என்பதை அறியமுடிகிறது.

அமைச்சர்களை உள்நாட்டிலே இருந்து கொண்டு அரசனுக்குப் பணியாற்றுபவராகவும், தூதுவரை உள்நாட்டிலும் வெளிநாட்டிலும் பணியாற்றுபவராகவும் வேறுபடுத்தலாம். தூது பற்றித் திருக்குறள் கூறிய அளவிற்குப் பிற்கால நீதிநூல்களில் செய்திகள் காணப்படவில்லை.

### 6.1.5. மன்னரைச் சேர்ந்தொழுகல்

நாட்டு மக்கள் காண்பதற்கு எளியவனாகவும் மக்களுடன் இனிமையாகப் பேசக்கூடியவனாகவும் நாடாளும் மன்னன் இருக்கவேண்டும்; அத்தகைய மன்னனைச் சார்ந்த மக்களும் அவன் தன் கடமையை ஆற்றுதற்கு இடையூறின்றி வாழவேண்டும். மன்னன் தன் கடமையைச் செவ்வனே செய்தற்குத் துணைநிற்பவர் அமைச்சர். அவ்வமைச்சர் அரசருடன் இணைந்து செயல்பட்டால்தான் நாட்டில் நல்லாட்சி நடைபெறமுடியும். எனவேதான் வள்ளுவர், அமைச்சர் மன்னரைச் சேர்ந்து செயல் செய்யவேண்டும் என்ற அடிப்படையில் இவ்வதிகாரத்தை அமைத்துள்ளார். மன்னரைச் சேர்ந்தொழுகலாவது "அமைச்சர் அரசரைப் பொருந்தி ஒழுகுதல்"[6] என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர்.

மன்னரைச் சார்ந்து வாழ்கின்ற அமைச்சன் அம்மன்னனிடம் மிகவும் நெருக்கம் கொள்ளாமலும் மிகவும் விலகிச்செல்லாமலும் இருத்தல்வேண்டும் (கு.691); மன்னன் விரும்பியவற்றை அமைச்சன் விரும்பக்கூடாது (கு.692); மன்னன் இருக்கும்போது அமைச்சன் பிறரிடத்தில் நெருங்கிப் பேசுதலும் நகைத்தலும் கூடாது (கு.694); மன்னன் தனக்கு இளையவர் தானே என்று அமைச்சன் அரசனை எண்ணுதல் கூடாது (கு.698); மேலும், மன்னன் பழகியவன் என்று நினைத்து இழிவான காரியங்களைச் செய்தல் ஆகிய செயல்களை அமைச்சன் செய்தல்கூடாது (கு.700) என்று அறிவுறுத்துகிறார் வள்ளுவர்.

மன்னரோடு பழகும்முறை பற்றி வள்ளுவர் கூறுவதுபோல் கீழ்க்கணக்கு நூலான ஆசாரக்கோவை யாவரொடும் சேர்ந்தொழுகும் முறையைக் குறிப்பிடுகிறது. "அரசன், உவாத்தியான், தாய், தந்தை, தம்முன் நிகரில் குரவர் இவரைத் தேவரைப் போலத் தொழுதெழுக என்பதே யாவருங் கண்டநெறி"[7] (ஆசா.கோ.16) இக்கருத்தை ஒட்டியே கீழ்வருமாறு அறநெறிச்சாரம் கூறிச்செல்கிறது :

*"மன்னன் உடன் வயிறு மாண்புடைத் தாய் தந்தை*
*முன்னி முடிக்கும் முனியாசான் - பன்னியாங்கு*
*ஆய குரவர் இவர் என்ப வையத்துத்*
*தூய குலஞ்சாதி யார்க்கு" (அறநெறி - 61)*

“இப்பூமியில் அழுக்கற்ற குலநலனும், சாதிநலனும் உடையவர்க்கு மன்னனும், தம்மைப் பெறலால் மேம்பட்ட தாய் தந்தையரும் கருதியதை முடித்தே விடும் ஆற்றலுடைய துறவியும் - குருவும் அவர் பத்தினியும் ஆகிய இவர்களே குரவர்கள் எனப் பெரியோர் கூறுவர்”.[8]

நீதிநெறிவிளக்கம், அரசன் தன்னுடைய கருத்துக்கு ஒத்து வருவான் என்று நினைத்துத் தாம் விரும்பிய அனைத்தையும் கூறுதல் கூடாது; ஏனெனில், மன்னன் கண்ணால் காண்பதற்கு எளியவனாகக் காணப்பட்டாலும் அவன் உள்ளத்தால் காண்பதற்கு அரியவனாகவும், கருணையில்லாதவனாகவும் சினமுடையவனாகவும் இருப்பான் (நீதி.நெ.வி.46) என்று கூறுகிறது.

### 6.1.6. குறிப்பறிதல்

மன்னன் கூறுவதற்கு முன்பே அவனுடைய எண்ணத்தை அமைச்சன் குறிப்பால் அறிந்துகொள்ளும் திறமையைக் ‘குறிப்பறிதல்’ எனலாம். வள்ளுவர், ‘குறிப்பறிதல்’ என்ற அதிகாரத் தலைப்பினைப் பொருட்பாலிலும் காமத்துப்பாலிலும் வைத்துள்ளார். குறிப்பறிந்து செயல்படும் தன்மை பெற்றவனைத் தெய்வத்திற்கு ஒப்பாகக் கருதும் வள்ளுவர் உள்ளக் குறிப்பை உணரவல்லவனை, தன் உறுப்புக்களுள் எதைக் கொடுத்தாவது ஒருவன் துணையாகக் கொள்ளலாம் (கு.703) என்கிறார்.

“ஆட்சித் தலைவர்கள், அமைச்சர்கள், குறிப்பால் உணரும் ஆற்றல் தமக்கு இல்லையாயினும் ஆற்றல் உள்ளவர்களைத் தாம் துணையாகக் கொள்ளுதல் வேண்டும். அவ்விதம் அவர்களைத் துணையாகக் கொள்வதற்கு எதையும் கொடுக்கலாம். பொருள், நிலம், ஊர்திகள் முதலிய நமக்கு உறுப்புக்கள் போன்றலின் உறுப்பு எனப்பட்டன”.[9] வள்ளுவர், குறிப்பறிபவனை உறுப்பைக் கொடுத்தாவது துணைகொள்ளலாம் என்பதன்வழி அதனுடைய முக்கியத்துவம் வெளிப்படுகிறது.

குறிப்பினை உணர முடியாதவனுக்குக் கண் இருந்தும் பயனில்லை (கு.705); ஒருவனுடைய பகையும் நட்பும் அறிந்துகொள்ள கண்ணும் முகமும் போதுமானதாகும் (கு.709) என்கிறது வள்ளுவம். ‘அகத்தின் அழகு முகத்தில் தெரியும்’ என்னும்

பழமொழிக்கு ஏற்ப ஒருவனுடைய உள்ளக்குறிப்பை முகத்திலிருந்து உணரலாம் என வள்ளுவர் கூறுகின்றார்.

அவையோர் முன்பு கையில் கொடுத்த ஓலையை வாசிக்க முடிக்காமல் நிற்பவனும், ஒருவனைப் பற்றிய குறிப்பை அறிந்துகொள்ள முடியாதவனும் மரமாவான் (மூது.13) என்று மூதுரையும் பிறருடைய குறிப்பை அறிந்து நடப்பவனே சிறந்தோனாவான்; சொல்லியும் தெரிந்து கொள்ளாதவன் முழுமூடனாவான் (நல்.35) என்று நல்வழியும் கூறுகின்றன. நீதிநெறிவிளக்கம், குடிமக்களின் குறிப்பை அறிந்து வரிவாங்கி ஆட்சி செய்வதே அரசனின் கடமையாகும் (நீதி.நெ.வி.29) என்று கூறுகிறது. பிறர் வந்து தன்னிடம் யாசிக்காமலே உயர்ந்தோர் குறிப்பறிந்து கொடுப்பார்கள் (நீதி.வெ.91) என்று சிறப்பிக்கிறது நீதிவெண்பா.

வேதநாயகர், வலக்கை செய்யும் அறத்தை இடக்கை அறியாதபடி ஏழைகளுக்குக் குறிப்பறிந்து கொடுப்பவரே உயர்ந்தோர் ஆவார் (நீதி.நூ.அதி.38 பா.6) என்கிறார். மேலும், எச்சமயத்தாரும், எத்தொழில் செய்வோரும் தங்களின் மானத்தை விட்டு, உதவி வேண்டும் என்று கேட்கும் முன்பு குறிப்பால் உணர்ந்து கொடுப்பதே அன்பு நெறியாகும் (பா.12) என்று குறிப்பிடுகின்றார்.

ஒருவனைப் பற்றிக் குறிப்பறிய வேண்டுமெனில் அதற்குக் கண்ணும் முகமும் கருவிகளாகப் பயன்படுகிறது என்கிறார் வள்ளுவர். குறிப்பறிந்து கொடுக்காதவனை மரம் என்றும் மூடன் என்றும் சுட்டுகிறார் ஔவையார். குறிப்பறிந்து பிறருக்குக் கொடுக்கும்பொழுது மற்றவர்களுக்குத் தெரியாதபடி கொடுக்கவேண்டும் என்கிறார் வேதநாயகர். அரசனுக்குக் கண்ணோட்டமும், அமைச்சனுக்குக் குறிப்பறிதலும் தேவை என்று வள்ளுவர் கூறுகிறார்.

வள்ளுவர், மன்னனின் குறிப்பறியும் ஆற்றல் அமைச்சனுக்குத் தேவை என்ற அடிப்படையில் கருத்துக்களை விளக்குகிறார். மக்களின் குறிப்பறிதல் மன்னனின் கடமை என்றும் குறிப்பறிந்து பிறர்க்குக் கொடுக்கும் பண்பு உயர்ந்தோரிடம் உண்டு என்று நீதிநெறிவிளக்கமும் நீதிவெண்பாவும் கூறுகின்றன.

### 6.1.7. அவையறிதல்

ஒவ்வொருவருக்கும் பேசுவதற்கு உரிமை உண்டு. கற்றோரோ, மற்றோரோ தாம் கற்றதையோ, தெரிந்ததையோ, உணர்ந்ததையோ பிறர் கூடியிருக்கும் அவையில் எடுத்துரைப்பர்; அவ்வாறு எடுத்துரைக்கும்போது அங்குக் கூடியிருப்போரின் தன்மையை அறிந்து மொழியவேண்டும் என்பது அவையறிதல் எனப்படுகிறது. அதாவது, அவையின் தன்மையை அறிந்து ஒருவன் பேசவேண்டும் (கு.711) என்ற வள்ளுவர், அறிவு மிகுந்தவர் கூடிய அவையில் யாரும் முந்திக்கொண்டு பேசுதல் கூடாது (கு.715) என்றும் ஒருவன் பேசும்போது குற்றம் இல்லாமல் பேசவேண்டும் (கு.717) என்றும் குறிப்பிடுகின்றார். அவையில் பேசுபவர் பல நூல்களைக் கற்றவராகவும் சொல்லின் தெளிவு பெற்றவராகவும் இருக்கவேண்டும் (கு.717); அறிவில்லாதவரின் கூட்டத்தில் மறந்தும் ஒருவன் பேசக்கூடாது (கு.719); அவ்வாறு பேசினால் அச்சொற்கள் தூய்மையில்லாத இடத்தில் சிந்திய அமிழ்தம் போன்றதாகும் (கு.720) என்று நவில்கிறது வள்ளுவம். இதனை ஒட்டியே பழமொழி நானூறு,

*"கல்லாதவரிடைக் கட்டுரையின் மிக்கதோர்*

*பொல்லாத(து) இல்லை ஒருவற்கு"* *(பழ..நா.15)*

என்று கூறுகிறது.

தான் கற்ற கல்வியை ஒருவன் அவையோர் முன்பு உடனே எடுத்துச்சொல்ல வேண்டும்; இல்லையெனில், அவன் கற்ற கல்வியால் எந்தப்பயனும் இல்லை (நிதி.நெ.வி.5) என்று நீதிநெறிவிளக்கம் கூறுகிறது. நீதிவெண்பா, பெரியோர் கூடிய அவைக்குக் கற்றறிந்தவனே கண்ணுக்கு இனிமைதரும் மணியாவான் (நீதி.வெ.76) என்கிறது.

ஒருவன் எவ்வளவுதான் கற்றிருந்தாலும் அவையோரின் தன்மையை அறிந்து எடுத்துக் கூறும் இயல்பு அவனிடத்தில் இருக்கவேண்டும் என்று நீதிநூல்கள் கூறுகின்றன.

### 6.1.8. அவையஞ்சாமை

அவையோரிடத்தில் ஒருவன் அஞ்சாமல் செயல்படுதலே 'அவையஞ்சாமை' ஆகும். வள்ளுவர், அவையோர் கேட்பதற்கு அஞ்சாது பொருள் கூறும் வல்லமையும் (கு.723); கற்றவர்முன் தாம் கற்றவற்றைச் சொல்லும் ஆற்றலும் கற்றவருக்கு வேண்டும் (கு.724) என்று நவில்கிறார். அவையோரிடத்தில் பேசுவதற்கு அஞ்சு கின்றவன் கற்ற நூலானது பேடியின் கையில் பிடித்த வாளுக்குச் சமம் (கு.727); கற்றவற்றை பிறருக்கு எடுத்துக்கூறமுடியாதவன் கல்லாதவரைவிட கடைப்பட்டவன் ஆவான் (கு.729); அவன் உயிரோடு வாழ்ந்தும் பயனில்லை (கு.730) எனக் கருதுகிறது வள்ளுவம்.

அவையில் கற்றவர் முன்பு அஞ்சுபவன் கல்வியறிவும், கல்லாதவன் பேசும் ஆரவாரச் சொல்லும் பயனற்றதாகும் (நீதி.நெ.வி.6) என நீதிநெறிவிளக்கம் குறிப்பிடுகிறது. கற்றறிந்த அறிஞர்கள் கூடியிருக்கும் அவையில் ஒருவன் அஞ்சாமல் பேசுதல் வேண்டும் என்பதைத் திருக்குறளும் நீதிநெறிவிளக்கமும் வலியுறுத்து கின்றன.

## 6.2. நாடு

ஒரு மனிதன் நிலையாக வாழவேண்டுமெனில் அவனுக்கு இருப்பிடம் தேவையாகும். அதாவது, உலகில் வாழும் உயிர்கள் இயற்கையோடு கூடிவாழும் இடமே இருப்பிடம் எனப்படும். வள்ளுவர், அரசனுக்குரிய ஆறு அங்கங்களைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றுள் ஒன்று குடி, அந்த குடி வாழும் இடமே 'நாடு' ஆகும். ஒரு நாடு என்பது குறையாத விளைச்சலும் தக்காரும் தாழ்வு இல்லாத செல்வமும் பொருந்தியதாக இருக்கவேண்டும் (கு.731) என்கிறார் வள்ளுவர். இதற்குப் பரிமேலழகர், "குன்றாத விளையுளைச் செய்வோரும் ; அறவோரும்; கேடு இல்லாச் செல்வமுடையோரும் ஒருங்கு வாழ்வதே நாடாவது"[10] என்று விளக்கம் தருகிறார்.

"இன்றைய பொருளியலறிஞர்கள் வளநாடு படைத்தல் பற்றி என்ன கூறுகின்றனர்? இயற்கை வளமும் மக்கள் வளமும் செழிப்புற்று உழவாலும்

தொழிலாலும் வணிகத்தாலும் பண்டங்களும் பிணிகளும் (Good and Services) மலிந்து பஞ்சமும் பட்டினியும் பற்றாக்குறையும் இல்லையாகிச் சமூகத்தின் அனைத்து நிலையினரும் நேரியமுறையில் வருவாயில் பங்கு பெற்று எல்லோரும் இன்புற்று வாழும் நாடே வளநாடு எனப் பொருளியல், வளநாட்டை விளக்குகிறது. வள்ளுவர் ஓரரசியற் சமூகச் சிந்தனையாளர்; அவருக்கு அரசில்லாது நாடில்லை; அது உண்மையும்கூட, ஆகவே அவர் கண்ட நாட்டில் வளத்தோடு கூட அரசும் இடம் பெற்றுள்ளது"[11] என்கிறார் முருகரத்தனம்.

ஒரு நாடு சிறப்புற்றுத் திகழவேண்டுமெனில் அங்கு இயற்கை வளங்களும் சிறந்த அறிவுடையோரும் தொழில்வளமும் நிறைந்திருக்க வேண்டும் என்று வள்ளுவர் கருதுகிறார்.

பொருள் வளம் உடையதாகவும் விளைபொருளைத் தருவதாகவும் நாடு விளங்கவேண்டும் (கு.732); ஒரு நாட்டில் பசி, பிணி, பகை போன்ற கேடும் கொலைத் தொழிலும் இருத்தல் கூடாது (கு.734); பூமியின் நீரும் மழைநீரும் ஆற்றுநீரும் அரணும் நாட்டிற்கு உறுப்புக்களாகும் (கு.737); நோயின்மை, செல்வம், விளைச்சல், இன்பவாழ்வு, நல்ல காவல் இந்த ஐந்தும் நாட்டிற்கு அணிகலன் (கு.738) என்றும் வள்ளுவர் கூறுகிறார். மேலும், நல்ல அரசன் இல்லாத நாடு அனைத்துச் செல்வங்களையும் பெற்றிருந்தாலும் பயன்பெறாது (கு.740). எனவே நீர்வளமும் நிலவளமும் செழிப்புற்று இருந்தாலும் அதை நிர்வகிக்கும் திறமை அரசனுக்கு வேண்டும் என்று குறட்பாக்கள் வற்புறுத்துகின்றன.

கொன்றைவேந்தன், நீர்வளம் பொருந்திய நாட்டிலே மக்கள் குடியிருக்க வேண்டும் (கொ.வே.51) என்கிறது. மேலும், 'நாடெங்கும் வாழக் கேடொன்றும் இல்லை' (பா.49) என்று சிறப்பிக்கிறது. நாட்டின் வளமே மக்கள் குறையில்லாமல் வாழ்வதற்குக் காரணம் என இந்நூல்வழி அறியமுடிகிறது. ஆறு இல்லாத ஊருக்கு அழகு இல்லை (நல்.24) என்று கூறுகிறது நல்வழி. விவேகசிந்தாமணி, வளம் இல்லாத நாட்டில் மன்னன் செங்கோல் ஆட்சி நடத்துவது பயனற்றதாகும் (வி.சி.தொ.II பா.10) என்று கூறுகிறது.

வள்ளுவம், மக்கள் இன்பமுடன் வாழவேண்டுமெனில் நாட்டில் வறுமை இருத்தல் கூடாது; ஆகையால், வறுமையின்றி வளமுடன் வாழ நிலவளம், நீர்வளம் ஆகியவற்றோடு நல்ல விளைச்சல் தேவையாகும் என்கிறது. ஆயின், பிற்கால நீதிநூல்கள், ஒரு நாடு செழிப்புற வேண்டுமெனில், அங்கு நீர்வளம் அவசியம் என்று கூறுகின்றன. அவை நீர்வளம் இருந்தால் பிற வளங்கள் தாமாகவே அமையும் என்பதன் அடிப்படையில் இவ்வாறு கூறியிருக்கலாம்.

### 6.2.1. அரண்

ஒரு நாட்டை வெளிப்பகையிலிருந்து பாதுகாக்கும்பொருட்டு அமைக்கப் படுவது 'அரண்' எனப்படும். புறநானூறு, அரண் பற்றிய செய்திகளை அதிகமாகக் கூறுகின்றது. அதாவது, பகைவர் முற்றுகையிட்ட காலத்துப் பல நாட்கள் மக்கள் நலமாக வாழ்வதற்குப் பாதுகாப்பும் வசதியும் செய்து தருவது அரண் (புறம் 20:16) என்கிறது. நீர், நிலம், மலை, காடு என அரண்கள் நான்கு வகை (கு.742); உயர்வு, அகலம், திண்மை, பகைவரால் அழிக்கமுடியாத அருமை ஆகிய நான்கும் பொருந்தியதாக அவ்வரண்கள் இருக்கவேண்டும் (கு.743); மேலும், அவ்வரண்கள் பகைவருடைய ஊக்கத்தை அழிக்கவல்லதாயிருக்க வேண்டும் (கு.744); அதே நேரத்தில் அந்நாட்டினுள்ளிருப்போர் நிலைத்திருப்பதற்கு நிலைக்களனாகும் தன்மையுடையதாகவும் இருக்கவேண்டும் (கு.745); என்றும், போர்முனையில் பகைவர் அழியும்படியாகப் போர்ச் செய்யும் திறம் பெற்று விளங்குவது அரண் (கு.749) என்றும் செய்யும் செயலில் சிறப்பு இல்லாதவனிடத்தில் அரண் இருந்தும் பயன் இல்லை (கு.750) என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

வேதநாயகர், முறை தவறாத மன்னனுக்கு நாடெல்லாம் பேரரணாகி அமையும் (நீதி.நூ.அதி.3 பா.8) என்று கூறுகிறார். நாடாளும் மன்னனும் மக்களும் பாதுகாப்பாக இருப்பதற்கும் போர்செய்து பகைவரை அழிப்பதற்கும் உதவியாக அரண் அமைகிறது என்பதைத் திருக்குறளும் வேதநாயகரின் நீதிநூலும் குறிப்பிடுகின்றன.

## 6.3. பொருள் செயல்வகை

மனிதவாழ்க்கைக்கு அடிப்படைத் தேவையாகவும் அவனுடைய துன்பங்களை வரையறைசெய்யும் கருவியாகவும் அமைவது பொருளாகும். அறம் என்ற அடிப்படைக் கருவியைக் கொண்டு என்றும் பலனைப் பெறுவதற்குக் களமாக விளங்கும் பொருள் பற்றிய கருத்துக்கள் திருக்குறளில் அதிகமாகப் பொதிந்துள்ளன. மனிதனுடைய தேவையை நிறைவு செய்துகொள்ள பொருள் அவசியம் என்று உணர்ந்த வள்ளுவர் அறத்திற்கு அடுத்த நிலையில் பொருளை வைத்துள்ளார் எனலாம்.

"மனிதன் தனித்தனியே சிறுசிறு கூட்டமாகப் பிரிந்து குடிமை வாழ்வு (**Tribal Life**) நடத்திக் கொண்டிருந்த தொல்பழங்காலத்தில் அவனுடைய பொருளாக்க முயற்சிகள் எளிமையாகவே இருந்தன. உழவுத்தொழிலும் உருவம் பெறாத காலம் அது. அப்போது உடை உடைமைகள் பொதுவானவை. தனித்தனியே ஒவ்வொருவரும் பாடுபட்டனர். பாடுபட்டுத் தேடியவற்றைத் தாமே உண்டனர் ; எனவே பண்டமாற்றுக்கும் அவற்றால் தேடப்பட்ட பண்டங்களுக்கும் உள்ள உறவுகள் வெளிப்படையாகத் தெரிவன. அவற்றில் சிக்கல் இல்லை. இவ்வாறு எளிமையான முறையில் பண்டைய மனிதனின் தேவைகள் நிறைவேறின. இந்நிலையில் அவன் பொருள் வாழ்வினை விளக்குவதற்கு ஆழ்ந்த சிந்தனையும் நீண்ட விளக்கங்களும் தேவையில்லை. இந்தக் காலம் மாறியது"[12] என்கிறார் முருகரத்தனம்.

வள்ளுவம், ஒருவன் வாழ்வதற்குரிய பொருளாகிய செல்வம் அறத்தையும் இன்பத்தையும் கொடுக்கும் (கு.754) என்றும் பொருள் உள்ளவரை எல்லோரும் சிறப்புச் செய்வர் என்றும் கூறுகிறது. "பொருள் என்பது செல்வத்தின் தனித்தொரு சிறப்புக்கூறு; பணம் மட்டுமே அன்று; சமுதாய மக்கள் உண்டும், நுகர்ந்தும், மகிழ்ந்தும் வாழ்வதற்குரிய அனைத்து ஆக்கப்படும் பொருள்களும், எல்லா நுகர்பொருள்களும் திருக்குறளில் பொருள் என வரையறைப்படுத்தப்படுகிறது".[13] சமுதாயத்தில் வாழும் மக்கள் இன்பத்தோடு நுகரக்கூடிய அனைத்துமே பொருளாகும் என அறியமுடிகிறது.

அருளும் அன்பும் பொருந்தும் வகையில் ஒருவன் பொருள் திரட்ட வேண்டும் என்பதை,

*"அருளொடும் அன்பொடும் வாராப் பொருள்ஆக்கம்*
*புல்லார் புரள விடல்"* *(குறள் 755)*

என்ற குறட்பா உணர்த்துகிறது. பொருள் ஈட்டி வாழ்பவனுக்கு மற்ற அறமும் இன்பமும் ஒருசேரக் கைகூடும் (கு.760) என்று வள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

"மனிதனுக்குப் பல்வேறு தேவைகள் உண்டு. உண்டி, உடை, உறையுள் ஆகிய தேவைகள் அவனுக்குத் தலையானவை. காதல், கலை, கல்வி முதலாக இன்னும் பல தேவைகள் வளர்ந்து கொண்டே போகின்றன. இத்தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள மனிதன் பல்வேறு ஆக்கப்பணிகளில் ஈடுபடுகின்றான். பண்டைக்கால மனிதனுக்கு அவன் தேவைகள் எளிதாக நிறைவேறின. தானே தன் உழைப்பால் நிறைவேற்றிக் கொண்டான்; தனக்குக் கிடைக்காத ஒருசிலவற்றைப் பிறரிடமிருந்து பெற்றுக்கொண்டான்; அவற்றுக்காகத் தன் பண்டங்களை நேரே மாற்றிக்கொண்டான்; இவ்வாறாக அவனிடம் பண்டமாற்றும் இருந்தது".[14] எனவே இன்றைய நிலையிலும் ஒரு நாடு மற்றொரு நாட்டுக்குக் கொடுப்பதும் வாங்குவதும் போன்ற நிலை காணப்படுவதை அறியமுடிகிறது.

பொருளை ஒருவன் போற்றி வாழவேண்டும் (ஆத்.86) என்று ஆத்திசூடியும் ஒருவன் கடல்கடந்தும் பொருள்தேடவேண்டும் (கொ.வே.39) என்று கொன்றை வேந்தனும் கூறுகின்றன. தான் தேடிச் சம்பாதித்த பொருளை அறவழியில் ஒருவன் செலவிடவேண்டும் (நல்.22); பணக்காரனிடம் படிப்பு இல்லாவிட்டாலும் அவனை எல்லோரும் மதிப்பார்; ஆனால் படித்தவனாயினும் பொருள் இல்லாதவனை அவன் மனைவியும் அவளைப் பெற்றெடுத்த தாயும் மதிக்கமாட்டாள் (நல்.34) என்று நல்வழி குறிப்பிடுகிறது.

"ஒரு தனி மனிதன் பொருளாதாரரீதியில் பலருக்கு உதவுவதன் மூலம் அவ்வுதவி தனிமனிதனின் இல்லறவாழ்க்கைக்கு மட்டுமின்றி அவர்கள் அனைவரும் சார்ந்திருக்கின்ற சமூக மேம்பாட்டிற்கும் காரணமாய் அமைகிறது. இத்தகைய

நெறியே நல்லறம் சார்ந்த வாழ்க்கை நெறியாகும். இந்நன்னெறியைத் துறவறத்தை விட இல்லறத்தில் இருந்து கொண்டு செம்மையாகச் செய்யமுடியும் என்பதை ஔவையார் பாடல்கள் திறம்படத் தெரிவிக்கின்றன".[15] பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கு ஏற்ப ஔவையாரும் பொருள் இல்லாதவனுக்கு இந்த உலகத்தில் வாழ இடமே இல்லை என்று கூறுகிறார்.

தம்மிடம் உள்ள பொருளின் அளவிற்கு ஏற்ப ஒருவன் அறம் செய்யவேண்டும் (அறநெறி.29) என்று அறநெறிச்சாரம் கூறுகிறது. பொருள் தேடுதலே வணிகர்களுக்கு அழகாகும் (வெ.வே.6) என்றும், தன்னுடைய கைப்பொருளைப் பிறர் கையில் கொடுக்கும் பேதையும் பதராவான் (வெ.வே.71) என்றும் கூறுகின்றது வெற்றி வேற்கை. நீதிநெறிவிளக்கம், பொருள் செருக்கு ஒருவனுக்கு இருக்கக்கூடாது; தன் நிலையிலிருந்து மாறாமல் முயற்சியை மேற்கொண்டு வாழ்பவனுக்குச் செல்வமானது வாயிற்புறத்தில் வந்து நிற்கும் (நீதி.நெ.வி.65) என்கிறது. அறவழியில் தேடிய பொருளைச் செருக்குக் கொள்ளாமல் பிறருக்குக் கொடுத்து வாழவேண்டும் என்று அறிவுறுத்துகிறது இந்நூல்.

விவேகசிந்தாமணி, அறம், இன்பம், ஞானம், நட்பு, வலிமை, புகழ், உயர்வு ஆகிய இவற்றைப் பொருளால் மட்டுமே ஒருவன் பெறமுடியும்; பொருள் உள்ளவனே அரச அவைக்குப் பொருந்துபவன் ஆவான்; அவன் வாயில் வரும் நிந்தையான வார்த்தைகளை இவ்வுலகத்தார் சான்றோர் வழக்கு என்பர். ஆனால், வறியோரின் வாய்ச்சொல்லானது அறத்தின் பாற்பட்டதாக இருந்தாலும் அதனை இழிந்ததாகக் கருதுவர் என்று கூறுகிறது. ஆகையால் வறியோரை நடைப்பிணம் (வி.சி.தொ.I பா.61) என்று அந்நூல் சாடுகிறது. பொருளில்லாதவன் எவ்வகை இன்பமும் பெற முடிவதில்லை. அவனுக்குப் புண்ணியமும் புகழும் கிடைப்பது இல்லை; அவன் முழுமையாக எந்தச் செயலையும் செய்து முடிக்கும் வழியில்லை; இதனால் இப்பெரிய உலகத்தில் வாழும் மக்கள் மனநிறைவுடன் இன்பம் பெற்று வாழ்வதற்கு அடிப்படைத் தேவை பொருள் என்று கோடிட்டுக் காட்டுகின்றது விவேகசிந்தாமணி. நீதிவெண்பா, பொருளில்லான் அறம் செய்ய இயலாது (நீதி.வெ.36) என்கிறது.

வேதநாயகர், தன்னிடத்தில் பொருள் உள்ளபோது ஒருவன் செருக்கும் அறம் செய்யாது தற்பெருமையும் கொள்ளக்கூடாது (நீதி.நூ.அதி.29பா.1); ஏனெனில், அப்பொருள் அவனை விட்டு நீங்கிய காலத்து வருத்தம் கொள்ளநேரிடும் என்று அறிவுரை கூறுகிறார்.

பொருள் என்பது ஒருவனுடைய உழைப்பால் அறவழியில் பெறக்கூடியது; அவனை இன்பமுடன் வாழ வழிவகுப்பது; அத்தகைய பொருளினை எப்படி ஈட்டவேண்டும் என்றும் அப்பொருளைக் கொண்டு பிறருக்கு எவ்வாறெல்லாம் உதவி செய்யவேண்டும் என்றும் திருக்குறளும் பிற்காலநீதிநூல்களும் படம்பிடித்துக் காட்டியுள்ளன. பொருளில்லாதவனை அவன் குடும்பத்தாரும் மதிக்கமாட்டார் என்று நல்வழி கூறுகிறது. பொருள் இல்லாதவனை 'நடைப்பிணம்' என்று விவேக சிந்தாமணியும் 'பதர்' என்று வெற்றிவேற்கையும் கூறுகின்றன. பொருள் உடையவனுக்குச் செருக்கு என்னும் பண்பு இருத்தல்கூடாது என நீதிநெறி விளக்கமும் நீதிநூலும் கூறுவதை அறியமுடிகின்றது.

### 6.4. படைமாட்சியும் படைச்செருக்கும்

ஒரு நாட்டை ஆளும் மன்னனுக்குப் படைவலிமை அடிப்படைத் தேவைகளுள் ஒன்று. அரசனுக்குரிய இலக்கணத்தைத் தொல்காப்பியர் கூறுகையில்,

*"படையும் கொடியுங் குடியும் முரசும்*
*நடைநவில் புரவியும் களிறும் தேரும்*
*தாரும் முடியும் நேர்வன பிறவும்*
*தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய"*

(தொல்.பொருள்.மரபு.72)

என்று படையை முதலில் வைத்துக் கூறுகின்றார்.

படையின் சிறப்பை உணர்த்தவே, 'படைமாட்சி' என்னும் அதிகாரத்தை வள்ளுவர் வகுத்துள்ளார். பொதுவாக, அக்காலத்தில் தேர், குதிரை, யானை, காலாள் ஆகிய நால்வகைப் படைகள் இருந்தன எனக் கூறப்படுகிறது. வள்ளுவர், தம் குறளில் படையின் சிறப்பைப் பற்றிப் பேசுகின்றாரே ஒழிய படைகளின் வகைகளைப்

பற்றிப் பேசவில்லை. படைவீரனுக்கு அஞ்சாமை, வீரம், மானம், நம்பிக்கை போன்ற நான்கு பண்புகளும் இருத்தல் வேண்டும் (கு.766); தன்னை எதிர்த்துக் கூற்றுவனே வந்தாலும் அவனை எதிர்த்து நிற்கும் ஆற்றல் படைத்தவனாக அவ்வீரன் இருத்தல்வேண்டும் (கு.764,765); படைத்தலைவர் வெறுப்புக்கும் வறுமைக்கும் இடம்கொடாதிருந்தால், படை வெற்றிபெறும் (கு.769) என்றெல்லாம் வள்ளுவர் படைவீரர்களைப் பற்றி விளக்குகின்றார்.

"தனக்குத் தீங்கு செய்தவர்களைப் பொறுக்கவேண்டும் என்று தனி ஒருவனுக்குக் கூறி, தீங்கு செய்தவர்களைத் தண்டிக்க வேண்டும் என்று ஆட்சித் தலைவனுக்குத் திருவள்ளுவர் பொதுக்கடமையை வற்புறுத்தியுள்ளார். அல்லரோ? ஆகையால் பலருக்கு இன்னல் இழைக்கும் கூட்டம் ஒன்று உலகத்தில் இருக்கின்ற வரையில் அதை அடக்குவதற்காகப் படை என்று ஒன்று இருந்தே தீரும். அந்தப் படையைப் போற்றிப் பயன்படுத்துவது தலைவனுடைய கடமையாக இருக்கும்".[16] எனவே, வள்ளுவர் காலத்தில் வெளிநாட்டோடு போர் செய்வதற்கே இத்தகைய படைகள் தேவைப்பட்டன. இன்றைய குடியாட்சியில் உள்நாட்டு குழப்பங்களைத் தீர்ப்பதற்கும் படை பயன்படுகிறது.

படையின் சிறப்பைக் கூறிய வள்ளுவர் 'படைச்செருக்கு' என்னும் அதிகாரத்தையும் வைத்துள்ளார். மன்னன் மாட்சியுடன் செயல்பட வேண்டுமானால் அவ்வரசனின், படைவீரர்களிடம் பகைவரை எதிர்க்கும் வீரமும் செருக்கும் இருத்தல் வேண்டும்; பகைவரை எதிர்க்கும் வீரம் கொண்டவனையே ஆண்மையுடையவன் (கு.773) என வள்ளுவர் கருதுகிறார். வீரனுக்கு விழுப்புண்படாத நாளெல்லாம் வீணான நாளாகும் (கு.776) என்றும் உயிரைத் துச்சமென மதிக்கும் வீரர்க்குத் தான் வீரக்கழல் அழகு (கு.777) என்றும் வள்ளுவம் நவில்கிறது. மேலும், போர்செய்யத் துணியும் வீரர், அரசன் சினந்தாலும் சிறப்பு குன்றாதவர் (கு.778); தம்மைக் காத்தவருடைய கண்ணில் நீர் பெருகும்படிச் சாகப்பெற்றால் அச்சாவு இரந்தாவது பெற்றுக் கொள்ளத்தக்கதாகும் (கு.780) என்று படைவீரர்களின் சிறப்பை வள்ளுவர் சிறப்பிக்கின்றார்.

ஆத்திசூடியில் ‘போர்த்தொழில் புரியேல்’, (ஆத்.87) ‘முனைமுகத்து நில்லேல்’, (ஆத்.92) என்னும் ஔவையாரின் மக்கள் அவர் வாழ்ந்த காலத்தில் நிகழ்ந்த போரின் கொடுமையை உணர்ந்ததே ஆகும். படையைக் கண்டு அஞ்சுபவன் தனக்கு வந்த பகையை நீக்கிக்கொள்ளமாட்டான் (அறநெறி.52) என்கிறது அறநெறிச்சாரம். சண்டையில் ஒருவன் புறமுதுகு காட்டல் கூடாது (உலக.5); வீண்சண்டை செய்யும் இடங்களுக்கும் அவன் செல்லக்கூடாது (பா.7) என்று அறிவுறுத்துகிறது உலகநீதி. குடிமக்களை ஓம்பாதாருக்கு வெற்றிதரக்கூடிய படைக்கலங்கள் இருந்தாலும் அதனால் ஒரு பயனும் இல்லை (நீதி.நெ.வி.28) என்று கூறுகிறது நீதிநெறிவிளக்கம். மன்னன் போர் செய்து வெற்றிபெற வேண்டுமெனில் அவனுக்கு யானைப் படைகள் அவசியம் (வி.சி.தொ.IIபா.74) என்று விவேகசிந்தாமணி கூறுகிறது. காட்சிக்கு இனியவனாகவும் பகைவர்க்குப் புறமுதுகிடாதவனாகவும் இருக்கும் அரசனே சிறந்தவனாவான் (நீதி.நூ.அதி.3.பா.9) என்கிறது நீதிநூல்.

வள்ளுவரும் பிற்காலநீதிநூலாசிரியர்களும் ஒரு நாட்டின் பாதுகாப்பிற்குப் படை இன்றியமையாதது. அப்படைவீரர்கள் எதிரிப் படையைக் கண்டு அஞ்சாமலும் புறமுதுகு காட்டாமலும் இருத்தல்வேண்டும் என்கின்றனர்.

### 6.5. நட்பு

ஒருவன் மற்றொருவனுடன் கொள்கின்ற பற்று அன்புடைமையாகும். அந்த அன்பினால் நீண்ட தொடர்பினை ஏற்படுத்திக்கொண்டு ஒருவரோடு ஒருவர் உள்ளங்கலந்த நிலையே நட்புடைமையாகும். இந்நட்பு நாடாளும் மன்னனுக்கு மிகவும் அவசியமானதாகும் என்பதை உணர்ந்த வள்ளுவர் நட்பு அதிகாரத்தை அமைத்துள்ளார். பழைமை, கூடாநட்பு, தீ நட்பு என்ற அதிகாரங்களாகப் பிரித்து நாட்டின் இயல்பினையும் பயனையும் விளக்கியுள்ளார்.

வள்ளுவர், அறிவுடையோரின் நட்பு நாளுக்கு நாள் வளரும் தன்மையது (கு.782) என்றும் ஒருவனுக்கு இன்பத்தைத் தருவது பண்புடையவரின் நட்பு (கு.783) என்றும் குறிப்பிடுகின்றார். “நாகரிக நிலையிலேனும் அநாகரிக நிலையிலேனும் ஒருவன் பிறர் உறவின்றி வாழ்தல் அரிது. அவ்வுறவு இயற்கை, செயற்கை என இருதிறப்படும்.

இயற்கையுறவு ரத்தக் கலப்பாலான இனவுறவு; செயற்கையுறவு, மனவுறவு, தொழிலுறவு, தத்துறவு, உதவிப் பேற்றுறவு, பழக்கவுறவு, நட்புறவு எனப் பலவகைப்படும். அவற்றுள் நட்புறவென்பது உண்மையானதாகவும் வலிமை உள்ளதாகவும் வாய்த்துவிடின், இனவுறவினுஞ் சிறந்ததாகும். அத்தகைய உறவைக் கண்டுபிடிப்பதும் பெறுவதும் பேணிக் கொள்வதும் அரிதாதலால் செயற்கரிய யாவுள நட்பின் என்றார்".[17]

ஒருவனோடு நட்பு கொள்வது நகுதல் பொருட்டன்று; துன்பம் வரும்பொழுது துணையாக நிற்பதற்காகும் (கு.787); ஒருவனின் முகம் மட்டும் மலரச் செய்யாமல் அவன் அகமும் சேர்ந்து மகிழச்செய்வதே நட்பாகும் (கு.786); 'உடுக்கை இழந்தவனின் கைபோல ஒருவனுடைய துன்பத்தைக் களைவதே நட்பு' (கு.788) என்று வள்ளுவப் பெருந்தகை நட்பின் தன்மையைப் பற்றி நவில்கின்றார்.

ஒருவன் பிறரிடத்தில் நட்புக்கொள்ளும்பொழுது ஆராய்ந்து நட்புக்கொள்ள வேண்டும் என்பதை 'நட்பாராய்தல்' என்ற அதிகாரத்தின்வழி வள்ளுவர் விளக்குகிறார். ஆராயாமல் நட்பு கொண்டவனுக்குத் துன்பம் உண்டாகும் (கு.791); அதனால் நட்பு கொள்வதற்கு முன் ஒருவனுடைய குணம், குற்றம், குடிப்பிறப்பு இவற்றை ஆராய வேண்டும் என்பதை வள்ளுவர்,

*"குணமும் குடிமையும் குற்றமும் குன்றா*
*இனனும் அறிந்துயாக்க நட்பு" (கு.793)*

என்று கூறுகிறார். மேலும், மாசற்றவருடன் ஒருவன் நட்புகொள்ள வேண்டும் (கு.800) என்கிறார். அறிவில்லாத பேதையரின் நட்பினையும் உலகத்தோடு ஒத்துவாழத் தெரியாதவனின் நட்பினையும் ஒருவன் கைவிடுதல் வேண்டும் (கு.797) என்று குறட்பாக்கள் எடுத்துரைக்கின்றன. இக்கருத்தையே,

*"பலநாளும் பக்கத்தா ராயினும் நெஞ்சில்*
*சிலநாளும் ஒட்டாரோ டொட்டார்" (நாலடி. 214 : 1 - 2)*

என்று நாலடியார் கூறுகிறது. வள்ளுவர், தனிமனித வாழ்விலும் அரசியல் வாழ்விலும் ஒருவன் ஆராய்ந்து நட்புகொள்ள வேண்டியதன் இன்றியமையாமையை இவ்வதிகாரத்தினால் உணர்த்துகிறார்.

'பழைமை' என்பது, ஒருவனுடன் பழகியவர்கள் உரிமையால் அவனுக்குப் பிழை செய்வாராயினும் அவற்றைக் கீழ்மைப்படுத்தாமல் ஏற்கும் நட்பாகும் (கு.801); சில நேரங்களில் நட்புடையோர் ஒருவனுக்குத் தீங்குசெய்ய நேரிட்டாலும் பழைய நட்பினை கைவிடக்கூடாது (கு.806); நட்பிற்கு உறுப்பே உரிமையுடன் செயல் புரிவதாகும் ; அவ்வாறு உரிமையோடு நண்பன் செய்யும் செயலை ஏற்பது சான்றோர் கடமையாகும் (கு.804) என்கிறார் வள்ளுவர். மேலும், நண்பன் தனக்குத் துன்பமும் அழிவும் தரும் செயலைச் செய்தாலும் வழிவழியாக வந்த நட்பாகையால் அதனைக் கைவிடக்கூடாது (கு.807); அப்படி நண்பரைக் கைவிடாதவரை இவ்வுலகம் விரும்பிப் போற்றும் (கு.809) என்றும் பகைவனும் அவனைப் பாராட்டுவான் என்றும் குறிப்பிடுகின்றார்.

"தீ நட்பாவது தீக்குணத்தாரோடு உளதாய நட்பு"[18] என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர். வள்ளுவர், நண்பனாயினும் தீயபண்பு கொண்டவனாயின் அந்நட்பை ஒருவன் கைவிடுதல் வேண்டும் (கு.811); தமக்குப் பயன் கிடைக்கும் பொழுது நட்பு கொண்டு பயனில்லாத பொழுது நீங்கக் கூடியவரின் நட்பை ஒருவன் நீக்குதல் வேண்டும் (கு.812) என்று அறிவுறுத்துகின்றார்.

பழமொழிநானூறு, "தம் காரியம் முடியும் மட்டும் நட்பு கொண்டவரின் இழிந்த நட்பைக் கைவிடுதல் வேண்டும்"[19] என்கிறது. அறிவில்லாதவரின் நட்பைவிட தனித்திருத்தலே சிறந்ததாகும்; கீழ்மக்களின் தீயநட்பு, பேதையரின் நட்பு இவற்றைக் கைவிடுதலே கோடிமடங்கு நன்மையாகும் என்று வள்ளுவம் உணர்த்துகிறது. இக்கருத்தையே முதுமொழிக்காஞ்சி, "அறிவிலியின் நட்பைவிட தனிமை நன்று"[20] என்கிறது. சொல்லிலும் செயலிலும் வேறுபட்டவருடன் கொண்ட நட்பு கனவிலும் நனவிலும் துன்பம் தருவதாகும் (கு.819); ஒருவன் தன்னுடன் மனையில் தங்கியிருக்கும்போது நட்புகொண்டு மன்றத்தில் பழித்துப் பேசுபவராய் இருந்தால் அந்நட்பை ஒழித்தல் வேண்டும் (கு.820) என்கிறார் வள்ளுவர்.

புறத்தே மட்டும் நட்பு கொண்டவரைப் போல், பாசாங்கு செய்யும் பகைவருடன் நட்பு கொள்ளாதிருத்தலே 'கூடாநட்பு' ஆகும். சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும்,

நட்பு கொள்ளும்போது எச்சரிக்கையாக இருத்தல்வேண்டும் என்பதை உணர்த்துவதற்காகக் 'கூடாநட்பு' என்ற அதிகாரத்தை வள்ளுவர் வகுத்துள்ளார். தன்னுடன் புறத்தில் மட்டும் நட்புகொள்வாரை ஒருவன் ஒழித்தல்வேண்டும் (கு.821); ஏனெனில், அவருடைய நட்பு பொதுமகளிர் மனம்போல மாறுபடும் தன்மையது (கு.822) என்கிறது குறட்பா. பகைவரின் குறிப்புணரவல்லவருக்கு அவர் கும்பிட்ட கைக்குள்ளும் கொலைக்கருவி மறைந்திருக்கும். அவர் அழுது வடித்த கண்ணீரும் அத்தன்மையதே என்னும் பொருளில்,

*"தொழுதகை உள்ளும் படைஒடுங்கும் ஒன்னார்*
*அழுதகண் ணீரும் அனைத்து" (குறள். 828)*

என்கிறார் வள்ளுவர். கண்டபொழுது முகத்தால் மட்டும் சிரித்துப் பழகும் வஞ்சகரோடு நட்பு கொள்வதற்கு அஞ்சுதல் வேண்டும் (கு.824); அத்தகைய பகைவரின் உண்மைத் தன்மை விரைவில் உணரப்படும் (கு.826); ஆகையால், அகத்தே பகைகொண்டு நண்பர்போல் நடிப்பவரின் நட்பை ஒருவன் நீக்குதல் வேண்டும் என்று வள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

ஆத்திசூடி, நட்பினைப் பற்றி எடுத்துரைக்கையில் 'குணமது கைவிடேல்', 'கூடிப்பிரியேல்' (ஆத்.37) என்கிறது. மேலும், 'சேரத்தக்க இடத்தை ஆராய்ந்து சேர வேண்டும்' (ஆத்.51) என்றும் 'தொன்மை மறவேல்' (ஆத்.64) என்றும் ஔவையார் அறிவுறுத்துகிறார். கொன்றைவேந்தன், 'கெடுவது செய்யின் விடுவது கருமம்' (கொ.வே.20) என்று தீநட்பினையும் 'நல்லிணக்கம் அல்லறப்படுத்தும்' (கொ.வே.48) என்று கூடாநட்பினையும் கூறி அத்தகையோரின் நட்பை விட்டுவிடவேண்டும் என்கிறது. நற்குணமில்லாத கீழோரிடத்தில் நட்புகொண்டாலும் அவர்கள் நண்பராக மாட்டார்; அதனால் நற்குணமுடையவரிடம் கூடியிருப்பதே நன்று (மூது.4) எனச் சிறப்பிக்கிறது மூதுரை. அம்மிக்கல்லைத் துணையாகக் கொண்டு ஆற்று வெள்ளத்தில் இறங்கிய தன்மையை ஒத்தது கெட்ட நட்பு (நல்.20) என நல்வழி கூறுகிறது. அறநெறிச்சாரம், இந்தப் பிறவியில் மனம், மொழி, மெய்களை அடக்கிப் புகழ் பெறச் செய்பவரே உண்மையான நண்பராவார்; பிறவித் துன்பத்தைப் போக்கும்

நெறியை எடுத்துக்கூறி ஒழுக்கத்தை விளக்கச் செய்பவரே நண்பரென்று சொல்லப்படுவார் என்கிறது. மேலும், பற்றற்ற பெரியோர்களை நட்பினராகக் கொள்ளவேண்டும்; ஏனெனில், பற்றற்ற பெரியோர்களின் நட்பினால் வீடுபேற்றினை அடையமுடியும்; செல்வம் பெருகும் (அறநெறி.97) என்று கூறுகிறது இந்நூல். தீயநட்பினால் ஏற்படும் தீங்கினையும் அறநெறிச்சாரம் எடுத்துக்காட்டுகிறது. அதாவது, தீயநட்பினன் திருடர்களுக்கு ஒப்பாவான்; இவனுடைய நட்பினால் பிறவியாகிய பிணியை நீக்கமுடியாது; அவ்வாறு கருதுதல் கண்ணில்லாதவன் காட்டைக் கடப்பதற்குக் கண்ணும் காதும் இல்லாதவனைத் துணைகொண்டு செல்வதற்குச் சமமாகும் (பா.99) என்கிறது இந்நூல். பெரியோர் நட்பானது, பூமி பிளக்கும்படி வேரூன்றி நிற்கும் என்பதை வெற்றிவேற்கை,

*"ஒருநாள் பழகினும் பெரியோர் கேண்மை*
*இருநாள் பிளக்க வேர்வீழ்க் கும்மே"* *(வெ.வே.34)*

என்று கூறுகிறது. நட்புடையோர் பகையால் பிரிந்து மீண்டும் கூடும் நட்பு உறுதியுடைய நட்பாகாது; அவ்வாறு கூடும் நட்பின் தன்மை சிறப்பாக அமையாது (நன்.5) என்றும் கூடாநட்பை நீதிநெறிவிளக்கம் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*"புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை*
*வெளியிட்டு வேறாதல் வேண்டும் கழிபெருங்*
*கண்ணோட்டம் செய்யார் கருவியிட் டாற்றுவார்*
*புண்வைத்து மூடார் பொதிந்து"* *(நீதி.நெ.வி.55)*

அதாவது, "புண்ணைக் கருவியினால் அறுத்து அதனைக் குணப் படுத்துவார்கள்; அவ்வாறின்றி அதனை மறைத்து மூடிவையார்; அதுபோல் வெளிக்கு உறவுகாட்டி உள்ளே கோபிப்பவரது நஞ்சுபோலுங் கொடிய பகையை வெளியாக்கி நீக்கல் வேண்டும்"[21] என்கிறது. இதன்மூலம் புறத்தில் மட்டும் நட்பு கொள்பவரிடத்தில் உறவுகொள்ளக் கூடாது என வலியுறுத்துவதோடு நண்பர்போல் நடித்து வஞ்சகம் செய்வாரின் ஆயுள் காலம் முடிவதில்லை என்று தீயநட்பின் இயல்பினையும் உணர்த்துகின்றது நீதிநெறிவிளக்கம்.

விவேகசிந்தாமணி, ஐம்பது ஆயிரம் தொலைவில் உள்ள மேகத்தைக் கண்டு மயில் நடனமாடும்; நூறு ஆயிரம் தொலைவில் உள்ள கதிரவனைக் கண்டு தாமரை மலரும்; இருநூறாயிரம் தொலைவில் உள்ள சந்திரனைக் கண்டு செவ்வல்லியின் அரும்புகள் மலரும்; அதுபோல, உண்மையான நட்புக்கொள்ளும் நண்பர்கள் தொலைவில் இருந்தாலும் உள்ளத்தைவிட்டு நீங்கமாட்டார் (வி.சி.தொ.I பா.57) என்று நட்பின் உயர்வினைச் சுட்டுகிறது. மேலும்,அற்பருடன் நட்புக்கொள்ளக்கூடாது (பா.43) என்றும் மனதில் அன்பு இல்லாத சகுனியைப் போன்ற நற்பண்பு இல்லாதவரின் நட்பால், மேலும் மேலும் பாவம் உண்டாகி நரகத்தை அடையக் காரணமாகும் (பா.119) என்றும் ஆணவம் கொண்ட மனிதரிடம் நட்புவேண்டாம் என்றும் இந்நூல் அறிவுறுத்துகிறது. நல்லிணக்கம் இல்லாரோடு இணங்கவேண்டாம் (உலக.2) என்கிறது உலகநீதி.

வேதநாயகர், தாய் தந்தையின் உடன் பிறந்தவர்கள், அவர்தம் பிள்ளைகள், தந்தை மறுமணம் புரிந்துகொண்ட மாற்றாந்தாயின் பிள்ளைகள், யாவராயினும் ஒருதாய் வயிற்றில் பிறந்தவர் போன்று பேரன்பு கொண்டு நட்புடன் வாழவேண்டும் (நீதி.நூ.அதி.10 பா.2) என்கிறது.

வள்ளுவர், சமுதாய ஒற்றுமைக்கு நட்பு மிகவும் அவசியமானது; ஆகையால் நட்பினை உடையவர்களாக மக்கள் வாழவேண்டும் என்பதை வலியுறுத்தியுள்ளார். நற்பண்பு கொண்டவனிடத்தில் நட்புக்கொண்டும் தீயோர் நட்பை விலக்கியும் வாழவேண்டும் என்று கூறி நட்பிற்கு ஒருவனுடைய பண்பை முன்னிலைப்படுத்துகிறார் ஔவையார். ஒருவன் வீடுபேறு அடைய பெரியோர் நட்பினைத் துணைகொள்ள வேண்டும் என்று பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன. வஞ்சகம் கொண்ட நட்புடையவனுக்கு ஆயுள்காலம் முடிவதில்லை. ஆகையால், பெரியோர் நட்பின் துணை கொண்டு அற்பருடைய நட்பினை விலக்குதல் வேண்டும் என்று நீதிநூல்கள் கூறுகின்றன. எனவே, சமுதாயத்தில் உள்ள ஒவ்வொருவரும் விலைகொடுத்துப் பெற முடியாத நட்பை வளர்த்தால் சண்டை சச்சரவுகள் இன்றி ஒற்றுமையுடன் வாழமுடியும் என அனைத்து நூல்களும் வலியுறுத்துகின்றன. வேதநாயகர், ஒரு குடும்பத்தில்

பிறந்தவர் சண்டைச்சச்சரவு இல்லாமல் நண்பர்களாக இருத்தலின் தேவையை வற்புறுத்துகின்றார்.

### 6.5.1. பேதைமை

பேதைமை என்பது யாதும் அறியாத அறிவல்லாதவனின் தன்மையைக் குறிப்பதாகும். அத்தகைய அறியாதத் தன்மை ஒருவனுக்குக் கேடுவிளைக்கச் செய்யும் என்று 'பேதைமை' அதிகாரத்தில் விளக்கியுள்ளார். நாட்டில் குற்றங்கள் ஏற்படக்கூடாது என்பதைக் கருதியே வள்ளுவர், பேதைமை என்னும் அதிகாரத்தைப் பொருட்பாலில் வைத்துள்ளார்.

வள்ளுவர், ஒருவன் கேடு பயப்பனவற்றைக் கைக்கொண்டு நன்மை தருவனவற்றைக் கைவிடுதல் பேதைமை ஆகும் (கு.831); அப்பேதைமை தகாத ஒழுக்கத்தில் ஒருவனுடைய விருப்பத்தைச் செலுத்த செய்யும் (கு.832). "முட்டாள் என்றாலே அறிவில்லாதவன் என்றுதான் பொருள்படும். ஆனால், அந்த முட்டாளிலும் முட்டாளாக ஒருவன் காணப்படுவானாயின் அவன் வடிகட்டின முட்டாளாகாத்தான் இருக்கவேண்டும். அதுபோலப் பேதையின் சிறந்தது யாது எனின் தமக்குத் தகாத ஒழுக்கத்தின்கண் தன் மனத்தைச் செலுத்துவதாகும்".[22]

நாணத்தகுந்தவற்றிற்கு நாணாதிருப்பவனையும் பிறரிடம் அன்புகாட்டாமல் இருப்பவனையும் பேதை என்கிறார் வள்ளுவர். ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் அவற்றின் நெறியில் ஒழுகாதவன் பேதை (கு.834); அப்பேதை ஏழுபிறவி எடுத்து அடையும் நரகத்துன்பத்தை ஒரே பிறவியில் அடைவான் (கு.835); மேலும், அவன் சான்றோர் அவையில் புகுதல் கூடாது (கு.840) என்கிறார். பேதையரின் பிரிவால் ஒருவனுக்குத் துன்பம் உண்டாகாது என்பதை வள்ளுவப் பெருந்தகை,

*"பெரிதுஇனிது பேதையார் கேண்மை; பிரிவின்கண்*
*பீழை தருவதுஒன்று இல்" (கு.839)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார்.

ஆத்திசூடி, 'பேதைமை அகற்று' (ஆத்.84) என்கிறது. 'பேதைமையென்பது மாதர்க்கு அணிகலம்' (கொ.வே.66) என்று கூறுகிறது கொன்றைவேந்தன். பெண் அறியாமை உடையவளாக இருத்தல் வேண்டும் என்று பெண்ணினம் சார்ந்த ஔவையாரே குறிப்பிடுவது அக்காலச் சமுதாயத்தின் எதிர்பார்ப்பை உணர்த்துகிறது.

ஒருவன் இளமையை நிலையாகக் கருதி அறம் செய்யாமல் இருப்பது பேதைமை (பா.21) என்கிறது அறநெறிச்சாரம். வெற்றிவேற்கை, தன் கைப் பொருளையும் பிறன்கையில் கொடுக்கும் பேதையும் பதராவான் (வெ.வே.71) என்று சாடுகிறது. பேதைமையுடைய கற்பில்லாப் பெண்டிரின் பிறப்பு பெரிய பாவத்திற்குரிய தாகும் (நீதி.நெ.வி.84) என்கிறது நீதிநெறிவிளக்கம். பெரியோர் பேதையரைக் கண்டால் விலகிக்கொள்ளுவதே நீதிநெறியாகும்(நீதி.வெ.70)என்று அறிவுறுத்துகிறது நீதிவெண்பா.

சமுதாயத்தில் நடைபெறும் குற்றங்களுக்குக் காரணம் பேதைமையுடைய கீழோர் ஆவார். பேதைமை, பெண்களுக்கு ஆபரணமாகக் கூறப்படுவதன் மூலம் அக்காலத்திய பெண்களின் நிலையை உணரமுடிகிறது. பிற்காலநீதிநூல்கள் பொதுவாக மக்களிடத்தில் காணப்படும் பேதைமை பற்றியே பேசுகின்றன.

### 6.5.2. புல்லறிவாண்மை

இவ்வுலகில் பலர் தான் பெற்றுள்ள அறிவே சிறந்தது என்று தன்னை அறிவாளியாகக் கருதிக்கொள்வாரும் உண்டு. இத்தகையவர் பிறரை மதிக்காமலும் பிறர் சொல்லுக்குச் செவிசாய்க்காமலும் தன்னைவிட அறிவிற்சிறந்தவர் இல்லை என்றும் செருக்குடன் அலைகின்றனர். இதுவே புல்லறிவாண்மை எனப்படுகிறது.

பரிமேலழகர், புல்லறிவாண்மையாவது "தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொல் கொள்ளாமை"[23] என்று விளக்கம் தருகிறார். புல்லறிவு என்பது 'யாம் அறிவுடையோர்' என்று ஒருவன் தன்னைத்தானே மதித்துச் செருக்கு கொள்ளுதலாகும் (கு.844); புல்லறிவாளனுக்குச் சொந்த அறிவும் இருக்காது. பிறர் கூறும் அறிவுரைகளையும்

கேட்கமாட்டான்; இத்தெளியாத தன்மை கொண்டவனுக்கு உயிர்போகுமளவு நோய் உண்டாகும் (கு.848); அவன் கசடறக் கற்ற நூலிலும் பிறர் ஐயம் கொள்வர் (கு.845) என்றும் அவன் தனக்குத் தானே தீங்கும் செய்து கொள்பவனாவான் (கு.847) என்றும் வள்ளுவர் கூறுகிறார். உலகத்தார் உண்டு என்று சொல்வதைப் புல்லறிவாளன் 'இல்லையென்று' சொல்வதால், அவன் உலகத்தில் காணப்படும் ஒரு பேயாகக் கருதி விலக்கப்படுவான் (கு.850) என்றும் வள்ளுவர் கூறுகிறார்.

மூதுரை, வேங்கைப் புலியின் நோயைத் தீர்த்த வைத்தியன் அந்த இடத்திலேயே புலிக்கு இரையானான்; அதுபோல, அற்பமான புல்லறிவாளனுக்குச் செய்யப்பட்ட உதவியானது கல்லின்மீது போடப்பட்ட மட்கலம் போன்று அழிந்துவிடும்; ஆகவே, அற்பமான புத்தியுடையவனுக்கு உதவி செய்தல்கூடாது (மூது.15) என்று அறிவுரை கூறுகிறது. மேலும், புல்லறிவாளன் பல எண்ணம் கொண்டவன். ஆதலால் அவன் வாழ்க்கை இறுதி வரையில் துன்பம் தருவதாக அமையும் என்று கூறுகிறது. பல நூல்களைக் கற்றும், இழிவான செயல்களைச் செய்யும் புல்லறிவாளர்களுடன் அறிவுடையோர் சேரமாட்டார் (அறநெறி.75) என்கிறது அறநெறிச்சாரம்.

அறிவற்ற கீழோரிடத்தில் ஐம்புலன்களும் சேர்ந்து மயக்கத்தை உண்டாக்கித் துன்பம் பெறச்செய்யும் (நன்.11) என்று நன்னெறி கூறுகிறது. கண் எதிரே கேடு நிகழ்ந்தாலும் அதனை அறிந்துகொள்ளும் திறமை புல்லறிவாளனுக்கு இல்லை (நீதி.நெ.வி.34) என்கிறது நீதிநெறிவிளக்கம். அறிவில்லாத புல்லறிவாளனை எவ்வழியிலும் திருத்தமுடியாது (நீதி.வெ.21) என்று நீதிவெண்பா கூறிச்செல்கிறது. தவளையானது தன்னுடன் வளர்ந்திருக்கும் தாமரையின் குளிர்ந்த தேனை உண்ண அறியாது; அதுபோல், பழகியிருந்தாலும் நல்லாரின் அறிவை புல்லறிவாளர் அறிந்திருக்கமாட்டார் (வி.சி.தொ.**II** பா.85) என்று விவேகசிந்தாமணி கூறுகிறது.

புல்லறிவாளர்கள் இருக்கும் நாடு சீர்கெட்டு அழியும். புல்லறிவாளர் களிடமிருந்து அறிவுடையோர் ஒதுங்கி வாழ்வதே சிறந்த நெறியாகும் எனத் திருவள்ளுவரும் பிற்கால நீதிநூலாசிரியர்களும் உணர்த்துகின்றனர்.

### 6.5.3. இகல்

இகல் என்பது மாறுபாடு ஆகும். இருவர், ஏதாவது காரணம் பற்றி தமக்குள் மனமாறுபாடு கொண்டு பகையை வளர்க்கும் பண்பில்லாத நோயை இகல் என்கிறார் வள்ளுவர். இகலினைக் கொண்டவனால் மெய்ப்பொருளின் உண்மையை உணர முடியாது. அவன் ஆக்கத்தை இழந்து விடுவான்; கேடு அடைவான் (கு.859) என்று இகலால் ஏற்படும் தீங்கினைக் குறிப்பிடுகின்றார் வள்ளுவர். இத்தகைய இகல் ஒருவனிடத்திலிருந்து நீங்கினால் அவனுக்குப் புகழ் உண்டாகும். (கு.853); துன்பம் நீங்கி இன்பம் உண்டாகும் (கு.854); என்று இகலின்மையால் ஏற்படும் நன்மையை வள்ளுவர் கூறுகின்றார்.

கொன்றைவேந்தன் ‘ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்’ (கொ.வே.6) என்கிறது. “சிநேகத்தன்மை இல்லாமல் ஊரில் இருக்கும் எல்லோருடனும் பகைகொள்கின்றவன் தன் குடும்பத்தோடு நாசமாவான்”[24] என்று விளக்குகிறார் துரை-தண்டபாணி. நீதிவெண்பா, அறிவுடையவன் பகைவனாக இருந்தாலும் அவன் நட்புடையவனாவான் என்கிறது.

### 6.5.4. பகைமாட்சி

உலகத்தில் ஒவ்வொருவரும் பிறருடன் பகைமை பாராட்டாமல் சண்டைச் சச்சரவின்றி வாழவேண்டும்; குணம், அறிவு, திறமை போன்ற பண்புகளை உடையவனாயினும் பிறருடன் பகைகொண்டால் அவனை உலகத்தார் மதிக்க மாட்டார்கள். பிறருடன் பகையை நீக்கி நன்மை விளைவிக்குமாறு செய்து கொள்ளலைப் ‘பகைமாட்சி’ என்று குறிப்பிடுகின்றார் வள்ளுவர். “அறிவின்மை முதலிய குற்றங்களுடைமையாற் பகையை மாட்சிப்படுத்தல்”[25] என்று விளக்குகிறார் பரிமேலழகர். வள்ளுவர், பகைமாட்சி என்னும் அதிகாரத்தில், தன்னைவிட வலிமையும் ஆற்றலும் மிக்க பிற அரசரோடு ஒரு நாட்டு அரசன் போர் செய்யக்கூடாது (கு.861); அஞ்சுபவன், அறிவு இல்லாதிருப்பவன், பிறருக்கு ஈயாதிருப்பவன் (கு.863); சினம், பழி, காமம் ஆகியவற்றை உடையவன் பிறருடைய பகைமைக்கு எளியவனாவான் (கு.866); ஆகையால், குற்றத்தை நீக்கிக் குணத்தை மேற்கொள்பவனாக ஒருவன் வாழ

வேண்டும் என்றும் கல்வி கற்காதவனைப் பகைத்துக்கொள்ளும் திறமையில்லாத வனிடத்தில் எக்காலத்தும் புகழ் வந்து சேராது (கு.870) என்றும் வள்ளுவர் மொழிகின்றார். நாட்டை ஆளும் மன்னன் சினம், சிற்றின்பம், பழி இவற்றின் காரணமாக நீதி தவறிப் பகைமையை வளர்க்கக்கூடாது என்று அவர் வலியுறுத்துகின்றார். 'பகைத்திறம் தெரிதலில்' விளையாட்டிற்கும் ஒருவன் பிறருடன் பகைகொள்ள வேண்டாம் என்று அறிவுரை கூறுகிறார் வள்ளுவர். மேலும், தனியாக இருந்துகொண்டு, பிறரின் பகையைத் தேடிக்கொள்ளுபவனைப் பித்துப் பிடித்தவனாவான் (கு.873) என்று கூறிய வள்ளுவர் பகையையும் நட்பாகக் கொள்பவனைப் பண்புடையாளன் (கு.874) என்று போற்றுகிறார். தனக்கு உதவும் துணை இல்லாத ஒருவன் தன் பகைவர், இருவரில் பொருந்திய ஒருவரைத் துணையாகக் கொள்ளவேண்டும் என்பதை,

*"தன்துணை இன்றால் பகைஇரண்டால் தான்ஒருவன்*
*இன்துணையாக் கொள்கவற்றின் ஒன்று" (குறள்.875)*

என்ற குறட்பாவழி அறியலாம். பகைவனின் வலிமையறிந்து தன்னை வலிமைப் படுத்திக் கொண்டு தற்காப்பு தேடிக் கொள்ளும் ஒருவனுடைய பகைவனின் செருக்கு, தானே அழியும் (கு.878) என்று வள்ளுவம் கூறுகிறது. பகைவரையும் நண்பராக்கிக் கொள்ளவேண்டும் என்று அறிவுறுத்துவதன்வழி வள்ளுவர் பகையில்லாத அரசை விரும்பினமை அறியமுடிகிறது.

பகைவர்களுடன் சேரக்கூடாது (ஆத்.108) என்கிறது ஆத்திசூடி. யானைப் படை, குதிரைப்படை, தேர்ப்படை போன்ற முப்படையின் வலிமையோடுதான் ஓர் அரசர் பகைவருடன் போரிடவேண்டும் (அறநெறி.64) என்று அறநெறிச்சாரம் அறிவுரை கூறுகின்றது. வலிமையில்லாத ஒருவன் வலிமை மிகுந்த ஒருவனைத் துணையாகப் பெற்றால் அவன் பகைவனுக்கும் அஞ்சமாட்டான் (நன்.9) என்று நன்னெறியும் நண்பர்களைப் பகையாக்கிக்கொள்ளுதலும் பகைவர்களை நண்பராக்கிக் கொள்ளுதலும் போன்ற செயல் கேட்டினை விளைவிக்கும் அடையாளமாகும் (நீதி.நெ.வி.35) என்று நீதிநெறிவிளக்கமும் கூறுகின்றன. விவேகசிந்தாமணி,

மன்னன், கணக்கன், உடல் வலிமையுடையவன், செல்வம் உடையவன், ஆசிரியன், புலவன், மருத்துவன், அமைச்சன், சமையல் செய்பவன் போன்றோர்களிடம் ஒருவன் பகைமேற்கொள்வது கனவிலும் கூடாத செயலாகும் (வி.சி.தொ.II. பா.84) என்று வலியுறுத்துகிறது. நீதிவெண்பா, பார்த்தவுடன் பகையாகும் சிலரைக் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*"வேசியரும் நாயும் விதிநூல் வயித்தியரும்*
*பூசுரரும் கோழிகளும் பொன்னனையாய் - பேசிலொரு*
*காரணந்தான் இன்றியே கண்டவுடனே பகையாம்*
*காரணந்தான் அப்பிறப்பே காண்" (நீதி.வெ.65)*

"பொதுமகளிரும், நாய்களும், சட்டநூலும், மருத்துவரும், பார்ப்பனரும், கோழிகளும் பகையேதும் இல்லாமலே பார்த்தவுடனே பகைவராய்விடுவர். அதற்கு அது அப்பிறவியின் தன்மையேயாம்"[26] என்பதன்வழிப் பிறந்த குலமே பகையாக்குவதை அறியமுடிகிறது.

வேதநாயகர், கொடுங்கோல் ஆட்சி செய்யும் மன்னனுக்குக் குடிகளே பகையாவர் (நீதி.நூ.அதி.3 பா.10) என்கிறார்.

### 6.5.5. உட்பகை

ஒருவன் நாட்டில் இருந்துகொண்டு நாடாளும் மன்னனுக்குத் தீங்கு செய்வதும், நண்பராய் இருந்துகொண்டு நண்பனுக்கு உள்ளத்தே பகைகொண்டு தீங்குசெய்வதும் உட்பகை எனப்படும். "உட்பகையாவது, புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து அது வெல்லும் துணையும் உள்ளதாய் நிற்கும் பகை ஆகும் என்று விளக்கம் தருகிறார்"[27] பரிமேலழகர். வள்ளுவர், வாள் போன்ற பகைவர்களைவிட உறவினர் போன்று இருந்து கொல்பவரின் பகைக்கு ஒருவன் அஞ்சுதல் வேண்டும் (கு.882); உட்பகை உள்ள குடி ஒருபொழுதும் நிலைத்திருக்க முடியாது (கு.886); மேலும், எள்ளின் பிளவைவிட சிறிதளவாக இருக்கும் உட்பகை குடியை அழிந்து விடும் (கு.889) என்று கூறுகிறார் வள்ளுவர். அகத்தில் உடன்பாடு இல்லாதவனுடன்

ஒருவன் கூடி வாழும் வாழ்க்கை, பாம்போடு வாழ்வதைப் போன்றதாகும் (கு.890) என்கிறார் வள்ளுவர்.

நீதிநெறிவிளக்கம், ஒருவன் அகப்பகைக்கு அஞ்சி வாழவேண்டும் என்பதை,

*"புறப்பகை கோடியின் மிக்குஉறினும் அஞ்சார்*

*அகப்பகை ஒன்று அஞ்சிகாப்ப" (நீதி.நெ.வி.55)*

என்ற வரிகள் வழி விளக்குகிறது. "அறிவுடையார், வெளிப்பகை கோடிக்கு மேல் அதிகமாக இருந்தாலும் அதற்காக அஞ்சார்; உட்பகை ஒன்றேயானாலும் அதன் துன்பம் பெரிதாகையால் அதனை அவர்கள் அஞ்சிக் காவல் செய்வார்"[28] என விளக்கப்படுகிறது. உட்பகைக்கு அஞ்சி ஒவ்வொருவரும் வாழவேண்டும் என்று குறளும் நீதிநெறிவிளக்கமும் வலியுறுத்துகின்றன.

### 6.5.6. பெரியாரைப் பிழையாமை

உலகத்தில் வாழ்பவர்களில் சிலர் அறிவும் ஆற்றலும் பெற்று இருக்கின்றனர். அவர்களைப் பிறர் மதித்து நடத்தல் வேண்டும் என்பதற்கு வள்ளுவர், 'பெரியாரைப் பிழையாமை' என்னும் அதிகாரத்தை வகுத்துள்ளார். பரிமேலழகர் "பெரியாராயினாரை அவமதித்து ஒழுகாமை"[29] என்று விளக்கம் தருகிறார்.

பெரியாரைப் பேணாது ஒழுகுபவனுக்குத் துன்பம் உண்டாகும் ; ஆற்றல் கொண்ட பெரியோருக்குத் துன்பம் செய்தல், தன்னை அழிக்க வந்த எமனை ஒருவன் கைதட்டி அழைத்தாற்போன்றதாகும் (கு.894); தீயால் சுடப்பட்டாலும் ஒருவன் உயிர் பிழைக்கலாம்; ஆனால், பெரியாருக்குப் பிழை செய்பவன் தப்பிப் பிழைக்க முடியாது (கு.896); மேலும், அவனிடம் பெரும்பொருள் இருந்தும் பயனில்லை (கு.897) என்கிறார் வள்ளுவர். பிறருக்குக் கெடுதல் நினைப்பவன் குடியோடு அழிவான் என்பதை வள்ளுவம்,

*"குன்றுஅன்னார் குன்ற மதிப்பின் குடியொடு*

*நின்றன்னார் மாய்வர் நிலத்து" (குறள். 898)*

என்ற குறட்பாவழி நவில்கிறது. பெரியோர் சீறினால் நாட்டை ஆளும் மன்னனும் அரசாட்சியை இழப்பான் (கு.899) என்கிறது குறட்பா.

அறநெறிச்சாரம், நல்லறிவு படைத்த பெரியோர்களே முற்றும் உணர்ந்தவர் ஆவார்; அவர்களே பிறவிப்பிணி ஒழிப்பவராவர்; அத்தகையவர்களை நல்ல நண்பராக்கிக் கொள்ளும் ஒருவனிடத்தில் எல்லாப்பொருள்களும் வந்து சேரும் (அறநெறி.59) என்று கூறுகிறது. சிறியோர் செய்யும் பெரும்பிழைகளைப் பெரியோர் பொறுக்கமாட்டார் என்று கூறுகின்ற வெற்றிவேற்கை சிறியோர் செய்யும் சிறிய பிழையைப் பொறுப்பது பெரியோர் கடமை என்பதை,

*"சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்*
*பெரியோ ராயிற் பொறுப்பது கடனே" (வெ.வே.31)*

எனக் கூறுகிறது. வெற்றியுள்ள பெரியாரை வெறுக்கக்கூடாது (உலக.12) என்று அறிவுறுத்துகிறது உலகநீதி. தங்களிடம் உள்ள குறைகளைக் கீழோர் பெரியோர்மேல் ஏற்றிப் பழிப்பர். அதனால் அவர்களுக்குத் துன்பமே உண்டாகும் (நீதி.நூ.அதி.22 பா.5) என்று வேதநாயகர் குறிப்பிடுகின்றார்.

திருவள்ளுவரும் பிற்கால நீதிநூலாசிரியர்களும் பெரியாருக்குப் பிழை செய்யக் கூடாது என்று வற்புறுத்துகின்றனர். பெரியாரை நண்பராகக் கொண்டால் பிறவிப்பிணி ஒழியும் என்று அறநெறிச்சாரம் கூறுகின்றது. அவர்களைப் பிழைப்பதால் வறுமை உண்டாகும் என்று நீதிவெண்பாவும் மூதேவியின் சேர்க்கையைப் பெறுவான் என்று நீதிநெறிவிளக்கமும் கூறுகின்றன. எனவே, பெரியாருக்குப் பிழைசெய்பவனுக்கு அழிவு நிச்சயம் என்று நீதிநூல்கள் விளக்கிச் சொல்கின்றன.

### 6.5.7. பெண்வழிச் சேறல்

பொதுக்கடமையை மேற்கொள்ளும் ஒருவன் பெண்ணின் சொற்படிக் கேட்டு நடந்தால் அவன் செய்யும் செயலில் இடையூறு ஏற்படும். ஆகையால், பெண்ணின் சொற்படிக் கேட்டு நடத்தல் கூடாது என்பதை உணர்த்தவே பெண்வழிச்சேறல் என்ற அதிகாரத்தை வகுத்துள்ளார் வள்ளுவர்.

மனைவியின் சொல்கேட்டு நடப்பவன் சிறந்த பயனை அடையமாட்டான் (கு.901); ஆக்கத்தை இழந்து நாணத்தைப் பெறுவான் (கு.902); அவனுக்கு

மறுமையில்லை (கு.904); ஆண்மை இல்லாதவனாவான் (கு.907); நல்லார்க்குக் கடமைகள் செய்வதற்கு அஞ்சுவான் (கு.909); அவன் சிறப்பான நிலையில் வாழ்ந்த போதிலும் பெருமை இல்லாதவனாவான்; அத்தகையோன் நண்பனுக்குக் குறை ஏற்பட்டால் அதனைப் போக்காதவனாகவும், அறம் செய்யாதனாகவும், பொருள் சேர்ப்பதற்குரிய முயற்சி இல்லாதவனாகவும் காணப்படுவான் (கு.908) என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மேலும், சிந்திக்கும் ஆற்றலுடையவன் எக்காரணத்திற்காகவும் மனைவியின் ஏவலுக்கு இணங்கமாட்டான் (கு.910) என்று கருதுகிறார்.

"பொது வாழ்க்கையில் ஈடுபட்டுள்ள இல்லறத்தார் சிலர் தம் குடும்ப நலத்தில் மட்டும் நாட்டத்தைச்செலுத்தி, அதுவும் மனைவியரின் நலம் மட்டும் கருதி, அதனால் இழுக்கப்பட்டு விடுகின்றனர். அவர் மனைவியரும் இத்தவற்றை உணர்வதில்லை. கணவன்மாரின் பதவியைப் பயன்படுத்திக்கொண்டு வீடு, வாசல், நிலம், புலம், ஆடை அணிகலன் முதலிய பொருட்செல்வத்தைத் திரட்டிக்கொள்ள விரும்புவதால் அக்கணவன்மார்களும் இவர்களுக்கு அடிமையாகி நடுவுநிலையிழந்து கையூட்டுக் கொடுமைக்கு ஆளாக்கிவிடுகின்றனர். சமுதாயக்கடமை உணர்ச்சியுடைய கணவன்மார் இதற்கு இணங்கார். இப்பெண் பித்தால் பெண்ணுக்கு ஆடவன் அடங்கி நடக்கும் இயல்பையே ஆசிரியர் கண்டிக்கிறார்".[30] எனவே, அறத்துப்பாலில் 'மனைதக்க மாண்புடையாள்' என்று போற்றிய வள்ளுவர் பொருட்பாலில் பொதுக் கடமைகளின் போது இடையூறாக இருக்கும் தருவாயில் பெண்வழியொழுகுதலையும் அவளுக்குச் சிறப்புக்கொடுத்து முதலிடம் தருதலையும் முற்றிலும் கண்டிக்கிறார்.

ஆத்திசூடி, தையல் சொல்லைக் கேட்கக்கூடாது என்று ஆடவர்களுக்குக் கட்டளையிடுகிறது. பெண்களின் நிலை தாழ்ந்து தரங்கெட்ட நிலையை அறிந்த புதுமைப் பெண் படைத்த பாரதி, 'தையலை உயர்வு செய்' (பா.பு.ஆத்.56) என்றும் பாரதிதாசன் பெண்ணொடு ஆண் நிகர்(பா.தா.ஆத்.63) என்றும் கருத்தை மொழிகின்றனர்.

"உணர்ச்சி, அறிவு இரண்டும் வாழ்க்கைக்குத் தேவையானவை; இரண்டையும் ஒருங்கே வளர்த்தல் வாழ்வுக்கு நலம் செய்யும். ஒன்றை மட்டும் வளர்த்து

மற்றொன்றைப் புறக்கணித்தல் வாழ்வைக் கெடுக்கவல்லதாகும். உணர்ச்சியை மட்டும் வளர்த்து அறிவைப் புறக்கணித்தால், நடுநிலையான ஆராய்ச்சி செய்யும் ஆற்றலை இழந்துவிடுவான்; நன்மை தீமையை ஆராய்ந்து உண்மை காணும் தன்மை இல்லாமல், வெறியோ ஒருதலைச்சார்பான போக்கோ உடையவன் ஆவான்"[31] என்கிறார் மு.வரதராசனார். இத்தகைய உணர்ச்சி, பெண்களுக்குச் சற்று அதிகமாக ஏற்படுவதால் 'தையல்சொல் கேளாதே' என்று ஔவையார் கூறுகிறார் எனலாம்.

பெண்ணினம் சார்ந்த ஔவையார், பெண்ணின் உணர்ச்சித்தன்மையை உணர்த்தி அவளின் சொல்லைக் கேட்கக்கூடாது என்ற அறிவுரையை வழங்கி இருக்கிறார் என அறியமுடிகிறது.

விவேகசிந்தாமணி, பெண்களின் சொல்லைக் கேட்பதால் பெரும் தீமையே உண்டாகும் என்கிறது. அதாவது, மன்னர்களால் புகழ்ந்து பேசப்பட்ட தசரதன், தன்னுடைய மனைவியின் சொல்லைக் கேட்டு இறந்தான். சீதையின் சொல்லைக் கேட்ட இராமன், காட்டில் மானின் பின்னால் ஓடினான். சூர்ப்பனகையின் சொல்லைக் கேட்டு இராவணன் இறந்தான் என்று எடுத்துக்காட்டுகிறது. எனவே பெண்களின் சொல்லை யாரும் கேட்கக்கூடாது (வி.சி.தொ.I.பா.117) என்று இந்நூல் வலியுறுத்துவதை அறியமுடிகிறது. பெண்களே அழிவுக்குக் காரணமாக இருந்தனர் என்பதைக் கீழ்வரும் நீதிவெண்பா பாடல் விளக்குகிறது :

*"என்னே கிரேதத்(து) இரேணுகையே கூற்றுவனாம்*
*தன்னேர் திரேதத்தில் சானகியே – பின்யுகத்தில்*
*கூடும் திரௌபதியே கூற்றாம் கலியுகத்தில்*
*வீடுதொறும் கூற்றுவனா மே"* *(நீதி.வெ.32)*

இதற்குப் பாலசுந்தரம் பிள்ளையவர்கள் "கிருத ஊழியில் இரேணுகை என்பவளே எமனாகும்; திரேத ஊழியல் தனக்குத்தானே ஒப்பாகிய சீதை என்பவளே எமனாகும் ; அதற்கடுத்தான துவாபர ஊழியில் திரௌபதியே எமனாகும் ; இப்பொழுது நடக்கும் கலியூழியிலோ ஒவ்வொரு வீட்டிலும் இருக்கும் ஒவ்வொரு பெண்ணும் எமனாகும்"[32] என்று விளக்கம் தருகிறார். எனவே பெண்களின் பொருட்டே ஆடவர்கள்

போர்களுக்குச் சென்று நாட்டை இழந்தும் உயிர்கள் அழிவதற்கும் காரணமாகவும் இருந்தார்கள் என்பதை உணர்த்தி அவர்களை உயிரைப் பிடிக்கும் கூற்றுவனுக்கு நிகராகச் சாடுகிறார் இந்நூலாசிரியர்.

மேலே சொல்லப்பட்ட கருத்துக்களைக் கொண்டு நோக்கும்போது பெண்ணைப் பற்றி நீதிநூல்கள் தாழ்வாகக் கூறியுள்ளன எனக் கருத இடமில்லை. அதாவது, பெண் என்பவள் அறிவில் சிறந்தவளாகக் காணப்பட்டாலும் அவள் எளிதில் உணர்ச்சி வயப்படக் கூடியவள். அதனால், உணர்ச்சி அறிவை எட்டிய நிலையில், நடுநிலை உணராத சில பண்புகள் வெளிப்படும். இதனை எச்சரிக்கை செய்யவே நீதிநூலாசிரியர்கள் பெண்ணின் சொற்களைக் கேட்கவேண்டாம் என்று அறிவுறுத்து கின்றனர். பெண்களின் சொற்களைக் கேட்டு அதன்வழி நடந்த ஆண்களுக்கு ஏற்பட்ட அழிவினை விவேகசிந்தாமணி கூறுகின்றது.

### 6.5.8. வரைவில் மகளிர்

மனதில் உறுதியையும் தெளிவையும் அழித்து மக்களுக்குத் தீமைதரக் கூடிய செயல்கள் சில இருக்கின்றன. அவை, வரைவில் மகளிரை நாடுதல், கள்ளுண்ணல், சூதாடல் போன்ற செயல்களாகும். இத்தகைய ஒழுக்கக்கேடான செயல்கள், தனி மனிதனுக்கும் சமுதாயத்திற்கும் அழிவினைத் தரக்கூடியன என்பதை உணர்ந்து, அவற்றை ஒழிக்க முதலில் குரல்கொடுத்தவர் வள்ளுவரே ஆவார். அன்பின் காரணமாக விரும்பாமல், பொருள் காரணமாக விரும்புகின்ற பொதுமகளிரின் இன்சொல் ஒருவனுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் (கு.911); அதனால் பயனை எதிர்பார்த்துப் பண்பற்ற நிலையைச் செய்யும் பொதுமகளிரின் இன்பத்தைவிடல் வேண்டும் (கு.912) என்கிறார் வள்ளுவர்.

“சங்க இலக்கியங்களில் தலைவனுக்குரிய பிரிவுகளில் பரத்தையிற் பிரிவு ஏற்கப்பட்டிருக்கிறது. இற்பரத்தை, காதற்பரத்தை, காமக்கிழத்தி, சேரிப்பரத்தை என நான்கு வகையினர் அக்காலத்தில் கூறப்பட்டனர். இவர்களில் சேரிப்பரத்தை (**Prostitutes**) என்பவரையே பொருட்பெண்டிர் என்றும் வரைவில் மகளிர் என்றும் வள்ளுவர் தூற்றுகிறார். பரத்தையிற்பாற் சென்று வந்த தலைவனைத் தலைவி

சேர்த்துக்கொள்ளாமல் ஊடினாள் எனப் புலவர் சங்க இலக்கியங்களில் பாடினாரேயன்றி அது சமுதாயக் குற்றம் (**Social Crime**) என்று அவர்கள் கருதவில்லை. வள்ளுவர் அது தனிமனிதனுக்கும் சமுதாயத்திற்கும் ஒழுக்கக்கேடாகும் என்கிறார்".[33] எனவே தனிமனித ஒழுகக்கேடே சமுதாய ஒழுக்கக்கேடாகக் கருதும் வள்ளுவர், வரைவில் மகளிரை வன்மையாகக் கண்டித்து ஒழிக்கத் திட்டமிட்டுள்ளார்.

பொருட்பெண்டிரின் பொய்யான முயக்கம் இருட்டறையில் பிணத்தைத் தழுவுவதற்குச் சமமாகும் என்று வள்ளுவர் கூறுவதை,

*"பொருட்பெண்டிரின் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்*
*ஏதில் பிணம்தழீஇ யற்று" (குறள்.913)*

என்ற குறட்பாவழி அறியலாம். பொருள் ஒன்றையே நோக்கமாகக் கொண்ட பொது மகளிர் தரும் இன்பத்தை, அருட்செல்வத்தை நாடும் அறிவுடையோர் பொருட் படுத்தமாட்டார் (கு.914); பகுந்தறியும் அறிவு இல்லாதவர்களும் கீழ்மக்களுமே பொதுமகளிரைச் சேர்வர் (கு.918); மேலும், இருமனப்பெண்டிர், கள், சூது ஆகிய மூன்றுடனும் தொடர்புகொள்வாரைத் திருமகளால் நீக்கப்பட்டவர் (கு.920) என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார். கணவன் மனைவி ஒற்றுமையை உணர்த்துவதே வள்ளுவ நெறியாகும். ஆகவேதான் பொருட்பெண்டிருக்கு நிகராகக் கள்ளையும் சூதையும் வரிசையாக வைத்து வன்மையாகக் கண்டிக்கிறார் அவர்.

'மைவிழி யார்தம் மனையகன் றொழுகு' (கொ.வே.78) என்கிறது கொன்றை வேந்தன். அதாவது, "மைதீட்டிய கண்களையுடைய பரத்தையர் மனையை அணுகாமல் விலகிநட"[34] என்று விளக்கம் தருகிறார் வேங்கடசாமி நாட்டார்.

ஒழுக்கம் இல்லாத வேசையரிடம் நட்புக்கொள்ளக்கூடாது. ஏனெனில், இம்மை, மறுமை என்ற இருபிறவிகளிலும் தீங்கு நேரிடும் (நல்.20) என்று நல்வழியும் பொதுமகளிரின் கூட்டுறவு உள்ளவன் தாழ்ந்தவனாவான் (அறநெறி.104) என்று அறநெறிச்சாரமும் குறிப்பிடுகின்றன. 'கொண்டைமேற் பூத்தேடி முடிக்கவேண்டாம் (உலக.12) என்கிறது உலகநீதி. விலைமகட் கழகு தன்மேனி மினுக்குதல் (வெ.வே.13) என்று வெற்றிவேற்கை கூறுகின்றது.

நீதிநெறிவிளக்கம், பொருளுக்காகத் தன்னையே விற்று வயிற்றுப் பிழைப்பை நடத்தும் விலைமகளிரின் இழிநிலையைச் சுட்டுகிறது. அதாவது, பொதுமகளிர் தீயநெறியில் ஈடுபட்டுத் தன்னை நாடுவோரை இன்பம் அளிக்கச் செய்பவள். அத்தகையவளிடம் உறவு கொள்ளக்கூடாது (நீதி.நெ.வி.66) என்று குறிப்பிடுகின்றது இந்நூல்.

விவேகசிந்தாமணி, ஆடவரை மயக்கச்செய்யும் சேலைகட்டிய மாதரை நம்புதல் கூடாது (வி.சி.தொ.I. பா13); ஏனெனில், ஆடவரின் துன்பத்தைக்கண்டு வருந்தியவளாக அவள் மயங்கிக் கீழே விழுவாள்; அவன் மேல் விழுந்து அழுவாள்; அவனுடைய எச்சில் தாம்பூலத்தை உண்பாள் ; உனக்காகச் சாவேன் என்பாள்; இவை அனைத்தும் பொய்யே ஆகும். ஆயிரம் எண்ணங்களைக் கொண்ட இத்தகைய மங்கையரை நம்பியவன் நாயைவிடக் கீழானவனாவான் (பா.16) என்கிறது. மேலும், மின்னலைப் போன்று அன்பைப் புலப்படுத்தும் வேசியருக்குப் பொருளைத் தந்தால் நோய் உண்டாகும்; நடக்கும்பொழுது உடலைக் குலுக்கி, மஞ்சள் முதலியவற்றால் முகத்தை மினுக்கி நகைக்கும் மங்கையரை எப்பொழுதும் நம்பக் கூடாது. வேசியை விரும்புபவன் விரைவில் உயிரை இழப்பான் என்றும், அவன் செய்த அறம் கெடும்; செல்வத்தை இழப்பான் (பா.30) என்றும் அது கூறிச் செல்கின்றது. இந்நூலாசிரியர், வேசியரைப் பற்றிக் கடுமையாகச் சாடுவதால் அவர் வாழ்ந்த காலக்கட்டத்தில் இவ்வகையான பெண்கள் அதிகம் இருந்திருக்கவேண்டும். வேசியரைச் சமுதாயத்திலிருந்து ஒதுக்கப்பட்டவர்களாகவும் இந்நூல் சுட்டுகிறது.

நீதிவெண்பா, மானத்தை இழந்தவரே வேசியர் ஆவார்; அவர்கள் மானம் உள்ளவர்போல் நடிப்பது ஈனத்தன்மை வாய்ந்ததாகும் (நீதி.வெ.14) என்கிறது. பொதுமகளிருக்கு மானம் தேவையில்லை என்று இந்நூலாசிரியர் கருதுகிறார்.

பெண்ணின் பெருமை பேசிய வேதநாயகர், சமுதாயத்திற்குக் கேடு விளைவிக்கக்கூடிய பரத்தையர் கூட்டத்தைக் கண்டு வேதனையுற்றுத் தம் கருத்துக்களைப் 'பரத்தமை' என்ற அதிகாரத்தின்வழி முன்வைக்கிறார். அதாவது, நஞ்சானது உட்கொண்டவரை மட்டும் கொல்லும் ; அரிமா நெருங்கினவரை மட்டும்

கொல்லும்; பாம்பு கையால் தொட்டவரைக் கொல்லும் ; ஆனால் பொருளுக்காகச் செல்லும் பரத்தைப் பெண்கள் பார்ப்பவர்களையும் நினைப்பவர்களையும் கொல்லுவார்கள் (நீதி.நூ.அதி.12 பா.6); தீயை மூட்டும் விறகினைப் போன்று உயிரைச் சுடும் காமத்தீயை உண்டாக்குவர் (பா.8); அறிவினைக் கெடச்செய்து நோயினைப் பெறச் செய்வர் (பா.9) என்று குறிப்பிடுகின்றார் வேதநாயகர். மேலும், ஆண்களின் சேர்க்கையும் காமநூலைக் கேட்டலும் படித்தலும் போன்ற தகாத செயல்களைச் செய்தலும் பரத்தையரின் செயல்களாகக் (பா.16) கூறுகிறார். இப்பரத்தையரின் ஆசைக்கு உட்பட்டுக் காமக்கடலில் வீழ்வோர் விளக்கொளியை விரும்பி அதனில் விழுந்து மாளும் விட்டில் பூச்சியைப் போலத் துன்பமுறுவர் (பா.17) என்கிறார் வேதநாயகர்.

வரைவில் மகளிரைச் சமுதாயத்திலிருந்து ஒதுக்கப்பட்டவர்களாக வள்ளுவரும் பிற்கால நீதிநூலாசிரியர்களும் கருதுகின்றனர். பிற்கால நீதிநூல்கள் அம்மகளிரைச் சுட்ட மைவிழியார், விலைமகளிர், வேசியர், பொதுமகளிர், பரத்தையர் என்ற சொற்களைக் கையாண்டுள்ளன. பரத்தையரை வேதநாயகரின் நீதிநூலும் விவேகசிந்தாமணியும் கடுமையாகச் சாடுகின்றன. இதன்வழி அவ்வாசிரியர்கள் வாழ்ந்த காலகட்ட சூழ்நிலையை அறியமுடிகிறது. எனவே பொருளுக்காகக் கவர்ச்சியை உருவாக்கும் விலைமகளிரை ஒழிப்பதே சமுதாயத்தின் முக்கிய கடமையாகும் என்று நீதிநூல்கள் கருதுகின்றன.

### 6.5.9. கள்ளுண்ணாமை

ஒருவன் மாண்புடன் வாழவேண்டுமெனில் அவன் கள்ளுண்ணல் கூடாது. ஏனெனில், 'கள்' உண்பதால் மக்கள் மயக்கம் ஏற்பட்டு வலிமையிழந்து நிற்பார்கள். பரிமேலழகர், "கள்ளுண்ணாமையாவது ஒழுக்கமும் உணர்வும் அழிதற்கண் அவ்வரைவில் மகளிரோடு ஒப்பதாய கள்ளினை உண்ணாமையது சிறப்பு"[35] என்று விளக்கம் தருகிறார்.

இவ்வுலகில் வாழும் மனிதர்களில் பலர் மது, மாது, சூதுக்கு அடிமையாகித் தம் வாழ்நாளை வீணாக்கியுள்ளனர். மாதுவிற்கு அடிமையானதால் ஏற்படும்

சீர்கேடுகளை வரைவில் மகளிரில் பேசிய வள்ளுவர், மதுவிற்கு அடிமையாவதால் ஏற்படும் இன்னல்களைக் கள்ளுண்ணாமை அதிகாரத்தில் பேசுகிறார்.

ஒருவன் கள் உண்ணுவது தன் துன்பத்தை மறக்கவும் இன்பத்தைப் பெறவும் முடியும் என்ற எண்ணம்தான் அடிப்படை எனலாம். ஆயின் கள்ளுண்பவன் உண்மையிலேயே இன்பம் பெறுகிறானா என்பது கேள்விக்குறி. இதனால்தான் வள்ளுவர் கள்ளுண்ணாமை அதிகாரத்தில் கள்ளுண்பதால் ஏற்படும் தீங்குகளை விளக்குகிறார். கள்ளின்மேல் விருப்பம் உடையவன் பகைவனுக்கு அஞ்சமாட்டான் (கு.921); பெற்ற தாயும் அவனைக் குற்றம் செய்தவனாகக் கருதுவாள்; ஆயின் சான்றோரால் மதிக்கப்படுபவன் கள் உண்ணமாட்டான்(கு.923); கள்ளுண்ணும் குற்றவாளிகளை நாணம் என்ற நல்லவள் பார்க்க அஞ்சுவாள் (கு.924) என்று நவில்கிறது வள்ளுவம். “மகளிரின் இயல்பான பண்புகளுள் குறிப்பிடத்தக்க ஒன்று நாணம் என்பது. இந்த நாணம் என்னும் நல்ல பண்பு பெண்களுக்கு மட்டுமல்ல; ஆண்களுக்கும் இருக்கவேண்டிய இன்றியமையாத ஒரு நல்ல பண்பு. திருவள்ளுவர் இந்த நாணத்தை ஒரு நல்ல பெண்ணாக உருவகித்துள்ளார். கள் குடிப்பவனை நாணம் என்னும் நல்லாள் திரும்பிப் பார்க்க மாட்டாள் ; அவன் முன்னர் நிற்கவும் மாட்டாள்”[36] என்று விளக்குகின்றார் கவிஞர் சாமி. பழனியப்பன்.

ஒருவன் பொருளைக் கொடுத்து உடம்பினைக் கெடுத்தல் அறியாமை ஆகும் (கு.925); கள்ளுண்பவன் என்றைக்கும் நஞ்சுண்பவனாகக் கருதப்படுவான் (கு.926); அத்தகையோன் மயங்கியிருக்கும் பொழுது குற்றம் அனைத்தும் வெளிப்பட்டுவிடும் (கு.927); கள்ளுண்பவனைத் திருத்த முயலுதல் நீருள் மூழ்கியிருப்பவனை விளக்கு கொண்டு தேடுவதைப் போன்றதாகும் (கு.929); ஒருவன் கள்ளுண்ணும் பழக்கமுள்ளவன் கள்ளுண்ணாதபோது, கள்ளுண்டு மயங்கினவனைக் காணுமிடத்தில், கள்ளுண்டு மயங்குவதால் வரும் சோர்வை நினைக்கமாட்டானோ? (கு.930) என்று வினவுகிறார் வள்ளுவர்.

அருங்கலச்செப்பு, கள், தேன் இவைகளை உண்ணுதல் கூடாது என்கிறது. கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிறன்மனை விரும்பாமை, பொருள் வரைதல்

இவை ஐந்தும் சமணர்கள் கடைபிடித்த நெறியாகும். அதனோடு கள் உண்ணாமை, ஊன் உண்ணாமை, தேன் உண்ணாமை என்ற மூன்றையும் தவறாமல் கடைப்பிடிக்க வேண்டும் (அருங்.47) என்று அருங்கலச்செப்பு கூறுகிறது.

"தேன் உண்பது பாவம் என்று ஏன் கொண்டார்கள் எனில் நாட்டில் தேன் அடையிலிருந்து தேனை எடுக்கும்போது தீயிட்டுக் கொளுத்தித் தேனீக்களைக் கொன்றும் தேன் அடையிலுள்ள தேன் புழுக்களைக் கொன்றும் உயிர்க்கொலை செய்கின்றார்கள். ஆகவே கொல்லாவிரதத்தை முதல் விரதமாகக் கொண்ட சமணர் தேன் உண்பது பாவம் என்று விலக்கி வைத்தார்கள். மருந்தைத் தேனுடன் கலந்து உண்ணவேண்டியிருந்தால் தேனை விலக்கிச் சர்க்கரைப்பாகுடன் கலந்து கொடுப்பது மருத்துவரின் மரபு".[37] எனவே தேன் உண்பது பிற உயிர்களைக் கொல்லுவதற்குச் சமம் என்று கருதினர்.

"திருவள்ளுவர் தேன் உண்ணுதல் கூடாது என்று கூறவில்லை. உயிர்க்கொலை இல்லாமலே தேனை எதிர்காலத்தில் எடுத்தல் கூடும் என்று திருவள்ளுவர் எண்ணி இருப்பார். அதனால் அவர் தேனை உண்ணாதே என்று கூறவில்லை. மாறாகப் பாலோடு தேன் கலந்தற்றே என்று தேனினைச் சுவைத்தவர்போல் சிறப்பித்துள்ளார். ஆனால் கள்ளையும் புலாலையும் உண்ணாதே என்று வன்மையாகக் கண்டிக்கிறார்".[38]

கள் குடிப்பதால் ஒருவன் மதிப்பும் புகழும் இழப்பான்; அவனுடைய செயல்கள் அனைத்தும் சான்றோர்களால் பழிக்கப்படும் (அறநெறி.86) என்று அறநெறிச்சாரம் குறிப்பிடுகிறது.

'மது' என்னும் அதிகாரத்தை அமைத்து அதில் கள்ளுண்ணாமையைப் பற்றி விளக்கியுள்ளார் வேதநாயகர். கள்ளுண்பவன் அறிவின்மை, உடல்மறதி, நீங்கா நோய் போன்றவற்றைப் பெறுவதற்குத் தன்னுடைய பொருளை வாரி இறைப்பான் (நீதி.நூ.அதி.18 பா.1); அத்தகையோன் இறந்தவனுக்குச் சமமாக எண்ணப்படுவான்; தவப்பேற்றால் தாம் பெற்ற பிள்ளைகளுக்கு அவன் தந்தையாவதில்லை;

மனைவிக்குக் கணவனாவது இல்லை (பா.2); அவனுடைய உள்ளம் அவன்வசம் இருப்பதில்லை; பித்து, நஞ்சு ஆகியவற்றைவிட மிகவும் கொடியது (பா.3) 'கள்' என்கிறார் வேதநாயகர். பாலும் தேனும் வெல்லப்பாகும் உண்ணாமல் கள்ளையுண் போனை மலரைவிட்டுப் புண்ணையும் கழிவுக்குருதியும் வாரியுண்டு மகிழ்ந்திருக்கும் 'ஈ'க்குச் சமமாகக் (பா.4) கருதுகிறார் வேதநாயகர். மேலும், கள்ளுண்பவன் நாயும் கழுதையும் போல் மதிப்பில்லாதவனாவான்; அவன் தன் மகளையும் முறையில்லாது மருவச் செய்வான்; மனைவியையும் விலைப்படுத்துவான்; மலத்தை அமுதம் என்று உண்ணுவான்; சினம்கொள்வான்;பகைவனைத் துணையாகச் சேர்த்துக் கொள்வான்; ஈ, எறும்பு, பாம்பு, தேள், விலங்கு முதலியன அவனை வந்து நெருங்கும்; பாவம், பழி போன்றவற்றை அவன் பெறுவான்; வறுமையுற்றுப் பிச்சை எடுப்பான்; இத்தகையோன் ஆயுள் குறைந்து விரைவில் இறப்பான் என்று கள்ளுண்பதால் ஏற்படும் தீங்கினைச் சுட்டுகிறார் வேதநாயகர்.

மன்னன் மக்களால் பழிக்கப்படாமலும் பகைவரிடத்துத் தன்னைப் பாது காத்துக் கொள்ளவேண்டுமெனில் அவன் கள்ளுண்ணாமல் இருக்கவேண்டும் என உணர்த்தியுள்ளார் வள்ளுவர். திருவள்ளுவரும் வேதநாயகரும் அதிகாரம் அமைத்துக் கள்ளுண்பதால் ஏற்படும் தீமையைச் சுட்டிக்காட்டியுள்ளனர். கள்ளுண்பதோடு தேன் உண்பதும் பெரும் பாவச்செயலாகக் கருதுகிறது அருங்கலச்செப்பு.

### 6.5.10. சூது

சூது என்பது மனிதனுடைய வெறியைத் தூண்டக்கூடிய விளையாட்டாகும்; இது தனிமனிதனுக்கு மட்டுமன்றி நாட்டிற்கும் பெருங்கேட்டினை விளைவிப்பதாகும் ; இவ்வுலகத்தில் சூதினால் செல்வாக்குப் பெற்று வாழ்ந்தவர்கள் இல்லை. இத்தகைய சூதினை வன்மையாகக் கண்டிக்கிறார் வள்ளுவர். சூதாட்டத்தில் வெற்றி பெறுகின்ற ஆற்றல் உடையவனும் ஒருவன் அச்சூதாட்டத்தை விரும்பக்கூடாது; ஏனெனில், சூதாடிப் பெறும் வெற்றியானது தூண்டில் முள்ளின் புழு மீனால் இரையென கருதப்பட்டு

விழுங்கப் படுவது போலாகும் (கு.931) என்கிறார் வள்ளுவர். மேலும், ஒரு பொருளைப் பெற்று நூற்பொருளை இழக்கும் சூதாடுபவன் நிலையை,

*"ஒன்றுஎய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் உண்டாம்கொல்*
*நன்றுஎய்தி வாழ்வதோர் ஆறு" (குறள். 932)*

என்ற குறட்பாவழி விளக்குகின்றார். சூதாடுபவன் பொருளானது பகைவரிடத்தில் சேரும் (கு.933) என்றும் அவன் வறுமைபெற்று வாழ்வான் (கு.934) என்றும் வள்ளுவம் குறிப்பிடுகிறது. மேலும், சூது என்ற மூதேவியால் விழுங்கப்பட்டவன் வயிற்றுக்கு உணவு கிடைக்காது (கு.936); செல்வத்தையும் நற்பண்பையும் இழப்பான் (கு.937); பொய்யை மேற்கொண்டு அருளைக் கெடுத்து வாழ்வான் (கு.938); புகழ், கல்வி, செல்வம், உணவு, உடை ஆகிய ஐந்தும் அவனைச் சேராமல் ஒதுங்கும் (கு.939) என்று கூறுகிறது.

"மங்கை, மது, சூது போன்ற பலவாறான இழிந்த செயல்களைச் செல்வம் தோற்றுவிக்கிறது. மதுவிலும் மங்கையர் இன்பத்திலும் சூதிலும் சென்று பல பெரிய பேரரசுகளும் நாகரிகமும் அழிந்துபட்டன. இந்த நிலை எந்த அரசுக்கும் தனி மனிதனுக்கும் ஏற்படக்கூடாது என்பதற்காகத் தான் வள்ளுவர் கள், சூது, விபச்சாரத்தைப் பற்றி விரித்துக் கூறுகின்றார்"[39] என்று மாணிக்கவாசகம் குறிப்பிடுகின்றார். சூதாட்டமானது நாடு, மனைவி, மக்கள் அனைத்தையும் சீரழித்து விடும் கொடுந்தன்மை கொண்ட விளையாட்டாகும் என்பதை வள்ளுவத்தின் வழி உணரமுடிகிறது.

'சூது விரும்பேல்' (ஆத்.49) என்று ஆத்திசூடியும், சூதும் வாதும் வேதனை செய்யும் (கொ.வே.31)என்று கொன்றைவேந்தனும் குறிப்பிடுகின்றன. அறநெறிச்சாரம், சூதாடுபவன் என்ற பழிச்சொல்லைப் பெறும் ஒருவனின் நிலையைக் கீழ்வரும் பாடல்வழிச் சுட்டுகிறது :

*"ஓதலும் ஓதி உணர்தலும் சான்றோரால்*
*மேதை எனப்படும் மேன்மையும் - சூது*
*பொரும் என்னும் சொல்லினால் புல்லப்படுமேல்*
*இருளாம் ஒருங்கே இவை" (அறநெறி : 87)*

ஒருவனின் கல்வி, புகழ் அனைத்தும் சூதாடுவதால் ஒருசேர அழியும் என்ற கருத்தை வலியுறுத்துகிறது அறநெறிச்சாரம்.

வேதநாயகர், ஒருவன் சூதாடுவதால் பெரும்பொருளையும் மனைவியையும் இழக்க நேரிடும் (நீதி.நூ.அதி.19,பா.1); தன்னுடைய மனைவி இறந்தாலும் சூதாட்டத்தினின்று எழுந்திருக்கமாட்டான் (பா.5); சூது பேராசையைக் கொடுப்பதோடு இழிவைத் தந்து பெரும் கவலைக்கு உட்படுத்தும் (பா.7); சூதாடுபவர் போர் முதலிய தீமைகளுக்கு இணக்கம் கொள்வர் என்றும் சூதானது களவு, பொய், சினம், பகை, காமம் போன்ற தீமைகளுக்குத் தந்தையாகி ஒருவனைப் பழிக்கு உட்படுத்தும் (பா.4) என்றும் குறிப்பிடுகின்றார். மேலும், சூதாடி வெற்றியால் கிடைத்த பொருளானது மேலும் மேலும் பொருள் இழக்கும் ஆசையை உண்டாக்கும் என்கிறார்.

மேற்சொல்லப்பட்ட கருத்துக்களின்வழி சூதாடுவதால் ஒருவன் பொருள் இழப்பு ஏற்படும்; வறுமையால் துன்பம் உண்டாகும். நற்பண்புகளை இழப்பான்; பழியினைப் பெறுவான்; அவனுக்குக் கவலை உண்டாகும் என்பது பெறப்படுகிறது.

### 6.5.11. மருந்து

உலகில் வாழும் மனிதன் உயிர் வாழ்வதற்கு வேண்டிய இன்றியமையாத பொருள்களில் நீர், உணவு, காற்று போன்றவை முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இவை செயற்கையாகவும் இயற்கையாகவும் உருவாகின்றன. உயிர் வாழ்வதற்காகக் குடிக்கும் நீரும் உண்ணும் உணவுமே சில நேரங்களில் அவன் உயிர் நீங்கக் காரணமாக அமைகின்றன. ஒருவன் நோய் நொடியின்றி வாழ்வதற்குரிய வழிமுறைகளை வள்ளுவர் 'மருந்து' என்ற அதிகாரத்தில் விளக்குகின்றார். ஒருவனுக்கு நோய் எதனால் ஏற்படும் என்பதை வள்ளுவர்,

*"மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்*
*வளிமுதலா எண்ணிய மூன்று"* *(குறள். 941)*

என்னும் குறள்வழி விளக்குகின்றார். முன்பு உண்ட உணவு செரித்தப்பின் உண்பவனின் உடம்பிற்கு மருந்து தேவையில்லை (கு.942); அத்தகையோன் உண்பவனே நீண்ட

காலம் வாழ்வான் (கு.943); ஒருவன் நன்றாகப் பசித்தப்பின் தான் உணவு உண்ணுதல் வேண்டும் (கு.944); உணவை அளவோடு உண்பவனுக்கு இடையூறு தரும் நோய் வராது (கு.945); அளவுக்கு அதிகம் உண்பவனைவிட்டு நோய் நீங்காது (கு.946) என்று குறிப்பிடுகின்றார் வள்ளுவர். மேலும், ஒருவனுக்கு ஏற்பட்ட நோயின் காரணம் அறிந்து அதைத் தணிக்கும் வழியை ஆராய்ந்து உடலுக்குப் பொருந்தும்படி செயல்படவேண்டும் (கு.948). மருத்துவ நூலைக் கற்றவன் நோயின் அளவும் காலமும் அறிந்து செயல்பட வேண்டும் என்பதை,

*"உற்றான் அளவும் பிணியளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்" (குறள். 949)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார். நோயுற்றவன், நோய் தீர்க்கும் மருத்துவன், மருந்து, மருந்தை அருகிலிருந்து கொடுப்பவன் என்று மருத்துவ முறையில் நான்கு வகைப்படும் (கு.950) என்கிறது திருக்குறள். "வள்ளுவர் தன் குறட்பாக்களில் மருந்தில்லாமலே உயிர் வாழமுடியும் என்றும் அப்படி வாழத் தவறினால் எந்த மருத்துவரையும் மருந்தையும் நாடவேண்டாம் என்பதையும் கூறுகிறார். மது, மங்கை, சூது இவைகளால் மனத்திலே மாசு ஏற்படுவதோடல்லாமல் உடல் நலமும் கெட்டு விடுகிறது. ஆகையால் இவைகளை அறவேவிட்டு குறைவாக உண்டு ஊனினைச் சுருக்கி அறநெறியிலே நின்று உள்ளொளியைப் பெருக்குவோமானால் நீண்ட காலம் மருந்தில்லாமல் வாழலாம்"[40] என்று விளக்குகிறார் மாணிக்கவாசகம். 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பதற்கேற்ப இவ்வுலகத்தில் ஒருவன் வாழ்ந்தால் உடல்நலத்தோடு வாழவேண்டும் என்பதே வள்ளுவரின் அவா எனலாம்.

ஆத்திசூடி, 'மீதூண் விரும்பேல்' (ஆத்.91)'நோய்க்கு இடங்கொடேல்' (ஆத்.76) என்கிறது. அதிகம் உண்ணக்கூடாது என்று ஒவ்வொருவருக்கும் உணர்த்திய ஔவையார் கொன்றைவேந்தனில் 'உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கு அழகு' (கொ.வே.5) என்று கூறுகிறார். ஔவையார் காலந்தொட்டு இன்றுவரை பெண்கள் அதிகமாக உண்ணாமல் அரைவயிறாக உண்ணவேண்டும் என்ற கருத்து நிலவி வருகிறது. "ஆணுக்கு வலிமையையும் பெண்ணுக்கு அழகையும் உரிமையாக்கிய

சமுதாய நீதியாளர்கள் அழகைக் காப்பாற்ற வழி கூறியுள்ளனர். உணவைக் குறைத்துக்கொள்ளும்போது உடல்வலிமை குன்றுவது இயற்கைதானே. உடல் வலிமையற்ற பெண்ணைப் 'பூவினும் மென்மையானவள்' என்று சொல்லி உள்ள வலிமையையும் சேர்த்து ஒதுக்கியபோது உணராமல் போனப் பெண் மகிழ்ந்து ஏற்றுக் கொண்டாள். சமைக்கும் உணவில் பெரும்பகுதி கணவனுக்கும் மீதி வளரும் குழந்தைகளுக்கும் என்று ஒதுக்கிவிட்டு, உணவைச் சுருக்குவதால் தான் ஓய்ந்து போய்விடுவோம் என்பதையும் உணராமல் பெண் ஒதுங்கிக்கொண்டாள்".[41] உணவினைக் குறைப்பது பெண்களுக்கு அழகு என்று ஔவையார் சொல்லியிருப்பதன் காரணம் அக்காலத்தில் பெண்கள் குடும்ப வேலைகளை மட்டுமே செய்தனர். வெளி உலகோடு அவர்களுக்குத் தொடர்பில்லை. குடும்பத் தலைவனாகிய ஆடவனுக்கு அடங்கி வாழ்ந்த அப்பெண் தன்னைத் தானே காப்பாற்றிக்கொள்ளும் நிலையில் இருந்திருக்கலாம்.

அருங்கலச்செப்பு என்ற நூல் உண்ணாவிரதம் மேற்கொள்வதற்குச் சில நாட்களைக் குறிப்பதைக் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*"உவாவட் டமியின்க ணால்வகையூணு*
*மவாவறுத்தல் போசத மெனல்" (அருங்.122)*

"சதுர்த்தி, அட்டமி ஆகிய நாட்களில் உண்பன, கடிப்பன, நக்குவன, பருகுவனவாகிய நால்வகை உணவையும் ஆசையின்றி நீக்கல் உண்ணா நோன்பு ஆகும். அன்று தொழில் ஏதும் செய்யாதிருந்து அறத்தில் நாட்டமும் நற்சிந்தனையும் கொள்ளல் வேண்டும். இந்நோன்பை அடிக்கடி மேற்கொள்வதால் உடல்நிலை சரியாவதோடு ஐம்பொறியடக்கமும் நன்னெறிக்கண் ஆர்வமும் உண்டாகும் என்பது எளிதில் விளங்கும்".[42] எனவே உடல்நலம் பெற வேண்டுமெனில் ஒருவன் உண்ணாநோன்பை மேற்கொள்ள வேண்டும் என்பதைச் சமணநூலான அருங்கலச்செப்பு உணர்த்துகிறது.

அறநெறிச்சாரம், ஒருவன் வயிற்றுக்கு மிகுதியான உணவைக் கொடுத்தால் அவனுடைய ஐம்புலன்களும் அடங்காது; அதனால் அளவோடு உண்ணச்செய்து பெரும்பயனை அடைவதே பெரியோரின் கடமையாகும் (அறநெறி.135) என்று

கூறுகிறது. மேலும், அளவுக்கு மிஞ்சிய உணவு உண்பதால் ஒருவனுக்கு ஆசைகள் பெருகித் துன்பம் அதிகமாக நேரிடும் (பா.137) என்பதை உணர்த்துகிறது.

சிற்றின்பத்திற்குக் காரணம் மிகுந்த உணவே என்று எண்ணித் துறவியர் சிறிதளவே உண்பார்கள் (நீதி.நெ.வி.86) என்று நீதிநெறிவிளக்கம் குறிப்பிடுகிறது. விவேகசிந்தாமணி, ஒருவனுக்கு நோய் தோன்றாமல் இருக்க வேண்டுமெனில் அவனுடைய உடலிற்கு உணவு கொடுத்தல் வேண்டும் (வி.சி.தொ.**II** பா.86) என்று அறிவுறுத்துகிறது. நீதிவெண்பா, உணவு கட்டுப்பாடு பற்றிக் குறிப்பிடுகையில், தவநெறியில் இருப்பவன் ஒரு வேளை உண்ண வேண்டும். இல்லறத்தான் இரண்டு வேளை உண்ணவேண்டும்; மூன்று வேளை உண்பவனுக்கு நோயும் நான்கு வேளை உண்பவனுக்கு இறப்பும் உண்டாகும் (நீதி.வெ.9) என்கிறது.

வேதநாயகர், அளவுக்குமீறி ஒருவன் உண்பதால் நோய், அறியாமை, சுறுசுறுப் பின்மை, பழி போன்ற தீமைகள் ஏற்படும் (நீதி.நூ.அதி.35 பா.1); அவனுக்கு உடல் வலிமை கெடும் (பா.2); ஒருவன் உணவு செரிக்காமல் உண்டால் அதை நீக்குவதற்கு மருந்து கிடையாது. அப்போது பட்டினி கிடத்தலே அதற்குச் சரியான மருந்தாகும் என்று குறிப்பிடுகின்றார். அளவோடு உண்பதால் ஒருவனுக்கு வலிமை உண்டாகும்; இதனை உணர்ந்த அறிவுடையோர் அளவாகவே உண்பர் (பா.3). பறவைகளும் விலங்குகளும் தான் ஒவ்வொரு வகை இரையை உண்ணும் ; ஆனால் மக்கள் நாணம் இல்லாமல் வயிற்றில் காற்றுக்கு இடமில்லாமல் உணவைத் திணிக்கக்கூடாது (பா.6) என்று வேதநாயகர் கூறுகிறார்.

மேலே சொல்லப்பட்ட கருத்துக்களின்வழி ஒருவன் நோயின்றி உடல் நலம் பெற்று வாழவேண்டுமெனில் அவன் அளவோடு உண்ணுதல் வேண்டும். ‘அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு’ என்பதற்கு ஏற்ப உடல் சீர் கெட்டுவிடும் என்பதைத் வள்ளுவரும் பிற்கால நீதிநூலாசிரியர்களும் விளக்கிச் சென்றுள்ளனர். உண்ணும் உணவின் அளவைக் குறைப்பதே பெண்களுக்கு அழகு என்கிறது கொன்றை வேந்தன். பொதுவாக, அதிகம் உண்பதால் ஆசைகள் பெருகி அழிவுக்குப் பாதை வகுக்கும் என்கிறது அறிநெறிச்சாரம். நீதிவெண்பா, சமயநோக்கில் இல்லறத்தாரும்

துறவறத்தாரும் எத்தனை வேளை உண்ணவேண்டும் என்று பட்டியலிடுகிறது. சில நாட்கள் உண்ணாமல் இருக்கவேண்டும் என்று சமயஞ்சார்ந்து கூறுகிறது அருங்கலச்செப்பு. அளவறிந்து உண்பவனே உடல் வலிமை பெறுவான் என்கிறார் வேதநாயகர். ஒட்டுமொத்தமாக நோக்கும்பொழுது, அளவறிந்து ஒவ்வொருவரும் உண்ணுவதன் தேவையை நீதிநூல்கள் வற்புறுத்துகின்றன. அவ்வாறு, அளவறிந்து உண்பதால் நோயின்றி வாழமுடியும். சமுதாயத்தில் வறுமை ஒழியும் என்ற உண்மையை உணரமுடிகிறது.

## 6.6. முடிவுரை

நீதிநூல்கள், நட்பின் தன்மையையும் நல்லோர் நட்பின் சிறப்பையும் தீயோர் நட்பின் இழிவினையும் சுட்டிக்காட்டி நல்லோரின் நட்பைப் பெற்று வாழ்வதே நாட்டில் வாழும் ஒவ்வொருவருக்கும் சிறப்பு என்கின்றன.

ஒருவனுடைய துன்பத்தைத் துடைப்பதே நட்பு என்கிறது வள்ளுவம். நற்பண்புடைய பெரியோரின் நட்பினால் வீடுபேறு உண்டாகும் என்கிறது பிற்கால நீதிநூலான அறநெறிச்சாரம். இக்கருத்தினை வள்ளுவத்தில் காணமுடியவில்லை.

நீதிநூல்கள், கள் உண்ணலைச் சமுதாயக் குற்றமாக கருதி அவற்றைக் கடுமையாகச் சாடுகின்றன. கள்ளுண்பவன் தன்னுடைய மனைவியையும் விலைக்கு விற்பான் என்று அவனுடைய இழிநிலையைச் சுட்டுகின்றது பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய நீதிநூல்.

மது அருந்தும் பழக்கம் சங்க காலந்தொட்டு இன்று வரை இருந்து கொண்டுதான் இருக்கிறது. மது அருந்துதல் குற்றமாகக் கருதப்பட்டாலும் அது இன்றைய அரசியல் சட்டத்தில் குற்றமாக ஏற்றுக்கொள்ளப்படவில்லை. படித்த இளைஞர்களுக்கும் கல்வியாளர்களுக்கும் வேலைவாய்ப்புக்களை அளிக்கும் இடமாக மதுக்கடைகள் அமைகின்றன என்பது நாம் அறிந்த ஒன்றாகும்.இன்று அரசிற்கு வள்ளுவர் காலத்தில் கள்ளுண்ணல் குற்றமாகக் கருதித் தடை செய்யப்பட்டாலும்

இன்றைய நிலையில் அது சமூகத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பது கண்கூடான ஒன்று.

சமுதாயத்திற்கும் அரசியலுக்கும் பெருங்கேட்டினை உருவாக்குபவர் வரைவில் மகளிர் என்பதை உணர்ந்து பரத்தையர் உறவை முற்றிலும் கண்டிக்கிறார் வள்ளுவர். வரைவில் மகளிர் என்பவர் பொருளை மட்டுமே நோக்கமாகக் கொண்டு வாழ்பவர்; நாடாளும் மன்னனையும் அழிக்கும் தன்மையுடையவர் என்று கருதிய வள்ளுவர், அவர்களைப் பற்றிய பொருட்பாலில் தனி அதிகாரம் வகுத்துக் கூறியிருக்கிறார்.

பிற்கால நீதிநூல்கள், வரைவில் மகளிரை நாடுபவனுக்கு இம்மையிலும் மறுமையிலும் தீங்கு ஏற்படுவதோடு அவனுடைய உயிர்க்கும் அழிவு ஏற்படும் என்று சொல்கின்றன. சூதாடுதலும் பெருங்குற்றமாகக் கருதி அவற்றை நீதிநூல்கள் கண்டிக்கின்றன.

சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும் அளவறிந்து உண்ணுவதன் மூலம் நோய் நோடியின்றி வாழலாம் என்று நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன.

## அடிக்குறிப்புக்கள்

1. க.த. திருநாவுக்கரசு, திருக்குறள் நீதி இலக்கியம், ப.278.
2. தி. மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர் (அங்கவியல்), ப.24.
3. ஜலஜா கோபிநாத், கல்விச்செல்வமும் பொருட்செல்வமும், குமரகுருபரர் ஆய்வுமாலை, ப.594.
4. சி. இலக்குவனார், அமைச்சர் யார், ப.50.
5. உ.வே. சாமிநாத ஐயர், புறநானூறு மூலமும் பழைய உரையும், ப.123.
6. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப. 316.
7. புன்னைவனநாதமுதலியார்(உ.ஆ.)ஆசாரக்கோவை மூலமும் விருத்தியுரையும்,ப.16.
8. ஆ.பொன்னுச்சாமிபிள்ளை, (உ.ஆ.)அறநெறிச்சாரம் மூலமும் விருத்தியுரையும்,ப.35.
9. சி. இலக்குவனார், அமைச்சர் யார், ப.38.
10. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப. 331.
11. தி. முருகரத்தனம், குறள் கண்ட பொருள்வாழ்வு, ப.146.
12. மேலது., ப.9.
13. கு.ச. ஆனந்தன், குறளாய்வின் நுழைவாயில், ப.123.
14. தி. முருகரத்தனம், குறள் கண்ட பொருள் வாழ்வு, ப.2.
15. இல.மகேந்திரன், 'ஔவையாரின் நீதிப்பாடல்களில் வாழ்வியல் நெறிகள்', ஔவைத் தமிழ் ஆய்வுமாலை, ப.921.
16. மு. வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.193.
17. ஞா.தேவநேயப்பாவாணர், திருக்குறள் மரபுரை, ப.87.
18. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.364.
19. ம.இராசமாணிக்கம், (உ.ஆ.), பழமொழி நானூறு மூலமும் உரையும், ப. 91.
20. தி.சு.பாலசுந்தரம்பிள்ளை, முதுமொழிக்காஞ்சி மூலமும் விருத்தியுரையும், ப.31.
21. தி.சு.பாலசுந்தரம் பிள்ளை, (உ.ஆ.), நீதிநெறிவிளக்கமும் மூலமும் உரையும், ப.58.
22. தி.மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர், பொருட்பால் அங்கவியல்-2, ப.237.
23. ச. தண்டபாணி தேசிகர், திருக்குறள் உரைக்களஞ்சியம் பொருட்பால் அங்கவியல்-2, ப.170.
24. துரை-தண்டபாணி, (உ.ஆ.), நீதிநூல்கள், ப.31.

25. ச. தண்டபாணி தேசிகர், திருக்குறள் உரைக்களஞ்சியம், பொருட்பால் அங்கவியல்-2, ப.221.
26. தி.சு. பாலசுந்தரம்பிள்ளை, (உ.ஆ.), நீதிவெண்பா மூலமும் உரையும், ப.55.
27. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.391.
28. தி.சு. பாலசுந்தரம் பிள்ளை, (உ.ஆ.), நீதிநெறிவிளக்கம் மூலமும் உரையும், ப.57.
29. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.394.
30. சரவண. அறுமுக முதலியார், வள்ளுவர் வகுத்த வாழ்க்கைநெறி, ப.23.
31. மு.வரதராசனார், இலக்கியத்திறன், பக். 22-23.
32. தி.சு. பாலசுந்தரம்பிள்ளை, (உ.ஆ.), நீதிவெண்பா மூலமும் உரையும், ப.31.
33. த.செல்லகனி, புதிய ஏற்பாடும் பதினெண்கீழ்க்கணக்கு நூல்களும் அறக்கருத்துக்கள் - ஓர் ஒப்பீடு, ப.79.
34. ந.மு. வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), கொன்றைவேந்தன் மூலமும் உரையும்,ப.22.
35. ச. தண்டபாணி தேசிகர், திருக்குறள் உரைக்களஞ்சியம், பொருட்பால் அங்கவியல்-2, ப.381.
36. கவிஞர் சாமி. பழனியப்பன், திருக்குறள் மலர்கள், ப.101.
37. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப. 68.
38. அ. சுகுமாரன், (உ.ஆ.), அருங்கலச்செப்பு, ப.40.
39. தி. மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர், அங்கவியல் -2, ப.365.
40. மேலது., ப.381.
41. சரோஜினி, ‘நீதி இலக்கியங்களில் பெண்நீதி’, 21-வது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, ப.353.
42. அ. சுகுமாரன், (உ.ஆ.), அருங்கலச்செப்பு, ப.45.

# இயல் ஏழு

## திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் குடிமை

# இயல் ஏழு

# திருக்குறளும் பிற்கால நீதிநூல்களும் கூறும் குடிமை

## 7.0. முன்னுரை

அரசர்கள் ஆட்சி செலுத்துவதற்கு அமைச்சர்கள், ஒற்றர்கள், தூதர்கள் போன்றோர் உறுதுணையாக விளங்கினர். அரசின் ஆறு அங்கங்களில் ஒன்றாகிய குடியைப் பற்றி குடிமையியலில் விளக்குகிறார் வள்ளுவர். குடி என்பது மக்களைக் குறிப்பதாகும். குடிமக்களில்லாமல் அரசாட்சி நடைபெறாது. ஆக குடிகளின் பண்புகளையும் செயல்களையும் விளக்கும் வகையில் குடியியலை வகுத்துள்ளார் வள்ளுவர். இந்த இயலை 'ஒழிபியல்' என்று திருக்குறள் உரையாசிரியர்களாகிய பரிமேலழகர், மணக்குடவர் போன்றோர் கூறிவருகின்றனர்.பரிமேலழகர், குடிமையியலை பதிமூன்று அதிகாரங்களாகப் பிரித்துள்ளார். அவையாவன; குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை, பண்புடைமை, நன்றியில் செல்வம், நாணுடைமை, குடிசெயல் வகை, உழவு, நல்குரவு, இரவு, இரவச்சம், கயமை ஆகும். வள்ளுவர் குடிமக்கள் பற்றிக் கூறும் செய்திகளோடு பிற்காலநீதிநூல்களில் காணப்படும் செய்திகளை ஒப்பிட்டு நோக்குவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 7.1. குடிமையும் குடிசெயல்வகையும்

"மக்களில்லாமல் நாடு இல்லை; ஒரு ராஜ்யத்தின் பிராண வாயு ஜனம்; மனிதர்கள்தான் ராஜ்யமே தவிர அவர்களில்லாத சுவர்களோ கப்பல்களோ ராஜ்யமாகா; எனவே அரசை இயக்குவிப்பது குடி, குடிகளை வாழ்விப்பது அரசு என்பர்"[1] சாமிநாதசர்மா. நாட்டில் மக்கள் இல்லாமல் அரசன் ஆட்சி நடத்த முடியாது என்பது வெளிப்படை.

வள்ளுவர், குடிமை அதிகாரத்தில் குடிமக்களின் பண்புகளையும் 'குடிசெயல் வகை' அதிகாரத்தில் மக்கள் பிறந்த குடியின் தன்மையையும் விளக்குகின்றார். இந்த இரண்டு அதிகாரக்கருத்துக்களும் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளப் பட்டுள்ளன.

வள்ளுவம், உயர்குடியில் பிறந்த மக்கள் அனைவரும் செப்பமும் நாணமும் உடையவராக இருத்தல்வேண்டும் (கு.951) என்றும் ஒழுக்கம், வாய்மை, நாணம் ஆகிய மூன்றும் வழுவாமல் நன்னெறியில் ஒழுகுதலே உயர்குடியின் சிறப்பு (கு.952) என்றும் குறிப்பிடுகின்றது. மேலும், உயர்குடியில் பிறந்தோன் ஒழுக்கம் குன்றுவதற்கான செயலைச் செய்யமாட்டான் என வள்ளுவர் நம்புவதை,

*"அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்*
*குன்றுவ செய்தல் இலர்"* *(குறள்.954)*

என்ற குறட்பாவழி அறியமுடிகிறது. மாசற்ற குடிப்பண்புடன் வாழ்பவன் வஞ்சனை கொண்டு தகுதியில்லாதவற்றைச் செய்யமாட்டான் (கு.956); ஒருவன் எந்த நிலத்தில் நடந்தான் என்பதை அவன் காலில் ஒட்டியிருக்கும் மண்ணால் அறிவதைப் போன்று ஒருவன் பிறந்த குடியை அவன் பேசும் சொல் காட்டிவிடும் (கு.959) என்கிறார் வள்ளுவர். அதனால் ஒருவன், தான் பிறந்த குடி உயர்வு எய்தக் கருதினால் அனைவரிடத்திலும் அவன் பணிவுடன் நடந்துகொள்ளவேண்டும் (கு.960) என்று கூறுகின்றது வள்ளுவம்.

விடாமுயற்சியையும்,சிறந்த அறிவாற்றலையும் இடைவிடாமல் பின்பற்றுபவனின் குடி உயர்ந்து விளங்கும் (கு.1022); அவ்வாறு குடியை உயர்வடையச் செய்ய நினைப்பவனுக்குத் தெய்வம் துணைசெய்ய முன்வரும் (கு.1023); தான் பிறந்த குடியைச் சிறப்புறச் செய்வதே ஒருவனுக்கு ஆண்மையாகக் கருதப்படும் (கு.1026); துன்பத்தை உடனிருந்து தாங்கவல்லதே நல்ல குடியாகும் (கு.1030); மேலும், குற்றம் இல்லாத குடிப்பெருமை கொண்டவனை உலகத்தார் உறவாகச் சூழ்ந்து கொள்வர் என்று வள்ளுவம் குடிசெயல் வகையின் தன்மைகளை விரித்துரைக்கிறது.

ஒருவனுடைய குணமானது அவர் பிறந்த குடியின் இயல்பைப் பொறுத்தே அமையும் (மூது.7) என்கிறது மூதுரை. நற்குடியில் பிறந்தவர்கள் வறுமையாளராக இருந்தாலும் கேட்பவருக்கு இல்லை என்று கூறமாட்டார் (நல்.9) என நல்வழி கூறுகின்றது. வெற்றிவேற்கை, ஒருவன் எக்குடியில் பிறந்திருந்தாலும் கல்வி கற்றிருந்தால் மட்டுமே உயர்ந்தவனாகக் கருதப்படுவான் என்பதை,

*"எக்குடிப் பிறப்பினும் யாவரே யாயினும்*

*அக்குடியில் கற்றோரே மேல்வருக" (வெ.வே.38)*

என்ற பாடல் விளக்குகிறது. "நான்கு வகையான குலங்களில் உயர் குலத்தில் பிறந்த ஒருவன் கல்லாதவனானால் தாழ்ந்த இடத்தில் இருப்பவனே"[2] என்று விளக்கம் தருகிறார் வேங்கடசாமி நாட்டார். ஒருவன் உயர்குடியில் பிறந்திருந்தாலும் கல்வி கற்றால்தான் சிறப்பு எய்தமுடியும் என்று வெற்றிவேற்கை கருதுகின்றது.

ஒருவன் குடிப்பெருமையிலிருந்து தவறாமல், கடமை உணர்வோடு பொருள்தேட முயற்சி செய்வானாயின் அவனிடம் பொருள் தானே வந்து சேரும் (நீதி.நெ.வி.65) என்கிறது நீதிநெறிவிளக்கம். நற்குணமுடைய சான்றோர்கள் எக்குடியில் பிறந்தாலும் உயர்ந்தோராகவே கருதப்படுவர் (நீதி.வெ.1) என்று நீதிவெண்பா கூறுகின்றது.

வேதநாயகர், 'குடிகளியல்பு' என்னும் அதிகாரத்தில், குடிகள் மன்னனைத் தம் உடல் உழைப்பால் பாதுகாப்பர் (நீதி.நூ.அதி.4, பா.1); மன்னன் உயிர்போல்வான்; குடிகள் உடல் போன்றவர்; உயிருக்கு உடல் உழைத்துக் கொடுப்பது போல குடிகள் தங்களுடைய உடலாலுழைத்துத் தம்மைக் காக்கும் மன்னனைத் தாம் காத்தல் கடமையாகும் (பா.7) என்றெல்லாம் கூறியுள்ளார்.

திருவள்ளுவரும் வேதநாயகரும் குடிகளுக்கென்று தனி அதிகாரம் அமைத்துக் குடிகளின் இயல்புகளைக் குறிப்பிட்டுள்ளார்கள். பிற்கால நீதிநூலாசிரியர்கள் ஆங்காங்கே குடிகளின் இயல்பைப் பற்றி விளக்கியுள்ளார்கள். திருக்குறளும் நல்வழியும் நற்குடியில் பிறந்தோன் வறுமை வந்தாலும் தன் நிலையிலிருந்து மாறமாட்டான் என்கின்றன. வள்ளுவம், பிறந்தகுடி உயர்வு பெற ஒருவனுக்குப் பணிவு வேண்டும் என்று கூற, வெற்றிவேற்கை குடி உயர்வு பெறக் கல்வி வேண்டும் என்று கூறுகிறது. ஒருவன் குடிப்பெருமையில் இருந்து வழுவாமல் இருக்கவேண்டுமெனில், உடல் உழைப்பால் பொருள்தேடவேண்டும் என்று நீதிநெறி விளக்கம் கூறுகின்றது. வேதநாயகர், குடிகளை உடலுக்கும், மன்னனை உயிருக்கும் ஒப்புமைப்படுத்துகிறார்.

7.1.1. மானம்

நற்குடியில் பிறந்தவனுக்கு முதலில் வேண்டுவது மானம். “எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் மானமாகும்”[3] என்று விளக்கம் தருகிறார் பரிமேலழகர். ஒருவன் தன் மானம் குன்றும்படியாக வாழ்க்கையை நடத்தக்கூடாது; மானத்தோடு வாழ்பவன் தன்னிலையிலிருந்து தவறமாட்டான்; அவ்வாறு தவறினால் அவன் தலையிலிருந்து விழுந்த தாழ்வுற்ற மயிரினைப் போன்றவனாவான் (கு.964) என்கிறார் வள்ளுவர். மதியாதவரின் பின் சென்று ஒருவன் பணிந்து நிற்கக்கூடாது; அவ்வாறு நின்றால் அவனுக்கு இவ்வுலகில் புகழ் கிடைக்காது; தேவர் உலகத்திலும் இடம் கிடைக்காது (கு.966) என்று கூறுகிறது குறள். மேலும், மானம் அழிந்தபோது ஒருவன் தன் உடம்பைக் காத்து வாழ்வதால் பயனில்லை என்பதை வள்ளுவர்,

*“மருந்தோமற்று ஊன்ஓம்பும் வாழ்க்கை பெருந்தகைமை*
*பீடழிய வந்த இடத்து” (குறள். 968)*

என்ற குறட்பாவழி உணர்த்துகிறார். “மானம் மழிந்தபின் வாழாமை முன் இனிதே”[4] என்கிறது இனியவை நாற்பது. தன் உடம்பிலிருந்து மயிர் நீங்கினால் உயிர் வாழாத கவரிமானைப் போன்று மானமுடையோர் மானம் அழிய நேர்ந்தால் உயிர் நீப்பர் (கு.969) என்கிறது வள்ளுவம்.

“மானம் உயிரினும் சிறந்தது என்பது தமிழரின் துணிவு. ஒவ்வொருவரும் தனது நிலையிலிருந்து தாழ்வு வருமானால் உயிரைத் துறந்தாவது மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டும். மானங்கெடாமல் வாழ்வதற்கு வள்ளுவர் காட்டும் வழி மிகச் சிறந்ததாகும்”[5] என்கிறார் சாமி. சிதம்பரனார்.

அனைவரும் மானத்துடன் வாழவேண்டும். ஏனெனில், மானமுடையவரின் புகழை உலகத்தார் தொழுது ஏத்தி நிற்பார்கள் (கு.970) என்கிறார் வள்ளுவர்.

மானம் உடையோர் மானக்கேடு வரும்பொழுது மானத்தைக் காப்பதற்காக உயிரை விடுவார்கள் (மூது.6) என்று மூதுரையும் ஒருவன் வயிற்றை வளர்ப்பதற்காக

மானம் கெடுவதைவிட உயிரை விட்டுவிடுவதே சிறந்ததாகும் (நல்.14) என்று நல்வழியும் கூறுகின்றன. பிறரால் பழிக்கப்படாமல் மானத்தோடு வாழ்வதே மேலான செயலாகும் (அறநெறி.106) என்று அறநெறிச்சாரம் அறிவுறுத்துகிறது. இந்த உலகத்தில் பிறப்பன யாவும் இறத்தல் உறுதி; அதனால் ஒருவன் தான் வாழும் நாளில் மானத்தோடு வாழவேண்டும் என்று நீதிநெறிவிளக்கம் எடுத்துரைக்கிறது. மேலும், கற்புடைய பெண்டிர், முனிவர்கள், வீரர்கள் போன்றோர் எமன் தன்னை எதிர்த்து வந்தாலும் இறப்புக்கு அஞ்சாமல் தன்நிலையிலிருந்து மாறாமல் மானத்தைக் காப்பர் என்கிறது இந்நூல்.

விவேகசிந்தாமணி, மானமுடையோரைக் கவரிமானுக்கும் மானம் அற்றவரைக் கழுதைக்கும் ஒப்புமைப்படுத்துகிறது. அதாவது, தன்னுடைய உடம்பில் இருந்து ஒரு மயிர் கீழே விழுந்தாலும் உயிர் வாழாத கவரிமானைப் போன்றோர் மானமுடையோர். மானம் இல்லாதவர் பிணங்களைப்போல் ஈனம் அடைந்த கழுதைக்கு நிகராக விளங்குவர் (வி.சி.தொ.I பா.49) என்கிறது. நீதிவெண்பா,

*"தலைமயிரும் கூர்உகிரும் வெண்பல்லும் தத்தம்*
*நிலையுடைய மானவரும் நிற்கும்" (நீதி.வெ.28)*

என்ற வரிகளில் மயிர், நகம், பல் போன்றவை தன் நிலையிலிருக்கும் வரைதான் சிறப்பு; அது போன்று மானத்துடன் வாழ விரும்புவோர் தமது நிலையிலிருந்து மாறுதல் கூடாது எனக் கூறுகிறது.

வேதநாயகர், மானம் அழியாமல் பிறருக்குத் தொண்டு செய்து வாழ்வதே சிறப்பு என்கிறார். அதாவது, கைக்கூலி வாங்குபவனுக்கு மதிப்பின்மை, நடுக்கம், ஊர்ப்பகை, நீங்காத்துன்பம் போன்றவை இம்மையில் பெருகும்; மறுமையில் இருளுலகத் துன்பம் கிடைக்கும்; அதனால் கைக்கூலி வாங்குவதை விட்டுப் பலரை அண்டி மானம் அழியாமல் தொண்டு செய்து வாழ்வதே சிறந்தது (நீதி.நூ.அதி.20 பா.5) என்று அறிவுறுத்துகிறார்.

நீதிநூல்கள், ஒருவன் மானம் நீங்குமானால் உயிரை விடுவதே நன்று என்றும் சமுதாயத்தில் வாழும் ஒவ்வொரு தனிமனிதனும் மானத்தோடு வாழ வேண்டுமெனில்

அவர்கள் தன்நிலையிலிருந்து தாழக்கூடாது என்றும் வலியுறுத்துகின்றன. விவேகசிந்தாமணியும் திருக்குறளும் மானமுடையோரைக் கவரிமானுக்கு நிகராகக் கருதுகின்றன.

### 7.1.2. பெருமை

மனிதன் தன் வாழ்நாளில் நற்செயல்களைச் செய்வதால் அடையும் புகழே பெருமை எனப்படும். ஒருவன் பெருமை அடைவதற்கு அடிப்படை அவனுடைய பண்புநலன்களே. இப்பண்புகள் எவையெவை என வள்ளுவர் பட்டியலிடுகின்றார். பிறப்பால் அனைவரும் சமம், செய்யும் தொழிலால் மட்டுமே வேற்றுமை உண்டு என்று குறிப்பிடுகின்றார் வள்ளுவர். இதனை,

*"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்; சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்" (குறள். 972)*

என்ற குறட்பாவின் மூலம் அறியலாம். இதன்மூலம் வள்ளுவர், சாதி வேறுபாடற்ற சமுதாயத்தை உருவாக்க விரும்பினார் என்பதை அறியமுடிகிறது.

"அதிகாரமுள்ளது; அதிகாரமில்லாதது; வருமானம் மிக்கது; வருமானம் குறைந்தது; நிழலிற் செய்வது; வெயிலிற் செய்வது; மனவுழைப்புள்ளது; உடலுழைப்புள்ளது; ஒழுக்கக்கேட்டிற்கு இடமுள்ளது; ஒழுக்கக்கேட்டிற்கு இடமில்லாதது; பிறரை இன்புறுத்துவது பிறரை இன்புறுத்தாதது; நல்லது தீயது"[6] என்று மக்கள் செய்யும் தொழில் வேறுபாடுகளை விளக்குகிறார் தேவநேயப் பாவாணர்.

கற்புடைய மகளிரைப் போல ஒருவன் தன்னுடைய பெருமையினைக் காத்துக்கொள்ள வேண்டும் (கு.974); ஏனெனில், பெருமையானது ஒருவனைப் பணிந்து நடக்கவும் (கு.978); செருக்கு இல்லாமல் வாழவும் வழிசெய்யும் (கு.979); ஒரு செயலையும் செய்வதற்குரிய நெறியில் செய்துமுடிக்க வல்லவரே பெருமை உடையவராவார் என்கிறார் வள்ளுவர். மேலும், மேன்மைப் பண்பு இல்லாதவர் மேல் நிலையில் இருந்தாலும் மேலானவர் இல்லை (கு.973) என்கிறது குறட்பா. சங்க

இலக்கியங்களில் பார்ப்பனர்களே பலதொழில்களைச் செய்து இருக்கின்றார்கள் என்பதைக் கீழ்வரும் அகநானூறு பாடல் வரிகள் விளக்குகின்றன :

*"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த*
*வளைகளைந் தொழித்த கொழுந்தி என்ன" (அகம். பா.24)*

வேளாளப் பார்ப்பனர் சங்குத்தொழில் செய்ததாக இந்நூல் விளக்குகிறது. தொழிலால் வேற்றுமை காண்பது சங்க காலந்தொட்டு இருந்து வருகிறது என்பதை அறியமுடிகிறது.

செல்வத்தினால் சிறியவர்களாக இருந்தாலும் அவர்தம் செயலினால் உயர்ந்தவர் தாழ்ந்தவர் எனக் கருதப்படுவார் (கொ.வே.57) என்று கூறுகிறது கொன்றைவேந்தன். அருங்கலச்செப்பு, ஒருவன் அறவழியில் நின்றால் அவனை யாரும் இகழமாட்டார்கள்; பிறந்தகுடி, குலம், வலிமை, செல்வம், அழகு, புகழ், தவம், அறிவு ஆகிய எட்டும் தன்னிடம் மிகுந்திருப்பதாக எண்ணி ஒருவன் செருக்கடையக் கூடாது; தாழ்ந்த குலத்தவன் ஆயினும் நற்காட்சி கொண்டவனால் அவன் தலைமகன் என்று உணரப்படுவான் என்பதை,

*"பறையன் மகனெனினும் காட்சி யுடையா*
*னிறைவ னெனவுணரற் பாற்று" (அருங்.36)*

என்ற பாடல் வரிகள் விளக்குகிறது. பிறர்படும் துன்பத்தைத் தமது துன்பமாகக் கருதும் உயர்ந்தோர் பெருமையுடையவராவார் (நன்.10) என்று நன்னெறி எடுத்துரைக்கிறது. நீதிவெண்பா, பணிவுடையோரின் பெருமையும் பணிவு இல்லாதவரின் சிறுமையும் அவரவர் செயலால் அறியலாம் என்கிறது. அதாவது, தாமரை, பொன், முத்து, சாமரை, பால், தேன், பட்டு, புனுகு, சவ்வாது போன்றவை எங்குப் பிறந்தாலும் பெருமைக்கு உரியனவாகும். அதுபோல் பெருமைமிக்க நல்லோர் எக்குடியில் பிறந்தாலும் மேம்பட்டவராகவே போற்றப்படுவார்கள் (நீதி.வெ.1) புலிநகம், கவரிமான், யானைத்தந்தம் போன்றவை பிறந்த இடத்தைவிட்டு வேறு எங்குச் சென்றாலும் பெருமை அடைவதைப்போல உயர்வுடையோரும் பெருமை அடைவர் (பா.2) என்கிறது நீதிவெண்பா.

பெருமையுடைய மக்கள் எவ்வளவு துன்பம் வந்தாலும் தன் நிலையிலிருந்து தாழ்வடையமாட்டார். தமக்குத் துன்பம் செய்தவருக்கும் பெரியோர் நன்மை செய்வதையே கடமையாகக் கொண்டவர்; மக்கள் எல்லாரும் தாய் வயிற்றினின்றே தோன்றுதலால் பிறப்பு முறையில் எல்லோரும் உடன் பிறந்தாரேயாவார். பிறப்பால் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்று கூறிக்கொள்வது வெறும் பொய்யாகும் (நீதி.நூ.அதி.13 பா.5) என்று கூறுகிறார் வேதநாயகர்.

செய்கின்ற தொழிலால் மட்டுமே மக்களுள் வேற்றுமை காணப்படுகிறது என்று வள்ளுவரும் வேதநாயகரும் வலியுறுத்துகின்றனர். பொதுவாகப் பிறர் துன்பத்தைத் தன் துன்பமாகக் கருதி அனைவரும் ஒன்றுபட்ட சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்று நீதிநூல்கள் நவில்கின்றன.

### 7.1.3. சான்றாண்மை

சான்றாண்மை என்பதற்குப் “பல குணங்களானும் நிறைந்து அவற்றை ஆள்தல்”[7] என்று பரிமேலழகர் விளக்கம் தருகிறார். வள்ளுவர், சான்றாண்மையுடன் ஒழுகுவார்க்கு நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பாயிருக்கும் (கு.981); ஒருவருடைய நற்பண்புகளே அவனைச் சான்றோன் ஆக்கும் (கு.982) என்று நவில்கிறார். “உயிர் நீங்கினும் சான்றாண்மை நீங்காதிருப்பது தூயவர் செயல்கள்”[8] என்கிறது திரிகடுகம்.

அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்னும் ஐந்து பண்புகளும் சால்பு என்னும் தூணுக்கு அடிப்படையாகும் (கு.983); இப்பண்புகளை உடைய ஒருவன் துன்பம் செய்தாலும் அவனுக்கு நன்மை செய்யவோரே சான்றோர் (கு.986) என்றும் சான்றோர் பகைவரைப் பகைமையிலிருந்து மாற்றுகின்ற கருவியாவர் (கு.985) என்றும் கூறுகிறார் வள்ளுவர். மேலும், சால்பு என்னும் வலிமை பெற்றிருப்பவனுக்கு வறுமை இழிவானதன்று (கு.987); சான்றாண்மை என்னும் பண்பானது நீங்கினால் நிலவுலகமும் தன் பாரத்தைத் தாங்காமல் போய்விடும் (கு.990) என்கிறார்.

சான்றோர் இனத்திலே ஒருவன் கூடியிருத்தல் வேண்டும் (ஆத்.45) என்று அறிவுறுத்துகிறது ஆத்திசூடி. 'சான்றோர் என்கை ஈன்றோர்க்கு அழகு' (கொ.வே.27) என்று கொன்றைவேந்தன் கூறுகிறது. சான்றோர் இல்லாத ஊரிலே வாழ்வதைக் காட்டிலும் தேனைத் தேடுகின்ற குறவர் நாட்டில் வாழ்வது நன்று (வெ.வே.64) என்று வெற்றி வேற்கை குறிப்பிடுகிறது. சான்றோர்கள் தம் நிலையிலிருந்து தாழக்கூடாது (நீதி.நெ.வி.96) என்று நீதிநெறிவிளக்கமும் சான்றோர்கள் கூடிய அவையில் கல்லாதவர்கள் சேர்ந்தாலும் அவர்களைக் கற்றவர்போல் ஏற்றுக்கொள்வார்கள் (வி.சி.தொ.**II** பா.26) என்று விவேகசிந்தாமணியும் கூறுகின்றன.

ஒரு மனிதன் அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம் வாய்மை என்னும் ஐந்து குணங்களைப் பெற்றுத் திகழவேண்டும் என வள்ளுவர் வலியுறுத்துவதன் நோக்கம் அன்பு என்னும் பண்பினால் பிறரைத் தன் வயப்படுத்தமுடியும். நாண் என்னும் பண்புடையவன் ஆய்ந்து செயல்களைச் செய்வான். ஒப்புரவுடையவன் தன்னுடன் வாழ்பவரின் நிலைமையை அறிந்து உதவி செய்பவனாகத் திகழ்வான். கண்ணோட்ட மிக்கவன் பிறர் தனக்குத் தீயவற்றைச் செய்தாலும் அதை நாடி இரக்கம்கொண்டு விளங்குவான். வாய்மை பேசுபவன் தீமைதரும் சொற்களைச் சொல்லமாட்டான் என்பதாகும். எனவேதான் இத்தகைய பண்புகளையுடைய சான்றோராகக் குடிமக்கள் திகழவேண்டும் என்பதே வள்ளுவரின் அவா ஆகும். சான்றாண்மையை விளக்க வந்த பிற்காலநீதிநூல்கள் சான்றோருடன் கூடிவாழ்தலால் ஏற்படும் நன்மையை மட்டும் பேசுகின்றன. சான்றோர் இல்லாத ஊரில் குடியிருக்கக் கூடாது என்று வெற்றிவேற்கை அறிவுறுத்துவதன்வழிச் சான்றாண்மையின் சிறப்பை உணரமுடிகிறது.

### 7.1.4. பண்புடைமை

ஒருவன் உயர்ந்த குணத்தைப் பெற்று விளங்கினாலும் அவன் மக்களுடன் பழகும் முறையிலும் பங்குகொள்ளும் முறையிலும் அவனுடைய பண்பு வெளிப்படுகிறது. "யாவர் மாட்டும் எளிய செவ்வியராதல் அரிதாய பண்புடைமை என்னும் நன்னெறியினை எய்தல் எளிது என்று சொல்வர் நூலோர்"[9] என்று பரிமேலழகர் பண்புடைமைக்கு விளக்கம் தருகிறார். ஒருவன் எப்பொழுதும் நற்பண்பு

கொண்டவனாக வாழவேண்டும் (கு.991); அன்புடைமை, ஆன்ற குடிப்பிறத்தல் இந்த இரண்டும் பண்புடையவராக வாழ்வதற்குரிய நல்ல வழிகளாகும் (கு.992); பிறருடைய இயல்பை அறிந்து நடக்கும் ஒருவன் பகைவரிடமும் நற்பண்பு பாராட்டுபவன் ஆவான் (கு.995) என்கிறார் வள்ளுவர்.

“பண்புடைமை என்னும் நற்குணம் உலகில் ஒருவனுக்குப் பகையை முற்றிலும் விலக்கி நட்புச் சமநிலையை உண்டாக்கிவிடும். உயர்ந்தோர், தாழ்ந்தோர், கற்றோர், கல்லாதோர், பெரியோர், சிறியோர் முதலிய எத்தகையவரிடமும் பண்பு குறையாமல் நடந்து கொள்ளுதலே உயர்ந்த சிறப்பைத்தரும்”[10] என்று பண்புடைமையின் சிறப்பு விளக்கப்படுகிறது. பண்புடையவர் இல்லையென்றால் இம்மண்ணுலகம் அழிந்து போகும்; நற்பண்பு இல்லாதவர் மரத்திற்குச் சமமாவார் என்பதை வள்ளுவர்,

*“அரம்போலும் கூர்மைய ரேனும் மரம்போல்வர்*
*மக்கட்பண்பு இல்லா தவர்” (குறள். 997)*

என்கிறார். மேலும், பண்போடு பழகாதவனை இந்த உலகம் புறக்கணித்துவிடும் (கு.996); அவனுக்கு ஒளியுள்ள பகல் காலமும் இருண்ட காலமாகத் தோன்றும் (கு.999); அத்தகையோனிடம் உள்ள பெருஞ் செல்வமானது, நல்லபால் திரிந்து விசமானது போன்றதாகும் (கு.1000) என்கிறார் வள்ளுவர்.

பண்புடைய நல்லவர்களைச் சேர்ந்தால் கெட்டவர்களும் பயனடைவார்கள் (மூது.10) என்று மூதுரையும், நற்பண்புடையவர் பிறர் துன்பத்தைத் தம் துன்பமாக எண்ணுவர் (நன்.20) என்று நன்னெறியும் குறிப்பிடுகின்றன. அறநெறிச்சாரம், ஐயுறுதல், ஆசை, வெறுப்பு, மயக்க உணர்வு முதலியவை இல்லாதிருத்தல், பழி இல்லாதிருத்தல்,புலன்களை நன்னெறிக்கண் செயல்படுத்தல், அறநூலை விளக்கிச் சொல்லுதல் போன்ற எட்டுவகைக் குணங்களும் பண்புடையவர்களுக்கு உரிய உறுப்பாகும் (அறநெறி.68) என்று கூறுகிறது. நீதிநெறிவிளக்கம், நற்பண்புடைய பெரியோர்கள் கற்பக மரத்திற்கு ஒப்பாவதைக் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*“பலமா நலங்கனிந்த பண்புடையார் அன்றே*
*சலியாத கற்பக தரு” (நீதி.நெ.வி.37 : 3 - 4)*

அதாவது, பெரியோர் தம் கண்பார்வையாலும் புன்சிரிப்பாலும் பேசும் இனிய மொழியாலும் வாய்மை கடைப்பிடிப்பதாலும் ஈகை செய்வதாலும் கற்பக மரம் மொட்டாகவும், மலராகவும், காயாகவும், பழமாகவும் இருந்து நன்மை தருவது போல நன்மையைத் தருகின்றனர் எனச் சுட்டுகிறது.

நற்பண்பு உடைய நல்லோர் அருளும், ஞானமும் எய்தி எல்லார்க்கும் உதவியாக இருந்து முக்தி அடைவர் (வி.சி.தொ.I.பா.100) என்று குறிப்பிடுகின்றது விவேகசிந்தாமணி. வேதநாயகர், கோடை வெயிலையும் தாங்கிக் குளிர்ந்த நிழலைத்தரும் ஆலமரம் போல, நற்பண்புடையவர் பொருளிழப்புத் தனக்கு மிகுதியாகத் தோன்றினாலும் பிறர்க்கு நன்மை செய்து இன்புறுவர் (நீதி.நூ.தி.38 பா.20) என்று கூறுகிறார்.

சமுதாயத்தில் வாழும் ஒவ்வொருவரும் தீய ஒழுக்கங்களை விலக்கி நல்லியல்புகளைப் பெற்றுப் பண்புடையவர்களாக வாழவேண்டும் என்று நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன. ஒருவன் பண்புடையவன் ஆவதற்கு அன்பும் ஆன்ற குடிப்பிறப்பும் அடிப்படை என்று வள்ளுவம் கூறுகிறது. ‘பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்’ என்று சமத்துவம் பேசிப் பெருமைக்கு இலக்கணம் வகுத்த வள்ளுவர் ஒருவனது பண்புடைமைக்குக் குடிப்பிறப்பைக் காரணமாக்குவது வியப்பளிப்பதாய் உள்ளது.

### 7.1.5. நன்றியில் செல்வம்

ஒருவன் தேடியப்பொருளைச் சேர்த்து வைத்து எந்தவித நற்காரியங்களுக்கும் பயன்படுத்தாமல் இருப்பது ‘நன்றியில் செல்வம்’ எனப்படும். ஏனெனில், அப்பொருள் தேடியவனுக்கும் அவனைச் சுற்றியுள்ள மக்களுக்கும் பயன்படாமல் வீணாவதால் அப்பொருளானது அதனுடைய பயனை இழந்துவிடுகிறது. ஆகையால், ஒருவன் பெரும் பொருளைச் சேர்த்து வைப்பதால் எந்தப் பயனும் இல்லை என்கிறார் வள்ளுவர்.

‘ஈட்டி எட்டின மட்டும் பாயும்; பணம் பாதாளம் வரை பாயும்’ என்பது முதுமொழி. வாழ்க்கைக்கு வேண்டிய அவசியத் தேவைகளை நிறைவு செய்வது பொருளாகும்.

அத்தகைய பொருளைப் பிறருக்குக் கொடுக்காமல் வாழும் ஒருவனுக்குச் சிறப்பில்லாத பிறவி உண்டு என்கிறார். தேடியப் பொருளைச் சேர்த்து வைப்பதைக் குறிக்கோளாகக் கொண்டவர் இந்நிலத்திற்குப் பாரமாவர் (கு.1002) என்றும் பிறர்க்கு உதவிசெய்து வாழாதவனுக்கு எஞ்சி நிற்பது இவ்வுலகில் எதுவும் இல்லை (கு.1004) என்றும் வள்ளுவர் கருதுகின்றார். எனவே ஒருவன் தான் தேடியச் செல்வத்தைக் கொண்டு தானும் இன்புற்றுப் பிறரையும் இன்புறுத்த வேண்டும் என்பது வள்ளுவர் அவா. கேடு தரும் செல்வத்தை நஞ்சுக்கு ஒப்பாக வள்ளுவர் எண்ணுகின்றார். பிறருக்கு உதவாதவன் செல்வமானது நடுவூரிலே நச்சுமரம் பழுத்திருப்பதைப் போன்றதாகும் (கு.1008) என்கிறது வள்ளுவம். ஒருவன் ஈட்டிய பொருளை அறவழியில் பயன் படுத்தாமல் சேர்த்து வைத்தால் அப்பொருளைப் பிறர் நுகர்வர் என்பதை,

*"அன்புஒரீஇத் தன்செற்று அறம்நோக்காது ஈட்டிய*
*ஒண்பொருள் கொள்வார் பிறர்" (குறள். 1009)*

என்ற குறட்பாவழி அறியலாம். "சட்டத்தை மீறிக் கள்ளக் கையெழுத்திட்டு வரி ஏய்த்து வஞ்சனை செய்வோர் தம் வழக்குகள் வழக்கு மன்றங்களில் எல்லாம் மலிந்து கிடக்கின்றன. இவற்றுக்கு வழக்கு மன்றங்களில் தண்டனையும் உண்டு. மக்கள் மன்றங்களில் தூற்றுதலும் உண்டு. தீயவழிகளில் ஈட்டிய பொருளைப் பலர் அறிய நுகரவும் முடியாது. இதனால் கள்ளப்பணமும் கறுப்புப்பணமும் குவிகின்றன. இவை அரசின் பொருள் வாழ்வையும் மக்களின் பொருள் வாழ்வையும் சீரழிக்கின்றன. இப்பேச்சு இன்று எங்கும் பேசப்படுகின்றது. நல்வழியில் ஈட்டிய பணமே வெள்ளைப்பணம், தூயபணம். தீயபணத்தை ஒழிக்க அரசுகள் இன்று தீவிரமாக முயலுகின்றன. இது வந்தபின் காத்தல்; வள்ளுவர் வழங்கும் அறிவுரை வருமுன் காத்தல்"[11] என்று முருகரத்தனம் குறிப்பிடுகின்றார்.

பாடுபட்டுத் தேடியப் பொருளைப் புதைத்து வைக்காமல் உயிரானது உடம்பை விட்டுப் போகும் முன்பு பிறருக்குக் கொடுத்து உதவி செய்யவேண்டும் (நல்.22) என்று நல்வழி கூறுகிறது. அறநெறிச்சாரம், உப்பு சேராத உணவை உப்பு குன்றின் மேல் உட்கார்ந்து உண்டாலும் பயன்படாது; அதுபோல, உடம்பையும் செல்வத்தையும்

பெற்றவன் பிறருக்குக் கொடுக்காத பொழுது அப்பொருளால் ஒரு பயனும் இல்லை (அறநெறி.169) என்கிறது. ஒருவன் செல்வம் வேண்டும் என நாள்தோறும் முயற்சி செய்து வந்தால் கடவுள் அவனுக்கு அத்தகைய அரிய செல்வத்தைத் தந்தருள்வான் (வி.சி.தொ.II பா.59) என விவேகசிந்தாமணி குறிப்பிடுகின்றது. தீவினை செய்யாமலும் பிறனுடைய பொருளை விரும்பாமலும் உள்ளவரிடத்தில் செல்வமானது தானே வந்து நிற்கும் (நீதி.வெ.92) என்று நீதிவெண்பா கூறுகிறது.

வேதநாயகர், வேம்பு தேனையும், வெயில் குளிரையும், பாம்பு சாவா மருந்தினையும் தராது. அதுபோல் கீழோர் பொன்னைச் சுமக்கும் பொதியாளர் ஆவதல்லாமல் வாடி வருந்தும் ஏழைகட்கு மனம் மகிழ்ந்து எதுவும் கொடுக்க மாட்டார் (நீதி.நூ.அதி.23 பா.6) என்கிறார். செல்வத்தின் பயன் பகுத்துண்டல் ஆகும். இந்த உண்மையை அறியாமல் பணத்தைத் தேடிக் காத்திருப்பது, நச்சு மரத்தைக் காப்பது போன்றதாகும் (பா.8); ஈட்டும் செல்வம் அனைத்தும் தமக்கே உரியது என்று நினைத்துச் சுமப்பவர் சுமைதாங்கி ஆவார்; அச்செல்வத்தைக் கொடுங்கோலர் தன்னுடையது என்பர்; கள்வர்கள் எமது என்பர்; உறவினர்கள் ஒருவரோடு ஒருவர் உமது, எமது என்று வழக்காடுவர் (பா.9).எனவே செல்வத்தைச் சேர்த்து வைக்காமல் பிறர்க்குக் கொடுத்து உண்டு வாழவேண்டும் என்று வேதநாயகர் வலியுறுத்துகின்றார்.

ஒருவன் தேடிய செல்வத்தை அனைவருக்கும் பயன்படும்படி உதவி வாழவேண்டும். இல்லையெனில், அது பயனற்ற செல்வம் என்று நீதிநூல்கள் விளக்கியுள்ளன.

### 7.1.6. நாணுடைமை

சான்றாண்மைக் குணங்களைப் பெற்ற ஒருவன் தமக்கு ஒவ்வாத செயல்களுக்கு நாணுதல் வேண்டும் என்பதை உணர்த்தவே, ‘நாணுடைமை’ என்ற அதிகாரத்தை அமைத்துள்ளார் வள்ளுவர். ஒருவன் தகாத செயல் காரணமாக நாணுவதே நாணமாகும். இது பெண்ணின் நாணுடைமையன்று (கு.1011) எனக் குறிப்பிடுகிறது வள்ளுவம். சால்பு என்பது நாணம் என்று சொல்லப்படும் நல்ல தன்மையை இருப்பிடமாகக் கொண்டது (கு.1013); மக்களுக்குச் சிறப்பு தருவதும்

நாணுடைமையே ஆகும் (கு.1012); அதனால் ஒருவன் தன் பழிக்கு மட்டுமின்றிப் பிறர் பழிக்கும் நாணுதல்வேண்டும் (கு.1015); அத்தகைய நாணுடைமையே சான்றோர்க்கு அணிகலம் (கு.1014) ஆகும். நாணத்தைக் காப்போர் உயிரையும் விடுவர் (கு.1017) என்றும் மனதில் நாணம் இல்லாதவர் மரப்பாவை போன்றவர் (கு.1020) என்றும் வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

நாணம் கொண்டிருப்பவளே பெண்ணாவாள் (அறநெறி.159) என்று அறிநெறிச்சாரமும் கற்பில்லாத மகளிர் நாணத்தை விரும்பமாட்டார் (நீதி.நெ.வி.84) என்று நீதிநெறிவிளக்கமும் கூறுகின்றன. ‘அச்சமும் நாணமும் அறிவில்லோர்க்கு இல்லை’ (வெ.வே.46) என்று வெற்றிவேற்கையும் ஒருவனுக்கு வறுமை வந்தால் அவையோர் முன்பு பேச நாணம் உண்டாகும் (வி.சி.தொ.I பா.23) என விவேகசிந்தாமணியும் கூறுகின்றன.

வேதநாயகர், ஒருவன் செல்வச் செருக்கு கொள்ளக்கூடாது. அதாவது மாணிக்கம், வைரம், நீலம் முதலிய கற்களைச் செல்வர்கள் மணிகள் எனச் சேர்ப்பர். செங்கல், வெள்ளைக்கல், கருங்கல் ஆகிய இவற்றையும் சிலர் சேர்த்து வைத்திருப்பர். இருவர் கற்களையும் தராசிலிட்டு நிறுத்துப் பார்க்குமிடத்து செங்கல் போன்றவற்றின் எடை மிகுதியாக இருக்கும். இப்பொருள்கள் எல்லாம் எல்லா இடங்களிலும் கிடைக்கும். அதுமட்டுமன்று எதிர்ப்போரையும் அழிக்கும். அதனால் செல்வர்கள் நாணமுறல் வேண்டும் (நீதி.நூ.அதி.29, பா.2) என்கிறார்.

பழிக்கு நாணுதல் இருபாலருக்கும் பொது; அதிலும் சான்றோர்க்கு இருக்க வேண்டிய அடிப்படைப் பண்பு என வள்ளுவர் கோடிட்டுக் காட்டுகிறார். ஆயின் நீதிநெறி விளக்கம், பெண்களுக்கே உரிய பண்பாக நாணத்தைக் காட்டுகின்றது. வெற்றிவேற்கை, அறிவில்லாதவர்க்கு நாணம் இருக்காது என்றும் விவேகசிந்தாமணி, வறுமை வந்தால் நாணம் கொண்டு அவையோர்முன் சிலரால் பேசமுடியாது என்றும் கூறுகின்றன. வேதநாயகர், செல்வர்க்கு நாணுடைமை வேண்டும் என்கிறார்.

### 7.1.7. உழவு

மானிடராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் உயிர்வாழ தேவையான உணவை உழவினால் பெறமுடியும். அதை உணர்ந்த வள்ளுவர் 'உழவு' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். உழவுத் தொழில் மக்கள் உண்டு உயிருடன் வாழ அடிப்படை. எனவேதான் உழவுத்தொழில் செய்து வாழ்கின்றவரை உலகத்தார்க்கு அச்சாணி போன்றவராக (கு.1032) கருதுகிறார் வள்ளுவர். மேலும், உழவு செய்து கிடைத்ததை உண்டு வாழ்கின்றவரே உரிமையோடு வாழ்கின்றவர் (கு.1033); மற்றவர் அவ்வுழவரிடம் தாம் உயிர் வாழ உணவுப் பொருள் பெறவேண்டிப் பின் செல்பவர் என்பதை,

*"உழுதுஉண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றுஎல்லாம்*
*தொழுதுஉண்டு பின்செல் பவர்" (குறள்.1033)*

என்ற குறட்பாவழி அறியலாம்.

"இயற்கையான வாழ்வு அல்லது சுதந்திர வாழ்வு நடத்துகிறவன் விவசாயி. மண்ணோடு உறவாடுகின்ற அவன் உழைத்துப் பயனை நுகர்கிறான். அதாவது, அவனுடைய பிழைப்பு அவனுடைய உழைப்பினால் நடைபெறுகிறது. அதனால் யாருடைய சலுகையையோ தயவையோ அவன் எதிர்பார்க்கவில்லை. அதனால் அவன் சுதந்திர புருஷனாயிருக்கிறான். அவனுடைய வாழ்வுதான் உண்மையான வாழ்வு. 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்ற குறளின் ஓரடியை நாம் நுணுகி ஆராய்ச்சி செய்து பார்த்தோமானால் சுதந்திர வாழ்க்கைக்கும் உழவுக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பு இருக்கிறதென்பது நன்கு தெரியும்"[12] என்று உழவுத்தொழில் செய்பவரின் பெருமை விளக்கப்படுகிறது.

உழவர்கள் பல அரசர்களின் குடைநிழல்களையும் தன் குடைக்கீழ் அடக்கிக் காணவல்லவர் (கு.1034) என்றும் அவர்கள் பிறரிடம் சென்று இரக்கமாட்டார்கள் (கு.1035) என்றும் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். "உழவர் வாழ்க்கை மிகமிகச் சீர்கெட்டுள்ள இந்தக் காலத்திலும் பிறர்க்கு உதவும் பண்பை அவர்களிடம் காணலாம். அறுவடை காலத்தில் நெல்லையோ மற்ற பொருளையோ இரண்டு கையாலும் வாரி வழங்குகின்றார்கள். கூழுக்குத் திண்டாடும் காலத்திலும் தாம்

குடிக்கும் கூழில் ஒரு பகுதியைக் கேட்பவர்களுக்குக் கொடுத்துப் பசி தீர்க்கின்றார்கள். எதிர்காலத்தைப் பற்றிக் கவலை இல்லாமல் சேர்த்து வைக்கும் சிக்கனம் இல்லாமல் உதவி செய்யும் தன்மை இன்னும் அவர்களிடம் உள்ளது. அதனால் கைத்தொழில் செய்து வாழும் தொழிலாளர் உலகமே இரத்தலை ஒழிக்கவல்லது என்பது திருவள்ளுவர் கருத்தாகும்”[13] என்கிறார் மு.வரதராசனார்.

உழவர்கள் கைத்தொழில் செய்யாமல் முடங்கியிருந்தால் எல்லாப் பற்றையும் விட்டொழித்த துறவிகளுக்கும் வாழ்வு இல்லை (கு.1036) என்கிறார் வள்ளுவர். ஏர் உழுதலைவிட எரு இடுதல் மிகவும் நன்று; பிறகு களைகள் முளைத்தால் அவற்றை நீக்கி நீர்பாய்ச்சி காத்தல் வேண்டும் (கு.1038) என்றும் நிலத்திற்கு உரியவன் நிலத்தைச் சென்று பார்க்கவேண்டும் (கு.1039) என்றும் வள்ளுவம் வலியுறுத்துகிறது. சோம்பி இருப்பவனைக் கண்டால் நிலமகள் சிரிப்பாள் (கு.1040) என்கிறது குறட்பா.

ஒரு நாடு வளம் பெறவும் முன்னேற்றம் பெறவும் இன்றியமையாதது உழவுத் தொழிலாகும்; இத்தகைய உழவுத்தொழிலைப் பற்றி ஆத்திசூடி, ‘பூமி திருத்தி உண்’ (ஆத்.82); ‘நெற்பயிர் விளை’ (ஆத்.72); ‘பருவத்தே பயிர் செய்’ (பா.22) என்று குறிப்பிடுகின்றது.

கொன்றைவேந்தன், ‘சீரைத்தேடின் ஏரைத்தேடு’ (கொ.வே.29) ‘தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது’. (பா.46) ‘மேழிச் செல்வம் கோழைப்படாது’ (பா.77) என்பதன்மூலம் ஒருவன் உன்னதமான பாதையை வகுத்து உயர்வு பெற்று வாழ்வதற்கு உழவுத்தொழிலின் தேவையைச் சுட்டுகிறது. ஒருவன் உழுது பயிர்செய்து அதனால் கிடைக்கும் உணவை உண்டு வாழ்வதே சிறந்ததாகும் (நல்.12) என்று நல்வழி கூறுகிறது. ‘உழவர்க்கழகிங் குழுதூண் விரும்பல்’ (வெ.வே.7) ‘வித்து மேரு முளவாயிருப்ப எய்த்தங் இருக்கு மேழையும் பதரே’ என்று வெற்றிவேற்கை கூறுகின்றது. விவேகசிந்தாமணி, உழவர் உழுதலால் விளையும் பயனைக் கூறுகிறது. உழவர்கள் உழவு செய்வதால் மழை தவறாது பெய்யும்; திருமகள் வந்து சேர்வாள்; உலகத்தில் அந்தணரால் செய்யப்படும் வேள்வி எங்கும் நிலவும்; கலைகள் ஓங்கி நிற்கும் (வி.சி.தொ.**II** பா.92) என்று கூறுகிறது.

இவ்வுலகில் செய்யப்படும் தொழில்களில் உழவுத்தொழிலே சிறந்தது; அதனால் உழுது பயிர் செய்து வாழும் வாழ்க்கையே உயர்வானதாகும் என்று வள்ளுவர் கருதுகிறார். உழவுத்தொழில் செய்யும் முறையும் அதன் பயனையும் பற்றி வள்ளுவர் மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். ஔவையார் தாம் படைத்த அருந்தமிழ் நூல்களில் உழுது பயிர் செய்து உழைத்து வாழும் உயரிய வாழ்வை உலகினருக்கு உணர்த்தியுள்ளார். ஏனெனில், இவ்வுலகில் வாழும் ஒவ்வொரு மனிதனுக்கும் தேவையான உணவுப் பொருளை உழவனால் மட்டுமே உற்பத்தி செய்யமுடியும் என்பது உண்மையாகும். மேலும், அக்காலத்தில் உழவுத் தொழிலுக்கிருந்த முக்கியத்துவம் வேறு எந்தத் தொழிலுக்கும் இல்லை என்றே கூறலாம். ஏனெனில், எந்தத் தொழில் செய்பவனுக்கும் அடிப்படைத் தேவை உணவாகும்.

நாட்டில் விதைக்காமல் தரிசாகக் கிடக்கும் நிலங்கள் அதிகமாகும். அத்தகைய நிலங்களைத் திருத்திப் பயிரிடல் வேண்டும் என்றும் பயிர்களை உரிய பருவங்களில் பயிரிடல் வேண்டும் என்றும் ஔவையார் அறிவுறுத்துவதை அறிய முடிகிறது.

இந்த உலகில் வாழும் ஒவ்வொருவருக்கும் மூன்று தேவைகள் அடிப்படை. அவை உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம் ஆகும். இம்மூன்றிலும் முதலிடம் பெறுவது உணவாகும். ஏனெனில், உணவில்லாமல் எந்த உயிரும் நிலைத்து வாழமுடியாது. உடை என்பது மானத்தைக் காப்பது. அதைவிட தன் வயிறு நிறைந்தால்தான் ஒருவன் உயிர் வாழமுடியும். அந்த அடிப்படையிலும் உழவிற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருக்கலாம்.

### 7.1.8. நல்குரவு

ஒருவன் எந்தத் தொழிலையும் செய்யாமல் சோம்பி இருப்பதால் பொருள் அற்று வறுமைக்கு ஆட்பட்டு இருக்கின்றான் என்பதைக் கண்ட வள்ளுவர் ‘நல்குரவு’ என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். பரிமேலழகர், “அதாவது நுகரப்படுவன யாவும் இல்லாமை”[14] என்று விளக்கம் தருகிறார்.

வறுமையைப் போன்ற கொடுமையான செயல் வேறில்லை என்பதை ஆணித்தரமாகத் தம் குறட்பாக்களின் வழி உணர்த்துகின்றார் வள்ளுவர். அதாவது, வறுமை என்னும் பாவி ஒருவனை நெருங்கினால் அவனுக்கு மறுமையின்பமும் இம்மையின்பமும் கிடைக்காது (கு.1042); அவனுடைய பண்பும் பெருமையும் அழிந்துவிடும் (கு.1043); மேலும், கொடிய துன்பங்கள் அவனுக்கு உண்டாகும் (கு.1045); வறுமையால் கவலைப்பட்டுக் கலங்கித் திரியும் நிலை ஏற்படும் (கு.1048) என்றெல்லாம் குறட்பாக்கள் கூறுகின்றன. வறுமையுள்ளவன் கண்மூடித் தூங்க முடியாது (கு.1049); அதனால் வறுமையுற்ற ஒருவன் முற்றும் துறத்தல் நன்று; அவ்வாறு துறக்காதவன் உப்புக்கும் கஞ்சிக்கும் எமனாக இருப்பவனாவான் (கு.1050) என்கிறார் வள்ளுவர். வறுமையை வெறுத்தாலும் அறம் சார்ந்த நல்குரவை அவர் பழிக்கவில்லை எனலாம்.

“உயிர் வாழ்வதற்கு உணவு அடிப்படை. மானத்தைக் காக்க உடை முதன்மை. உடல் நலம்பெற உறைவிடம் வேண்டும். இவை மூன்றும் வறுமை உள்ளோர்க்குக் கிடைப்பதில்லை. இவை மூன்றுக்கும் கவலைப்படுவோர்க்கு மன அமைதி ஏது? உள்ளத்திலே அமைதியில்லாவிட்டால் உறக்கம் எப்படி வரும்? நெருப்பின் மத்தியிலே இருப்போர் உறங்கினாலும் உறங்கலாம். வறுமையில் பிணிப்புண்டிருப்போர் உறங்கவே முடியாது”[15] என வறுமையினால் ஏற்படும் கொடுமையை விளக்குகிறார் சாமி. சிதம்பரனார்.

வறுமை ஒருவனுக்கு வந்தால் இன்பம் தரக்கூடிய இளமைப் பருவமும் துன்பம் தருவதாகும் (மூது.3) என்று மூதுரையும் வறியோர்க்கு அழகு வறுமையில் செம்மையுடன் இருத்தல் (வெ.வே.15) என்று வெற்றிவேற்கையும் கூறுகின்றன. மேலும், வறுமையும் செல்வமும் ஒருவரிடத்திலே நிலைத்து நிற்காது (பா.49) என்று வெற்றிவேற்கை குறிப்பிடுகிறது.

நீதிநெறிவிளக்கம், வறுமையில் வாழ்பவர்களிடமுள்ள கல்வியானது எவ்வளவு சிறப்புடையதாக இருந்தாலும் சிறிதளவும் பெருமை அடையாது (நீதி.நெ.வி.10) என்று கூறுகிறது. விவேகசிந்தாமணி, ஒருவனுக்கு வறுமை வந்தால் வீரம்

குன்றிவிடும் விருந்தினரைப் பார்க்கும்பொழுது வெட்கம் உண்டாகும்; மனைவிக்கு அஞ்சநேரிடும்; அறிவு குறையும்; உலகமெல்லாம் அவனைப் பழிக்கும் (வி.சி.தொ.I பா.22) என்கிறது. மேலும், ஒருவனது அழகைக் கெடுத்து உடலை வாடச்செய்யும் சோம்பலை உண்டாக்கும். தலைவன் தலைவியரிடையே கலகத்தை உண்டாக்கும். அவமானம், பொய், பேராசை போன்றவை உருவாகும். எனவே தீயவை எல்லாவற்றையும் விட மிகவும் கொடியது வறுமை (பா.30) என்று இந்நூல் கூறுகிறது.

### 7.1.9. இரவு

வறுமையின் காரணமாகத் தம் பசியைத் தீர்த்துக் கொள்ளவும் தம் தேவையை நிறைவேற்றிக் கொள்ளவும் இரப்போர் ஏராளம்; அவ்வாறு இரப்போர்க்குத் தம்முடைய பொருளை மறைத்து வைக்காமல் வழங்கவேண்டும் என்பதை வள்ளுவர் 'இரவு' என்னும் அதிகாரத்தின்வழி உணர்த்துகின்றார். வள்ளுவர், இரப்போர்க்கு இல்லை என்றால் அது இரப்போர்க்கு ஏற்படும் பழியன்று; ஈயாத செல்வர்களையே அப்பழி சென்றடையும் (கு.1051) என்கிறார். ஒருவன் இரந்துகேட்ட பொருள் துன்பமின்றிக் கிடைக்குமானால் அத்தகைய இரத்தலும் இன்பம் தரும் என்பதை வள்ளுவர்,

*"இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை*
*துன்பம் உறாஅ வரின்" (குறள். 1052)*

என்ற குறட்பாவழி விளக்குகிறார். மேலும், பொருளை மறைக்காத மனமுடையவரிடத்தில் இரத்தல் வேண்டும் (கு.1054) என்கிறார் அவர். "வறுமையுள்ளவர்கள் எல்லோரும் மானமுடன் வாழமுடியாது. உயிர் வாழ விரும்பும் வறியவர்கள் பிறரிடம் பிச்சை கேட்கத்தான் செய்வார்கள். உயிரை வைத்துக்கொள்ள ஏதாவது செய்து தரவேண்டும். இரப்பதை வள்ளுவர் விரும்ப வில்லை. ஆயினும் வறுமையால் இரப்போரை அவர் தடுக்கவும் இல்லை. கண்டவர்களிடமெல்லாம் கையேந்தி நிற்கவேண்டாம். கருணை நிரம்பியவர்களிடம் இரக்கலாம். பொருள் பெறலாம்"[16] என்று விளக்கப்படுகிறது. உள்ளதை மறைக்காமல் கொடுப்பவனின் வறுமைத் துன்பம் நீங்கும் (கு.1056) அதனால் பிறர்க்குக் கொடுத்து வாழ்வதே சிறப்பு

என்கிறார் வள்ளுவர். மேலும், மரத்தால் செய்த பாவை இயங்குவதுபோல உலகம் இயங்கும் (கு.1058); இரந்து கேட்போர் இல்லையென்றால் ஈவாருக்குப் புகழ் கிடைக்காது (கு.1059); எனவே இவ்வுலகில் இரப்போர் இருப்பது இயற்கை என்பதை அவர் ஒத்துக்கொள்கிறார். இரப்பவன் பிறர்மீது சினங்கொள்ளக்கூடாது (கு.1060) என்று இரப்போனுக்கு வள்ளுவர் அறிவுரை கூறுகிறார்.

"இந்நாளில் இரத்தலைச் சட்டத்தின் மூலம் அரசினர் தடைசெய்ய முயல்கின்றனர். வள்ளுவர் சட்டத்தின் துணையை நாடவில்லை. சமூகத்தின் மனச்சாட்சியை நாடுகின்றார். ஏனெனில், இரப்போர்க்கு ஈதல் வறியோரின் நலிவைப் போக்குதல் சமூகத்தின் கடன். எனவேதான், குடியின் இயல்பினைப் பேசும்போது, நல்குரவையும் இரத்தலையும் பற்றிக் கூறலானார். வறியார்க்கு உதவுவதில் மக்களே பேரார்வம் காட்டுதல் வேண்டும் என்பது வள்ளுவர் உள்ளக் கிடக்கையாகும். மக்கள் மனமும், செயலும் துணைநின்றாலன்றி இச்சமூக இழிவினைக் களைய அரசினரால் முடியாது"[17] என்று குறிப்பிடுகின்றார் பா.நடராஜன்.

ஆத்திசூடி, 'ஐயமிட்டுண்' (ஆத்.9) என்கிறது. உலகில் வாழும் ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய கடமையை மறவாது செய்யவேண்டுமெனில் அவன் பிறர்க்கு உதவி செய்து வாழவேண்டும் என்று கூறுகிறது. "ஒருவர் நமது இல்லம் தேடிவந்து யாசிக்கும்முன் நாம் அவரை நாடி அழைத்து வந்து வேண்டுவன படைத்துப் பிறகு உண்ணவேண்டும். பிறர் பசி போக்கும் உயரிய பண்பும், நயமுடன் உதவும் போக்கும் நாகரீகத்தின் வெளிப்பாடு. ஒரு தனிமனிதன் கூட பசியென்று பட்டினியால் வாடக்கூடாது. எதையும் நமக்கு என்றே வைத்துக் கொள்ளாமல் சிறிதளவு ஆயினும் பிறர்க்குக் கொடுத்து உண்பதே சிறந்த அறம்"[18] ஆகும்.

ஆத்திசூடியில் ஐயமிட்டு வாழவேண்டும் என்று கூறிய ஔவையார் கொன்றை வேந்தனில் 'சைஒத்து இருந்தால் ஐயம் இட்டு உண்' (கொ.வே.34) என்கிறார். இதற்குப் "பொருள் ஒத்திருந்தால் பிச்சை இட்டு உண்டு வாழு"[19] என்று வேங்கடசாமி நாட்டார் விளக்கம் தருகிறார். வெற்றிவேற்கை, பொருள் இடுவோரைக் கூவியழைத்து இரக்கும் வறுமையுடையோரும் அரசாட்சி செய்தாலும் செய்வர் என்றும்

பொருளில்லாதவர் இரப்பது இயற்கையாகும் என்றும் குறிப்பிடுகிறது. மேலும் வறியராகிய இரப்பவர்க்கு ஈவதே பொருளுடையவரின் கடமையாகும் என்றும் கூறுகிறது இந்நூல்.

பிறரைப் புகழ்ந்து பேசி அதனால் பிழைத்து வாழ்வது பிச்சை எடுத்துப் பிழைப்பதைக் காட்டிலும் மிகவும் இழிந்ததாகும் (நல்.14) என்று நல்வழி கூறுகிறது. பிச்சை கேட்பவர்க்கு இடுகின்ற பிச்சையானது செல்வம் உள்ள காலத்தில் நல்வினையைச் செய்க என்று அவர்களுக்கு அறிவுறுத்துவதாகும்;மேலும் ஈபவனுக்கு இப்பிறவியில் புகழும் மறுமைப் பயனும் கிடைப்பதால் இரப்பாரைப் போன்ற கொடையாளர் இல்லை (அறநெறி.178) என்றும் அறநெறிச்சாரம் குறிப்பிடுகின்றது.

அறம் என்று எண்ணித் தம்மிடம் இரப்போர்க்குப் பிச்சையிடுவர் அரசரோடு கூடி அரசாட்சி செய்தாலும் செய்வர் (வெ.வே.52) என்கிறது வெற்றிவேற்கை. மேலும், இல்லோர் இரப்பதும் இயல்பே (பா.57) என்றும் இரந்தோர்க்கு ஈவதும் உடையோர் கடனே (பா.58) என்றும் இந்நூல் கூறுகிறது. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய கடமையை மறவாது செய்யவேண்டும் அதாவது செல்வமுடையோர் இரப்போர்க்குக் கொடுத்து வாழவேண்டும் என்று வெற்றிவேற்கை அறிவுறுத்துகிறது.

ஈவார் மனம் வருந்தாமல் ஒருவன் இரத்தலே இரப்பவர்க்குரிய அறமாகும் என்கிறது நீதிவெண்பா. இரந்துண்போரை இகழ்பவர்கள் அறிவில் குறைந்தவர்கள் ஆவர்; தம்மிடம் இரப்பவர்களுக்கு வேண்டுவன கொடுப்பவர் வீடுபேறு அடைவர் என்று நீதிநூல் கூறுகின்றது.

மேற்சொல்லப்பட்ட கருத்துக்களின்வழி இரத்தல் இன்னாதது என்றாலும் இரப்போர்க்கு ஈதல் வேண்டும் என்ற கருத்து தெளிவாகிறது. இரப்பவனுக்கு ஈபவன் இப்பிறவியில் புகழும் மறுபிறவியில் பயனும் அடைவான் என்றும் அவனுக்கு வீடுபேறு உண்டாகும் என்றும் பிற்கால நீதிநூல்கள் கூறுகின்றன.

### 7.1.10. இரவச்சம்

ஒருவனுக்கு ஏற்படும் வறுமையே அவனை இரந்து வாழச்செய்கிறது. அத்தகைய இரத்தல் இல்லாதிருக்க ஒருவன் சோம்பேறியாக இல்லாமல் உழைத்து வாழவேண்டும் என்பதை உணர்த்தவே வள்ளுவர் 'இரவச்சம்' என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். இரத்தல் என்ற கொடுமை படைப்பவனால் ஏற்படக்கூடாது என்பதை வள்ளுவர்,

*"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக உலகுஇயற்றி யான்" (குறள். 1062)*

என்ற குறட்பாவழி குறிப்பிடுகின்றார். ஒருவன் இரத்தலின் வழியாகவே தன்னுடைய துன்பத்தைத் தீர்த்துக் கொள்ளலாம் என்று நினைப்பது போன்று வன்மையான செயல் ஒன்றுமில்லை (கு.1063); சமைத்த கூழ் நீர் போன்றிருந்தாலும் அதைத் தன்னுடைய முயற்சியால் பெற்று உண்பதே உயர்வானது (கு.1065) என்று கூறுகிறது வள்ளுவம். வாழ வழியில்லாத போதும் இரந்து கேட்காமல் இருப்பதே பெருமையுடையதாகும் (கு.1064) என்று உணர்த்துகிறது குறட்பா.

"வறுமையை எல்லோரும் வெறுக்கவேண்டும்; அதனை ஒழிப்பதற்கு அது ஒரு வழி என்கின்றார் பெர்னார்ட்ஷா என்ற சிந்தனையாளர். வள்ளுவர் நோக்கமும் அதுவே. வறுமையை வெறுத்த கடுமொழிகளாலேயே இரவச்சம் என்னும் அதிகாரம் இயற்றி உள்ளார்"[20] என்று கூறுகிறார் முருகரத்தனம்.

ஆத்திசூடி, 'ஏற்பது இகழ்ச்சி' (ஆத்.8) என்கிறது. "இரந்துண்டு வாழ்வது பழிப்பாகையால் நீ ஒருவரிடத்தும் சென்று யாசிக்காதே"[21] என்று வேங்கடசாமி நாட்டார் விளக்கம் தருகிறார். ஒருவன் எந்தப் பொருளையும் யாரிடமும் இரவாது இருப்பவனே வல்லவன் ஆவான் (கொ.வே.85) என்று கொன்றைவேந்தன் கூறுகிறது. நீதிவெண்பா, இரத்தல் இழிந்தது என்பதைக் கீழ்வரும் பாடல்வழி விளக்குகிறது :

*"நொய்தாம் திரணத்தின் நொய்தாகும் வெண்பஞ்சின்*
*நொய்தாம் இரப்போன் நுவலுங்கால் / நொய்யசிறு*
*பஞ்சுதனின் நொய்யானைப் பற்றதோ காற்றணுக*
*அஞ்சுமவன் கேட்ப தறிந்து" (நீதி.வெ.8)*

“யாசிப்பவன் இலேசான பஞ்சைவிட எளியவன். இரப்பவன் இலேசானவன் என்றால் காற்று அடித்துச்சென்று விடுமே. அவ்வாறு அடித்துச்சென்று விடாதது ஏன்? என்றால், அவன் பலரிடம் பிச்சை கேட்டதை அக்காற்று அறிந்தால் தன்னிடமும் ஏதேனும் கேட்டுவிடுவானோ என அஞ்சி அவனை நெருங்குவ தில்லையாம். காற்றும் அவனை நெருங்காமல் விலகுமானால் மற்றவரைப் பற்றிக் கூறுவானேன்?”[22] என்று அ.மாணிக்கம் வினவுகிறார்.

திருக்குறளும் பிற்கால நீதிநூல்களான ஆத்திசூடியும் நீதிவெண்பாவும் ஒருவன் உழைத்து வாழவேண்டும். பிறரிடம் சென்று இரத்தல் கூடாது என்று அறிவுறுத்துகின்றன. அதே நேரத்தில் ஈகை, ஒப்புரவு ஆகிய அதிகாரங்களில் பிறர்க்கு ஈவதை வற்புறுத்துகின்றார் வள்ளுவர். ஏனெனில், இவ்வுலகில் ஈவாரும்-இரப்பாரும் பணக்காரன்-ஏழை, செல்வந்தன்-வறுமையாளன் இருப்பது இயற்கை என்பதை அவர் ஏற்றுக்கொண்டார். அதனால்தான் இரந்து வாழ்தல் கொடுமையானது என்ற அடிப்படையில் இரவே அச்சத்திற்குரியது எனவும் அவர் அறிவுறுத்துகிறார். அவ்வாறு இரந்தே உயிர் வாழவேண்டும் என்று எண்ணுபவரைக் கண்ட வள்ளுவர் அவ்விரத்தலைவிடச் சாதலே மேல் என்றும் கூறுகிறார்.

### 7.1.11. கயமை

இவ்வுலகில் வாழும் மனிதர் அனைவரும் புறத்தோற்றத்தில் ஒன்றுபட்டு விளங்குகின்றனர். ஆயின் அவர்களுள் மக்கட்பண்பு இல்லாமல் கீழான நெறியில் வாழ்பவரும் இருக்கின்றனர். அத்தகையவரின் பண்புகளைச் சுட்டிக்காட்ட வள்ளுவர் ‘கயமை’ என்னும் அதிகாரத்தை அமைத்துள்ளார். கயவர் வடிவத்தால் மக்களை ஒத்து விளங்குவர். புறத்தோற்றத்தால் நல்லவன் தீயவன் என்ற பாகுபாடு காணமுடியாது (கு.1071); கயவர் தம் நெஞ்சில் கவலை அற்றிருப்பதால், நற்செயல்களை அறிந்தவரைவிட அவர் நல்லவர் ஆவார் என்பதை வள்ளுவர்,

*“நன்றுஅறி வாரின் கயவர் திருஉடையர்*
*நெஞ்சத்து அவலம் இலர்” (குறள். 1072)*

என்ற குறட்பாவின்வழி கயவர்களின் கீழ்மையை மறைமுகமாகச் சுட்டிக் காட்டுகிறார். அதாவது மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவரும் இன்பதுன்பங்களை அனுபவித்தே

தீரவேண்டும். இவ்வுலகில் கவலையே இல்லாமல் ஒருவன் வாழ முடியாது. பழி, பாவம் முதலானவற்றிற்கு அஞ்சாதவர் கயவர்கள். அவர்களைத் திருவுடையார் என்று புகழ்வதுபோல் இகழ்கின்றார் வள்ளுவர். மேலும், கயவர்கள் தேவரைப் போன்றவர்கள் (கு.1073) என்கிறார் அவர். தேவர்கள் தாம் விரும்பியவற்றைச் செய்யும் ஆற்றல் உடைவர்கள். அவர்களைக் கட்டுப்படுத்த மேலோர் இல்லை. அதுபோல் கயவர்களும் விருப்பம்போல் வாழ்பவர்கள். இதனால் கயவர்களைத் தேவரோடு ஒப்பிடுகிறது குறள். அச்சமே கீழ்மக்களது ஆசாரம் என்றும் பிறர் உடுப்பதையும் உண்பதையும் கண்டால் கயவர் பொறுக்கமாட்டார் (கு.1079) என்றும் வள்ளுவர் கூறுகிறார். "கயவர்கோள் சொல்லல், பொறாமை ஆகிய பண்புகளை உடையவராயிருப்பர். பிறர் ரகசியங்கள் அவர்களிடம் சிக்கிவிட்டால் அவற்றை உலகெங்கும் பரப்பி அவற்றை உடையவர்களைக் கெடுக்கும் வரை அமைந்திருக்கமாட்டார்கள். இவ்வகையில் அவர்களை ஒரு வாய்ப்பறை என்று சொல்லலாம். பிறர் நலம் காண அவர்கள் பொறுக்கமாட்டார்கள். யாராவது நன்றாக உடுத்தி உண்பதைக் கண்டால்கூட கெடுத்தலல்லாமல் அவர்களுக்கு மனநிறைவு ஏற்படாது"[23] எனப்படுகிறது. பொதுவாகக் கயவர்கள் எதற்கும் கட்டுப்படாமல் வாழ்பவர். தனக்குத் துன்பம் வந்த காலத்தில் கயவர் தன்னையும் விற்றுக்கொள்ளும் தன்மை கொண்டவர்கள் (கு.1080) என்று உணர்த்துகிறது வள்ளுவம்.

அறிவில்லாத கயவர்களுக்கு அறவுரையை எடுத்துக் கூறினாலும் அது பயன்தராது என்கிறது அறநெறிச்சாரம். நன்னெறி, அறிவு பெறாத மூடர்கள் தமக்கு வரும் பழிக்குச் சிறிதும் அஞ்சமாட்டார்கள் (நன்.34) என்கிறது. நெருப்பு தன்னைச் சூழ்ந்து எரிந்துகொண்டு இருந்தாலும் பாம்புகள் அந்த இடத்தைவிட்டு அசையாமல் உறங்கிக்கொண்டு இருக்கும். அதுபோல, அறிவற்ற கீழ் மக்களுக்குக் கண்ணெதிரே கேடு விளைந்தாலும் அதனை அறிந்து கொள்ளக்கூடிய அறிவு அவர்களிடத்தில் இருக்காது (நீதி.வி.34) என்று நீதிநெறிவிளக்கம் எடுத்துரைக்கிறது. சிறு உயிராகிய 'ஈ'க்குத் தலையில் நஞ்சு பொருந்தியிருக்கும். அதைவிடச் சற்று பெரியதாகிய தேளுக்கு அதன் கொடுக்கில் நஞ்சு பொருந்தி இருக்கும். பாம்புக்குப் பல்லில் மட்டும்

நஞ்சு பொருந்தி இருக்கும். ஆனால் தீய குணமுடையோர்க்கு உடல் முழுவதும் நஞ்சு பொருந்தியிருக்கும் என நீதிவெண்பா குறிப்பிடுகின்றது. நஞ்சுடைய கொடிய பாம்புகள் ஒரு வகையில் ஒத்துக் காணப்பட்டாலும் அவை ஒரு வகையில் கொடியவர்களுக்கு ஒப்பாகாது (நீதி.வெ.18); ஏனெனில், பாம்புகள் மணி மந்திரத்திற்குக் கட்டுப்படும். ஆனால், கொடியவர்கள் அந்த வகையிலும் கட்டுப்படமாட்டார்கள் என்றும் தீயோர் உருவத்தில் நல்லவர் போலக் காணப்பட்டாலும் நற்பண்பு கொண்டவராகமாட்டார் (பா.19) என்றும் நீதிவெண்பா எடுத்துரைக்கிறது. இந்த உலகத்தில் நற்குணமில்லாத கீழானவன் பிறந்ததனால் நாடும், அவனது குடியும் பாழாகும் (வி.சி.தொ.I பா.113) என்று கூறுகிறது விவேகசிந்தாமணி.

வேதநாயகர், உலகத்தில் மக்களுக்குரிய நல்ல பண்புள்ளவர்களையே மானிடர் என்று சொல்லவேண்டும். கொடியவர்களை மக்கள் என்று சொல்லக்கூடாது; அவ்வாறு சொல்வது கொல்லும் தன்மை வாய்ந்த தீய வெடிப்புப் பொடியினை உயிரை நிலைக்கச் செய்யும் மருந்து என்று சொல்வதற்கு ஒப்பாகும் என்று மொழிகின்றார்.

சமுதாயத் தொடர்பான குற்றங்களையே புல்லறிவாண்மை, பேதைமை, கயமை என்ற அதிகாரங்களின்வழி வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மொத்தத்தில் கீழ் மக்களாகிய கயவர்கள் எதையும் உணரும் ஆற்றல் இல்லாதவர்கள்; எதற்கும் பயனில்லாதவர்கள்; அவர்கள் எப்பொழுதும் திருந்தாதவர்கள் என்று நீதிநூல்கள் கூறுகின்றன.

## 7.2. முடிவுரை

நாடும் நாடாளும் மன்னனும் சிறப்புறத் திகழவேண்டுமெனில் குடிமக்கள் பண்புடையவர்களாகவும் கடமைகளைச் சரிவர செய்பவர்களாகவும் இருத்தல் வேண்டும் என்று நீதிநூல்கள் வற்புறுத்துகின்றன.

உயிரை இழந்தாவது மானத்தைக் காக்கும் மக்களே நாட்டுக்குத் தேவை என்று கருதுகிறது வள்ளுவம். பிற்கால நீதிநூல்கள், மானத்துடன் வாழாதவன் உயிரோடு வாழ்ந்தாலும் நடமாடும் பிணமாவான் என்கின்றன.

நற்குடியில் பிறந்த ஒருவன் சாதி வேறுபாடற்ற சமுதாயத்தில் சிறப்புற்று வாழ்வதே அவனுக்குப் பெருமை என்று கூறிச் சாதிவேறுபாட்டைக் களைய முற்பட்டு உள்ளது வள்ளுவம். பிற்கால நீதிநூல்கள், ஒருவனுடைய செயல், அறிவு, புகழ், பணிவு போன்றவை அவனுடைய பெருமையை அறியும் காரணிகளாகும் என்று கூறுவதை அறியமுடிகிறது. சமுதாயத்தில் ஒவ்வொருவரும் நற்பண்பு கொண்டவர்களாக வாழவேண்டும்; இல்லையெனில் இந்த உலகம் அழியும் என்கிறது வள்ளுவம்.

பிற்கால நீதிநூல்கள், பிறர் துன்பம் கண்டு வருந்துதல், இன்சொல் பேசுதல், உண்மை, ஈகை போன்றவை பண்புடையவர்களின் இயல்புகளாகக் கருதுகின்றன.

ஒருவன் ஈட்டிய பொருளைப் பிறர்க்குப் பகிர்ந்தளித்து உண்டு வாழ்ந்தால் நாட்டில் வறுமை ஏற்படாது என்றும் பிறர்க்குக் கொடுத்து உதவாமல் செல்வத்தைக் காப்பது நச்சு மரத்தைக் காப்பதற்குச் சமமாகும் என்று வள்ளுவம் கூறுகின்றது.

பிறர்க்குக் கொடுத்து உதவாத செல்வத்தால் பல விளைவுகள் ஏற்படும்; அதனால் மக்களைக் கொடுத்துண்டு வாழ வழிவகுக்கிறது பிற்கால நீதிநூல்கள்.

ஒவ்வொருவரும் தான் வாழ்வதற்குத் தேவையானவற்றைப் பெறுவதற்காக உழைக்கவேண்டும்; உழைக்கவில்லையெனில் வறுமையே ஏற்படும்; இதிலிருந்து வறுமையை ஒழிக்கவேண்டுமெனில் ஒவ்வொருவரும் உழைத்து வாழவேண்டும் என்று நீதிநூல்கள் அறிவுறுத்துகின்றன.

இன்றைய காலக்கட்டத்தில் உழவுத்தொழில் செய்யும் உழவர்களின் நிலை ஓரங்கட்டப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது. அதற்குக் காரணம் எல்லாம் வாணிபமாக மாறிவிட்டதால் உழவர்களின் நிலை முடங்கியுள்ளது. உழவர்கள் முடங்கினால் சமுதாயம் உயர்வு பெறாது; நாட்டில் பொருளாதாரம் சீர்குலையும்; பொருளாதாரத்தில் பற்றாக்குறை ஏற்படும்; மேலும், நாடு சீர்கேடு அடையும். உழவுத்தொழிலின் முக்கியத்துவத்தை நீதிநூல்கள் உணர்த்துகின்றன.

## அடிக்குறிப்புக்கள்

1. வெ.சாமிநாதசர்மா, அரசியல் வரலாறு, பக்.67-87.
2. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), வெற்றிவேற்கை மூலமும் உரையும், ப.22.
3. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.425.
4. மகாதேவ முதலியார், (உ.ஆ.), இனியவை நாற்பது உரையுடன், ப.17.
5. சாமி. சிதம்பரனார், வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், ப.149.
6. ஞா.தேவநேயப்பாவாணர், தமிழ் மரபுரை, பொருட்பால், ப.193.
7. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.432.
8. புன்னைவனநாத முதலியார், (உ.ஆ.), திரிகடுகம் மூலமும் விருத்தியுரையும்,ப.26.
9. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.436.
10. தி.மாணிக்கவாசகம், வான்புகழ் வள்ளுவர், (குடிமையியல்), ப.47.
11. தி.முருகரத்தனம், குறள் கூறும் பொருள் வாழ்வு, ப.55.
12. வெ.சாமிநாதசர்மா, அரசியல் அறிவு, ப.15.
13. மு.வரதராசனார், திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம், ப.269.
14. பரிமேலழகர் உரை, திருக்குறள், ப.455.
15. சாமி. சிதம்பரனார், வள்ளுவர் வாழ்ந்த தமிழகம், ப.164.
16. மேலது., ப.165.
17. பா.நடராஜன், வள்ளுவர் தந்த பொருளியல், ப.38.
18. ஹேமா இராமானுஜம், ஆத்திசூடி அமுதமொழி கட்டுரைகள், பக்.22-24.
19. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), கொன்றைவேந்தன் மூலமும் உரையும், ப.14.
20. தி.முருகரத்தனம், குறள் கண்ட பொருள் வாழ்வு, ப.65.
21. ந.மு.வேங்கடசாமி நாட்டார், (உ.ஆ.), ஆத்திசூடி மூலமும் உரையும், ப.11.
22. அ.மாணிக்கனார், (உ.ஆ.), நீதிவெண்பா மூலமும் தெளிவுரையும், ப.16.
23. கா.அப்பாத்துரை, திருக்குறள் கட்டுரைகள், ப.20.

# பின்னிணைப்பு - I

## திருக்குறள், பிற்கால நீதிநூல்கள் பற்றிய அறிமுகப்பட்டியல்

| வ. எண். | நூலின் பெயர் | ஆசிரியர் | சமயம் | காலம் | அதிகாரம் | பாடல் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|
| 1. | திருக்குறள் | திருவள்ளுவர் | - | தெளிவாக அறிய முடியவில்லை | 133 | 1330 |
| 2. | ஆத்திசூடி | ஔவையார் | சைவம் | கி.பி.12-ஆம் நூற்றாண்டு | - | 109 |
| 3. | கொன்றைவேந்தன் | ஔவையார் | சைவம் | கி.பி.12-ஆம் நூற்றாண்டு | - | 91 |
| 4. | மூதுரை | ஔவையார் | சைவம் | கி.பி.12-ஆம் நூற்றாண்டு | - | 30 |
| 5. | நல்வழி | ஔவையார் | சைவம் | கி.பி.12-ஆம் நூற்றாண்டு | - | 40 |
| 6. | அருங்கலச்செப்பு | ஆசிரியர் தெரியவில்லை | சமணம் | கி.பி.12-ஆம் நூற்றாண்டு | - | 180 |
| 7. | அறநெறிச்சாரம் | முனைப்பாடியார் | சமணம் | கி.பி.13-ஆம் நூற்றாண்டு | - | 226 |
| 8. | வெற்றிவேற்கை | அதிவீரராமபாண்டியர் | சைவம் | கி.பி.16-ஆம் நூற்றாண்டு | - | 82 |
| 9. | நன்னெறி | சிவப்பிரகாசர் | சைவம் | கி.பி.17-ஆம் நூற்றாண்டு | - | 40 |
| 10. | நீதிநெறிவிளக்கம் | குமரகுருபரர் | சைவம் | கி.பி.17-ஆம் நூற்றாண்டு | - | 102 |
| 11. | விவேகசிந்தாமணி | ஆசிரியர் தெரியவில்லை | சைவம் | தெளிவாக அறிய முடியவில்லை | - | தொகுதி I-135<br>தொகுதி II-100 |
| 12. | உலகநீதி | உலகநாதர் | சைவம் | கி.பி.18-ஆம் நூற்றாண்டு | - | 13 |
| 13. | நீதிவெண்பா | ஆசிரியர் தெரியவில்லை | சைவம் | தெளிவாக அறிய முடியவில்லை | - | 101 |
| 14. | நீதிநூல் | வேதநாயகர் | கிறித்தவம் | கி.பி.19-ஆம் நூற்றாண்டு | 45 | 600 |

## பின்னிணைப்பு - II

# திருக்குறள், பிற்காலநீதிநூல்கள் பற்றிய தொகுப்புப் பட்டியல்

## இல்லறக் கருத்துக்கள் பற்றிய தொகுப்புப் பட்டியல்

### பிற்கால நீதிநூல்கள்

| அதி. வ. எண். | திருக்குறள் இல்லறவியல் | 1 ஆத்தி சூடி | 2 கொன்றை வேந்தன் | 3 மூதுரை | 4 நல்வழி | 5 அருங்கலச் செப்பு | 6 அறநெறிச் சாரம் | 7 வெற்றி வேற்கை | 8 நன்னெறி | 9 நீதி நெறி விளக்கம் | 10 விவேக சிந்தாமணி | 11 உலக நீதி | 12 நீதி வெண்பா | 13 வேதநாயகர் நீதிநூல் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | இல்வாழ்க்கை 41,42,43,45,48, 46,49,50 | - | 3 | - | - | 6 | 165, 122 | 6,9 | 6 | 38 | தொ.I பா.75 | 18 | - | அதி – 11 பா.54 |
| 2. | வாழ்க்கைத் துணைநலம் 52,53,54,56, 58,60 | 94 | 14,15, 41,42 | 21 | 24 | - | 159,162, 163 | 11,12 | - | 81,82, 83 | தொ. I பா.27,63 | 72 | - | அதி – 11 பா.4,3,11, 10 |
| 3. | மக்கட்பேறு 61,62,63,64,65, 66,67,69,70 | 20 | 38,31, 1,27 | - | - | - | - | - | - | 81 | தொ.II பா.3,4,5 | 1.3 | 54 | அதி – 8 பா.3,5,10 |
| 4. | அன்புடைமை 72,73,74,76, 77,78,79 | 103, 89 | - | - | - | - | 16 | - | 15 | 40 | தொ.II பா.57 | - | 5 | அதி - 38 பா.1,8 |
| 5. | விருந்தோம்பல் 82,84,85,86, 89,90 | - | 70 | - | - | - | 166 | 10 | - | - | தொ.II பா.55,10 | - | 49 | அதி-38 பா.2 |
| 6. | இனியவை கூறல் 92,94,96,97, 98,100 | 17 | - | - | 33 | 116 | 16 | - | 18 | 68 | தொ.I பா.29 | 9.5 | 17 | அதி - 32 பா.1 |
| 7. | செய்ந்நன்றி அறிதல் 101,102,103, 104,106,107, 108,110 | 21 | - | 1,2 | 29 | - | 108 | - | 1 | 66 | தொ.I பா.96 | - | 91 | அதி -30 பா.2,7 |
| 8. | நடுவுநிலைமை 114,117, 118,120 | 109 | - | - | 23 | - | 42 | - | - | - | தொ.I பா.70 | - | - | அதி-3 பா.5,7 |
| 9. | அடக்க முடைமை 121,124,122, 125,126,127,129 | - | 17 | 16 | - | - | 147 | 14 | - | 16 | - | - | - | - |

## முன்பக்கத் தொடர்ச்சி. . .

### பிற்கால நீதிநூல்கள்

| அதி. வ. எண். | திருக்குறள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இல்லறவியல் | ஆத்தி சூடி | கொன்றை வேந்தன் | மூதுரை | நல்வழி | அருங்கலச் செப்பு | அறநெறிச் சாரம் | வெற்றி வேற்கை | நன்னெறி | நீதி நெறி விளக்கம் | விவேக சிந்தாமணி | உலக நீதி | நீதி வெண்பா | வேதநாயகர் நீதிநூல் |
| 10. | ஒழுக்கம் உடைமை 131,133,134, 137,138,132 | 104, 103, 73 | 11 | 18 | 31 | - | 133 | 4 | - | 61 | தொ.I பா.51 | - | 34 | - |
| 11. | பிறனில் விழையாமை 141,142,146, 143,148,150 | - | 61 | 36 | - | 76 | 89 3.4 | 70 | - | 74 | தொ.II பா.47 | - | 41 | அதி - 12 பா.12,9 |
| 12. | பொறை யுடைமை 151,155,152, 156,159,160 | - | 67 | - | - | - | 80 | 31.32 | - | 30 : 1 | - | - | 31 : 1 66 : 4 | அதி.31 பா.2,3,6 |
| 13. | அழுக்கா றாமை 161,165,166, 167,170 | 12 | 11.12 | - | - | - | - | - | - | 56 : 1 | - | - | - | அதி.26 பா.2,3, 6,4 |
| 14. 15. | வெஃகாமை கள்ளாமை 171,180,283, 288,289,290 | 41 | 63 | - | - | 66 | - | - | - | 79 : 2 | - | 4 | - | அதி.16 பா.1,2, 3,4,5,6,7 |
| 16. | புறங்கூறாமை 181,186,187, 185,189,190 | 13 | 25 | 25 | 21 | - | 62.85 | - | - | 56 | தொ.I பா.114 | - | 23 | அதி.21 பா.1,2,3,4, ,5,6,7 |
| 17. | பயன்இல சொல்லாமை 191,192,196, 197,199,200 | 75 83 | 56 | 9 : 2 | - | 116 | 197 | 76 | - | 60 : 1 | - | 10 | - | - |

## முன்பக்கத் தொடர்ச்சி. . .

### பிற்கால நீதிநூல்கள்

| அதி. வ. எண். | திருக்குறள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இல்லறவியல் | ஆத்தி சூடி | கொன்றை வேந்தன் | மூதுரை | நல்வழி | அருங்கலச் செப்பு | அறநெறிச் சாரம் | வெற்றி வேற்கை | நன்னெறி | நீதி நெறி விளக்கம் | விவேக சிந்தாமணி | உலக நீதி | நீதி வெண்பா | வேதநாயகர் நீதிநூல் |
| 18. | **தீவினை அச்சம்** 204,202,205, 206,210 | 38 | - | 9 | - | - | 27 : 1<br>27 : 2 | - | 19: 1-2 | 75 | தொ.II பா.99 | - | - | அதி.33 பா.2,5 |
| 19,<br><br>20. | **ஒப்புரவு அறிதல்** 215,216,217,<br>**ஈகை** 222,223,235, 226,230 | 3,4,9<br>56,8 | 34 | 2 | 2 | 22 | 175<br>178<br>177 | 58 | 17 | 67 | தொ.I பா.21 | - | 59 | அதி.38 பா.2 |
| 21. | **புகழ்** 231,232,234, 236 | 47,81 | - | - | - | - | 178 | - | - | 40,19 | தொ.I பா.120 | 28 | - | அதி.36 பா.3,7,2 |

# துறவறக் கருத்துக்கள் பற்றிய தொகுப்புப் பட்டியல்

## பிற்கால நீதிநூல்கள்

| அதி. வ. எண். | திருக்குறள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | துறவறவியல் | ஆத்தி சூடி | கொன்றை வேந்தன் | மூதுரை | நல்வழி | அருங்கலச் செப்பு | அறநெறிச் சாரம் | வெற்றி வேற்கை | நன்னெறி | நீதி நெறி விளக்கம் | விவேக சிந்தாமணி | உலக நீதி | நீதி வெண்பா | வேதநாயகர் நீதிநூல் |
| 1. | அருளுடைமை 241,242,243, 244,247,248, 249 | - | - | - | - | - | 145 | - | - | - | - | - | 94 | அதி.2 பா.3,5 |
| 2. | புலால் மறுத்தல் 251,254,255, 256,257,258, 259,260 | - | 58 | - | - | - | 101 102 | - | - | 97 | - | - | - | அதி.44 பா.1,7 |
| 3. | தவம் 264,268,269, 266,270 | - | 28.32 | 7 | 14 | - | 122 129 | - | - | 91 | - | - | 6.10 | - |
| 4. | கூடா வொழுக்கம் 271,272,274, 273,275,277, 280 | - | - | - | - | - | 63 | - | - | 93 | - | - | - | அதி.9 பா.5 |
| 5. | வாய்மை 292,295,297, 298,300 | - | - | - | - | 69 | 56,57 | - | - | 60 | தொ. I பா.68 | 2.1 | - | அதி.15 பா.2,3,4,5, 6,7,8 |
| 6. | வெகுளாமை 304,306, 308,310 | 2 | 40 | 23 | - | 178 | 66 | - | 8 | | தொ.II பா.53,54 | 2,5 | - | அதி.25 பா.3 |
| 7. | இன்னா செய்யாமை 311,312,318, 317,319 | 38 | 74 | 30 | - | - | 83 | - | 16 | 40 | தொ.I பா.119 | - | 64 | அதி.33 பா.5 |

## முன்பக்கத் தொடர்ச்சி. . .

### பிற்கால நீதிநூல்கள்

| அதி. வ. எண். | திருக்குறள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | துறவறவியல் | ஆத்தி சூடி | கொன்றை வேந்தன் | மூதுரை | நல்வழி | அருங்கலச் செப்பு | அறநெறிச் சாரம் | வெற்றி வேற்கை | நன்னெறி | நீதி நெறி விளக்கம் | விவேக சிந்தாமணி | உலக நீதி | நீதி வெண்பா | வேதநாயகர் நீதிநூல் |
| 8. | கொல்லாமை 321,322,323, 326,260 | 33 | 58 | - | - | 67,68 | 101 | - | - | 62 | - | 3 | 13 | அதி.17 பா.10 அதி.44 பா.5 |
| 9. | நிலையாமை 333,332,334, 335,336, 338,339 | - | - | 29 | 3 | - | 18,14,19, 26,113, 114, | - | - | 1 | தொ.II பா.120 | - | 52 | - |
| 10. | துறவு 341,342,346, 349,350 | 101 | - | - | 7 | 11 | 45,142,14 8,174,190, 192,17 | - | - | 85,87 | தொ.I பா.76 | - | 95 | - |
| 11. | மெய்யுணர்தல் 351,356,358, 359,360 | - | - | - | 39 | 134 | 191 | - | - | 99,100, 102 | தொ.II பா.39 | - | - | - |
| 12. | அவா அறுத்தல் 361,364,365, 367,370 | 98 | - | - | - | - | 68,60 51,210 | - | - | 100 98 | - | - | 12 | அதி.39 பா.7,8,9 |
| 13. | ஊழ் 371,375,377, 380,619,620 | - | - | 19 22 | 3 30 15 | - | 110 152 156 | - | - | 51 92 | தொ.I பா.42 | - | 47 | - |

# அரசியல் கருத்துக்கள் பற்றியத் தொகுப்புப் பட்டியல்

## பிற்கால நீதிநூல்கள்

| அதி. வ. எண். | திருக்குறள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அரசியல் | ஆத்தி சூடி | கொன்றை வேந்தன் | மூதுரை | நல்வழி | அருங்கலச் செப்பு | அறநெறிச் சாரம் | வெற்றி வேற்கை | நன்னெறி | நீதி நெறி விளக்கம் | விவேக சிந்தாமணி | உலக நீதி | நீதி வெண்பா | வேதநாயகர் நீதிநூல் |
| 1. | இறைமாட்சி 381,382,383, 385,386,389, 390 | - | - | - | - | - | - | - | - | 33 | - | - | - | அதி.3 பா.1,2 |
| 2. | கல்வி 391,392,393, 395,397,400 | 29,7, 71,11, 45 | 7,53,91 | 14,26 | - | - | 71,72,73 | 38,35 | 7,40 | 2,3,4,7, 14,10 | தொ.I பா.10 | 1 | 69 | அதி.27 பா.1,5 |
| 3. | கல்லாமை 401,403,404, 406,408,409 | - | 9 | 14 | 34 | - | 29 | 36 | 25 | 23 | தொ.II பா.3 | - | 98 | அதி.8 பா.8,6 |
| 4. | கேள்வி 411,412,413, 414,416,417, 418,426 | 39 | - | 8 | - | - | - | - | - | 21 | - | - | 71 | - |
| 5. | அறிவுடைமை 423,427,429, 430 | - | 80 | 7,30 | - | - | 75 | 39 | 13,14, 20,34 | 24,33 | தொ.II பா.100 | - | 3,48 | அதி.2 பா.17 |
| 6. | குற்றங் கடிதல் 431,433,434, 436,439 | - | - | - | - | - | 6 | 31 | - | 60 | - | 3 | - | - |
| 7. | பெரியாரைத் துணை கோடல் 441,444,446, 448,449,450 | 83,95 | 75 | 18 | - | - | 96 | 64 | - | 36 | - | 5 | 2 | அதி.14 பா.2 |
| 8. | சிற்றினம் சேராமை 451,452,455, 456,457,459 | 85 93 | 48 | 9 | - | - | - | - | 38 | 33 | தொ.I பா.48 | 7 | 35 | அதி.30 பா.2,6 |

## முன்பக்கத் தொடர்ச்சி. . .

### பிற்கால நீதிநூல்கள்

| அதி. வ. எண். | திருக்குறள் | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | அரசியல் | ஆத்தி சூடி | கொன்றை வேந்தன் | மூதுரை | நல்வழி | அருங்கலச் செப்பு | அறநெறிச் சாரம் | வெற்றி வேற்கை | நன்னெறி | நீதி நெறி விளக்கம் | விவேக சிந்தாமணி | உலக நீதி | நீதி வெண்பா | வேதநாயகர் நீதிநூல் |
| 9. 10, 11. | தெரிந்து செயல்வகை, தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல் 461,463,467, 464,501,502, 506,511,513, 516,520,515 | 19 | - | - | - | - | 150 | - | - | 52 | - | - | 16 | - |
| 12. | காலம் அறிதல் 481,482,483, 484,485,486, 487,490 | 22 | - | 5 | 4 | - | - | - | - | 52 | - | - | 67 | அதி.42 பா.4 |
| 13. | இடனறிதல் 491,494,495, 496,497 | - | - | - | - | - | - | - | - | 52 | தொ.I பா.53 | - | - | - |
| 14. | சுற்றந்தழால் 525,526,527, 530 | 104 | 30,18 | - | - | - | 212 | 3 | - | 56 | - | 10 | 74 | அதி.11 பா.37 |
| 15. | செங் கோன்மை 541,542,543, 544,546,547, 548,550 | 43 | - | 28 | - | - | - | 5 | - | 38,26 | தொ.I பா.27 | 4 | - | அதி.3 பா.1,2,5, 6,7 |
| 16. | கொடுங் கோன்மை 551,552,553, 557,559,560 | - | 88 | - | - | - | - | 63 | - | 27,30 | தொ.I பா.72 | - | - | அதி.3 பா.10 |

